உ

முருகன் றுணை.

மேதினியுள்ளோராதிகைக்கொண்ட

# சோதிடச்

# சில்லரைக்கோர்வை.

இது

மதுரை சோதிடம்

தம்புசாமிநாயுடு அவர்கள் குமாரர்

**குப்புசாமி நாயுடு அவர்களால்**

பற்பல ஏட்டுப்பிரதிகளைக்கொண்டு

பிழையறப்பரிசோதித்ததை,

அமரம்பேடு

இரங்கசாமிமுதலியார் குமாரர்

**முத்துவடிவேலு முதலியாரால்**

சென்னை:

பூமகள்விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] 921. [ரூபா-2¼.





முருகன் துணை.

# இலங்கிய சோதிடப்புத்தகங்களின்

# அட்டவணை.



அட்டவணை முற்றிற்று.

## ரிஜிஸ்டர் அறிவிப்பு.

இதனால் சகலமான அச்சுக்கூடத் தலைவர்களுக்கும் புத்தக வியாபாரிகளுக்கும் மற்ற யாவர்களுக்குந் தெரிவிப்பது யாதெனில்:—இச்சோதிடச் சில்லரைக் கோர்வையை ம-றா-றா-ஸ்ரீ, கோளப்பஞ்சேரி-செல்லப்பமுதலியார் அவர்கள்பேரிலிருந்த ரிஜிஸ்டர் காபிரைட் சுதந்தரத்தை அடியிற் கையொப்பமிட்ட அ. முத்துவடிவேலுமுதலியாராகிய நான் கிரயத்திற்குப் பெற்றுக்கொண்டு என்னால் அச்சிட்டு வெளிப்படுத்தியிருப்பதால் என்னுடைய உத்திரவின்றி இப்புத்தகத்தை யாதாமொருவர் அச்சிடுவரேல் இந்தியன் காபிரைட் சட்டதண்டனைக்குட்படுவார்கள்.

இப்படிக்கு,

அ. முத்துவடிவேலுமுதலியார்

நெ-24, தாண்டவராயப்பிள்ளைவீதி,

சென்னை.

---

## சாற்றுக்கவி.

ஸ்ரீ வில்லிபுத்தூர் பாரதப்பிரசங்கம்

பாலசுப்பிரமணியப்பிள்ளை அவர்கள்

இயற்றியது.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தன்னையே தன்னு லறிந்தவன் மதுரைத் தலத்தினிற்
றம்புசா மிக்குப்
பொன்னையே யனைய கான்முளை யரன் புகழுடைக்
குப்புசா மியுமே
முன்னையோர் தமிழைப் பார்வையிட் டினிய மூதறி
வுள்ளவர்க் கெல்லாம்
கன்னய மாக வச்சிடத் தகுந்த நாவல
ராமென நவில்வாம்.

---

முருகன் றுணை.

# நூன்முகம்.

—oo:o:oo—

கரையிலா திலங்குந் திரைகடல் சூழ்ந்த தரையதிற் சிறந்த நிறையுளமானவர் உரை திரிகாலந்துறும் இருவினையால் வரும் பெரும்பயனைத் தெரிந்துணர்பொருட்டு நம்முன்னோர்கள் தொன்றுதொட்டுக் கையாண்டுவந்த சில சோதிடப் புத்தகங்கள் தற்சமயம் புத்தகக்கடைகளில் அகப்படுவது முயற்கொம்புபோலும், ஒருவேளை அது கிடைத்தாலும் மணற்சோற்றிற் கல்லாராய்வதுபோலு மிருக்கிறதென்று மதுரைமாநகரம் தளவா அக்கிராரத்திலிருக்கும் சோதிடம் மீனாக்ஷிசுந்தரமைய ரவர்களும், ஸ்ரீ வில்லிபுத்தூர் சோதிடம் பொன்னுவையங்காரவர்களும், சங்கரநத்தம் சோதிடம் சுந்தரராஜ அய்யங்காரவர்களும், திண்டுக்கல் சோதிடம் முனியனாசாரியா ரவர்களும், இராமநாதபுரம் சோதிடம் கோவிந்தசாமிநாயுடு அவர்களும், மதுரை சாமுத்திரிகாலக்ஷண சோதிடம் ச. கூடலிங்கம்பிள்ளை அவர்களும், நடுவப்பட்டி சோதிடம் எம். சுப்பிரமணியப்பிள்ளை அவர்களும், திருமங்கலம் சோதிடம் வைத்தியம் குமரகுருபரம்பிள்ளை அவர்களும், கும்பகோணம் சோதிடம் வீராசாமிநாயுடு அவர்களும், பாலக்காடு சோதிடம் பழனிவுபாத்தியாயரவர்களும், காரைக்குடி சோதிடம் முனிசாமிசெட்டியாரவர்களும், இன்னும் சில சோதிடர்களும் இதிற்கண்ட சில புஸ்தகங்கள் ஒரே கோர்வையாகச் சேர்த்து அச்சிட்டுத் தரும்படி எம்பால் வந்து எம்மை விரும்பிக் கேட்ப, அவ்வாறு அச்சிடுந்தரமுடையேமல்லேன் என்பதை நன்கு தெரிந்த யாம் அவர்கள்பால் அவ்வரிய செய்கையை நிறைவேற்றும் ஆற்றலுடையேமல்லேமென விடையளித்தனம்.

அவ்வாறு விடையளித்தும் அவர்கள் எம்மைவிடாது தம்மிடமிருந்த சில ஏட்டுப் பிரதிகளைக் கொடுத்து ஒரே பிடியாய்த் தாங்களே இவ்வரிய செய்கைக்குரியரென மறுத்

Best copy available

தம் பன்முறை விரும்பிக் கேட்டுக்கொண்டமையால், அவர்களது கருத்துக்கிசைந்து சென்னைக்கு வந்து அவர்கள் கோரியபடியே நம் ஜீவகாருண்ணியவிலாச அச்சுக்கூடத் தலைவர் ம-ா-ா-ஸ்ரீ, கோளப்பஞ்சேரி - செல்லப்பமுதலியார் அவர்களிடம் சொல்லி அதற்குச் சோதிடச் சில்லரைக் கோர்வை எனத் திருநாமஞ்சூட்டி அச்சிட்டு வெளிப்படுத்தலாயினோம். இப்பதிப்பு பூமகள்விலாச அச்சுக்கூடத் தலைவரும் ம-ா-ா-ஸ்ரீ, அமரம்பேடு - இரங்கசாமிமுதலியாரவர்கள் புதல்வருமாகிய அ. முத்துவடிவேலுமுதலியார் அவர்களால் அச்சிட்டு வெளிப்படுத்தலாயிற்று. ஆயினும் கற்றுத் தெளிந்த மேதாவிகளுக்கு இந்நூலில் ஆங்காங்கு சில தவறுகள் தோன்றினும் தோற்றலாம். அதை ஏழையாகிய எம்மீது தயவுவைத்துத் திருத்தி வாசித்துக்கொள்ளுமாறு அவர்களை மிகவும் வேண்டிக்கொள்ளுகின்றேம். இதுவுமன்றி இச்சில்லரைக்கோர்வையிற் சொல்லாத சில அரிய பலன்களை எம்மாற் றெளிவாக வெழுதி அச்சிட்டிருக்கும் சாதக சாரசங்கிரக மென்னும் சோதிட பராக்கிரமத்திற் காண்க.

இப்படிக்கு,

த. குப்புசாமிநாயுடு

சோதிடம்.

திண்டுக்கல்ரோட் 2-வது நெம்பர் சந்து,

மதுரை.

உ

நவநாயகர் துணை.

சோதிடச் சில்லரைக்கோர்வை என்னும்

# ஜம்புரிஷி வாக்கியம்

விநாயகர் துதி.

கலி விருத்தம்.

சீர்சி றந்த திரைகடல் வையினிற்
பார்வி ளங்கப் பலித்திடுஞ் சோதிடத்
தாரு யர்நவக் கிரகநூல் சாற்றிடக்
கார்நல் வியானை கழலிணை யேற்றுவாம்.

## நவக்கிரகஸ்துதிகள்.

சூரியபகவான்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

திருவருள் சுரந்து மிக்க செகத்துயிர் தனைக் காக்க
வருபிதா வாகித் துன்ப வல்லிரு ளதனை யோட்டி
மருவிய சகத்தை நல்க வாயிரங் கதிர்ப ரப்பும் [ம்.
குரவனும் பரிதிப் புத்தேள் குரைகழல் தலைமேற் கொள்வா

சந்திரபகவான்.

செல்வமோ டின்ப நல்கி செகத்துள வுயிர்கட் கெல்லாம்
பல்கிடு மாதா வாகிப் பாயிரு ளதனை யோட்டிப்
புல்கியே யமுத மாகப் பொழிந்திடக் கதிர் பரப்பி
நல்கியே சோம னார்தம் நற்பதந் தலைகொள் வோமே.

அங்காரபகவான்.

செயமொடு வீர மாண்மை தீரமாம் பராக்ர மங்கள்
நயமுள வெற்றி நல்கி நட்புசோ தரனே யாகித்
தய்வுடன் பூமி யின்பந் தானிய மிகவு மோங்கி
உயர்வுசெய் சேயின் பாத மொளிமலர் தலைமேற்கொள்வாம்.

புதபகவான்.

சிந்தையின் மகிழ்ச்சி யின்பஞ் சிறந்திடு புத்தி யுத்தி
வந்திடுங் கல்வி மேன்மை மாதவம் மகிமை புண்ணியந்
தந்திடும் பந்து வாகிச் சார்ந்திடச் சுகத்தை நல்கும்
புந்தியர் மெந்தை பாதப் போதினைப் போற்று வோமே.

வியாழபகவான்.

திருமிறை செல்வ மேன்மை சிறந்திடுஞ் சுகங்கல் யாணந்
தருமிகு குலந்த ழைக்கச் சாந்தனைப் பெருக்க மெய்தி
வருநிதி யாடை யிரத்நம் வண்மையு மருளுந் தேவ [மே.
குருவெனும் வியாழப் புத்தேள் குரைகழல் தலைக்கொள்வோ

சுக்கிரபகவான்.

மைக்கடல் சூழ்ந்த பூமி வந்திடு முயிர்கட் கெல்லாந்
தக்கதோர் போக போகந் தழைத்திடு மனைவி யின்ப
மிக்கதோர் வாக னங்கள் வேண்டிய சுகத்தை நல்குஞ்
சுக்கிர பகவா னெந்தை துணையடி தலைமேற் கொளவாம்.

சனிபகவான்.

இனியதோ ருலகத் துள்ளா ரியாவர்க்கு மிகபோ கங்கள்
தனித்தனி யருளித் தேகந் தளர்வுறு பிணிகள் நீக்கிப்
பணிப்புறத் தலைத்த ணித்து பரிந்துதீர்க் காயு ணல்குஞ்
சனிப்பக வான்றன் பாதந் தாமரை தலைக்கொள் வோமே.

இராகுபகவான்.

அராவுரு வுடைய னாகி யமுதபா னத்தைச் செய்து
தராதல வுயிர்கட் கெல்லாந் தரும்படி போக போக்யஞ்
சராகமா யளித்து வேண்டுஞ் சரசவின் பங்கள் நல்கும்
இராகுவா மெந்தை யார்தம் மிணையடி யிறைஞ்சி வாழ்வாம்.

கேதுபகவான்.

மாதுமை பாகன் சொற்ற வரத்தினு லமுத பானத்
தேதுவு முடைய னாகி யெவ்வுயிர் களுந்த ழைக்கச்
சோர்விலா ஞான மோட்சங் குருபத்தி யருளு நல்கும்
கேதுவாம் பகவன் பாதம் கிளர்முடி மிசைக்கொள் வோமே.

---

## நூல்.

பூமியிலே யாதொரு சாதகனுக்கு லக்கினத்துக்குமூன்றுமிடத்துக்_குடையவனுடைய திசை வந்தால் சாமான்யமென்றுசொல்லவும் * அதிலும் அவன் பொசிப்பில் அவன் திசையிலே மெத்தவும் சாமான்யமென்று சொல்லவும்.

எட்டாமிடத்துக் குடையவன் ஜெனனகாலத்தில் எந்தக்காலி லிருந்தானோ அந்த ராசியில் சனி வருங்காலத்தில் அவன் பொசிப்பு மாதத்தில் அவனுடைய ராசியாவது லக்கினத்துக் குடையவன் மாதமாவது வந்தால் அந்த மாசத்தில் அவன்ராசி நட்சேத்திரத்தில் சந்திர லக்கினத்துக் குடையவன் நக்ஷத்திரமாவது அதிலே அந்தராசிக்குடையவன் வாரத்தில் அந்த மாசத்தில் எத்தனையாந் தேதி வருகிறதோ அந்தத் தேதியிலே மிகவும் சாமான்யமென்று ஆராய்ந்து பார்த்துச் சொல்வது.

லக்கினத்துக்கு மூன்றுக் குடையவனும் ராசிக்குடையவனும் ஒருராசியிலே கூடி அவருடன் இராகுவாவது, கேதுவாவது சேர்ந்தாலும், அல்லது பார்த்தாலும், ஒருலக்கினத்தில் இரட்டைப்பிள்ளை பிறக்கும் அந்தலக்கினத்துக்குடையவன் ஆண் கிரகமானால் ஆணென்றும், பெண் கிரகமானால் பெண்ணென்றும், இரண்டும் ஆண்கிரகமாயிருந்தால் இரண்டும் ஆண்குழந்தையென்றும், இரண்டும் பெண்கிரக மாயிருந்தால் இரண்டும் பெண்குழந்தையென்றும்சொல்லுக. * லக்கினத்துக்குடையவனும் ராசிக்குடையவனும் பெண் கிரகமானால் இரண்டும் பெண்ணைப்பிறக்கும். * லக்கினத்துக்குடையவனும் நாலாமிடத்துக் குடையவனும், சந்திரனும் லக்கினத்திலிருக்கப் பிறந்தாலும் இரட்டைப்பிள்ளையாமென்க.

### தெத்துப்புத்திரன்.

லக்கினத்துக்கு அஞ்சாமிடம் புதனுட வீடாயிருக்க, அந்த வீட்டுக்குடைய புதன் பகைக்கிரகங்களுடனே கூடி அவனுடனே சனியாவது குளிகனாவது கூடியிருக்க, இல்லாதேயிருந்தால் அவனிருக்கிற ராசியைப்பார்க்க, அப்படியிரு

க்கப் பிறந்தபிள்ளை தெத்துப்புத்திரனாய்ப் போவன். இதுவு மல்லாமல் விசேஷயோகமாவது அஞ்சாமிடத்துக்குடையவ னும், ஒன்பதாமிடத்துக்குடையவனும் ஒரு ராசியிலிருக்கப் பிறந்தவன் தகப்பன் வர்க்கத்திலே தெத்தாய்ப் போவன். இவர்களிரண்டு கிரகத்துடனே நாலாமிடத்துக் குடையவ னாவது சுக்கிரனாவது சேர்ந்திருந்தால் தாய் வர்க்கத்திலா வது, களத்திர வர்க்கத்திலாவது தெத்துப் புத்திரனாய்ப் போவனென்று சொல்லவும்.

லக்கினத்துக் குடையவனுடனே இரண்டாமிடத்துக் குடையவனும், சுக்கிரனும் கூடியிருந்தால் நேத்திரம்போம். அவர்களுடனே சூரியன் கூடினால் பிறக்கும்பொழுதே குருடு. சந்திரன் கூடினால் மாலைக்கண்ணாகும்.

லக்கினத்துக்கு அஞ்சாமிடத்திலேயாவது, ஏழாமிடத் திலே யாவது சூரியன் செவ்வாய் இராகு யிவர்களுடனே கூடியிருந்தால் சித்தப்பிரமையும் பயித்தியரோகமும் வரும். * செவ்வாய் திசையில் அவன் பொசிப்பில் அவனுடனேகூடி னபேருடைய பொசிப்பில் வருமென்று சொல்லுக.

புதனும் ஆறாமிடத்துக் குடையவனும், லக்கினத்திலா வது அல்லது இரண்டு பேரும் ஒரு ராசியிலே கூடியிருக்க அவர்களுடனே இராகு கூடினால் (அண்ணகசனரோகம்) வரும். அதாவது புதன் திசையில் அவன் பொசிப்பில் வரு மென்று சொல்லவும்.

லக்கினத்துக்குப் பத்தாமிடத்துக் குடையவ னுடனே ஒரு ராசியிலே மூன்றுகிரகங்கூடினால் சன்யாசியோகமுண்டு, இரண்டு கிரகங்கூடினால் குணபேதக ஜீரணமாயுஞ் சீர்கேட னுமாகப்போவன், ஒரு கிரகங்கூடினால் ஞானியாவன்.

லக்கினத்துக்குப் பத்தாமிடத்துக்குடையவனும் மூன் றாமிடத்துக் குடையவனும், சந்திரனும் இவாள் மூன்றுபே ரும், ஒருராசியிலே கூடினால் நீரடைப்பன் வரும், அல்லது மேகவியாதிவரும்.

லக்கினத்துக்கு மூன்றுமிடத்துக் குடையவனும் புதனும் இவர்களிரண்டு பேரும் தனுசிலே இருக்க, இவர்களுடனே செவ்வாய் கூடியிருக்க, அல்லது செவ்வாய் பார்க்க நீரடைப்பன் வரும்.

லக்கினத்துக்கு நாலாமிடத்தில் சந்திரனிருக்க, இராசிக்குடையவன் கூடி அவனுடனே மூன்று கிரகமிருக்க, நாலுகால் மிருகத்தினாலே பிறந்த சீவனெனப்படும்.

லக்கினத்துக்கு அஞ்சா மிடத்திலாவது, ஒன்பதாமிடத்திலாவது, நாலு கிரகங்கள் கூடினால் மோக்ஷத்தை யடைவன். அல்லது நாலாமிடம், ஏழாமிடம், பத்தாமிடம் இதிலேயாவது நாலுகிரகங்களிருந்தால் மோக்ஷத்தையடைவன்

லக்கினத்துக்கு மூன்றுக்குடையவன் ஒன்பதிலே யிருக்க, ஒன்பதுக்குடையவன் நட்பாட்சி யுச்சத்திலிருக்க, அவனுடனே சுக்கிரனாவது வியாழனாவது கூடியிருக்க, அல்லது பார்க்க, ஜெபதபங்களிலே தியானமாய் மடாதிபதியா யிருப்பன்.

லக்கினத்துக்குடையவனும், புதனும் புதனுட வீட்டிலிருக்கப் பிறந்தவனுக்கு எந்நேரமும் ஆசனத்திலே ரோகம் வரும்.

லக்கினத்துக்கு ௨-க்குடையவனும் புதனும்சந்திரனுங் கூடி ஒருராசியிலிருக்க, அவர்களுடனே இராகு கேது கூடினால் வெள்ளைக்குஷ்டம்வரும், இவர்களைச் செவ்வாய் பார்த்தால் பெருவியாதிவரும்.

லக்கினத்துக்கு இரண்டா மிடத்துக் குடையவனும், ஆறுமிடத்துக் குடையவனும் இரண்டுபேருங்கூடி மேஷத்திலாவது, விருச்சிகத்திலாவது இருக்கப்பிறந்தவன் அடிக்கடி துக்கப்படுவன்.

லக்கினத்தில் சந்திரனிருக்க, அவனுடனே மூன்றுமிடத்துக் குடையவனு மிருந்தால் பிள்ளைக்குத் தாய் மூலைப்

பாலில்லாமல் அன்னிய ஸ்திரீ முலைப்பால்குடித்து வளரு வான்.

இராசிக் குடையவனும், இராஜாவும் லக்கினத்துக்கு மூன்றுமிடத்திலிருக்க, அவர்களுடனே இராகு கூடினால் அண்டத்திலே ரோகம்வரும்.

லக்கினத்துக்கு மூன்றுமிடத்துக்குடையவனும், ராஜாவும் லக்கினத்திலிருக்க, அவன்திசையில் அவன்பொசிப்பில் நாற்கால் மிருகத்தினால் மரணம்வரும். இவர்களுடனே செவ்வாய்கூடினால் வலிரோகமுண்டு.

லக்கினத்துக்கு மூன்றுமிடத்துக் குடையவனாவது, இராசிக்கு மூன்றுமிடத்துக் குடையவனாவது, சனியுடன்கூடி ஒருராசியிலேயிருக்க, அவர்களுடனே செவ்வாய்கூடில் சண்டையிலே மரணம்வரும், இல்லாவிட்டால் ஆயுதத்தினால்மரணம் வரும்.

லக்கினத்துக் குடையவனோடே, ஆறுக்குடையவனும், இராகுவாவது அல்லதுகேதுவாவது கூடியிருந்தால் ஸ்திரீகள் மருந்திட்டு மரணம்வரும். சனி கூடியிருந்தால் சோரர்களாலே மரணம்வரும்.

நாலாமிடத்துக்குடையவன் பாபர்களுடனே கூடி எட்டாமிடத்திலிருக்க, அஜீரணத்தினால் ஆறும்வயதில் மரணம் வரும்.

நாலிலும், லக்கினத்திலும், இராசியிலும் பாபக்கிரகமிருக்க, இந்தமூன்றுதானத்திலேயிருந்தபேரும் பெலயீனமாயிருந்தால், மூன்றுமாதத்தில் மரணம். லக்கினத்தைப் பாபர் பார்க்க, அதில் பாபரிருக்க, அல்லது ஆறுமிடம் எட்டாமிடம் பாபரிருக்க, அவர்களுடனே பகையாயிருக்கிற கிரகங்கள் கூடியிருக்கப் பத்து நாளையில் மரணம், இந்த இரண்டு யோகத்திலே பாலாரிஷ்டம் பார்த்துச் சொல்லவும்.

லக்கினத்துக்கு மூன்றிலே செவ்வாய் ரவி குரு கூடியிருந்தால்திடகாத்திரதேகனாயிருப்பன். இவர்களுடனேபுதன்

கூடினால் குட்டையாயிருப்பன். செவ்வாய் ராகு இரண்டு பேரும் ராசியிலே யிருக்கில் தொப்புள் பெருத்திருக்கும். புதனும் சனியும் ராசியிலே யிருந்தாலும் உடம்பெல்லாம் மயிராயிருக்கும்.।

லக்கினத்தில் ரவியும் ஆறாமிடத்துக் குடையவனும் இராசிக்குடையவனுங் கூடினால் பூனைக்கண்ணாய்ப்பிறப்பன்.

லக்கினத்துக்கு மூன்றாமிடத்துக் குடையவனும் செவ்வாயும் ரவியும் கூடினால் தலைமொட்டையாய்ப் பிறப்பன். போகத்தில் அதிகனாயிருப்பன். உஷ்ணபோஜனம் பண்ணுவன்.

லக்கினத்துக்குப் பத்தாமிடத்தில் இராகுவும் சூரியனுமிருந்தால் அவனுக்கு கங்காயாத்திரைகிடைக்கும். அல்லது பெரியோர்கள் கங்காயாத்திரை பண்ணுவார்கள்.

லக்கினத்துக்குப் பத்தாமிடம் மீனமாயிருக்க, அதில் புதனிருந்தால் அவசியம் கங்கையாத்திரை கிடைக்கும்.

லக்கினத்தில் இராகுவும் லக்கினாதிபதியுங் கூடி யிருந்தால் மூக்கிப்பிறப்பன்.

லக்கினத்துக்கு எட்டுக் குடையவனும் லக்கினத்திலேயிருந்தால் கொடிசுத்திப்பிறப்பன். அல்லது, புதனுடலக்கினத்திலே பிறக்க, அந்தப்புதன் ஆறாமிடத்திலிருக்க இல்லாவிட்டால் ஆறாமிடத்துக் குடையவனுடனே கூடியிருக்கப் புருஷனானால் அலியாய்ப் பிறப்பன். பெண்ணானால் மூகத்திலே மயிருண்டாயிருக்கும்.

லக்கினத்திலாவது இராசியிலாவது பாபக்கிரக மிருந்தால் பலஸ்திரீகளாலே தோஷம்வரும்.

லக்கினத்துக்கு நாலு-ஏழு-பத்திலே சுக்கிரனாவது சந்திரனாவது இருந்தால், அன்னிய ஸ்திரீகள் அவனுக்கு வழியிலே வருவார்கள், அதிலே சுக்கிரனிருந்தால் போகஸ்திரீகள் வருவார்கள்.

சனியுஞ் செவ்வாயும், ராசிக்குடையவனும், நாலாமிடத்திலாவது, இராசியிலாவதிருந்தால், அவனுக்கு இராத்திரி காலம் ஏவலினாலே கல்லுவந்துவிழும்.

லக்கினத்துக்கு மூன்றுமிடத்துக்குடையவன்பாபியோடேகூடில், அல்லது மூன்றுமிடத்தில் பாபரிருக்க, லக்கின முதல் ஆறுராசிக்குமேல் மூன்றிராசிக் குள்ளே ஒரு ராசிக் குடையவன் நீசனாகப் போனால், அவனுக்கு வீரியம் பூமியிலே விழுந்துபோம்.

லக்கினம் ஏழாமிடத்தில் செவ்வாய், சுக்கிரனிருந்தால் கைம்பெண்டுகளுடன் சிநேகிதனாவான்.

ஏழாமிடத்துக் குடையவனோடே இராகு கேது கூடி, ஏழாமிடமும், தனுசு மீனமாயிருந்தால் அவனுக்குப் பிராமண ஸ்திரீகள் நேசமுண்டாம்.

இராசிக் குடையவனோடே சூரியனுஞ் சுங்கனும் கூடினால் இராஜஸ்திரீகளுடனே நேசமுண்டாம்.

லக்கினத்துக்கு நாலாமிடத்துக் குடையவனும், ஒன்பதுக்குடையவனும், பகைக்கிரகத்துடனே கூடி ஒருராசியிலேயிருந்தால், அந்தச்சாதகம் பலவீந்துவென்க.

லக்கினத்துக்கு ஆறுமிடத்துக் குடையவனும், சந்திரனும், செவ்வாயும் நாலாமிடத்திலே யிருந்தால், அந்த ஜாதகன் மாதாவுக்குத் தோஷமுண்டு.

லக்கினத்துக்கு ஒன்பதாமிடம் ஆறுமிடத்துக்குடையவனும் பாபக்கிரகங்களுடனேகூடி ஒருராசியிலேயிருக்க, அவன் பெண்சாதிக்குத் தோஷமுண்டு, அவர்களுடனே சனி கூடினால் சூத்திரனாலே தோஷமுண்டு.

லக்கினத்துக்குடையவனும், நாலுக்குடையவனும் ஆறு எட்டு - பன்னிரண்டில்இருந்து அந்தவீடுகளும் பகைவீடாயிருந்தால், சொற்பனத்திலுஞ் சுகமில்லை.

லக்கினத்துக்குடையவன் லக்கினத்திலிருக்க, அல்லது இரண்டுபேரும் ஒரு ராசியிலிருக்க, அவனுக்கு பெண்சாதி கூட அனுமானமாவள், இது சர்வயோகம்.

லக்கினத்துக்குப் பத்துக்குடையவனும், புதன், இராஜாவும்மூன்றுபேரும் இரண்டாமிடத்திலிருக்க, அவன் யாகம் பண்ணி சாலைபெறுவான், பாக்கியவானயிருப்பன்.

லக்கினத்துக்கு ஒன்பது பத்துக்குடையவன் இரண்டுபேரும் பாபர்வீட்டிலே யிருந்து பெலயீனமா யிருந்தால் அவன் ஸ்ரீமந்தபுத்திரனல்ல.

லக்கினத்துக்கு பதினோராமிடத்துக் குடையவன் பாபர்வீட்டிலே யிருந்தால், நாலுமாசத்திலே பிள்ளைதரியாமற் போம்.

லக்கினத்துக்கு ஏழுக்குடையவன்நீசனாய்ப்போய் சூரியன் வீட்டிலாவது, அவனுடைய அம்சத்திலாவது இருந்தால் அவனுக்குக் கனரோகம்வரும். அவன் உச்சாங்கிஷத்திலிருந்தால் கண்ணிலே பித்தகாசம்வரும். அவன்பகைவீட்டிலேயாவது அவன் பகைராசி அம்சத்திலாவது இருந்தால் குஷ்டமும் குமரகண்டனும் வரும். அவனோடே இராசிக்குடையவனும் லக்கினத்துக் குடையவனு மிருந்தால் குன்மவியாதியும், அன்னத்துவேஷமும் வரும். அவனோடே ஆறுமிடத்துக்குடையவனுங் கூடினால், மனுஷரைக் கொல்லுகிற பில்லிசூனியங்கற்பன். அவனோடே எட்டாமிடத்துக்குடையவனுஞ் செவ்வாயும் இராசிக்குடையவனுங் கூடினால் கைம்பெண்டாட்டி பிள்ளையாவன்.

லக்கினத்துக்குப் பதினோரா மிடத்திலே செவ்வாயிருக்க, லக்கினத்துக்கு அஞ்சொன்பதில் சூரியனிருக்க, அவனுக்கு ஆடு மாடு எருமை இம்மூன்றுந் திரளாயிருக்கும். அவர்களுடனே ராகுவாவது குளிகனாவது கூடினால் நாய் பன்றி பலமிருகங்கள் பக்ஷிகள் நானாதானியங்களுமுண்டு.

லக்கினத்துக்கு இரண்டு நான்கு-பத்து - பன்னிரண்டு இந்தராசியிலே எத்தனைபே ரிருந்தார்களோ அத்தனைபேர்

வீட்டிலே பிள்ளைபிறக்கச்சே இருந்த பேரென்று சொல்லவும். அதிலே சனியிருந்தால் அன்னியஸ்திரீ ஒருத்தியென்று சொல்லவும். சுக்கிரனுஞ் சந்திரனுமானால் சுமங்கலியென்று சொல்லவும், இது பூர்வபலன்.

## புதையல்.

லக்கின ராசியை முப்பதாகப்பிரித்து அதிலே தற்காலத்துக்குவந்த பாகத்துடையவன் லக்கினத்துக்கு எத்தனையாம் இராசியிலேயிருக்கிறானோ அந்தராசிக்குடையவன் சுபக்கிரகமானால், அந்தவீட்டுக்கு எட்டுத்திக்கிலேபூர்வதனமுண்டு. அந்தக்கிரகம் சூரியனானால் கிழக்கு, சுக்கிரனானால் அக்கினிமூலை, செவ்வாயானால் தெற்கு, இராகுவானால் நிருதிமூலை, சனியானால் மேற்கு, சந்திரனானால் வாயுவுமூலை, புதனானால்வடக்கு,-ராஜாவானால் ஈசானியமூலை, இதுகளிலே பூர்வதனமுண்டென்றுசொல்லவும். இந்தக்கிரகமானால்அந்தவீடு சமீபங்களிலே பில்லிசூனியங்கள் வைத்த பூமியாயிருக்கும். அந்தக் கிரகமும் நீசமூட அஸ்தமனமா யிருந்தாலும் பகையோடே கூடியிருந்தாலும் அந்தப்பூமி அய்யன் - துர்க்கை பிடாரி - கோவில்கள் சீரணமாய்ப்போயிருந்த பூமியாயிருக்கும் சுபக்கிரகமானால் நல்லதேவதா பூமியாயிருக்கும். இப்படிப்பார்த்துச் சொல்லவும்

லக்கினத்துக்கு நாலாமிடத்திலே ஒருத்தருமில்லாவிட்டால் அந்தக்கிரகத்துக்காவது, நாலாமிடத்துக்கு முன்னே பாபக்கிரகமிருந்தால் மேற்குத்திக்கு பாழென்றும், லக்கினத்துக்கு மூன்றாமிடத்திலே பாபக்கிரகமிருந்தால் கிழக்குத்திக்கு பாழென்று சொல்லவும்.

லக்கினத்துக்குடையவனும் பாபக்கிரகங்களுடனே கூடி யிராசியிலாவது, எட்டாமிடத்திலாவது இருந்தால் அவன்தேகத்திலே சிரங்கு விரணமுண்டாயிருப்பன்.

## உணவு.

லக்கினத்துக்குடையவன் ராஜாவாயிருந்தால் தயிரிலே பிரியமாயிருப்பன். புதனானால் புளிப்பிலே விருப்ப மாவன்.

சுக்கிரனுனல் சக்கரை தேன்முதலான தின்பண்டங்களிலே விருப்பமாவன். சனியானல் காட்டுக்கீரையிலே பிரியமாவன். லக்கினத்துக் குடையவனோடே ராகுவாவது கேதுவாவது இருக்க குளிகனுங்கூடியிருந்தால் சத்திபூசைபண்ணி மாங்கிஷங்களைப்போசிப்பன். லக்கினதிபதி வியாழமானல் சமமாயிருக்கிற உஷ்ணபோஜனத்திலே பிரியமாவன். புதனுஞ் சந்திரனுமானல் குளிர்ந்திருக்கிற சோற்றிலே பிரியமாவன். சூரியனுஞ் செவ்வாயுமானல் சுடச்சுடச் சாப்பிடுவன். சுக்கிரனுஞ் சனியுமானல் சமமான போஜனம்பண்ணுவன்.

## வித்தை.

லக்கினத்துக்கு இரண்டாமிடத்திலே குருவிருந்தால் வேதசாஸ்திரங்கள்வரும், புதனிருந்தால் தமிழிலே வல்லவனுவன் செவ்வாய்-சனியிருந்தால் தெலுங்குகன்னடம்வரும், இராகுகேது இரண்டாமிடத்துக் குடையவனு மிருந்தால் அன்னியபாஷைமுதலாகிய நீசபாஷைகளும் வரும்.

லக்கினத்துக்கு ஏழாமிடம் எட்டாமிடத்திலேசூரியன் வீட்டிலே சந்திரனும், சந்திரன்வீட்டிலே சூரியனு மிருக்கப் பத்தாமிடத்துக் குடையவனும் யிந்த இரண்டுபேருடனே கூடியிருந்தால் அவன் பதினோராம் வயதிலே யேறினதண்டிகை வயதுபரியந்தம் ஏறியிருப்பன். நடுவயதிலே தன்மதத்தைவிட்டு வேறே மதத்தை யுடையவனுயிருப்பன், இது பூமிவசனம்.

லக்கினத்துக்குடையவனும் ஆறுக்குடையவனும்இந்த இரண்டுபேரும், ஆறு-எட்டு-பன்னிரண்டிலிருக்க இவர்களுடனே பாபிகள் கூடியிருந்தால் சென்மபரியந்தம் ரோகியாயிருப்பன்.

லக்கினத்துக்குடையவன் நீசனுனலும், சூரியனுடனே கூடினும், பகைபேருடன் கூடினுலும், கால்வாசி பெலனுயிருப்பன்.

## கஉ. சோதிடச் சில்லரைக்கோர்வையென்னும்

லக்கினத்தில் வியாழமிருக்க, அவனைப் புதன்பார்க்க, அல்லது கூடியிருக்க அவனுடையசிட்டை ராஜாக்கள் வாங்கிப்பார்த்து சிரசிலே வைத்துக்கொள்ளுவார்கள்.

லக்கினம் மேஷ விருச்சிகமாக அதிலே செவ்வாயிருந்தால் இராஜயோகமா யிருப்பன், மிதுனம் கன்னி லக்கினமாக அதிலேபுதனிருந்தால் பந்திரமாய்ப் பெலத்திருப்பன். தனுசு - மீனம் லக்கினமாக அதிலே குருவிருந்தால் வெகு யோகவானாயிருப்பன்.

நாலாமிடத்திலேஇராஜாவிருந்தால் மாளவயோகமென்று சொல்லப்படும், அதற்குப்பலன் யானை-குதிரை-தண்டிகை ஆடையாபரணமும், சகல கரிதுரகாதிபத்தியமும், வெகு ஜனபோஷணையும், வந்தவரைசேர்க்கையும், இது முதலான பலனெல்லாமுண்டு. எந்தக்காட்டிலே யிருந்தாலும் அங்கே சகலபோக பாக்கியமும் நடக்கும். மகர-கும்ப லக்கினமாயிருக்க, அதிலே சனியிருந்தால் சகல யோகமுமுண்டு. லக்கினத்துக்குடையவனும் இராசிக்குடையவனும் ஒருத்தனானால் பூரணபலமென்றும், புஷ்களயோகமென்றும், பூபாலகனென்றும், யோகங்க ளனுபவிப்பன்.

நாலாமிடம் சூரியன்-சந்திரன்-செவ்வாய்-இராகு யிவர்களிருந்தால், அந்தவீடுபகைவீடாகவுமிருந்தால் பிறந்தவீடு மூன்று வருஷத்திலே சீரணமாய்ப்போகும். பாம்பு-பெருச்சாளி-எலியுங் குடியாயிருக்கும்; அக்கினிவாதைப்படும்,கிட்டின பந்துவர்க்கத்துக்கு சாமானியம் தலபேதம்வரும்.

லக்கினத்துக்கு இரண்டு-நான்கு-ஏழா மிடத்தில் சூரியன்புதன்-சுக்கிரன் இவர்கள்மூன்றுபேருமிருந்தால் வெகு தனதானிய முடையவனாகவும், எத்தனை மந்திரிகளிருந்தாலும், அவர்களுக்குமேல் அதிகமான மந்திரியாய் வெகு யோகவானா யிருப்பன்.

லக்கினத்துக்கு ஆறு-எட்டுக்குடையவனும் இராசிக்குடையவனுமானால் அவன் தேசாந்திரியாய்த் திரிவன்.

லக்கினத்துக் குடையவன் பிலத்து நட்பாச்சி யுச்சமா யிருந்தால் பெலத்த சாதகமென்பது, பெலயீனமாயிருந்தா லறிந்து சொல்லவும்.

லக்கினாதிபதி லக்கினத்திலாவது ஆட்சி யுச்சங்களிலாவது இருக்க, இரண்டாமிடத்தில் புதனிருக்க, பன்னிரண்டில் சுக்கிரனிருக்க, அது இரகசியமான கூர்மை யோகமென்பது.

லக்கினத்துக்கு இரண்டாமிடம் நான்காமிடத்தில் சூரியன்-புதன்-சுக்கிரன் இவர்கள் கூடியிருக்கப்பிறந்தவன் தனவானுமாய் இராஜ துவாரத்தில் எத்தனை மந்திரிக ளிருந்தாலும், அவர்களுக்கு மேலான மந்திரியாய்கீர்த்தியுடையவனுமாய், அனைவருக்கும் புத்தி சொல்லுகிறவனுமாய் இராஜ யோகவானுமாயிருப்பன்.

லக்கினத்துக்கு ஒன்பதா மிடத்தில் சுக்கிரன்-புதன்-குருவிருக்க, அந்தவீடு புதன்-ஆட்சி உச்சவீடாயிருக்கப், புதன்திசையில் புதன்புத்தியில் பூர்வதனம் புதையலெடுப்பன். அல்லது சுக்கிரன் குருதிசையிலாவது எவளவாகிலுந் தனமெடுப்பன்.

லக்கினத்துக்கு நாலுக்குடையவனும், ஒன்பதுக்குடையவனும், இராசிக்குடையவனும் இந்தமூன்றுபேரும் ஒன்பதிலேயிருக்க, அல்லது நாலுக்குடையவனும், இராசிக்குடையவனும் இரண்டுபேரு மிருக்க, இவர்களைக் குரு பார்க்க, அவன்பதினாறுவயதுதொடுத்து இராஜபூசிதனாக இருப்பன். முந்தியெழுதிய பலனும் இதுவும் அபூர்வபலனாயிருக்கும்.

லக்கினத்துக்கு நான்கு - ஒன்பதா மிடத்துக்குடைய இரண்டு பேரும், சுபக்கிரகமாய் ஒரு வீட்டிலே யிருந்தால் வெகுசேனைகளுக்கு அதிபதியாயிருப்பன்.

லக்கினத்துக்கு ஒன்பதுக் குடையவன் நாலாமிடத்திலிருக்க, அவனுடனே சுபக்கிரகங்கள் கூடியிருக்க, அல்லது குரு சுக்கிரனாவது இருக்க, அல்லது பார்க்க, அவன்திசை

பில் ஏழாமிடத்துக் குடையவன் பொசிப்பில் தங்கப்பல்ல க்கு ஏறுவன். சந்திரனுடன் கூடியிருந்தால் குதிரைகளுண்டு. அந்த லக்கினத்துக்கு ஏழாமிடத்துக் குடையவன் பெலத் திருந்தாலும் நட்பாட்சி யுச்சமாயிருக்க, நாலாமிடத்துக் குடையவனும் பிலத்திருந்தால், அவன் தங்கப் பல்லக்குமே லே வெண்சாமரைகள் வீசிக்கொண்டு யோகவானு யிருப் பன், இதுவெல்லாம் விசேஷயோகம்.

லக்கினத்துக்கு நாலாமிடத்துக் குடையவன் ஒன்பதி லேயிருக்க, ஒன்பதாமிடத்துக் குடையவன் நான்கு-ஏழு-பத்திலே யிருக்க, அந்தவீடு சுபர்வீடாயிருக்க, அவனை சுபர் பார்க்க, அல்லது கூடியிருக்க, அவன் திசையில் அவன்பொ சிப்பில் தண்டிகை யேறுவன்.

விசேஷமாய் நாலாமிடத்துக்குடையவன் நாலிலிருக்க, ஒன்பதாமிடத்துக்குடையவன்நாலிலிருக்க, அதுசுபர்வீடா யிருக்க, அவன் தேவவாகனத்தை யுடைத்தாயிருப்பன். சந் திரனும் நாலாமிடத்துக் குடையவனும் ஒரு இராசியி லேறி யிருக்க, அல்லது இராசிக் குடையவனோடே கூடியிருக்க, அவனுக்கு குதிரை வரும். சுக்கிரனிருந்தால் தண்டிகை வரும். குருவிருந்தால் திரவியம்வரும்.

லக்கினத்துக்கு ஏழாமிடத்துக் குடையவனோடு எத் தனைகிரகங் கூடினார்களோ அத்தனைபேர் பெண்சாதிவரும். பெண்கிரகங்கூடினால் வருமென்பது ஏழாமிடத்துக் குடை யவன் பகையோடேகூடினால் அல்லது நீச அஸ்தமனமாகிப் போக அவன் திசையில் அவன் பொசிப்பில் முந்தின பெண் சாதிபோம்.

லக்கினத்துக்கு நாலாமிடத்திலே சனியுஞ் சந்திரனு மிருக்க, அவனுக்கு இரண்டாம் பெண்டாட்டிக்குப் பிள்ளை யுண்டாம்.

லக்கினத்துக்கு இரண்டேழு பத்தாமிடத்துக் குடை யவர்கள் மூன்றுபேரும் ஒருராசியிலேயிருக்க, அவன் வெகு

தாரங்களைக்கொள்வான். திரேக்காணராசிக்கு இந்தப்பலன் பார்த்துச் சொல்லவும்.

லக்கினத்துக்கு ஐந்துக்குடையவன் இரண்டு மூன்றிலேயிருந்தால் இவர்கள் திசையில் பிள்ளையுண்டாம். அல்லது ஐந்துக்குடையவனோடே குருவிருந்தால் அவன் திசையில் பிள்ளையுண்டாமென்றறிவது.

லக்கினத்துக்கு இரண்டுக்குடையவன் ஐந்திலே யிருக்கப்பிள்ளையுண்டாம். அவர்கள் இரண்டுபேரையும் பலம்பார்த்துச் சொல்லுவது.

லக்கினத்துக்கு ஐந்தாமிடத்துக்குடையவன் ஆறுமிடத்துக்குடையவனோடாவது, ஆறுமிடத்திலேயாவது இருக்கப் பகையுடனேயுங்கூடியிருக்க, அவனுக்குப் பிள்ளையில்லையென்று சொல்லவும்.

ஐந்தாமிடத்துக் குடையவன் அஸ்தமானமா யிருக்க, அல்லது ஒன்பதிலிருக்க, அவனுக்கு அற்பாயுசுப் புத்திரபோகமுண்டு, அந்தவொன்பதுக்குடையவன் மூன்றாமிடத்துக்குடையவனோடேகூடி ஒருராசியிலிருக்க, நல்லபிள்ளையாய்ப் பிறக்கும். அவனும் பாக்கியவானாய்த் தீர்க்காயுசாயிருப்பன்.

ஐந்துக்குடையவன் எட்டிலேயிருக்க, ஏழுக்குடையவன் ஐந்திலேயிருக்க, அவனுக்குப் பிள்ளைபிறந்து செத்துப்போம்.

லக்கினத்துக் குடையவன் எந்த ராசியிலே யிருக்கிறானோ அவனிருக்கிற இராசிக்குடையவன் ஐந்து-ஒன்பது லக்கினத்துக்குக் கேந்திரங்களிலே யிருக்க, அவனுக்கு அந்த வீடு மூலக்கோணமாயிருக்க; அல்லது உச்சமாயிருக்க, அவன்பருவதயோக முடையவனென்பது. அதற்குப்பலன் பருவதங்களிலேயும், நல்ல தீர்த்தங்களிலேயும், வனங்களிலேயும், நல்ல மூலிகைகள் மந்திரங்களுமறிந்து சித்த புருஷனுமாய் பாக்கியவானுமா யிருப்பன்.

நாலாமிடத்திலே யாவது இராசிக்குடைய கேந்திரங்களிலேயாவது குருவிருந்தால் கெஜகேசரி யோகமென்பது. அதற்குப் பலன் யானை-குதிரை-சேனைமுதலாகிய ஆதிபத்தியும் அனுபவிப்பன்.

லக்கினத்துக் குடையவன் லக்கினத்திலிருக்க, அவன் வெகு ஜனங்களுக்கு யோக்கியதையாயிருப்பன்.

நாலுக்குடையவன் நாலிலிருக்க அவன் வெகுசேனைக் கதிபதியாயிருப்பன்.

ஏழுக்குடையவன் ஏழிலிருக்க, மகாமந்திரி யோகமாயிருப்பன்.

பத்துக்குடையவன் பத்தாமிடத்திலிருக்க, மந்திரியோகமாயிருப்பன். யாவையுங்கூட்டிப் பிரிக்கவல்லவனுவன்.

லக்கினத்துக்குடையவன் நாலிலிருக்க, நாலுக்குடையவன் லக்கினத்திலாவது, ஏழிலேயாவது இருக்க, ஏழுக்குடையவன் பத்திலே யிருக்க, பத்துக் குடையவன் ஏழிலிருக்க, அவன் மகாபாக்கியவானு யிருப்பன். மற்ற கிரகங்கள் எத்தனைபேர் யீனபலமாயிருந்தாலும் அதனைத்தள்ளி முன் நாலுகேந்திரங்களிலும் எந்தப் பலனுண்டோ அந்தப்பலன்களை யனுபவிப்பன்.

லக்கினத்துக்குடையவனும் இராசிக்குடையவனும் நட்பிலே இருக்க, அவர்களுடனே சூரியனும் ஏழுக்குடையவனும் நட்பிலே இருக்க, அவனுக்குக்குதிரை குடைகள்வரும் தீர்க்காயுசுண்டு.

லக்கினத்துக்கு ஏழுக்குடையவனும், லக்கினத்துக்குடையவனும் அவரவர் நட்சேத்திரத்துக் கிருபத்திரண்டாம் நட்சேத்திரம் நாலாங்காலுக் குடையவனும் நட்பிலேயிருக்க அப்போது பிறந்தபிள்ளைக்குத் தீர்க்காயுசுண்டு.

எட்டாமிடத்துக்குடையவன் இராசியிலேயிருக்க, அல்லது இராசிக்குடையவனும், எட்டாமிடத்துக்குடையவனும்

ஆறாமிடத்திலேயிருக்க, ஆறாமிடத்துக் குடையவன் இராசியிலே யிருக்க, அல்லது எட்டிலேயிருக்கப்பிறந்தபிள்ளை தீர்க்காயுசு.

லக்கினத்துக்குடையவனும், ஆறுக்குடையவனும், சூரியனுடனே கூடியிருக்க, அவனுக்குத் தாபச்சுரத்தினாலே மரணம் அவனுடனே சந்திரன்கூடினால் ஜலகண்டம் அல்லது வயிற்றுக் கழிச்சலாலே கெண்டம். அவர்களுடனே பூமன் கூடினால் பயித்தியரோகத்தினாலே கெண்டம். சிரங்கு ரணங்களினாலே கெண்டம். புதன் குரு கூடியிருக்க, வாதசுரத்தினாலேகெண்டம். அல்லது வயிற்றுவலியினால் கண்டம். இராகுகேதுகூடினால் விஷத்தினாலேகெண்டம். சனிகூடினால் கள்ளராலேகண்டம். சுக்கிரன்கூடினால் ஸ்திரீகளினாலேகண்டம்.

லக்கினத்துக்கு நான்கு-ஏழு-பத்தாமிடத்திலே சூரியனிருந்தால், அவன்திசையில் அவன்பொசிப்பில் இராஜத்துவாரத்தால் நவித்துண்டிகள் வரும். பூமனிருந்தால் ஆயுதத்தினாலே காயம்வரும். புதனிருந்தால் பெரியோர்களிடத்திலே வித்தைப் பிரசங்கமாய்ப் பகையாயிருக்கும். குருவிருந்தால் உபநயன தானம், கன்னிகாதானம், பரோபகாரம் பண்ணுகிறதாயிருக்கும். இராகு கேதுக்களிருந்தால் ஈனசாதிகளாலே பிரசங்கமாயிருப்பன்.

லக்கினத்துக்கு ஒன்பது பத்துக்குடைய இரண்டு பேரும் பகைவீட்டிலே இருக்க, இராசிக்குடையவன் பலயீனமாயிருக்க, மற்றக்கிரகங்கள் எத்தனை பலமாயிருந்தாலும் பிதாவுக்கு உடனே மரணம். ஆயுட்டானத்துக் குடையவனும் முன்னிரண்டுபேரும் பகையோடே கூடி பகைவீட்டிலிருக்க, இவர்களுடனே இராசிக்குடையவனுமிருக்கப் பின்னையும் ஒருகிரகங்கூடி ஒரு ராசியிலேயிருக்க, அல்லது பார்க்க, அவன் பிதாவுக்குப்பிறந்தானென்று அறிவது

நாலுக்குடையவன் மாதுருஸ்தானம், ஒன்பதாமிடம் பிதுர்ஸ்தானம், ஒன்பதாமிடத்துக் குடையவனும், பன்னிரண்டாமிடத்துக்குடையவனும், எந்தராசியிலே யிருக்கிறார்

களோ? அந்த இராசியினுடைய திக்கு எந்த திக்கோ அந்த த்திக்கு பிறந்த வீடுவாசலா யிருக்கும். சூரியனானால்கிழக்கு, சுக்கிரனானால் அக்கினிமூலை, செவ்வாயானால்தெற்கு, இராகுவானால் நிருதிமூலை, சனியானால் மேற்கு, சந்திரனானால் வாயுமூலை, புதனானால் வடக்கு, குருவானால் யீசானியமென் றறிவது. இப்படி கிரகங்கள்பார்த்து வீடுவாசல் சொல்வது.

ஒன்பதாமிடத்துக் குடையவனும் சந்திரனும் சனியும் இவர்கள் மூன்றுபேரும் ஆறாமிடத்திலிருக்க, அல்லது ஆறுக்குடையவனோடே கூடியிருக்க, இவன் பிதாவுக்கு இராத்திரிகாலம் மரணம். சந்திரன் கூடினால் பகலிலே மரணம்.

லக்கினத்துக்கு ஆறும் ராசி சரராசியில் ரவியிருந்தால் பிள்ளை பிறக்கிறபோது பிதாவானவன் ஊரிலே யிரான், திரராசியில் ரவியிருந்தால் பிதாஊரிலேயிருப்பன், உபையராசியானால் ஊருக்கும் அசலூருக்கும் மத்தியிலே யிருப்பன்.

மேஷலக்கினமாகி சூரியனிருந்தால்நேத்திரரோகி,கடகலக்கினமாகி சூரியனிருந்தால் நேத்திர ஆணி, சிங்கம் துலாமானால் சூரியனிருக்க, இராக்காலம் நேத்திரம் தெரியாது.

இரண்டு பன்னிரண்டாமிடத்தில்பாபர்கூடி சூரியனிருந்தால் நேத்திரவியாதியுண்டாம்.

நேத்திராதிபதியும் லக்கினாதிபதியும்சுக்கிரனும், இரண்டாமிடம் எட்டாமிடமிருக்க, அந்தகனாவன்.

சந்திரனும் சுக்கிரனு மிருந்தால் இரண்டு நேத்திரமும் ஊனம்.

சூரியன் சுக்கிரன் லக்கினாதிபதியும், ஆறு எட்டுப் பன்னிரண்டிருந்தால் பிறவிக்குருடனாவன். இவர்கள் ஒன்பதாமிடத்திலிருக்க, தகப்பன் குருடனாவன். இவர்கள்நாலாமிடத்திலிருக்க, தாய் குருடியாவள். இவர்கள் மூன்றாமிடத்திலிருக்கச், சகோதரம் குருடு. இவர்கள் ஏழாமிடத்திலிருக்கப் பெண்சாதி குருடியாவள்.

இரண்டாமிடத் ததிபதியும், ஏழாமிடத் ததிபதியும், சுக்கிரனும் பாபக்கிரகங்களுடன் கூடி ஆறு எட்டு பன்னிரண்டிலிருக்க, எத்தனை கிரகங்கள் கூடியிருந்ததோ அத்தனை ஸ்திரீகளாம். இரண்டு ஏழு எட்டில் சூரியன் சந்திரன் அங்காரகன் இவர்களுடனே மற்ற கிரகங்கள் சொட்சேத்திரத்திற் கூடியிருக்க, சூரியனுக்கு ஆறு, சந்திரனுக்குப் பத்து, அங்காரகனுக்கு ஏழு ஸ்திரீகளாம்.

ஒன்பதாமிடத்ததிபதியும் எட்டாமிடத்ததிபதியும் பாபர்கூடி ஒன்பதாமிடத்திலிருக்கப் பிதாவுக்குரொணமுண்டு, நாலாமிடத்திலிருக்க மாதாவுக்கு ரொணமுண்டு. ஐந்தாமிடத்திலிருக்கப் புத்திரனுக்கு ரொணமுண்டு. ஏழாமிடத்திலிருக்க ஸ்திரீக்கு ரொணமுண்டு.

லக்கினதிபதியுடன் சந்திரன் இராகு கூடி லக்கினத்திலாவது, ஆறுஎட்டுப் பன்னிரண்டிலாவது இருந்தால்வெண்குஷ்டமுண்டு.

லக்கினத்துக்கு இரண்டு நாலுக்குடையவர் ஆறுக்குமேல் மூன்றுராசிக்குள்ளிருக்க, ஆறுக்குடையவன் பலயீனமாயிருக்க, ஊமையாய்ப் பிறப்பன்.

லக்கினத்துக் குடையவன் நாலிலும், நாலுக்குடையவன் லக்கினத்திலேயும் இருக்கப் பிறந்தவன் தகப்பனுக்கு ஐஸ்வரியமுண்டு.

நாலுக்குடையவனும் குருவும் லக்கினகேந்திரங்களிலே இருக்க, அத்துடன் புதனு மிருக்க அவன் மகா வித்துவான்.

லக்கினத்துக்கு ஆறுராசிக்குமேலே மூன்றுராசிக்குடையவர்கள் பலயீனமாயிருக்க வித்தையில்லை.

நாலில் செவ்வாய் பலயீனமாயிருக்க, அல்லது [illegible] வீட்டிலே இருக்கப் பிறந்தவன் அந்தவீடும் வெந்து தனதானியஞ் சேதம் தரித்திரமாய்ப்போகும்.

மூன்றில் சூரியனிருக்க, அவன் மூன்றுபடி அரிசிச் சாதம் சாப்பிடுவன்.

ஏழாமிடத்தில் சூரியனிருக்க, அவன் பலயீனமாயிருக்க அவன் சித்தப்பிரமை பயித்தியம்பிடித்துப் போவன்.

லக்கினத்துக்குப் பதினோராமிடத்துக்குடையவன் லக்கினத்திலிருக்க, சுபக்கிரகங்கள் கூடியிருக்க, அவன் திசையில் அவன் பொசிப்பில் புதையலெடுப்பன்.

இரண்டா மிடத்துக் குடையவ னோடே இராகு கூடி இரண்டாமிடத்திலே யிருக்க, அவனுக்கு ஆறுவயதிலே பல்லெல்லாம்போம்.

இரண்டாமிடத்திலே சூரியனிருந்தால் என்னேரமும் எரிமூஞ்சியாயிருப்பன், வாயிலே நல்லபேச்சு வராது. செவ்வா யிருந்தால் எத்தனை ஆதாயம் வந்தாலும் சிலவழிந்து போம், சனியிருந்தால் என்னேரமும் கண்வலியா யிருக்கும், குருவிருந்தால் என்னேரமும் தனலாபம்வரும், சுக்கிரனிருந்தால் ராஜத்துவாரத்திலே வித்துவானு யிருந்துக் கொண்டு தொடுத்த காரியம் ஜெயம்பண்ணுகிறவனு யிருப்பன், புதனிருந்தாலு மிந்தப்பலன் அனுபவிப்பன், சந்திரனிருந்தால் போகஸ்திரீகளுடனே கேளிவிலாசமாயிருக்க மனதாயிருப்பன்.

மூன்றுமிடத்திலே ரவியிருந்தால் என்னேரமும் அசனமில்லாமலிருப்பன், செவ்வா யிருந்தால் துக்கமா யிருப்பன், சனி யிருந்தால் ஜெனங்க ளிடத்திலே பகையா யிருப்பன், இராகு விருந்தால் என்னேரமும் விசனமும் தலபேதமும் ஆகாரபோசனுமா யிருப்பன், சந்திரன் - சுக்கிரன் - குரு-புதனிவர்கள் பெலவானுமாய் உச்சனுமா யிருந்தால் பலன் என்னேரமும் பால் பழம் அறுசுவையுட னன்னம் தனலாபம் சந்தோஷத்துடனேயும் தேவப்பிராமணாளிடத்திலேயும், தர்ம தானம் பரோபகாரமாயும் நல்ல வித்துவானுயுமிருப்பன்.

நாலாமிடத்திலே சனி-ரவி-செவ்வாய்-ராகு-கேது இவர்களிருந்தால் அவன் பிறந்தவீடு மூன்றுவருஷத்திலே பாழாய்ப்போம், பாம்பு எலிகள் வந்து சேரும், இந்தக்கிரகங்களிலே ஒரு கிரகம் பகையாயிருந்தால் ஓராண்டிலே பாழாய்ப்போம், வீடு வெந்து தலபேதம் நஷ்டம் பொருள் செலவுகள் வரும்.

நாலாமிடத்தில் குளிகனிருந்தால் பின்னையொரு வீட்டிலே உப்பரிக்கையுடைய வீட்டில்வளருவன், குரு-சுக்கன் புதன் இந்து இவர்க ளிருந்தால் மகா சவுக்கியமுள்ளவனாய் ஆடு-மாடு-தன தானியம்-தர்மம்-தானம் புராணம் மனத்தில் ஞானமுமுள்ளவனா யிருப்பன்.

லக்கினத்துக்கு ஏழாமிடத்தில் பாவக்கிரக மிருக்க, ஏழுக்குடையவனோடே பாபக்கிரகங்கள் கூடி மூன்றாமிடத்திலே நிற்க, அந்த மூன்றாமிடம் பகைவீடா யிருக்க, அவனுக்கு ஒருக்காலும் கலியாணமில்லை, அல்லது பலத்த சுபக்கிரகம் நோக்கில் கலியாணம் பண்ணுவன்.

ஐந்தாமிடத்திலே பாபக்கிரகமிருக்கப் புத்தி மந்தனாய் தேகத்திலே பெலயீனமும் துக்கமும் என்னேரமும் கிலேசமுமாயிருப்பன், சுபக்கிரக மிருந்தால் சுபமாய் ஆதாயம்வந்துகொண்டே யிருக்கும், இராஜப்பிரீதியும் உறவின்முறையும் புத்திரசம்பத்துமுண்டா யிருப்பன்.

லக்கினத்துக்கு ஒன்பதுக் குடையவன் மூன்றிலேயிருக்க, எட்டுக்குடையவன் மூன்றிலே நிற்க, எட்டுக்குடையவன் பத்திலேயிருக்க, அவன் குருடனாய் சூதுக்காரனாய் கன்னமிடுகிறவனாய் தூஷணிக்கப்பட்டவனாயிருப்பன், இருபதாம்வயதிலே தாதுநஷ்டமாய்ப் போவன்.

லக்கினத்துக்கு எட்டா மிடத்துக்கு நடுவே நீசக்கிரக மிருக்க, பன்னிரண்டாமிடத்திலே குருவிருக்க, அவனுக்கு ஒருவித்தையும் வராமல் மூடனாயிருப்பன், இருபத்தெட்டாம் வயதிலே மரணம்வரும்.

லக்கின கேந்திரங்களிலே சுபக்கிரக மிருக்க, லக்கினத் திலே பாபக்கிரகமிருக்க, அல்லது பார்க்க, அவன் விபசாரி பெற்ற கன்னிகையைக் கலியாணம் பண்ணுவன்.

லக்கினத்தில் செவ்வாயிருக்க, இரண்டில் சனியிருக்க, ஒன்பதிலே இராகுவிருக்க, பன்னிரண்டிற் சந்திரனிருக்க, அவன் பகலில் ஸ்திரீபோகம்பண்ணுவன். பத்தில் சுக்கிரனி ருக்க, எட்டொன்பதிலே சந்திரனிருக்க, அவன் பகலிலே சம்போகம் பண்ணுவன். ஆசாரயீனமாய் அழுக்குப்பிடவை யுடையவனு யிருப்பன்.

லக்கினத்தில் சனியிருக்க, எட்டில் இராகுவிருக்க, அல் லது பார்க்க, கன்னியா ராசியிலே சுக்கிரனிருக்கத் தேய் பிறையா யிருக்க, அவன் மாறுகாலும் கையும் வாங்கி துக்க மாயிருப்பன்.

லக்கினம் மேஷவிருச்சிகமாய் அதிலே செவ்வாயிருக்க, அல்லது சொந்த அங்கிஷத்திலே யிருக்க, அவருடனே சூரி யனும் கூட தேய்பிறையாயிருக்க, லக்கினத்திலே இராகுவு மிருக்க, அல்லது பார்க்க, அவன் திசையிலே அவன் போசி ப்பிலே உடல் பிளந்து போடுவார்கள்.

லக்கினத்தில் சூரிய சந்திரனிருக்க, இராகுவுங் கூடி யிருக்க, அல்லது மூன்றுபேரும் ஒரு ராசியிலேயிருக்க, லக் கினத்தில் சனியிருக்கத் தேய் பிறையாயிருக்கத் தலைவெட் டுப்படும்.

லக்கினம் கும்பமாயிருக்க, இரண்டு மூன்றுமிடத்திலே புதனிருக்க, நீசனுக யிருந்தாலும், அவனுடனே இராகுவா வது கேதுவாவது யிருக்க, அல்லது பார்க்கப் பிறந்தவன் கொண்டியாய்ப் போவன்

லக்கினத்துக்கு கேந்திரங்களிலேயாவது, திரிகோணங் களிலேயாவது லக்கினுதிபதி யிருக்க, ஒன்பதா மிடத்துக்கு டையவன் பரம வுச்சனுயிருக்க, அத்தோடே லக்கினுதிபதி

யும் பெலத்திருக்க, மகா லட்சுமி யோகவானுய் பாக்கிய புருஷனு யிருப்பன்.

லக்கினத்துக் குடையவனும், எட்டாமிடத்துக் குடையவனும் ஒரு ராசியிலே யிருக்க, அவனுடனே செவ்வாய் கூடினுல் ஒருநாளிருந்தவிடத்திலே ஒருநாளிராமல் தேசாந்திரியாய்த் திரிவன்.

மூன்றுமிடத்திற் செவ்வாய் பிலத்திருக்கச் சகோதரங்கள் பலத்திருக்கும், உச்சனுயிருக்கச் சகோதரம்பலத்திருக்கும், விசேஷ பலனுண்டாயிருக்கும்.

லக்கினத்துக்கு மூன்றுமிடம் ஈனமாய் இராகு கேதுக்களுடன் கூடியிருக்க, அவனுக்கு வீரியமில்லாமல் தாதுநஷ்டமாயிருக்கும்.

லக்கினத்துக்கு ஆறுக்குடையவனும், மூன்றுக்குடையவனும், ஒருராசியில் பகையோடேகூடியிருக்க, அவன் இந்திரஜால மகேந்திரஜாலம் சூதுவித்தைகள் கற்பன்.

நாலு பத்துக்குடையவர் ஒரு ராசியிலே கூடி யிருக்க, அவர்களுடனே சந்திரன் சுக்கிரனுவதிருக்க, அந்தவீடு நட்பாட்சியா யிருக்க, அவன் அதிகவித்தைகற்று திலதமிட்டுக் கொண்டு ஒருவரும் காணுமல் உலகத்துலாவுவன்.

லக்கினத்துக்குடையவனும் நாலுக்குடையவனும் ஒன்பதாமிடத்திலேயிருக்க, அவர்களைப்புதனுவது வியாழமாவது பார்க்க, அல்லது கூடியிருக்க, அவன் பாதாள அஞ்சனவித்தை கற்பன்.

லக்கினத்துக்கு நாலாமிடத்துக்குடையவனும் இராசிக்குடையவனும் பத்தாமிடத்தி லிருக்க, அவர்களுடனே சந்திரனிருக்க, அல்லது பார்க்க, அவன் ஆகரண கோகரணவித்தை கற்பன்.

லக்கினத்துக்கு இரண்டு நான்குக் குடையவனும் நட்பாக்ஷி யிடங்களிலே யிருக்க, அவர்களுடனே புதனிருக்க,

அல்லது பார்க்க, அவன் ரசவாத வித்தைகற்பன். அவர்களுடனே சூரியன்கூடினால் உத்தமதெய்வத்தைச்சேவிப்பன். அவர்களுடனே இராகு கூடினால் விஷ்ணுபூசை சிவபூசை பண்ணித் தெரிசனம் பண்ணுவன். அவர்களுடனே செவ்வாய்கூடினால் குட்டிச்சாத்தான் வித்தை கற்பன். அவர்களுடனே சனி கூடினால் பில்லி சூனியவித்தை கற்பன். அவர்களுடனே கேது குளிகன் கூடினால் ஏவல்வஞ்சனை கற்பன்.

லக்கினத்துக் குடையவனும் நாலுக்குடையவனும் ஒரு ராசியிலேயிருக்க, அவனுடனேசந்திரனிருக்க, அல்லது சுக்கிரனிருக்க, அவன் வசியவித்தைகற்பன், யீஸ்வரியைத் தெரிசனம்பண்ணுவன்.

லக்கினத்துக்குடையவனும்இராசிக்குடையவனும் பத்தாமிடத்துக் குடையவனும் ஒரு ராசியிலே யிருக்க, அவன் சித்தர்களைப்போலே நரைதிரையில்லாமல்வெகுகாலமிருந்து மோக்ஷத்தை யடைவன்.

லக்கினத்துக்குடையவனும் எட்டுக்குடையவனும் ஒரு ராசியிலிருக்க, அவர்களுடனே செவ்வாயிருக்க, அல்லது பார்க்க, அந்தவீடு பகைவீடா யிருக்க, அவன் மனிதரைக் கொல்லுகிற வித்தை கற்பன். பகை யில்லாவிட்டால் ஜனங்களை வியாதியிலே விழுத்தாட்டிப்போடுகிற வித்தைகற்பன், அவன் சூனியமுங் கற்பன்.

இராசிக்கு நாலுக்குடையவனும் ஏழுக்குடையவனும் ஒருராசியிலே யிருக்க, அவர்கள் சுபக்கிரகமா யிருக்க, அல்லது பார்க்க, அவன் பில்லிசூன்யம் எடுக்க வல்லவனுவன்.

லக்கினத்துக் குடையவனும் பனிரெண்டா மிடத்துக் குடையவனும் ஒருராசியிலே யிருக்க, அவர்களுடனே அவன் [illegible]சேத்திரம் இரண்டாம் நக்ஷத்திரத்துக் குடையவனும் [illegible]னல் ஆகாச சக்கரம் அந்தரச்சக்கரமென்னும் பேர். [illegible]யோகம் ஆகாசத்திலேயும் கோபுரத்திலேயும் கம்பங் [illegible]டி ஆடுவன்.





லக்கினத்துக்கு இரண்டாமிடத்துக் குடையவனும் ராசிக்கு இரண்டாமிடத்துக் குடையவனும், ஏழாமிடத்திலிருக்க, அவன் பலபலவித்தைகள் வேஷங்களாடுகிறவனா யிருப்பன்.

ஆறுக் குடையவனும், ராசிக்கு ஆறுக் குடையவனும், ஒரு ராசியிலிருக்க, அவர்களுடனே செவ்வாயிருக்க, அல்லது பார்க்க, அந்த வீடு பகைவீடாயிருக்க, அவன் கோள் சொல்லிக் குடிகெடுக்கிறவனா யிருப்பன். பகையில்லா விட்டால் சாதாரண குணமாய்க் கோள்சொல்லுவன்.

இரண்டுக்குடையவனும் ராசிக்கு இரண்டுக்குடையவனும் ஒருராசியிலே யிருக்க, அவர்களுடனே இராகு கேதுக்களிருக்க, அல்லதுபார்க்க, அவனுடனே எமகண்டனுங் கூடியிருக்க, விகடகவியும் வேஷமும் பிரசங்கமாயிருப்பன்.

## உபக்கிரக பலன்.

லக்கினத்துக்கு இரண்டாமிடத்துக்கு இரண்டாமிடம் ஏழாமிடத்தில் தூமனிருந்தால் அவன் திசை பொசிப்பில் சகோதரங்களுக்குத் தாபச் சுரமும் சிலந்தியும் ரணமும் வந்து நீங்கும்.

லக்கினத்துக்கு நாலாமிடத்துக்கு ஏழாமிடம் இரண்டாமிடத்தில் விதிபாதனிருந்தால், அவன்திசை பொசிப்பில் மாதா வம்மிஷத்தில் தாயோடேகூடப் பிறந்தபேருக்கு வாத சுரமும் வயிற்று வலியும் குன்மரோகமும் வரும். அது அறிந்து சொல்லவும்.

லக்கினத்துக்கு ஒன்பதாமிடத்துக்கு ஏழாமிடம் இரண்டாமிடத்தில் பரிவேடனிருந்தால், தகப்பனுடனே கூடப் பிறந்தபேருக்குப் பயித்தியந் தலைவலியும் சோரமும் இது முதலான- கடினரோகம் வரும்.

லக்கினத்துக்கு ஏழாமிடத்துக்கு ஏழாமிடம் இரண்டாமிடத்தில் இந்திரதனுசு இருந்தால், அவன்திசை பொசிப்பில் பெண்சாதிகூடப் பிறந்தபேருக்கு வயிற்றுக்கடுச்சல் கடுப்புவந்து நீங்கும்.

லக்கினத்துக்கு இரண்டேழில் தூமகேது இருந்தால், அவன் திசை பொசிப்பில் ஜாதகனுக்கு முகத்திலே யீன சாதித் திருடனாலே ஆயுதகண்டம் வந்து நீங்கும்.

லக்கினத்துக்கு நாலிலே குளிகனாவது, கேது வாவது இருந்தால், அவன் திசைபொசிப்பில் பிறந்தவீடுவிட்டு அய ல்வீடு உயர்ந்தவீடாயிருக்கிறதிலே பாக்கியவானாயிருப்பன்.

லக்கினத்துக்கு எந்த இராசியில் குளிகனிருக்கிறானோ அதற்கு ஐந்து - எட்டு - ஒன்பது இந்த ராசிகளுக்கு சனி வருங்காலம் மாதா பிதா ஜாதகன் மற்றுமுண்டாகிய ஜனங் களுக்கும், அன்னிய சுற்றத்தாருக்கும், கிட்டின சிநேகிதரு க்கும் தலபேதம், தனதானிய சேதம், இராஜகிஷ்டூரம், அவ மானம் இது முதலானதெல்லாம் பார்த்துச் சொல்லவும்.

## ஆயுள் வித்தை தனம் யோகம் சுகம் வாகனமறிய

லக்கினாதிபதியும், அஷ்டமாதிபதியும், தசமாதிபதியும், கேந்திர திரிகோணங்களி லிருந்தால் தீர்க்காயுசு; அவர்கள் பலவீனமானால் லற்பாயுசு.

லக்கினாதிபதியும், அஷ்டமாதிபதியும், சாராசிகளிலிரு ந்தால் தீர்க்காயுசு, மற்றஸ்திர உபய ராசிகளிலிருந்தால் மத் திம ஆயுசு.

லக்கினாதிபதியும், அஷ்டமாதிபதியும், தசமாதிபதியும், மித்துரு க்ஷேத்திரத்தி லிருக்க, மித்திராள் பார்க்க சனிபல க்க ஆயுசுவிர்த்தி.

லக்கினாதிபதி திரிகோணகேந்திரத்தில் மித்திரராசிகளி லிருக்க, சுபக்கிரகங்கள் சேர பார்க்க, ஆயுள்விர்த்தியுடன் கீர்த்திமானாகவும் சுகவானாகவுமிருப்பன்.

சஷ்டாஷ்டமவியத்தில் பாபர்களும், திரிகோணகேந்திர த்தில் சுபாளுமிருக்க, லக்கினாதிபதி பலவானாகவிருக்க, தீர் க்காயுசாய் வாழ்வன்.

லக்கினம் மித்திர ராசிகளில் பூர்வபக்ஷத்துச் சந்திரனும், சந்திரனுக்கு நாலு-ஏழு-பத்தில் மித்திர ராசிகளில் வியாழனும் சுக்கிரனுமிருக்க, ஜாதகன் மரணபரியந்தம் யோகவானாகவும் சுகவானாகவுமிருப்பன்.

லக்கினத்தில் சுபக்கிரகம்நிற்க பார்க்க சுகவானவன்.

லக்கினத்திற்கு இரண்டாம் ராசிக்கதிபன் கேந்திர திரிகோணசொக்ஷேத்திர உச்சமித்துருராசியில் மித்திராள்சேர்க்கை அல்லது பார்வையில் இருந்தால் வித்தையுடையவனும் மரணபரியந்தம் சுகஜீவியாயும் பாக்கியவானாகவுமிருப்பன்.

நாலாமிடத்திற் குடையவனும் பாக்கியாதிபதியும் கேந்திர திரிகோணத்தில் நிற்க, சுபக்கிரகங்கள்சேர பார்க்க ஜாதகன் வாகனசம்பத்துடையவனாக விருப்பன்.

பாபிகள் சுபாள் சம்பந்தம் அல்லது பார்வையுடையவர்களாய் மூன்று-ஆறு-எட்டில் மித்துருக்ஷேத்திரம் அல்லது கேந்திரங்களிலிருந்தால் நல்லபலனைத் தருவார்கள்.

பாபிகள் மூன்று - ஆறு-எட்டு-பன்னிரண்டு அல்லது கேந்திரங்களிலிருந்தால் நல்லபலனைத் தருவார்கள்.

லக்கினத்துக்கு ஒன்று-இரண்டு-நான்கு-ஒன்பது-பதினொன்றுக் குடையவர்கள் கேந்திரங்களில் சுபசகிதமாகவிருந்தால் வெகுதனவான்.

லக்கினத்துக்கு ஒன்பதுக்கும் பத்துக்கும் உடையவர்கள் ஒரேராசியில் சேர்ந்தாலும் ஒருவரை யொருவர் பார்த்தாலும் தங்கள்ராசியில் மாறியிருந்தாலும் மேலான யோகத்தைத்தருவார்கள் ✓

சுபக்கிரகங்கள் கேந்திர திரிகோண லாபத்திலிருந்தாலும், திரிகோண கேந்திராதிபர்களுடன் சேர்ந்தாலும், சந்திரனுக்கு கேந்திர திரிகோணத்திலிருந்தாலும், யோகத்தைத் தருவார்கள், பாபிகள் மாரகாதிபர்களுடன் சேர்ந்தாலும், பார்க்கப்பட்டாலும் கஷ்டபலனைத்தருவார்கள்.

வியாழன் சுக்கிரன் இவ்விருவரும் உபய கேந்திராதிபர்களானல் பலமான தோஷமுண்டு, இவர்கள் உச்சசொக்ஷேத்திரம், மித்துருக்ஷேத்திரம் அல்லது திரிகோணங்களிலிருந்தால் மத்திபபலனும், மூன்று-ஆறு-எட்டு-பனிரெண்டாம் ராசிகளிலிருந்தால் கொடிய கஷ்டபலனுந்தருவார்கள்

இராகுகேது இவர்களுக்கு மற்றகிரகங்கள்போல ஆதிபத்தியம் இல்லாமையால் அவர்கள் எந்தெந்த ஸ்தானத்திலிருந்தார்களோ எந்தபாவஆதிபர்களுடன் சேர்ந்தார்களோ அவர்களுக்கொத்த சுப அசுபபலனைத்தருவார்கள்.

லக்கினத்துக்கு ஒன்பது-பத்துக்குடையவர்கள் மூன்று ஆறு-எட்டு-பதினொன்றுக்கு அதிபர்களுடன் சேராதிருந்தால் மேலான ராஜயோகத்தைத் தருவார்கள்.

வியாழன் நின்றராசிக்கு ஆறு - எட்டு-பன்னிரண்டாம் ராசிகளில் சந்திரன்நிற்பது சகடயோகம், அதாவது சிலகாலம் சுகமும் சிலகாலம் கஷ்டமுமாகவிருக்கும்.

லக்கினதிபதி சரராசியி லிருந்தால் அன்னியதேசத்திலும், ஸ்திரராசியிலிருந்தால் தன்னூரிலும், உபயராசியிலிருந்தால் சிலகாலம் அன்னியதேசத்திலும் சிலகாலம் சுபதேசத்திலும் வாசம்செய்வான்.

விரயஸ்தானமாகிய பன்னிரண்டில் சுக்கிரன் முதலான சுபக்கிரகங்களிருக்க, அல்லது பார்க்க, சத்கருமங்களில்சிலவும் சயனசுகவானகவுமிருப்பன். பாபக்கிரகங்கள் இருக்க, பார்க்க துற்கருமங்களில் சிலவுசெய்வான்.

லக்கினதிபதி உச்சசொக்ஷேத்திர மித்துருக்ஷேத்திரங்களிலிருக்க, நான்கு-பத்து அல்லது நான்கு-பதினொன்றுக்குடையவர்கள் மித்திரனாய் தங்கள் ராசிகளில் மாறியிருந்தால் யோகவான்.

பூர்வபக்ஷத்துச் சந்திரன் மித்திருராசியிலிருந்து வியாழன் சந்திரனுக்கு ஏழு-பத்தில் இருந்தால் சுகவானவன்.

லக்கினத்துக்குஇரண்டு-நான்கு-ஐந்துஒன்பது-பத்து பதினொன்றுக் குடையவர்களும் இலக்கினாதிபதியும் கேந்திர திரிகோண உச்சமித்துரு க்ஷேத்திரங்களிலிருந்து சுபரான் சேர்க்கையல்லது பார்வையுண்டானால் யோகவான்.

லக்கின்முதல் நாலுகேந்திரங்களில் சுபக்கிரகங்கள் சந்திரனுடனிருக்க, யோகவான்.

சுபக்கிரகங்கள் உச்சஸ்தானங்களி லிருந்து ஒருவருக்கொருவர் பாராதிருந்தால் யோகவான.

சுபக்கிரகம் சொக்ஷேத்திரத்தி லிருந்தால் யோகவான்

சுபக்கிரகங்கள் நட்பு ராசிகளிலிருந்து பாபர் சம்பந்தமில்லா திருக்கில் யோகவான்.

லக்கினம் மித்துருக்ஷேத்திரமாய்வியாழனிருக்க, பூர்வபக்ஷத்துச் சந்திரன் பார்க்க, அல்லது சந்திரனுக்கு கேந்திரங்களால் வியாழனிருக்க யோகவான்.

சுபக்கிரகங்கள் உச்ச சொக்ஷேத்திர மித்துருராசிகளிருக்க, பூர்வபக்ஷத்துச் சந்திரனுக்கு சப்தமத்தில் செவ்வாயிருக்க, பாபிகள்சேராமலும் பாராமலுமிருக்க, யோகவான்.

லக்கினமும் சந்திரலக்கினமும் ஒன்றாகி இலக்கினாதிபதி சுபக்கிரகமாயிருந்து லாபஸ்தானத்தி லிருக்க, இலக்கினாதிபதிக்கிருபுரமும் சுபக்கிரகங்கள் நட்பு ஆட்சியாயிருக்கில் யோகவான்.

திரிகோணாதிபதிகள் திரிகோணஸ்தானங்களில் சுபசகிதமாயிருக்க, அல்லது சுபக்கிரகங்கள் பார்க்க, திரிகோணாதிபதிக்கிருபுரமும் சுபக்கிரகங்களிருக்க யோகவான்.

லக்கினத்துக்கு ஏழில் சூரியனிருந்தால்மலடியைச் சேருவான்.

லக்கினத்துக்கு ஏ-ல் சந்திரனிருந்தால் சங்கீதப்பெண்ணைச்சேருவான்.

லக்கினத்துக்கு ஏ-ல் செவ்வாயிருந்தால் க்ஷத்திரியப் பெண்ணைச் சேருவான்.

லக்கினத்துக்கு ஏ-ல் புதனிருந்தால் வேசியைச்சேருவான்.

லக்கினத்துக்கு ஏ-ல் வியாழ னிருந்தால் பிராமணப் பெண்ணைச் சேருவான்.

லக்கினத்துக்கு ஏ-ல் சுக்கிரனிருந்தால் கர்ப்பஸ்திரீயைச் சேருவான்.

லக்கினத்துக்கு ஏ-ல் ராகு கேது விருந்தால் தூரஸ்திரீயைச் சேருவான்.

சுக்கிரனுடன் புதன்சேர்ந்தால் தாசிசங்கமம்.

சுக்கிரன் நீசனு யேழிலிருந்தால் வயதுக்கு மூத்தவளோடு சங்கமம்.

சுக்கிரனுடன் சனி சம்பந்தப்பட்டால் விதவையுடன் சங்கமம்.

ஏழாவது ஸ்தானத்தை சுபக்கிரகங்கள் பார்த்தால் தோஷமில்லை.

---

## கலியுகத்துக்குப் பூப்பிரவேசம் ஜென்மலக்கினம் அரிஷ்டபாகம் ஐந்துக்கு விபரம்.

---

க-வருஷ முதல் கஉ - வருஷம் வரையில்—பாலாரிஷ்டம்.
கௗ-வருஷமுதல் உ௰-வருஷம்வரையில் ஏவ்வன அரிஷ்டம்.
உக-வருஷமுதல்௩உ-வருஷம்வரையில்-கௌமார அரிஷ்டம்
௩௩-வருஷமுதல் எ௰-வருஷம்வரையில்—விருத்தாரிஷ்டம்.
எக - வருஷமுதல் நூறு வருஷம்வரையில்—பூரண ஆயிசு.

லக்கினத்துக்கு ஏழாம் ஸ்தானத்தில் செவ்வாயும் எட்டாம் ஸ்தானத்தில் சூரியனுமிருக்க அரிஷ்டம்.

க்ஷீணசந்திரன் லக்கினகேந்திரத்தில் அல்லதுஎட்டாம் ஸ்தானத்தில் பாபருடன் கூடினால் அரிஷ்டம்.

லக்கினத்துக்கு இருபுறமும் பாவிகளிருக்க, லக்கினத்தில் சந்திரனிருக்க, நாலு-ஏழு-எட்டு இந்த ஸ்தானங்களில் பாபிகளிருக்க, மாதாவுக்கும் குழந்தைக்கும் அரிஷ்டம்.

அமரபக்ஷத்துச் சந்திரன் பாபிகளுடன் ஒன்று-ஏழு-பன்னிரண்டாம் ஸ்தானத்தில் நிற்க அரிஷ்டம்.

லக்கினத்துக்கு எட்டு-ஒன்பது-பன்னிரண்டாம் ஸ்தானத்தில் சூரியன்-செவ்வாய்-சனி அமரபக்ஷத்து சந்திரனிருக்க அரிஷ்டம்.

லக்கினத்துக்கு ஏழு-எட்டாம் ஸ்தானத்தில் சனி-செவ்வாய் நிற்க அரிஷ்டம்.

லக்கினத்துக்கு ஏழாம் ஸ்தானத்தில் சனி-செவ்வாய் சுக்கிரன் நிற்க அரிஷ்டம்.

லக்கினம் ஐந்து-எட்டு-ஒன்பது - பன்னிரண்டு இந்த ஸ்தானங்களில் சூரியன்-செவ்வாய்-சனி அமர பக்ஷத்து சந்திரன் இவர்கள் கூடிநின்றாலும் அல்லது அந்த ராசிகளில் தனித்தனியாக நின்றாலும் அரிஷ்டம்.

லக்கினத்துக்கு ஐந்து அல்லது பத்தாமிடத்தில் சனி நிற்கில் அரிஷ்டம்.

லக்கினத்தில் சனிநிற்க, நாலில்செவ்வாயும் ஏழில்சூரியனுமிருக்க, அரிஷ்டம்.

லக்கினத்தில் ராகு - கேதுக்களிருக்க, நாலாமிடத்தில் செவ்வாயும் ஏழாமிடத்தில் சூரியனுமிருக்க அரிஷ்டம்.

லக்கினத்துக்கு ஐந்து அல்லது பத்தாமிடத்தில் செவ்வாய் நிற்கில் அம்மானுக்கு அரிஷ்டம்.

லக்கினத்துக்கு ஐந்து அல்லது பத்தாமிடத்தில் சந்திரனிருக்க மாதுர் அரிஷ்டம்.

லக்கினத்துக்கு ஐந்து அல்லது பத்தாமிடத்தில் சூரியனிருக்க பிதுர் அரிஷ்டம்.

சந்திரனின்ற ராசிக்கு ஏழில் சனி அல்லது செவ்வாயிருக்க மாதுர் அரிஷ்டம்.

சூரியனின்ற ராசிக்கு ஏழில் சனி அல்லது செவ்வாயிருக்க பிதுர் அரிஷ்டம்.

லக்கினத்துக்கு ஆறில் சூரியன் அதற்கு ஏழாமிடத்தில் சனி-செவ்வாயிருக்க குழந்தைக்கும் பிதாவுக்கும் அரிஷ்டம்.

லக்கினத்துக்கு ஆறில் சந்திரன் அதற்கு ஏழாமிடத்தில் சனி-செவ்வாய் நிற்கில் குழந்தைக்கும் மாதாவுக்கும் அரிஷ்டம்.

லக்கினத்துக்கு ஒன்பது-பதிமூன்றாமிடத்தில் சனி - செவ்வாய் நிற்க, ஒன்பதாமிடத்தில் ராகு கேதுக்களிருக்க பிதாவுக்கு அரிஷ்டம்.

லக்கினத்துக்கு மூன்றுமிடத்தில் செவ்வாயிருக்கசகோதர அரிஷ்டம்.

லக்கினத்துக்கு ஆறு-ஏழு-எட்டு - பனிரண்டா மிடத்தில் அமரபக்ஷத்துச் சந்திரன் பாபருடன் நிற்கிலும் லக்கினத்துக்கு நாலு எட்டாமிடத்தில் பாபக்கிரகம் நிற்கிலும் அரிஷ்டம்.

லக்கினத்தில் சூரியன் சனி கூடியிருக்க செவ்வாய் பார்க்கில் அரிஷ்டம்.

லக்கினத்துக்கு நாலில் செவ்வாய், எட்டில் ராகு, பனிரண்டில் சனியிருக்கில் அரிஷ்டம்.

மேற்கண்ட அரிஷ்ட தோஷங்கள் சுபக்கிரக பார்வையுண்டானால் நீங்கும்.



## மாரகபாவம்.

சரராசிகளுக்கு லக்கினத்துக்கு இரண்டு ஏழுக்கு அதிபர்கள் மாரகாள்.

ஸ்திரராசிகளுக்கு லக்கினத்துக்கு மூன்று - எட்டுக்கு அதிபர்கள் மாரகாள்.

உபயராசிகளுக்கு லக்கினத்துக்கு ஏழு-பதினொன்றுக்கு அதிபர்கள் மாரகாள்.

லக்கினத்துக்கு இரண்டு-ஏழு ஜாதகனுக்கு மாரகம்.

லக்கினத்துக்கு நாலு-ஏழு-ஐந்து அன்னைக்குமாரகம்.

லக்கினத்துக்கு ஐந்து-பதினொன்று சகோதர மாரகம்.

லக்கினத்துக்கு ஆறுக்குடைய சூரியன் பிதுர் மாரகம்.

லக்கினத்துக்கு எட்டில் ராகுவிருந்தால் பிதுர்மாரகம்.

லக்கினத்துக்கு பன்னிரண்டா மிடத் தாதிபத்தியம் சனிக்கிருந்தால் ஜாதகனுக்கு மாரகம்.

லக்கினத்துக்கு ஏழாமிடத் தாதிப்த்தியம் சூரியனுக்கிருந்தால் ஜாதகனுக்கு மாரகம்.

லக்கினத்துக்கு ஆறுமிடத்தாதிபத்தியம் செவ்வாய்க்கிருந்தால் ஜாதகனுக்கு மாரகம்.

லக்கினத்துக்கு நாலு-பத்தில் குளிகனிருந்தால் ஜாதகனுக்கு மாரகம்.

லக்கினத்துக்குப் பன்னிரண்டாமிடத் தாதிபத்தியம் சுக்கிரனுக்கிருந்தால் ஜாதகனுக்கு மாரகம்.

அற்பாயிசுக்கு ஒன்று மூன்றும் திசை மாரகம்.

மத்திம ஆயிசுக்கு மூன்று ஐந்து-ஆறும் திசை மாரகம்.

தீர்க்காயிசுக்கு ஏழாம் திசை மாரகம்.

சந்திரனுக்கு நாலு-பத்து பாபர்திசையும் மாரகம்.

சனி திசை நாலாந்திசை மாரகம்.

செவ்வாய் திசை ஐந்தாவதுதிசை மாரகம்.

வியாழ திசை ஆறுவது திசை மாரகம்.

இராகு திசை ஏழாவது திசை மாரகம்.

லக்கினத்திற்கு மூன்று - எட்டுக்கதிபர்கள் மாரகாள் இவர்களுடைய திசைகளில் மாரகத்துக்குச்சமானமான கண்டத்தையும் கஷ்டபலனையுந் தருவார்கள். இவர்கள் இரண்டு மூன்று-ஏழு-எட்டு-பன்னிரண்டாம் ராசிகளிலிருந்தால் மாரகத்தைத் தருவார்கள். சுபாளுடன் சம்பந்தப்பட்டால் மத்திம பலனைத்தருவார்கள்.

லக்கினத்திற்கு இரண்டு-ஏழுக் கதிபர்கள் மாரகாள் இவர்கள் கேந்திரம் திரிகோணம் சொக்ஷேத்திரம் உச்சம் இந்தராசிகளிலிருந்தாலும் அல்லதுசுபக்கிரகங்களுடன் சேர்ந்தாலும், பார்க்கப்பட்டாலும் மித்திராளுடன் சம்பந்தப்பட்டாலும் நல்லபலன்களும், இரண்டு-மூன்று-ஏழு-எட்டு-பன்னிரண்டாம் ராசிகளிலிருந்தாலும் பாபிமாரகாள் சம்பந்தப்பட்டாலும் கண்டத்துக்கொப்பாகிய கஷ்ட பலன்களும் தருவார்கள்.

மாரகாதிபர்கள் மாரகாதிபர்களுடன் சேர்ந்து அல்லது பார்க்கப்பட்டிருந்தால் மாரகத்தைக்கொடார் இவர்களுடன் சம்பந்தப்பட்ட பாபக்கிரகங்கள் அல்லது மாரகஸ்தானத்திலிருக்கிற பாபிகள் மாரகத்தைக் கொடுப்பார்கள்.

குளிகன் நின்ற ராசிக்கு திரிகோணத்தில் சனிவருங்காலம் மாரகம்.

இராகு இரண்டிலும் கேது எட்டிலுமிருந்தால்மாரகம்

எட்டில் இராகுவிருக்க, இரண்டில் பாபக்கிரகங்களிருக்க, அல்லது நோக்க இலக்கினாதிபதியும் வியாழனும் பாபக்கிரகங்களும் ஒரேராசியிலிருக்க விஷதிருஷ்டங்களாற்பீடை.

சந்திரனின்ற ராசிக்கு பன்னிரண்டாம் ராசியில் சனிவருங்காலம் ஏழரைநாட்டுச் சனி ஆரம்பம், இந்தச்சனி சந்திரனின்ற ராசிக்கு மூன்றாம் ராசியில் பிரவேச காலத்தில் நீங்கிவிடும்.

மேஷம் கடகம் சிம்மம் விருச்சிகம் கும்பம்மீனம் இந்த ராசிகள் இலக்கினமாகவாவது சந்திரலக்கின மாகவாவ திருந்தால் அந்த ஜாதகனுக்கு ஏழரைநாட்டுச் சனி மிகவும் கஷ்டபலனைத்தரும்.

ஏழரைநாட்டுச்சனிமுதல்தடவையில் ஜாதகனுக்குகஷ்டபலன், பிதாவுக்குச்சுகபலன், இரண்டாவது தடவையில் ஜாதகனுக்கு சுகபலன், மூன்றாவது தடவைக்குள் மரணம்.

சனி சரராசியிலிருக்க அன்னிய தேசத்தில மரணம், ஸ்திரராசியிலிருக்க தன்வீட்டில்மரணம், உபயராசியிலிருந்தால் நூதனகிரகத்தில் மரிப்பான்.

---

சரராசிக்கு பதினோராமிடத்துக் குடையவன் பலன் கொடான்.

ஸ்திரராசிக்கு ஒன்பதாமிடத்துக் குடையவன் பலன் கொடான்.

உபயராசிக்கு ஏழாமிடத்துக் குடையவன் பலன் கொடான்.

மேற்குறித்த கிரகங்கள் மித்துருக்ஷேத்திரங்களில் மித்திராள் சமபந்தம் அல்லது திருஷ்டி பெற்றிருந்தால் நல்ல பலனைக் கொடுப்பார்கள்.

சூரியன் லக்கினத்துக்கு மூன்று-ஆறு-பத்து இந்த ஸ்தானங்களிலிருந்தால் சுபம், சூரியதிசையில் சந்திரன் செவ்வாய் வியாழன் இவர்கள்புக்தி நல்லபலன்.

சந்திரன் லக்கினத்துக்கு ஒன்று ஆறு ஏழு-பத்து இந்த ஸ்தானங்களி லிருந்தால் சுபம்.

சந்திரதிசையில் சூரியன் வியாழன் இவர்கள் புத்தி நல்லபலன்.

செவ்வாய் லக்கினத்துக்கு மூன்று-ஆறு இந்த ஸ்தானங்களில் சுபம், செவ்வாய் திசையில் வியாழன், சந்திரன் சூரியன் இவர்கள் புத்தி நல்லபலன்.

புதன் லக்கினத்துக்கு இரண்டு-எட்டு-பத்து-பதினொன்று இந்த ஸ்தானங்களில் சுபம், புதன் திசையில் சனி சுக்கிரன் இவர்கள்புத்தி நல்லபலன்.

வியாழன் லக்கினத்துக்கு ஏழு-ஐந்து-இரண்டு-ஒன் இந்தஸ்தானங்களில் சுபம், வியாழதிசையில் சூரியன் சந்திரன் செவ்வாய் இவர்கள்புத்தி நல்லபலன்.

சுக்கிரன் லக்கினத்துக்கு ஒன்று-இரண்டு-மூன்று-நாலு-ஐந்து-எட்டு-ஒன்பது-பதினொன்று-பன்னிரண்டுஇந்த ஸ்தானங்களில் சுபம்

சுக்கிரதிசையில் புதன் சனி இவர்கள்புத்தி நல்லபலன்

சனி லக்கினத்துக்கு மூன்று-ஆறு இந்த ஸ்தானங்களில் சுபம்.

சனிதிசையில் புதன்-சுக்கிரன் இவர்கள்புத்தி நல்லபலன்.

இராகு மூன்று-ஆறு இந்தஸ்தானங்களில் சுபம்.

இராகுதிசையில் செவ்வாய் சுக்கிரன் இவர்கள்புத்தி நல்லபலன்.

கேது மூன்று-ஆறு இந்தஸ்தானங்களில் சுபம்.

கேதுதிசையில் சனிசுக்கிரன் இவர்கள்புத்திநல்லபலன்

## திசாபுத்திபலன்.

திசாநாதனுக்கு புத்திநாதன் மித்திரனாக கேந்திர திரிகோண சொக்ஷேத்திர உச்சதனலாபத்திலிருந்தால்வாகனம்-தனம்-பூமி-ஆடையாபரணம்-சம்பத்து புத்திரமித்திர களத்ராதிகள் சுபசோபனங்களுண்டாகும்.

புத்திநாதன் துதிகை சப்தம அதிபதியாய்இரண்டு-மூன்று-ஆறு-ஏழு-எட்டு-பன்னிரண்டில்இருந்தாலும், பாபக்கிரகங்களோடு சேர்ந்தாலும் பார்க்கப் பட்டாலும், தேகபிணிமுதலிய கஷ்டபலனுண்டாம்.

## புதன் பரல்-எ0.

| | | |
|---|---|---|
| புதன். | க-௩-ரு-சு-கூ-க0-கக-கஉ | ஆக—அ |
| வியாழன். | சு-அ-கக-கஉ | ,, ச |
| சுக்கிரன். | க-உ-௩-ச-ரு-அ-கூ-கக | ,, அ |
| சனி. | க-உ-ச-எ-அ-கூ-க0-கக | ,, அ |
| இராகு. | க-உ-ச-எ-அ-கூ-க0-கக | ,, அ |
| கேது. | க-உ-ச-எ-அ-கூ-க0-கக | ,, அ |
| லக்கினம் | க-உ-ச-சு-அ-க0-கக. | ,, எ |
| சூரியன். | ரு-சு-கூ-கக-கஉ | ,, ரு |
| சந்திரன். | உ-ச-சு-அ-க0-கக | ,, சு |
| செவ்வாய். | க-உ-ச-எ-அ-கூ-க0-கக | ,, அ |

## வியாழன் பரல்-சுஎ.

| | | |
|---|---|---|
| வியாழன். | க-உ-௩-ச-எ-அ-க0-கக | ஆக—அ |
| சுக்கிரன். | உ-ரு-சு-கூ-க0-கக | ,, சு |
| சனி. | ௩-ரு-சு-கஉ | ,, ச |
| இராகு | ௩-ரு-சு-கஉ | ,, ச |
| கேது. | க-உ-ச-எ-அ-க0-கக | ,, எ |
| லக்கினம். | க-உ-ச-ரு-சு-எ-கூ-க0-கக | ,, கூ |
| சூரியன். | க-உ-௩-ச-எ-அ-கூ-க0-கக | ,, கூ |
| சந்திரன். | உ-ரு-எ-கூ-கக | ,, ரு |
| செவ்வாய். | க-உ-ச-எ-அ-க0-கக | ,, எ |
| புதன். | க-உ-ச-ரு-சு-கூ-க0-கக | ,, அ |

## சுக்கிரன் பரல்-சுரு.

| | | |
|---|---|---|
| சுக்கிரன். | க-உ-௩-ச-ரு-அ-கூ-க0-கக | ஆக—கூ |
| சனி. | ௩-ச-ரு-அ-கூ-க0-கக | ,, எ |
| இராகு. | ௩-ச-ரு-அ-கூ-க0-கக | ,, எ |
| கேது. | ௩-ச-சு-கூ-கக-கஉ | ,, சு |
| லக்கினம். | க-உ-௩-ச-ரு-அ-கூ-கக | ,, அ |
| சூரியன். | அ-கக-கஉ | ,, ௩ |
| சந்திரன் | க-உ-௩-ச-ரு-அ-கூ-கக-கஉ | ,, கூ |
| செவ்வாய். | ௩-ச-சு-கூ-கக-கஉ | ,, சு |
| புதன். | ௩-ரு-சு-கூ-கக | ,, ரு |
| வியாழன். | ரு-அ-கூ-க0-கக | ,, ரு |

## சனி பரல்-௪௯.

| | | |
|---|---|---|
| சனி. | ௩-௫-௬-௧௧ | ஆக—௪ |
| இராகு. | ௩-௫-௬-௧௧ | ,, ௪ |
| கேது. | ௩-௫-௬-௧௦-௧௧-௧௨ | ,, ௬ |
| லக்கினம். | ௧-௩-௪-௬-௧௦-௧௧ | ,, ௬ |
| சூரியன். | ௧-௨-௪-௭-௮-௧௦-௧௧ | ,, ௭ |
| சந்திரன். | ௩-௬-௧௧ | ,, ௩ |
| செவ்வாய். | ௩-௫-௬-௧௦-௧௧-௧௨ | ,, ௬ |
| புதன். | ௬-௮-௯-௧௦-௧௧-௧௨ | ,, ௬ |
| வியாழன். | ௫-௬-௧௧-௧௨ | ,, ௪ |
| சுக்கிரன். | ௬-௧௧-௧௨ | ,, ௩ |

## இராகு பரல்-௪௯.

| | | |
|---|---|---|
| இராகு. | ௩-௫-௬-௧௧ | ஆக—௪ |
| கேது. | ௩-௫-௬-௧௦-௧௧-௧௨ | ,, ௬ |
| லக்கினம். | ௧-௩-௪-௬-௧௦-௧௧ | ,, ௬ |
| சூரியன். | ௧-௨-௪-௭-௮-௧௦-௧௧ | ,, ௭ |
| சந்திரன். | ௩-௬-௧௧ | ,, ௩ |
| செவ்வாய் | ௩-௫-௬-௧௦-௧௧-௧௨ | ,, ௬ |
| புதன். | ௬-௮-௯-௧௦-௧௧-௧௨ | ,, ௬ |
| வியாழன். | ௫-௬-௧௧-௧௨ | ,, ௪ |
| சுக்கிரன். | ௬-௧௧-௧௨ | ,, ௩ |
| சனி. | ௩-௫-௬-௧௧ | ,, ௪ |

## கேது பரல்-௫௩.

| | | |
|---|---|---|
| கேது. | ௧-௨-௪-௭-௮-௧௦-௧௧ | ஆக—௭ |
| லக்கினம். | ௧-௩-௬-௧௦-௧௧ | ,, ௫ |
| சூரியன். | ௩-௫-௬-௧௦-௧௧ | ,, ௫ |
| சந்திரன். | ௩-௬-௧௧ | ,, ௩ |
| செவ்வாய். | ௧-௨-௪-௭-௮-௧௦-௧௧ | ,, ௭ |
| புதன். | ௩-௫-௬-௧௧ | ,, ௪ |
| வியாழன். | ௬-௧௦-௧௧-௧௨ | ,, ௪ |
| சுக்கிரன். | ௬-௮-௧௧-௧௨ | ,, ௪ |
| சனி. | ௧-௪-௭-௮-௯-௧௦-௧௧ | ,, ௭ |
| இராகு. | ௧-௪-௭-௮-௯-௧௦-௧௧ | ,, ௭ |

| ஞாயிறு. | | திங்கள். | | செவ்வாய். | | புதன். | |
|---|---|---|---|---|---|---|---|
| பகல். நா. | இரவு. நா. | பகல். நா. | இரவு. நா | பகல் நா. | இரவு நா. | பகல். நா. | இரவு. நா. |
| மா - உ | கு - ச | அ - ச | சக் - உ | சக் - ச | அ - ச | சக் - ச | கு - உ |
| சக் - உ | மா - ச | சக் - அ | அ - சா | கு - உ | கு - உ | அ - ச | அ - சா |
| அ - அ | கு - உ | அ - சா | சக் - சா | அ - சா | அ - உ | கு - உ | கு - ச |
| சக் - சா | அ - ச | சக் - சா | அ - அ | சக் - ச | சக் - ச | சக் - ச | சக் - சா |
| கு - கO | கு - உ | அ - ச | சக் - அ | கு - உ | கு - சா | மா - உ | கு - ச |
| மா - உ | சக் - சா | கு - உ | 0 | அ - உ | அ - ச | அ - ச | அ - அ |
| 0 | கு - சா | 0 | 0 | கு - ச | சக் - உ | சக் - ச | 0 |
| 0 | மா - உ | 0 | 0 | அ - சா | அ - உ | அ - ச | 0 |
| 0 | 0 | 0 | 0 | 0 | கு - ச | கு - உ | 0 |
| — | — | — | — | — | — | — | — |
| கு - ச | அ - ச | சக் - அ | கு - ச | அ - ச | சக் - சா | கு - உ | அ - கO |
| அ - அ | கு - ச | அ - ச | சக் - அ | சக் - ச | அ - சா | சக் - ச | சக் - உ |
| சக் - சா | சக் - ச | கு - உ | அ - ச | கு - உ | சக் - ச | அ - அ | கு - ச |
| அ - சா | அ - சா | சக் - ச | சக் - ச | அ - சா | கு - உ | சக் - சா | அ - ச |
| சக் - ச | சக் - அ | அ - சா | கு - உ | சக் - சா | அ - உ | அ - அ | கு - சா |
| கு - உ | கு - ச | மா - சா | சக் - ச | மா - உ | சக் - ச | கு - உ | அ - ச |
| 0 | 0 | 0 | கு - ச | சக் - ச | அ - ச | 0 | 0 |
| 0 | 0 | 0 | 0 | கு - உ | சக் - உ | 0 | 0 |
| 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| — | — | — | — | — | — | — | — |
| அ - சா | கு - உ | அ - ச | சக் - சா | அ - உ | சக் - சா | கு - உ | மா - ச |
| சக் - அ | சக் - ச | சக் - ச | அ - அ | கு - உ | அ - உ | மா - ச | அ - ச |
| அ - அ | அ - சா | அ - சா | சக் - அ | அ - கO | கு - உ | அ - உ | சக் - அ |
| கு - உ | சக் - சா | சக் - சா | அ - உ | சக் - சா | அ - கஉ | கு - உ | அ - சா |
| மா - உ | அ - ச | 0 | சக் - சா | கு - சா | மா - உ | சக் - ச | கு - அ |
| கு - உ | சக் - ச | 0 | 0 | சக் - ச | அ - ச | கு - உ | 0 |
| சக் - உ | கு - உ | 0 | 0 | 0 | கு - உ | அ - ச | 0 |
| 0 | சக் - உ | 0 | 0 | 0 | 0 | கு - ச | 0 |
| 0 | 0 | 0 | 0 | 0 | 0 | அ - சா | 0 |

| வியாழம். | | வெள்ளி. | | சனி. | | மாதங்களின் விபரம். |
|---|---|---|---|---|---|---|
| பகல் நா. | இரவு. நா. | பகல். நா. | இரவு நா. | பகல். நா. | இரவு. நா. | |
| அ - சா | சக் - ச | ரூ - உ | ரூ - உ | ரூ - ச | ரூ - உ | மேஷம், ரிஷபம், |
| ரூ - உ | மா - ச | அ-கசா | சக் - ச | சக் - ச | சக் - ச | சிங்கம், கன்னி, |
| சக் - ச | அ - உ | சக்- அ | அ - சா | ரூ - ச | அ - ச | கும்பம், மீனம், |
| அ - சா | சக் - அ | அ - உ | ரூ - ச | அ - ச | சக் - ச | இந்த மீனங்களு |
| சக் - அ | அ - அ | ரூ - உ | அ - சா | ரூ - ச | அ-கஉ | க்குப்பார்க்கவும். |
| ரூ - ச | ரூ - ச | 0 | மா - உ | சக் - சா | ரூ - ச | |
| 0 | 0 | 0 | ரூ - சா | ரூ - ச | 0 | |
| 0 | 0 | 0 | 0 | 0 | 0 | |
| [illegible] | 0 | 0 | 0 | 0 | 0 | |
| — | — | — | — | — | — | — |
| அ - உ | மா - ச | ரூ - உ | ரூ - உ | ரூ - ச | ரூ - உ | |
| ரூ - ச | அ - ச | அ-கசா | சக் - ச | சக் - ச | சக் - ச | |
| சக் - சா | ரூ - உ | சக் - அ | அ - சா | ரூ - ச | அ - ச | மிதுனம், கடக |
| அ - சா | அ - சா | அ - உ | ரூ - ச | அ - ச | சக் - ச | ம், இந்த மீனங்க |
| ரூ - உ | ரூ - உ | ரூ - உ | அ - சா | ரூ - ச | அ - சா | ளுக்குப் பார்க்க |
| சக் - ச | அ - சா | 0 | மா - உ | சக் - சா | சக் - ச | வும். |
| அ - சா | சக் - சா | 0 | ரூ - சா | ரூ - ச | அ - சா | |
| 0 | 0 | 0 | 0 | 0 | 0 | |
| 0 | 0 | 0 | 0 | 0 | 0 | |
| — | — | — | — | — | — | — |
| அ - ச | ரூ - உ | அ - உ | சக் - ச | ரூ - ச | சக் - ச | |
| சக் - சா | அ - அ | சக் - சா | அ - ச | சக் - ச | அ - ச | |
| அ - ச | சக் - சா | அ - சா | ரூ - ச | அ - ச | சக் - சா | துலாம், விருச்சி |
| ரூ - ச | அ - ச | சக் - சா | மா - உ | ரூ - அ | அ - ச | கம், தனுசு, மக |
| சக் - சா | சக் - சா | அ - அ | சக் - சா | அ - சா | ரூ - ச | ரம், இந்த மீனங் |
| ரூ - உ | மா - உ | ரூ - உ | அ - சா | ரூ - ச | சக் - ச | களுக்குப் பார்க் |
| அ - ச | ரூ - உ | 0 | ரூ - ச | 0 | அ - உ | கவும். |
| 0 | 0 | 0 | 0 | 0 | சக் - உ | |
| 0 | 0 | 0 | 0 | 0 | 0 | — |

முன்பக்கங்காட்டிய சித்தாதிபஞ்சாங்கத்தில் மா-மாகேந்திரம் ஜெயம், அ-அமுர்தம் காரியசாதனம், சக்-சக்கரம் காரிய தாமதம், சூ-சூன்யம் மரணமென்றறியவும் இஃது அவாளவாள் விவாகாதி சுபயோக சுபகர்மங்களுக்கு, திதி-நக்ஷத்ரம்-யோகம்-கரணம்-லக்னங்களைக்கொண்டு அவசியமில்லாமலே பலசித்திகளைத் தெரிய வாரகணித காலபலன்கள் எழுதியிருக்கின்றன அறியவும்.

## பல்லிவிழும்பலன்.

தலையின் உச்சி - கலகம் ரோகம்
,, வலம்-சேஷ்டசோதரபீடை
,, இடம்-கனிஷ்ட சோதரபீ
,, முன்பக்கம்-மாதுல பீடை
,, பின்பக்கம்-சகோதரபீடை
,, குடுமி - சுபம்
,, மயிர்நுனி-தரித்திரம்
,, மூக்காடு-நலமில்லை
,, கூந்தல்-மிருத்துபயம்
நெற்றியின்நடு-லட்சுமீகரம்
,, வலப்புறம்-பிரியசம்பத்து
,, இடப்புறம்-பொருட்சிலவு
புருவம் தனித்தனி-சுபம்
,, மத்தி-புதல்வர்நாசம்
,, ஓரம்-சம்பத்து
,, இரண்டிலும்-கெடுதி
வலதுகண் - சுபம்
இடதுகண் - கட்டுப்படுதல்
மூக்கின் நுனி-பீடை விசனம்
,, தண்டு-வியாதி
,, வலப்புறம்-பொருட்சிலவு
,, இடப்புறம்-சுபம்.
வலது கன்னம்-சம்பத்து
,, கவுள்-போகம்
இடது கன்னம்-கெடுதி
,, கவுள்-வியாதி
வலக்காது - லாபம் தீர்க்காயுசு
இடக்காது-வியாபாரலாபம்
காதுப்புறங்கள்-சகோதரபீடை
மீசைநடு-தனலாபம்
,, வலப்புறம் - தீமை
,, இடப்புறம் - நன்மை
இருமீசையிலும்-தேககாந்தி
மேலுதடுநெல்லபோஜனம்தனவிர

கீழுதடு-தனலாபம்
வாய்-பயம்
பல்லு-சகோதரருக்குக்கஷ்டம்
நாக்கு-அரசர்பயம்
மோவாய்-இராஜதண்டனை
தொண்டை-அதிகசம்பத்து
கண்டக்குழி-புத்திரோற்பத்தி
கழுத்துவலப்புறம்சிவிகையேறல்
,, இடப்புறம்-சத்துருஜெயம்
பிடறி-மாதுலபீடை
வலதுபுஜம்-வெற்றி
,, கீழ் - ஸ்திரீ சம்போகம்
இடதுபுஜம்-ஸ்திரீசம்போகம்
,, கீழ்-ஜெயம்
வலதுமுழங்கை-3 மீ த்துள் தன
,, கீழ்-ஆலோசனை [விரயம்
,, மேல்- துக்கம்
இடதுமுழங்கை-3மீ த்துள்தன
,, கீழ்-யோசனை [வரத்து
,, மேல்-துன்பம்
வலதுமுன்கைமேல்-சம்பத்து
,, கீழ்- அடிபடுதல்
இடதுமுன்கைமேல்-நஷ்டம்
,, கீழ்-நன்மை
வலதுமணிக்கட்டு-பீடை
இடதுமணிக்கட்டு-கீர்த்தி
வலதுபுறங்கை-சத்துருநாசம்
இடதுபுறங்கை-கஷ்டம்
வலதுஉள்ளங்கை-சத்துருநாசம்
இடதுஉள்ளங்கை-ஐஸ்வரியம்
வலதுகைவிரல்இராஜசன்மானம்
இடதுகைவிரல்-சிநேகசஞ்சலம்
கைநகங்கள்-சூனியம் பந்தனம்
மாராப்புக்குமேல்-நன்மையுண்டு

| | |
|---|---|
| மார்புநடு பீடை | வலதுதொடை-புத்திரபீடை |
| ,, வலப்புறம்-சந்தானம் | இடதுதொடை-புத்திரிபீடை |
| ,, இடப்புறம்-சுகவாழ்வு | இருதொடையில்-பிதுராரிஷ்டம் |
| முலைக்காம்புகள்-லட்சுமி நீங்கும் | வெளித்தொடை-புத்திரபாக்கிய[ம் |
| கொங்கைகள்-பரவசம்பவம் | உள்தொடை-பயம் |
| இருதயம்-சுபம் | வலதுமுழங்கால்-கேடு |
| வயிற்றின்நடு-தானியலாபம் | ,, கீழ்சந்து கலவரம் |
| ,, மேல்-பாக்கியம் | இடதுமுழங்கால்-சுபம் |
| ,, கீழ்-கஷ்டம் | ,, கீழ்சந்து-சௌக்கியம் |
| நாபி-இரத்தினலாபம் | கணைக்கால்கள்-சுபம் பிரயாணம் |
| அடிவயிறு-ஸ்திரீசம்போகம் | வலதுகால்-ரோகம் |
| வலதுவிலா-சகோதரபீடை | இடதுகால்-துக்கம் |
| இடதுவிலா-மாதாபிதா வருத்தம் | இருகால்களில்-விலங்கு |
| இருவிலாவில்-வெகுலாபம் | வலதுபாதவிரல்-இராஜபயம் |
| இடுப்பைசுற்றி-காரியங்கைகூடும் | இடதுபாதவிரல்-நோய் |
| முதுகு-தனநாசம் அடிபடல் | வலதுகட்டைவிரல் - பந்தனம் |
| ஆண்குறி-தரித்திரம் களத்ரகேடு | இடதுகட்டை விரல்-இராஜபயம் |
| பெண்குறி-புருடநாசம் | கால்விரல்களில்-வியாதிகள் |
| பீசம்-கெடுதி | கால்நகங்கள்-தனநாசம் |
| அபானம்-பொருட்பேறு | உள்ளங்கால்-ஐஸ்வரியவிருத்தி |
| பிட்டங்கள்-சுபம் | புறம்-திரவியநாசம் |

தேகத்திலோடில் தீர்க்காயுசு.

மேற்சொல்லிய அவயவங்களில் ஆரோகணமாக விழுந்தால் அசுபபலனுஞ்சுபமாயிருக்கும். அவரோகணமாகவிழுந்தால் தோஷபலன் தோஷமாகவும், குணபலன் குணமாகவும் பலிக்கும். திங்கள்-புதன்-வியாழன்-வெள்ளி இவ்வாரங்களில் விழுந்தாற் சுபபலன். அதற்குப் பரிகாரம் ஸசேலஸ்நானம் (அதாவதுகட்டினவஸ்திரத்துடன்) ஸ்நானஞ்செய்யவும், ஞாயிறு - செவ்வாய் - சனிவாரங்களில் விழுந்தால் சாந்திசெய்யவும்.

திரவியம் முதலானது கொடுக்கவும் வாங்கவும்
செய்யவேண்டியதற்கு
## நல்லதினம் அறியும்படி.

புதன்கிழமையிலும், சனிக்கிழமையிலும் பொன்-வெள்ளி முதலானது கொடுக்கக்கூடாது. செவ்வாய், வெள்ளி இந்தக்கிழமைகளில் நெல்லுமுதலாகிய தான்யங்கள் கொடுக்கக்கூடாது. கார்த்திகை, மகம், உத்திரம், சித்திரை, மூலம், ரேவதி இந்தநக்ஷத்திரங்களில் யாதொன்றையும் யாதொருவர்களுக்கும் கொடுக்கவும் வாங்கவும் செய்யக்கூடாது செய்தால் மீதியிருக்குந்திரவியங்களுக்குக்கூட நாசமுண்டாகும்.

# பல்லி சாஸ்திரம்.




பல்லி சொல்லியபொழுது, இங்கே காட்டிய ௧௬-திசைப் படி அது எத்திசை என்றுணர்ந்து, அத்திசைவரையும் அப் பொழுதைக்குரிய அருக்கதிசையை முதலாகக்கொண்டெண்ணி, முதற்பலமாகிய பகையை முதலாகக்கொண்டு கண்ட தொகைக்குரிய பலன் இன்ன தென்பதைப் பிறகூறியபடி யுணர்ந்துகொள்க. * அருக்கனில்லை.

| | | |
|---|---|---|
| ௧. பகை, நாசம் | ௬. உறவு | ௧௧. யாத்திரை |
| ௨. மரணம் | ௭. சஞ்சலம் | ௧௨. மகிழ்ச்சி |
| ௩. வரவு | ௮. நல்வரவு | ௧௩. பொருள்வரவு |
| ௪. அபஜெயம் | ௯. சந்தோஷம் | ௧௪. மரணக்கேள் |
| ௫. கலகம் | ௰. பயம் | ௧௫-௧௬. நன்மை |

# திதி நக்ஷத்திர வாரசூலைகள்.

| வாரம் | நாழிகை. | திதி. | நக்ஷத்திரம். | திக்கு. | மூலைகள் |
|---|---|---|---|---|---|
| ஞாயிறு. | கஉ | சஷ்டி - அமாவாசை<br>சப்தமி - பௌர்ணமி | ரோகணி - பூசம் | மேற்கு | வடமேற்கு |
| திங்கள். | அ | பிரதமை - நவமி<br>சவுத்தி - துவாதசி | அவிட்டம் - கேட்டை | கிழக்கு | தென்மேற் |
| செவ்வா. | கசு | அஷ்டமி - சதுர்த்தசி<br>சப்தமி - பௌர்ணமி | உத்திரம் - அஸ்தம் | வடக்கு | வடமேற்கு |
| புதன். | கசு | பஞ்சமி - திரயோதசி<br>அஷ்டமி - சதுர்த்தசி | சித்திரை - அஸ்தம் | வடக்கு | வடகிழக் |
| வியாழன். | உ0 | திரிதியை - ஏகாதசி<br>துதிகை - சப்தமி | அசுவனி - திருவோணம் | தெற்கு | தென்கிழக் |
| வெள்ளி. | கஉ | சவுத்தி - துவாதசி<br>சஷ்டி - அமாவாசை | ரோகணி - பூசம் | மேற்கு | தென்மேற் |
| சனி. | அ | துதிகை - சப்தமி<br>பிரதமை - நவமி | அவிட்டம் - கேட்டை | கிழக்கு | தென்கிழக் |

# சாதக குளிகாதிகாலம்.

| உபக்கிரகங்கள். | ஞாயிறு. | | திங்கள். | | செவ்வாய். | | புதன். | | வியாழன். | | வெள்ளி. | | சனி. | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | பகல் | இரவு | பகல் | இரவு | பகல் | இரவு | பகல் | இரவு | பகல் | இரவு | பகல் | இரவு | பகல் | இரவு |
| குளிகன் | ௨௬ | ௰ | ௨௨ | ௬ | ௧௮ | ௨ | ௧௪ | ௨௬ | ௰ | ௨௨ | ௬ | ௧௮ | ௨ | ௧௪ |
| விஷகம்பன் | ௨௨ | ௬ | ௧௮ | ௨ | ௧௪ | ௨௬ | ௰ | ௨௨ | ௬ | ௧௮ | ௨ | ௧௪ | ௨௬ | ௰ |
| எமகண்டன் | ௧௮ | ௨ | ௧௪ | ௨௬ | ௰ | ௨௨ | ௬ | ௧௮ | ௨ | ௧௪ | ௨௬ | ௰ | ௨௨ | ௬ |
| அர்த்தப்பிரகரன் | ௧௪ | ௨௬ | ௰ | ௨௨ | ௬ | ௧௮ | ௨ | ௧௪ | ௨௬ | ௰ | ௨௨ | ௬ | ௧௮ | ௨ |
| கரேசன் | ௰ | ௨௨ | ௬ | ௧௮ | ௨ | ௧௪ | ௨௬ | ௰ | ௨௨ | ௬ | ௧௮ | ௨ | ௧௪ | ௨௬ |
| கலைக்கியானன் | ௬ | ௧௮ | ௨ | ௧௪ | ௨௬ | ௰ | ௨௨ | ௬ | ௧௮ | ௨ | ௧௪ | ௨௬ | ௰ | ௨௨ |
| காலநேமி | ௨ | ௧௪ | ௨௬ | ௰ | ௨௨ | ௬ | ௧௮ | ௨ | ௧௪ | ௨௬ | ௰ | ௨௨ | ௬ | ௧௮ |

உபக்கிரகங்களின் தந்தையின் பெயர்.

காலநேமி - சனிக்கும் சூரியன். அர்த்தப்பிரகரன் புதன். குளிகன் தந்தை-சனிபகவான்.
கலைக்யானன்-தூமன் சந்திரன். எமகண்டன் வியாழன். அமுதகடிகன்-இந்ரதனுசுராகு.
கரேசன்-பரிவேடன் செவ்வாய். விஷகம்பன்-விதிபாதன் சுங்கன். அவமிருத்து-தூமகேது கேது.

# குளிகாதி நான்கு உபக்கிரக காலம்.

| வாரம். | குளிகன். | | எமகண்டன். | | அர்த்தப்பிரகரன். | | காலநேமி. | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பகல். | இரவு. | பகல். | இரவு. | பகல். | இரவு. | பகல். | இரவு. |
| ஞாயிறு | உஉ௦ | எ௦ | கரு | அஸ்தமன | ககவ | உஉ௦ | உதயம் | ககவ |
| திங்கள் | கஅஜெ | ௩ஜெ | ககவ | உஉ௦ | எ௦ | கஅஜெ | உஉ௦ | எ௦ |
| செவ்வாய் | கரு | அஸ்தமன | எ௦ | கஅஜெ | ௩ஜெ | கரு | கஅஜெ | ௩ஜெ |
| புதன் | ககவ | உஉ௦ | ௩ஜெ | கரு | உதயம் | ககவ | கரு | அஸ்தமன |
| வியாழன் | எ௦ | கஅஜெ | உதயம் | ககவ | உஉ௦ | எ௦ | ககவ | உஉ௦ |
| சுக்கிரன் | ௩ஜெ | கரு | உஉ௦ | எ௦ | கஅஜெ | ௩ஜெ | எ௦ | கஅஜெ |
| சனி | உதயம் | ககவ | கஅஜெ | ௩ஜெ | கரு | அஸ்தமன | ௩ஜெ | கரு |

இங்கே குறித்த நாழிகையின்மேல் ௩ஜெ-நாழிகை அவ்வக்கிரகங்களின் காலமாம்.

அக்காலங்களில் சுபகாரியங்கள் செய்யலாகாது. குளிகனுக்கு அசுபகருமங்கள் செய்யலாகாது.

சூரியன் தந்தை கசியப்பிரஜாபதி. புதன் தந்தை சந்திரன். சனியின் தந்தை சூரியபகவான்
சந்திரன் ,, அத்திரிமகாரிஷி. குரு ,, ஆங்கிரீசமகரிஷி. இராகு } ,, காசிபமகரிஷி.
செவ்வாய் ,, மகாவிஷ்ணு. சுக்கிரன் ,, பிருகுமகரிஷி. கேது }

## நோய்கண்ட நாட்களின் பலாபலன்.

| | | | |
|---|---|---|---|
| அசுபதிக்கு | ஒருநாள் | அல்லது | ௯-நாளிற்றீரும் |
| பரணிக்கு | ௫-௧௧ | ,, | ௨௦ ,, |
| கார்த்திகைக்கு | ௭-௯ | ,, | ௨-மீ ,, |
| ரோகணிக்கு | ௩-௭ | ,, | ௨௮-நாளிற்றீரும் |
| மிருகசீரிடம் | ௭-௧௨ | ,, | ௩௦ |
| திருவாதிரை | ௬-௨௦ | ,, | ௭-மீ த்துக்குள்மாறும் |
| புனர்பூசம் | ௭-௧௫ | ,, | ௧௯-நாளிற்றீரும் |
| பூசத்துக்கு | ௨-௭ | ,, | ௧௫ |
| ஆயிலியத்துக்கு | ௭-௯ | ,, | ௬-மீ த்துக்குள்மாறும் |
| மகத்துக்கு | ௮-௧௫ | ,, | ௨௧-நாளிற்றீரும் |
| பூரத்துக்கு | ௧௧-௩௦ | ,, | ௨-மீ த்துக்குள்மாறும் |
| உத்திரத்துக்கு | ௭-௨௨ | ,, | ௩-மீ த்திற்றீரும் |
| அஸ்தத்துக்கு | ௮-௧௫ | ,, | ௧-மீ ,, |
| சித்திரைக்கு | ௭-௧௫ | ,, | ௩-மீ ,, |
| சுவாதிக்கு | ௭-௧௦ | ,, | ௨-மீ த்துக்குள்மாறும் |
| விசாகம் | ௭-௧௩ | ,, | ௧-மீ த்திற்றீரும் |
| அனுஷம் | ௬-௧௦ | ,, | ௧௩-நாள்வரைகஷ்டம் |
| கேட்டை | ௯-௧௩ | ,, | ௧-மீ த்துக்குள்மாறும் |
| மூலம் | ௧௧-௧௫ | ,, | ௨௮-நாளிற்றீரும் |
| பூராடம் | ௮-௧௧ | ,, | ௧-மீ த்துக்குள்மாறும் |
| உத்ராடத்துக்கு | ௧௨-௩௦ | ,, | ௭-மீ த்திற்றீரும் |
| திருவோணம் | ௧௧-௨௦ | ,, | ௨-மீ ,, |
| அவிட்டத்துக்கு | ௮-௧௦ | ,, | ௧௫-நாளிற்றீரும் |
| சதயத்துக்கு | ௭-௧௦ | ,, | ௨௦ ,, |
| பூரட்டாதிக்கு | ௧௧-௨௫ | ,, | ௩-மீ த்துக்குள்மாறும் |
| உத்திரட்டாதி | ௭-௧௪ | ,, | ௪௫-நாளிற்றீரும் |
| ரேவதிக்கு | ௬-௮ | ,, | ௧௦ ,, |

## தீராதநாட்களின் விபரம்.

ஞாயிறு. திருவோணம் திங்கள். திருவாதிரை

செவ்வாய். சித்திரை-கார்த்திகை-பிரதமை-சஷ்டி - ஏகாதசி

| | | |
|---|---|---|
| புதன். | ரேவதி - ஆயிலியம் - | துதியை-சத்தமி-துவாதசி |
| வியாழன். | ,, மகம் | திரிதியை-அஷ்டமி-திரயோதசி |
| வெள்ளி. | விசாகம் - அவிட்டம்- | சதுர்த்தி-நவமி-சதுர்த்தசி |
| சனி. | கார்த்திகை-பரணி- | பஞ்சமி-தசமி-அமாவாசை |

| | |
|---|---|
| ஜென்ம நட்சேத்திரம் | சரு-நாள் |
| ஜென்மவாரம் | உஅ-நாள் |
| ஜென்ம திதி | ௩0-நாள் |
| ஜென்ம லக்கினம் | கஉ-நாள் |

| | | | |
|---|---|---|---|
| ஞாயிறு | கார்த்திகைநக்ஷத்திரமுங்கூடியநாள் | | உ0-நாள் தீரும் |
| செவ்வா | கிருஷ்ணபக்ஷசதுர்த்தசியும் | ,, | சரு-நாள் கடுமை |
| சனி | ,, அஷ்டமி | ,, | உ௩-நாளிற்றீரும் |
| பரணி நக்ஷத்திரமும் அமாவாசையும் | | ,, | சு-மீ செல்லும் |
| ௩-ம் தாரை எ - தாரையில்வந்தரோகம் | | | எ - நாளிறற்றும் |
| ஜன்மநக்ஷத்திரத்துக்கு உ௩-வது நக்ஷத்திரமாகில் | | | ச0 ,, |
| இராகுகாலமாகில் | | | ௩ - ,, |
| சனியிருக்கும் நக்ஷத்திரமாகில் | | | கரு - ,, |
| செவ்வாயிருக்கும் | ,, | | சரு - ,, |

விருச்சிகராசியில ராகுகாலத்தில் பாம்புகுறுக்காஞல்மரணம்

கும்பலக்கினத்தில் சனிஅமசத்தில் குளிககாலத்தில்பரணி-ஆயிலியநட்சேத்திரத்தில் காலை-உச்சி-மாலை இதுகளில் வாந்தி பிராந்தியுண்டாஞல் கெடுதி சம்பவிக்கும்.

பஞ்சமசுத்தியாகில் அதிசீக்கிரம் நிவர்த்தி.

---

## வாஸ்து புருஷனின் சயனலக்ஷணம்.

சித்திரைமீ கிழக்குத் திசையாகிய மேஷராசியிற் கால் நீட்டி மேற்குத்திசையாகிய துலாராசியில் தலைவைத்து இடக்கை தலையின்கீழ் வைத்து வடக்குமுகமாகவும்.

வைகாசிமீ கிழக்குத் திசையாகிய விருஷபத்திற் கால் நீட்டி மேற்குத்திசையாகிய விரிச்சிகத்தில் தலைவைத்து வலக்கை தலையின்கீழ் வைத்து மேன்முகமாகவும்.

**ஆனிமீ** * தென்கீழ்த் திசையாகிய மிதுனத்திற் கால் நீட்டி வடமேற்குத்திசையாகிய தனுவில் தலைவைத்து அதோமுகமாகவும்.

**ஆடிமீ** தென்திசையாகிய கர்க்கடகத்திற் கால் நீட்டி வடதிசையாகிய மகரத்தில் தலைவைத்து இடக்கை தலையின்கீழ் வைத்துக் கிழக்குமுகமாகவும்.

**ஆவணிமீ** தென் திசையாகிய சிங்கத்திற் கால்நீட்டி வடதிசையாகிய கும்பத்தில் தலைவைத்து வலக்கைதலையின்கீழ் வைத்து மேன்முகமாகவும்.

**புரட்டாசிமீ** தென்மேற் றிசையாகிய கன்னியிற் கால் நீட்டி வடகீழ்த் திசையாகிய மீனத்தில் தலைவைத்து அதோமுகமாகவும்.

**ஐப்பசிமீ** மேற்குத்திசையாகிய துலாத்திற்கால்நீட்டிக் கீழ்த்திசையாகிய மேஷத்தில் தலைவைத்து இடக்கை தலையின்கீழ் வைத்துத் தெற்குமுகமாகவும்.

**கார்த்திகைமீ** மேற்குத் திசையாகிய விரிச்சிகத்திற் கால் நீட்டிக் கீழ்த்திசையாகிய விருஷபத்தில் தலைவைத்து வலக்கை தலையின்கீழ்வைத்து மேன்முகமாகவும்.

**மார்கழிமீ** வடமேற்றிசையாகிய தனுவிற் கால்நீட்டித் தென்கீழ்த்திசையாகியமிதுனத்தில்தலைவைத்து அதோமுகமாகவும்.

**தைமீ** வடதிசையாகிய மகரத்திற்கால்நீட்டித் தென் திசையாகிய கர்க்கடகத்தில் தலைவைத்து இடக்கை தலையின்கீழ் வைத்து மேற்குமுகமாகவும்.

**மாசிமீ** வடதிசையாகிய கும்பத்திற் கால் நீட்டித் தென் திசையாகிய சிங்கத்தில் தலைவைத்து வலக்கை தலையின்கீழ் வைத்து மேன்முகமாகவும்.

**பங்குனிமீ** வடகீழ்த்திசையாகிய மீனத்திற்கால்நீட்டித் தென்மேற்றிசையாகிய கன்னியில்தலைவைத்து அதோமுகமாகவுஞ் சயனிப்பன்.

## வாஸ்துபுருஷ லக்ஷணம்.

பங்குனி-சித்திரை-வைகாசி இம்மாதங்கள் மூன்றிலும் மேற்கே சிரசும், கிழக்கே காலும், இடக்கை கீழுமாய் வடக்குமுகமாய்ப் படுத்துக்கொண்டு இருப்பர்.

ஆனி-ஆடி-ஆவணி இம்மாதங்கள்மூன்றிலும் வடக்கே சிரசும், தெற்கே காலும், இடக்கைகீழும், கிழக்கு முகமாய்ப் படுத்துக்கொண்டு இருப்பர்.

புரட்டாசி-ஐப்பிசி-கார்த்திகை இம்மாதங்கள் மூன்றிலும் கிழக்கே சிரசாகவும், மேற்கே காலாகவும், இடதுகை கீழேவைத்து தெற்குமுகமாய்ப் படுத்துக்கொண்டுஇருப்பர்

மார்கழி-தை-மாசி இம்மாதங்கள் மூன்றிலும் தெற்கே சிரசாகவும், வடக்கே காலாகவும், இடதுகை கீழேவைத்து மேற்கு முகமாய்ப் படுத்துக்கொண்டிருப்பர்.

### வாஸ்துபுருஷன் நித்திரைவிடுதல்.

| | | | |
|---|---|---|---|
| சித்திரைமீ | க0வ | நாழிகை | ரு |
| வைகாசிமீ | உசவ | ,, | அ |
| ஆடிமீ | ககவ | ,, | உ |
| ஆவணிமீ | சுவ | ,, | உக |
| ஐப்பிசிமீ | ககவ | ,, | உ |
| கார்த்திகைமீ | அவ | ,, | க0 |
| தைமீ | கஉவ | ,, | அ |
| மாசிமீ | உ0வ | ,, | அ |

இந்த நாழிகைக்குமேல்,

வாஸ்துபுருஷன் எழுந்திருந்து மூன்றேமுக்கால் நாழிகை இருப்பன். அதில் முக்கால் நாழிகை தந்தசுத்தி, முக்கால் நாழிகை ஸ்நானம், முக்கால நாழிகை பூஜை, முக்கால் நாழிகை போஜனம், முக்கால் நாழிகை தாம்பூல தாரணம் ஆகசெய்கை ரு-க்கு ௩௸-நாழிகை. இதற்குமேல் படுத்துக்கொள்வர்.

ஸ்நானம்-பூஜை-தந்தசுத்தி இம்மூன்றுகாலம் நீக்கி மற்ற இரண்டு காலத்திலும் கிரகாரம்பம் செய்யில் விசேஷசவுக்கியமுண்டாகும்.

புரட்டாசி-மார்கழி-பங்குனி-ஆனி இந்த மாதங்களில் நித்திரைவிட்டு எழுவதில்லை. வாஸ்துபுருஷன் நிலையறிந்து மனை கோலாவிடில் பொருள் நஷ்டமும் நோய் உண்டாகுதலும் அன்றி மனைகோலிய கர்த்தாவும் விபத்தையடைவார் செய்தவையும் பாழாகிப்போம்.

க-ம் சாமம் தந்தசுத்தியில் முகூர்த்தஞ்செய்தால் அரசர்பயம்
உ-ம் சாமம் ஸ்நானம் அதில் பீடையுண்டாம்.
ந-ம் சாமம் பூஜை ,, வறுமை.
ச-ம் சாமம் போஜனம் ,, புத்திரசந்தானமுண்டாம்.
ரு-ம் சாமம் தாம்பூலம் ,, மகா உத்தமம்.

## சோதிட சாராமிர்தம்

முற்றிற்று

---

அறிவிப்பு:—இந்த சோதிட சாராமிர்தத்தில் சொல்லாத சில பலன்களை சாதக சாராம்சமென்னும் "சோதிட ப்ராக்ரமத்தில்" மதுரை. சோதிடம் த. குப்புசாமி நாயுடு அவர்களாற் றெளிவாக எழுதி அச்சிட்டிருப்பதால் அதிற் காண்க.



உ

சிவமயம்.

# தாண்டவமாலை.

## நூற்பெருமை.

வெண்பா.

ஓரை முதலா யுரைக்கு மவையாவும்
ஓரை யிதரமுத லோர்ந்துரைத்த-பாரிலிந்தத்
தாண்டவமா லைப்படியே தக்கவிசே டப்பலனை
ஆண்டருள்வீ ரார்றிவி னீர்.

பொழிப்புரை. நிறைந்த அறிவினையுடைய புலவர்களே? பூமியினிடத்தில் இலக்கின முதலாகச் சொல்லப்பட்ட பாவங்கள் சகலத்தையும் ஓராசாரம் பாராசரிய முதலான நூற்களை ஆராய்ந்தறிந்து செய்த தாண்டவமாலை யென்னும் இந்நூற்படியே தகுந்த விசேடமாயிருக்கும் புலாபலன்களை அறிந்தருள்வீர்கள் என்பதாம்.

கருத்துரை. ஓரையிதர முதலென்றது இலக்கினமுதற் பன்னிரண்டுபாவங்கள் கேந்திரதிரிகோணங்கள் தெசாபுத்திகள் இவைமுதலெனக் கொள்க. க

கோள்களின்நோக்கங் கூறுகின்றது.

பார்ப்பரே மெல்லாரும் பங்குகுரு சேய்மூன்று
பார்ப்பத்தைந் தொன்பானுன் பன்னியகோள்-சேர்ப்பு
கெட்டுமே பார்ப்ப ரெழிலா ரிளங்கொங்கை [றுநான்
மட்டவிழ்பூங் கோதாய் மதித்து.

பொ-ரை. அழகு நிறைந்த விளமைதங்கிய ஸ்தனங்களையும் தேன்விரிந்த மலர்கள் பொருந்திய கூந்தலை முடையவளே! எல்லாக் கோள்களும் தாந்தாம் இருக்கும் இடத்துக்கு

ஏழாம் இடத்தைப் பார்ப்பார்கள், இவைகளில் விசேடமாய் சனி வியாழம் செவ்வாய் இம்மூவரும் நிறைநிறைய ௩-ம் இடம் ௧௦-ம்-இடம்-௫-ம்-இடம்-௯-ம் - இடம்-௪-ம்-இடம்-அ-ம் இடங்களைப்பார்ப்பார்கள் என்பதாம்.

க-ரை. சனிக்கு ௩-௧௦-குருவுக்கு ௫ - ௯ செவ்வாய்க்கு ௪-அ விசேடபார்வையென் றறிக. ௨

எல்லாக்கோள்களுடைய நன்மைதீமைகூறுகின்றது.

ஐந்தொன்பா னதிபரா யரவர் வரினுமவர்
அந்தமிலின் பப்பலனை யாற்றுவார்-அந்தமுறும்
அற்பபல் னற்றுவா ரம்மூன்று மும்பதினொன்
றற்பதிக ளிவ்வுலகு ளோர்க்கு.

பொ-ரை. இவ்வுலகத்துட் பிறந்தோர்களுக்கு இலக்கினத்துக்கு-௫-ம்-இடத்திற்கும்-௯-ம் இடத்திற்கும் அதிபராய் எந்தக்கிரகங்கள் வந்தாலும் மட்டில்லாத இன்ப பலனைக் கொடுப்பார்கள்; ௩-ம்-இடத்துக்கும்-௬-ம் - இடத்துக்கும் ௧௧-ம்-இடத்துக்கும் அதிபராய் எந்தக்கிரகங்கள் வந்தாலும் மட்டில்லாத துன்பபலனைக் கொடுப்பார்கள் என்பதாம்.

க-ரை. முன்சொன்ன-௩-௬-௧௧-ம் – இடங்களி லிருக்கிறவர்கள் பாபப்பலனைக் கொடுப்பார்கள் என்றறிக. ௩

கோட்களுக்குரித்தாகுஞ் சுபகேந்திரமும்
பாபகேந்திரமுங் கூறுகின்றது.

கொடியோர்கள் கேந்திரத்தோ ராகிற்கொ டார்கள்
கொடியபலன் நல்லோர்கொ டுப்பர்-கடல்புடைசூழ்
வையகத்தோர் தங்கட்கு வைவேன் மலர்விழியாய்
ஐயப்பா டின்றி யறி.

பொ-ரை. கூர்மை பொருந்திய வேல்போலு மலர்ந்த கண்களையுடைய பெண்ணே! சமுத்திரஞ்சூழ்ந்த பூமியிலுள்ளவர்களுக்குப் பாபக் கிரகங்களாகிற சூரியன்-செவ்வாய்-சனி இவர்கள் கேந்திரங்களாகிற-க-௪-எ-௧௦-ம்- இடங்களுக்கு அதிபரானால் சுபபலத்தைக்கொடுப்பார்கள் சுபக்கிரகங்

களாகிற குரு-சுக்கிரன்-புதன்-சந்திரன் இவர்கள்கேந்திராதி பதிகளானால் பாபபலத்தைக் கொடுப்பார்கள். முன்சொன்ன எல்லாக்கோள்களும், ஒன்றுக்கொன்று விசேஷ பிரபலரா வர். அஃதாவது-ரு-ம்-இடத் ததிபதிக்கு-கூ-ம்-இடத்ததிபதி பிரபலன். இலக்கினாதி பதிக்கு-ச-ம்-இடத்ததிபதிபிரபலன். அவனுக்கு-எ-ம்-இடத்ததிபதி பிரபலன். அவனுக்கு-க0-ம்-இடத்ததிபதிபிரபலன். ரு-ம்-இடத்ததிபதிக்கு-சு-ம்-இடத் ததிபதிபிரபலன். அவனுக்கு-கக- இடத்ததிபதி பிரபலன். இவைகளைச் சந்தேகமில்லாமல் அறிவாயாக என்பதாம். ௬

உரைத்ததானமொன்பதிற்குமுயர்விழிவாற் பலனுரைக்கின்றது.

அறைந்ததா னத்தலைவர் யாவருமென் மேலாய்ச்
செறிந்தவவ் வப்பலனைச் சேர்ப்பார்-அறிந்தருள்வாய்
வார்கலன்பொன் வம்பார் வன்முலைப்பூங் கோதைநல்
ஆர்கலிசூ ழம்புவியு ளார்க்கு. [லாய்

பொ-ரை. கச்சும் ஆபரணமும் தேமலும் வாசனையும் நிறைந்த வழகும், பொருந்திய கொங்கைகளையும் பூமாலை பொருந்திய கூந்தலையு முடைய பெண்ணே! கடல்சூழ்ந்த பூமியிலுள்ளவர்களுக்குச் சொல்லப்பட்ட தானத்ததிபதிக ளாகிய எல்லாரும் மேன்மேலாய்த் தங்களுக்குப் பொருந்திய சுபாசுப பலன்களைக்கொடுப்பார்கள், அன்றியும்-ரு-ம்-இடத் ததிபதியைப்பார்க்கிலும் - கூ-ம் இடத்ததிபதி அதிகபலனைக் கொடுப்பன். இலக்கின கேந்திராதி பதியைப் பார்க்கிலும் சதுர்த்த கேந்திராதிபதி அதிக பலனைக்கொடுப்பன் ரு - ம் இடத்ததிபதியைப் பார்க்கிலும்-சு-ம்-இடத்ததிபதி அதிக பலனைக் கொடுப்பன். அவனைப்பார்க்கிலும்-கக-ம் இடத்ததி பதி அதிகபலனைக்கொடுப்பன். ஒழிந்த தானதிபதிகட்கும் இவ்வளவே கொள்க என்பதாம்.

கூ-ரை. குரு-சுக்கிரன்-புதன்-சந்திரன் சுபர்கள் - இவர் கள் கேந்திராதி பதிகளானால் சுபபலனைக்கொடார்கள். சூரி யன்செவ்வாய் சனி பாபிகள் இவர்கள் கேந்திராதி பதிகளா னால் அசுபபலனைக் கொடார்கள். ௱

இரண்டு பன்னிரண்டிற் கிறைவ ரியல்பு கூறுகின்றது.

ஓரையுரு பக்கத்தி னதிபர்க ளொண்ணுதலாய்
சேருமவர் தங்கடங்கள் சீரிடக்கு-நேராகும்
அற்பபல னீவ ரலைகடல்சூழ் வையகத்தில்
எப்பிறவி யோர்க்கு மிருந்து.

பொ-ரை. ஒளிபொருந்திய நெற்றியை யுடையவளே! அலைபொருந்திய சமுத்திரஞ் சூழ்ந்த பூமியினிடத்தில் எந்தச் சாதகர்களுக்கும் இலக்கினத்திற்கு இரண்டு பக்கமாகிய தனவியத்தா னதிபதிகள் தங்கள் தங்களுடனே சேர்ந்த கோட்களுக்கும் தங்கள் தங்களுக்கு வேறுமிடத்திற்கும் நேராகிய சுபபலன்களைக் கொடுப்பார்கள் என்பதாம்.

க-ரை. கிரகசம்பந்தமும் இராசி சம்பந்தமும் இல்லாமலிருந்து உள்ளளவில் தங்கள் தங்கள் பொசிப்பிற்கு ஒத்த பலன்களை விசாரித்துக் கூறுதலெனக்கொள்க. கூ

எட்டுக்கிறைவனியல்புகூறுகின்றது.

பாக்கியநா சத்திறையும் பாவத்தா லெட்டதிபன்
வீக்குவம் பார்முலையாய் மேதினியோர்-காக்கமிலாத்
துன்பமீ வன்னிவனே தூயவோ ராதிபனேல்
இன்பமீ வன்னிகலி யே.

பொ-ரை. கச்சுக்கட்டிய தனங்களையுடையவளே! பூமியிலுள்ளவர்களுக்கு, அ-ம் இடத்ததிபதி பாக்கியத் தானத்திற்கு விரயத் தனுதிபதியான பாவத்தினாலே நன்மை பெருக்கமில்லாத துன்பத்தைக் கொடுப்பன் அந்த-அ-ம் இடத்ததிபதி தானே இலக்கினாதிபதியானால் மாறுபட் டின்பத்தைக் கொடுப்பன் என்பதாம்.

க-ரை. அ-ம் இடத்ததிபதியைப்போல் மிகவுந் துன்பபலத்தைக் கொடானெனவுணர்க. எ

கேந்திராதிபத்தியதோஷத்தைக் கூறுகின்றது.

கண்டத் ததிபரும் பாபத்திற் காரிகையாய்
கொண்டகுரு வெள்ளி கொடியரிவர்-தண்டாமல்

ஆயு வியத்திருப்பா ராமாகி லையமிலா
தாய்வியஞ் செய்திடுவா ராங்கு.

பொ-ரை. பெண்ணே? கேந்திராதி பத்திய தோஷத்தில் குருவும் வெள்ளியும் மிகவும் பலவான்கள், இவர்கள் நீங்காமல் ஆயுளுக்கு வியத்தானமாகிய உ-எ-ம் இடங்களில் நின்றாராகில் சந்தேக மில்லாமல் ஆயுள்வியஞ் செய்வார்கள் என்பதாம்.

க-ரை. மாரகத் தானாதி பதியைப் பார்க்கிலும் அந்த மாரகத்தானத்தி லிருப்பவர்கள் பலவான்களெனக்கொள்க. இவர்கட்குக் கேந்திராதி பத்யதோஷத்தாற் கூறப்பட்டது மாரகத்தான இலக்கினமேற் கூறுகின்றது. அ

புதன்-சசிஇரவிக்குண்டானகுணங்கூறுகின்றது.

பின்னரப் பாவத்திற் பேர்பெரியன் மாலாகும்
பின்ன ரவன்றந்தை பேசுங்கால்-இந்நிலத்தில்
எட்டா மிடத்ததிப ரெண்ணிற் பெரும்பாவம்
கிட்டா திரவி மதிக்கு.

பொ-ரை. குரு வெள்ளிகளுக்குப் பின்னர் அந்தக் கேந்திராதி பத்திய தோஷத்தில் புதன்பலவான், புதன் பின்னரவன் றந்தையாகிய சந்திரன்பலவான். அ-மிடத் தாதிபத்தியத்தி லுண்டான மட்டில்லாத பெரியபாவம் சூரிய சந்திரர்கட்குச்சேராது என்பதாம்.

க-ரை. ஒழிந்தோர்கட்குச் சேருமென்பதாயிற்று. கேந்திராதி பத்ய தோஷமுள்ள இந்நால்வரையும் சேரக்கூறுதலால் குரு தோஷத்தில் சுக்கிரதோஷம் சுக்கிர தோஷத்தில் புததோஷம் புததோஷத்தில் சந்திரதோஷமும் குறைதலெனக்கொள்க. மற்றை-அ-ம் இடத்ததிபதிகளைப்போலச்சூரிய சந்திராதிகளுக்குத் தோஷமில்லையென்க. கூ

செவ்வாய்குணங்கூறுகின்றது.

ஆறற்கி ரைந்தாங்கண் டாதிக்கத் தானசுபம்
சீருற்ற கோணத்தாற் சீர்பெருமே-வாருற்ற

கொங்கையாய்க் கச்சாலே மூர்த்திகுமா ரந்தையான்
சிங்கர மாங்கடகச் சீர்.

பொ-ரை. கச்சணிந்த தனங்களை யுடையவளே! செவ்வாய்க்கு ஆதிக்கத்தினாலே தசமகேந்திராதி பத்தியத்திலுண்டான சுபத்துவம் திரிகோணாதி பத்தியத்தி லுண்டானபடியினாலே சிறப்பைப் பெறும் தசமகேந்திராதி பத்தியத்தினாலே மாத்திரம் சிறப்பைப்பெறாது இஃது குமாரந்தையானாகிய தாண்டவபூபன் புதல்வனாகிய கச்சாலே மூர்த்தியினுடைய சாதக இலக்கினமாகிய கடகத்திற் குண்டாகிய சிறப்பு என்பதாம். ௧0

இராகுகேதுக்களினியல்புகூறுகின்றது.

யாதொரு பாவத்தோன் யாதொருபா வேசனுடன்
தீதறச்சேர்ந் திட்டாற் றினபலன்கள்-கூதுறவேற்
கண்ணாய் கடுங்கோட்கள் காசினியி லுள்ளவர்கட்
கெண்ணும வீவா ரிருந்து.

பொ-ரை. காதளவு பொருந்திய கண்களை யுடையவளே! பூமியி லுள்ளவர்கட்கு இராகு கேதுக்கள் மற்றைக் கோட்கள்போல ஆதிபத்திய மில்லாதபடியினாலே அவர்கள் எந்த எந்த தானத்தி லிருந்தார்களோ எந்த எந்த பாவாதிபர்களுடன் கூடினார்களோ அவ்வவர்கட்கேற்ற சுபாசுப பலன்களைக்கொடுப்பார்கள் என்பதாம்.

கு-ரை. கடுமவர்கள் பலரா யுள்ளளவில் அதிற் பலவானுக் கேற்றபல னீவர்களென வறிக. ௧௧

பொதுச்சுபயோகம்புகல்கின்றது.

கோணக்கோள் கண்டக்கோள் கூடலுடனேபார்த்தல்
பேணுற் றொருவரில்சிற் பெட்புடனே-காணுற்
றொருவருற்று ராகி லொழிந்தோர் குறுமல்
இழிநலத்தை யீவா ரிவர்க்கு.

பொ-ரை. திரிகோணாதி பதியும் கேந்திராதிபதியும்-௩-௬-அ-௧௧-ம் இடங்களுக்கு அதிபதிகளுடன் கூடாமல் தங்கடங்

கள் சம்பந்தமான வேறோரிடத் தாதிபத்திய தோஷமில்லா மல் இருவருங்கூடல் ஒருவரை யொருவர் பார்த்தல் ஒருவ ரில்லி லொருவ ரிருத்தலான சம்பந்த முற்றாராகில் இவ்வுல கத்தோருக்கு விசேஷ சுபபலனைக் கொடுப்பார்கள் என்ப தாம்.

க-ரை. தான விசேஷத்தால் சுபபலனைக் கொடுப்பவ ராலும் ஒருவருக்கொருவர் சம்பந்தத்தால் விசேஷ பல னைக் கொடுப்பார்க ளென்றறிக. கஉ

இராஜயோகங்கூறுகின்றது.

வலியாரும் கண்டக்கோள் வாய்ந்தகோ ணக்கோள்
நலியார்க ளாகினுமே லல்லர்-சலியாமல்
கூடின மாத்திரத்திற் கொம்பனையாய் தாண்டவன்றன்
பீடுறுதேட் சிறென்று பேசு.

பொ-ரை. பூங்கொம்புக்குச் சமானமானவளே! தசமகே ந்திராதிபதியும் நவமதிரிகோணாதி பதியுங் கூடின சம்பந்த மாத்திரத்திலே பாவக்கோளுடன் கூடி பாவராகியாதிபத் திய முற்றிருந்தாலும் சலியாமல் நல்லஇராஜயோக பலனைக் கொடுப்பார்கள் இஃது தாண்டவரூபன் சாதகவிலக்கின மான விருட்சிகத்துக் குண்டான சிறப்பென்று சொல்வா யாக என்பதாம். கங

இராஜயோகங்கூறுகின்றது.

தன்மகன் மப்பதிக டங்களிற்று மாறியுமே
அன்னியமாய்த் தங்கட் கறையுமிடத்-தின்பமுடன்
உற்றிடுவீ ராகி லொளிவளையா யிவ்வுலகோர்
பெற்றிடுவார் யாவர் பெரிது.

பொ-ரை. பிரகாசம்பொருந்திய வளையல்களை யுடையவ ளே! தருமாதிபதியுங் கருமாதிபதியுந் தங்களிடத்திற்றாங்க ளிருந்தாலும் தங்களுக்கு அன்னியமாய்ச்சொல்லுமிடத்திற் சேர்ந்திருந்தாலும் தருமத்தானத்தில் கருமாதிபதி கருமத்



தானத்தில் தருமாதிபதி தானிருந்தாலும் இவ்வுலகத்திலுள்ளவர்கள் யாவரும் பெரிதாகிய யோகபலனைப்பெறுவார்கள் என்பதாம்.

க-ரை. தருமகருமாதிபதிகள் தோஷத்துடனே கூடியிருந்தாலும் தோஷத்துடனே கூடாதிருந்தாலும் இராஜயோகத்தைக் கொடுப்பார்கள் எனக்கொள்க. ௧௫

இராஜயோகங்கூறுகின்றது.

ஆய்ந்தகோ ணத்தலைவ ராரேனு மாமவரோ
டேய்ந்தசம் பந்தமீ ரைந்தவர்க்கு-வாய்ந்திடுமேல்
வைய மகிமைதரும் வாணுதலாய் தாண்டவன்போல்
செய்ய கமலை சிறந்து.

பொ-ரை. ஒளிபொருந்திய நெற்றியை யுடையவளே! ஆராய்ந்தெடுத்த திரிகோணாதிபதிகள் யாராயினுமாகுக. அவருடனே பொருந்திய சம்பந்தத் தசமகேந்திராதி பதிக்குண்டாகில் திருமகள் சிறந்த தாண்டவனைப்போல அரசுரிமைப் பெறுவருலகத்தோர் என்பதாம்.

க-ரை. சம்பந்தமுற்ற கிரகங்கள் கொடுப்பார்களென்ற போதிலும் தரும கருமாதி பதிகளைப்போலப் பலன்களைக் கொடார்களெனக் கொள்க. ௧௬

இராஜயோகங்கூறுகின்றது.

யோக திசையிரண்டி னுண்டுநின் றோன்றெசையும்
யோக பலனளித்த லொள்ளியதன்-றாகப்
படமனைய வல்குலாய் பாரி னிலக்கோள்கள்
உடனுறைத லின்றே லுரை.

பொ-ரை. ஒளிபொருந்திய நல்லபாம்பின் படத்தை நிகர்த்த வல்குலை யுடையவளே! இராஜயோகங் கொடுக்குமவர் தெசை யிரண்டினுள் நடுவினின்றவன் தெசையும் அவர்களுடன் சம்பந்த மில்லாமலிருந்துள்ளளவில் அவ்வரசயோக பலனைக்கொடுக்கு மென்றுசொல்வாயாக என்பதாம். ௧௬

இராஜயோகங்கூறுகின்றது.

—கோட்கடாம் பொல்லாக் கொடியவர்க ளானாலும்
வாட்கண்ணாய் வல்லோ ருடன்வயங்கும்—காட்புறுசம்
பந்தமுண்டேற் றத்தம் வயங்குபொசிப் புக்கேற்பத்
தந்திடுவர் பூபாலர் தாம்.

பொ-ரை. வாள்போலும் கண்களை யுடையவளே! கிரகங்கள் தாங்கள் பொல்லாத கொடியவர்க ளானாலும் அரசயோக மளித்தற்குவல்லோருடனே விளங்கு முறுதி யமைந்த சம்பந்த முண்டாகில் தாங்கள் தங்கடங்கள் புத்திக்கேற்ப அரசயோக பலனைத் தந்திடுவார்கள் என்பதாம்.

க-ரை. புத்தியிலக்கண முன்னர் புகல்கின்றது, யோககாரக சம்பந்தத்தால் பாவக் கோள்களும் இப்படிப்பலன் கொடுப்பார்களாகில் சுபக்கோள் கொடுக்கும் நிறைந்த பலத்தில் என்ன சந்தேக மென்பதாயிற்று. கஎ

இராஜயோகங்கூறுகின்றது.

கண்டக்கோ ணத்தி லிருந்த கடுங்கோட்குக்
கெண்டைவிழிச்செவ்வாய்கிளிமொழியாய்-ஒண்டொடி
ஆதிபனோ டல்லா விடத்துண்டேற் சம்பந்தம் [யாய்
கோதில்யோ கங்கொடுப்பார் கூர்ந்து.

பொ-ரை. சேல்போலுங் கண்களையுஞ் சிவந்த வாயினையுங் கிளிபோலுஞ் சொற்களையும் ஒளிபொருந்திய வளையல்களையு முடையவளே! கேந்திரத்திலாவது திரிகோணத்திலாவது இருந்த இராகு கேதுகளுக்கு அல்லாதவிடத் ததிபதியுடனே சம்பந்தமுண்டாகில் அந்த இராகுகேதுக்கள் குற்றமற்ற பெரிய யோகபலனைக் கொடுப்பார்கள் என்பதாம்.

க-ரை. அல்லாதவிடத்ததிபதியுடனே சம்பந்த முறலென்றால் கேந்திரத்தி லிருந்தால் திரிகோணாதி பதியுடனும் திரிகோணத்தி லிருந்தால் கேந்திராதி பதியுடனுஞ் சம்பந்தமுறுதல் பிரபலத்தான பிரபலக்கிரக சம்பந்தகிரகஅனுசாரியாய் விசேஷ சுபபலன்களைக் கொடுப்பா ரென்றறிவது. கஅ

இராஜயோகங்கூறுகின்றது.

கேந்திரகோ ணத்தலைவர் கேட்கி லொருவரென்
றுந்திரமா யோக மளிப்பரன்றோ-கூந்தருவீர்
அன்னியகோ ணத்தவனோ டாராய்ந்தி டும்பலன்கள்
என்னு லறிவரிதா மீங்கு.

பொ-ரை. கேந்திராதிபதியும் திரிகோணாதிபதியும் ஒருவராகில் நிறைந்துதிறமா யிருக்கப்பட்ட யோகபலனைக்கொடுப்பார். அவர் அன்னியத்திரிகோணாதிபதியுடனே சம்பந்தமுற்றுராகில் அவர் கொடுக்கும் பலன்களை என்னு லளவிட்டறியப்படாதென் றறிவீர் என்பதாம்.

க-ரை. அவர்கள் பலத்திற்கு அனுசாரியாய்ப் பலத்தை விசாரித்துச் சொல்வது. கக

இராஜயோகபங்கம்.

தன்மசன் மப்பதிக டாமெட்டி டன்பதியென்
றின்றலைவ ராகிலவ ரின்பமுற்ற-நன்னயஞ்சேர்
சம்பந்தத் தாலே சகத்திலுள் ளோர்தமக்குத்
தம்பலனி யாரென்று சாற்று.

பொ-ரை. தரும கருமாதிபதிகள் அட்டம இலாபாதிபதிகளாயிருந்தாலும் அட்டம இலாபாதிபதியுடைய சம்பந்தம் வந்தாலும் பூமியிலுள்ளோர்கட்குத் தங்கள்சுபபலனைக் கொடார்களென்று சொல்வாயாக என்பதாம்.

க-ரை. இவர்கள் சம்பந்தத்தால் இல்லை எனவே அன்னியயோககாரக சம்பந்தமுண்டாயிருந்தால்யோகபலன் அடைவரெனக்கொள்க உ0

மாரகவிலக்கணம் வழுத்துகின்றது.

எட்டுமதற் கெட்டா மிரண்டனையு மாயுவென்று
திட்ட முடனறிந்து சீறிலா-நட்டத்தை
மாரக மென்று வகுத்தறிவாய் மாமயிலே
ஆர்கலிசூ ழும்புவியு ளார்க்கு.

பொ-ரை. பெருமை பொருந்திய மயிற்போலுஞ் சாயலையுடையவளே !, இலக்கினத்திற்கு அ-ம் இடமும் அதற்கு

அ-ம் இடமான ௬-ம் இடமும் ஆயுட்டானமென்று பெயர் இவைகளுக்குச் சிறப்பில்லாத விரயத்தானங்களாகிய ௭-ம் இடத்தையும் ௨-ம் இடத்தையும் கடல்சூழ்ந்த பூமியிலுள் ளவர்களுக்கு மாரகத்தானமென்று வகுத்தறிவாயாக என்ப தாம்.

க-ரை. பாவம் கஉ-க்கும் இப்படியே பகுத்தறிவது. உக

சம்பந்தமாரகஞ்சாற்றுகின்றது.

அம்மா ரகமிரண்டி லாதியினு மேற்பலமென்
றெம்மா னவர்க்குமுறை யேந்திழையாய்-அம்மா
ரகத்ததிப ருற்று ரவருடனே கூடும்
அகத்தவர்க்கு மப்படியே யாம்.

பொ-ரை. ஆபரணங்களையுடையவளே! அந்த மாரகத்தா னம் இரண்டிலே முந்தினமாரகத்தானமாகிய ௭-இடத்தைக் காட்டிலும் பிந்தின மாரகத்தானமாகிய ௨-ம் இடமும் பல மென்றுரைப்பாயென்க. அஃதெப்படியென்னில், முதற்பரி யாயமாய்ச் சொல்லப்பட்ட மாரகத்தானமாகிய ௭-ம் இடத் திற்கு இரண்டாம் பரியாயமாய்ச் சொல்லப்பட்ட ௨-ம் இடம் பலமாயிற்று. உதாரணம், “அறைந்ததா னத்தலைவர் யாவருமென் மேலாய்ச் செறிந்த வவ் வப்பலனைச் சேர்ப்பா ரென்று” முன்னங்கூறியவதனால் ௨-ம் இடமே பலமுடைய தெனக்கொள்க. அந்த மாரகத் தானாதிபதியைக் காட்டிலும் அந்த மாரகத் தானத்தி லிருக்கிறவர்கள் பலமுடையவர்கள் இருக்கிறவர்களைக் காட்டிலும் அந்த மாரகத் தானாதிபதியு டனே கூடியிருக்கிறபாபிகள் பலமுடையவர்கள் ௨-ம் இடத் ததிபதி ௭-ம் இடத்ததிபதி யிவர்களுடைய பலாபலன்கட் கேற்ப இவர்களுடனே கூடு மவர்கட்கும் பலாபலம் யூகித் துக்கொள்வது என்பதாம். உஉ

சம்பந்தமாரகஞ்சாற்றுகின்றது.

அல்லவர் தங்கட் கமைத்த தெசைபொசிப்பில்
செல்வதே யாமரணஞ் செப்புங்கால்-வல்லமையில்
இல்லையா மாகி லெழின்முலையீ ராறிடத்தோன்
நல்ல தெசையி னவில்.

பொ-ரை. அழகிய கொங்கைகளை யுடையவளே! அந்த மாரகத் தானத்தி லிருப்போர் அல்லது அந்த மாரகத் தானதிபதியுடனே சம்பந்த முற்றிருப்போர் பாபிகளானால் இவர்கட்கமைத்த தெசா புத்திகளிலே மரணமுண்டாகும் இவைகளில் மாரக மில்லாவிடில் நன்மை பொருந்திய இலக்கினத்திற்கு கஉ-ம் இடத்ததிபதியினுடைய தெசா புத்திகளிலே மரணமுண்டாகுமென்று சொல்வாயாக என்பதாம். உங

சம்பந்தமாரகஞ்சாற்றுகின்றது.

இவன்றெசையி லின்றே லிவனிடத்தி லுற்ற
அவன்றெசையி தாமதுவு மன்றே-சிவந்தவிழி [ன்
தேமொழியே நல்லோர் தெசையிற்று னெட்டிடத்தோ
நாம தெசையி னவில்.

பொ-ரை. சிவப்பாகிய கண்களையுந் தேன்போலும் வார்த்தைகளையு முடையவளே! இந்த கஉ-ம் இடத்ததிபதியினுடைய தெசாபுத்திகளிலே மரணமில்லையாகில் இவனிடமாகிய கஉ-ம் இடத்திலிருந்தவன் கஉ-மிடத்ததிபதியுடனே சம்பந்த முற்றிருக்கிற பாபிகள் இவர்களுடைய தெசாபுத்திகளிலேமரணமாம். அதிலும் இல்லையாகில் அந்தவிரயாதிபதியுடன் சம்பந்தமுற்ற யோககாரகனல்லாத சுபர்களுடைய தெசாபுத்திகளிலேயும் சிலவிசைமரணமாம். இதிலும் இல்லையாகில் அ-ம் இடத்ததிபதி அ-க்கு அ-ம் இடத்ததிபதியான கூ-ம் இடத்ததிபதி இவர்களுடைய தெசாபுத்திகளிலே மரணமாமென்று சொல்வாயாக என்பதாம்.

க-ரை. அ-ம் இடத்துக்குடையவர்கள் ஆயுளைக்கொடுப்பவர்களா யிருப்பாரும் மற்றை வேறு வகையில் மாரகம் உண்டாவதற்கு இடமில்லாததனு லிவர்கள் மாரகங் கொடுக்கவேண்டியதாயிற்று. உச

சம்பந்தமாரகஞ்சாற்றுகின்றது.

ஆங்கவற்று ளில்லையே லில்லாத கற்றவர்தம்
ஓங்கு தெசையி லுரைக்கவென்-றீங்குயர்ந்தோர்

செப்பினார் மாரகங்கள் செல்வதறி யாதுவிடின்
இப்புவியி லோர்க்கென்று மே.

பொ-ரை. பூமியிலுள்ளோர்க்கு எந்நாளும் அந்த அ-ம் இடமுதலியவைகளுக்கு அதிபதிகளுடைய தெசாபுத்திகளிலேயும் மரணமில்லையாகில் மாரகங்கள் செவ்வையாய் வராத காலத்தில் மாரகசம்பந்த மில்லாமலிருக்கிறபாபக்கிரகங்களுடைய தெசாபுத்திகளிலே சிலவிசை மாரகமுரைக்கவென்று சோதிடநூல் வல்லவர்கள் சொன்னார்கள் என்பதாம். ௨௫

சனியன்மாரகஞ்சாற்றுகின்றது.

பாபபல னைக்கொடுக்கும் பங்குகொள் வோருடனே
சேர்பலத்தா லெல்லோரை யுஞ்செறிந்து-தீபரமாய்க்
கொல்வனென கோதாய் குவலயத்தி லுள்ளவர்கட்
கில்லிவற்றி லை யியம்பு.

பொ-ரை. மாலையை யுடையவளே! பாபபலனைக் கொடுக்கிற சனி மாரகக்கிரகங்களுடனே கூடியிருக்கிற குற்றத்தின் வலிமையினாலே யெல்லோரையுந் தள்ளி தானே சடுதியில் கொல்வனென்று பூமியிலுள்ள பேர்க்குச்சொல்வாய் இவற்றில் சந்தேகமில்லை என்பதாம்.

க-ரை எல்லோரையுந்தள்ளி யென்பதினால் தனக்குமுன் தந்த பேர்களையுந் தள்ளிப் பின்வரப்போகிற மாரகர்களையுந் தள்ளி யெனப்படும். ௨௬

புத்தியிலக்கணம்புகல்கின்றது.

கோட்களெல்லாந் தந்தங் குலவு தெசைபெர்சிப்பில்
சேட்படுமிவ் வையகத்திற் செப்பரிய-மாக்கடமக்
கியார் பலாபலன்க ளென்றுந் தமக்கேற்ற
சேயரிக் கண்மாதே செப்பு.

பொ-ரை. செவ்வரி பொருந்திய கண்களை யுடைய பெண்ணே! விசாலம் பொருந்திய இப்பூமியிடத்தில் சொல்லுதற்கரிய மனிதர்களுக்கு எல்லாக்கோள்களுந் தங்கள் தங்

கள் தெசையில் தங்கள் தங்கள் சுயபுத்தியில் தமக்குத்தக்க சுபாசுப பலன்களை எப்போதும் கொடார்களென்று சொல்வாயாக என்பதாம்.

க-ரை. என்னெனில், மேல்வருகிற புத்திகளில் சுபபலனை கொடுப்பதினால் தான் தங்கள் புத்தியி லெதைக் கொடுப்பாரெனில் முன்றெசைக்கொத்த முன்பலனைக்கொடுப்பார்கள்.

புத்தியிலக்கணம்புகல்கின்றது.

யாரொருவர் தம்முடனே யுற்றார் தமக்குநிகர்
யாரவர்கள் யாரு மரும்பொசிப்பில்-வார்நெடுங்கண்
மாதேத் தந்தெசையின் மாண்பர்ப லாபலன்கள்
கோதறக்கொள் ளக்கொடுப்பார் கொண்டு.

பொ-ரை. நீண்ட கண்களையுடைய பெண்ணே! யெல்லாக்கோள்களும் யாதொருகோள்கள் தங்களுடனே சம்பந்தமுற்றார்களோ யாதொருகோள்கள் சுபாசுபபாவாதி பத்தியத்திலே தங்களுக்குச் சமமா யிருக்கின்றார்களோ அவர்களுடைய அரும்பொசிப்பில் தங்கள் தங்கள் தெசைகளுடைய மாட்சிமைபொருந்திய சுபாசுபபலன்களைக் குற்றமற அடையும்படி கொடுப்பார்கள் என்பதாம். உஅ

புத்தியிலக்கணம்புகல்கின்றது.

அல்லா தவர்பொசிப்பி லன்னியமா மப்பலன்கள்
எல்லாரு மீவரென்றே யின்பமுடன்-சொல்லிடுவீர்
கோளின் வலியுங் குணமு மறிந்தூக்கி
வாளி னடப்பவர்போல் வந்து.

பொ-ரை. சம்பந்தமும் சமானத்துவமும் இல்லாதவர்களுடைய புத்திகளில் தாங்கள் சுபரானால் அசுபபலனையும் அசுபரானால் சுபபலனையும் எல்லாருங் கொடுப்பாரென்று கூறுவீராக, சொல்லும்போது கோட்களுடைய வலிமையாகிய நட்பு ஆட்சி உச்சம் பகை நீச முதலாகியவைகளையும்

காறுகத்துவமு மறிந்து வாளின்மேல் நடப்பவர்போல சாவதானமாய்ப் பலன்களைச் சொல்வீர் என்பதாம். உக

புத்தியிலக்கணம்புகல்கின்றது.

தன்றெசையிற் கோணத் தலைவன்கண் டத்தலைவன்
தன்பொசிப்பிற் றானளிப்பன் தக்கசுபம்-அன்னவனும்
அப்படியே யாகு மவரகத்தா ரன்றியுறச்
செப்பமுட னின்றளிப்பன் சீர்.

பொ-ரை. திரிகோணாதிபதி தன்தெசையில் கேந்திராதிபதியின் புத்திகளில் தனக்குத்தக்க சுபபலனைக்கொடுப்பன். அத்தன்மையனாகிய கேந்திராதிபதியின் வன்றெசையில் திரிகோணாதிபதி தன்பொசிப்பில் தனக்குத்தக்க சுபபலனைக் கொடுப்பன் தெசாநாதன் புத்திநாதன் இந்த இரண்டுபேர்களும், ஒருவர்க்கொருவர் சம்பந்தமில்லாமலிருந்தபோதிலும், இவர்களுக்கு அட்டத்தானாதிபதி பத்தியதோஷம் வராமலிருக்கவேண்டுவது என்பதாம்.

க-ரை. பத்தாமதிபதிதெசையில் நவமாதிபதி புத்தியில் விசேஷ சுபபலனைக்கொடுப்பன்.

மாரகதெசாயோகபலன்வழுத்துகின்றது.

அரசயோ கந்தனக் காரம்ப மாக
மரணமளிப்.போரவர்பொ சிப்பில்-வரிசையினால்
மென்மேல் விளங்கு மிதுமுதல் பாவத்தார்
தன்மா பொசிப்புகளிற் றான்.

பொ-ரை. பிரதானமா யிருக்கப்பட்ட மாரகருடைய தெசாபுத்திகளில் இராஜயோகம் ஆரம்பித்தால் அதுமுதல் பாபக்கிரகங்களுடைய புத்திகளின் வரிசையினால் அந்த இராஜயோகம் மேல்மேலாக விளங்கும் என்பதாம்.

க-ரை. யோககாரகதெசையில் புத்திநாதருக்கு பாபத்துவத்தினா லுண்டான தோஷமில்லை யெனக்கொள்க. உக

தெசாயோகபலன்வழுத்துகின்றது.

கூடிசுபர் யோகங் கொடுத்திடுவர் கூடாத
நீடி சுபர்பொசிப்பி னேராக-நாடிடுவாய்
காரகர்சே ராச்சுபர்கள் காரணச யோகபலன்
பாரிலுள்ளோர்க் கீவார் பரிந்து.

பொ-ரை. பூமியி லுள்ளோர்க்கு யோககாரக சம்பந்த முற்ற சுபக்கிரகங்கள் சுயபுத்திகளில் யோகபலனைக்கொடுப்பார்கள். அச்சம்பந்த மில்லாத சுபக்கிரகங்கள் சுயபுத்திகளில் சமபலனைக்கொடுப்பார்கள். அச்சம்பந்தப்படாத யோககாரகாள் சுயபுத்திகளில் யாவருங் காண்கிற இராஜயோக பலத்தைப் பரிவுடன் கொடுப்பார்களென்று அறிந்துகொள்வாயென்பதாம்.

க-ரை. முற்கூறப்பட்டவர்கள் சுபபுத்திகளில் வரிசையாகவும் சமமாகவும் பலனைக் கொடாரென்ப தாயிற்று. கூஉ

தெசாயோகபலன்வழுத்துகின்றது.

யோக மளிப்பவர்க ளொன்றுச் சுபர்தெசையில்
பாகமுறுந் தங்கள் பரும்பொசிப்பில்-யோகபலன் [ய்
கொஞ்சங் கொடுப்பரென்று கொண்டாற் குழற்கனிவா
நஞ்சமரும் வாள்விழியாய் நாடு.

பொ-ரை. மேகம்போல் கூந்தலையுங்கொவ்வைக்கனிபோல் வாயினையும் விஷம்பொருந்திய வாள்போல் கண்களையு முடையவளே! யோககாரகக் கிரகங்கள் தங்களுடன் சம்பந்தமில்லாத சுபக்கிரகங்களுடைய தெசையில் தங்கள் தங்கள் புத்திகளிலே அற்பயோக பலனைக் கொடுப்பாரென்று கூறுவாயாக என்பதாம். கூகூ

தெசாயோகபலன்வழுத்துகிறது.

எழிலார் சுபர்வீட்டி லேந்திதரர் சேரா
தழியாவ ராக்க ளருந்தும்-கழியார்

பொசிப்பிற் கனுகூலம் பூண்டநல்ல யோக
தெசைப்பல னீவர் தெளிந்து.

பொ-ரை. அழகிய சுபக்கிரகங்களுடைய வீட்டில் மற்றைக்கோளுடனேயும் சம்பந்த மில்லாதிருக்கிற அழியாத இராகுகேதுக்கள் பெருமைபொருந்திய பொசிப்பில் இராஜயோகபலனைக் கொடுப்பார்கள் என்பதாம். ௩௪

தெசாயோகபலன்வழுத்துகின்றது.

அகத்தோர் தெசைக்கிறைவ ராகி லவரோ
டிசுறசெறியா நல்லோர்பொ சிப்பில்-பகைப்பலனும்
சேருஞ் சுபர்பொசிப்பிற் செய்வரவர்க் கொத்தபலன்
காரகரிற் பாபபலன் காண்.

பொ-ரை. பாபக் கிரகங்கள் தெசாதிபதிகளானால் அவருடன் சம்பந்தமில்லாத சுபக்கிரகங்கள் புத்திகளிலே பாபபலனைக் கொடுப்பார்கள் சம்பந்தமுற்றிருக்கிற சுபக்கிரகங்களுடைய புத்திகளிலே தெசநாதனுக்கொத்தபலனும் புத்திநாதனுக்கொத்த பலனுமுண்டாம் யோககாரக கிரகங்களுடைய புத்திகளிலே மிகவும் பாபபலன்களைக் கொடுப்பார்களென்றறிக என்பதாம்.

க-ரை. தெசாநாதன் பாபியானாலும் அவன்நிலை அறிந்து சொல்வாயாக. ௩௫

மாரகதெசயோகபலன்வழுத்துகின்றது.

மாரகன் றன்றெசையின் மன்னுஞ் சுபர்பொசிப்பில்
மாரகத்தைப் பண்ணணிம் மானவர்க்கு-மாரகத்தைப்
பண்ணுவான் றன்றெசையில் பற்று வகத்தவர்கள்
துண்ணும் பொசிப்பிற் றுணிந்து.

பொ-ரை. மனிதர்க்கு மாரகன் றன்றிசையில் தன்னுடன் சம்பந்த முற்றிருக்கிற சுபக்கிரகங்களுடைய புத்திகளில்மாரகத்தைக்கொடான் தன்னுடன் சம்பந்த மில்லாம லிருக்கிற பாபக் கிரகங்களுடைய புத்திகளிலே துணிந்து கொல்வான் என்பதாம்.

க-ரை. மற்றமாரக விலக்கணமனைத்தும் முன் சொன்ன படியே கொள்கவென்க. ௩௬

சனிசுக்கிராள்பலன்கூறுகின்றது.

பிருகுதெசை யிற்சனிதன் பேரா பொசிப்பில
பெருகுசு பாசுபங்கள் பேணித்-தருகுவன்
அன்னவனு மப்படியே யாழ்ந்தறிவாய் நீர்சூழும்
இந்நிலத்தோர் யாவர்க்கு மென்று.

பொ-ரை. கடல்சூழ்ந்த இப்பூமியிலுள்ளவர் யாவர்க்கும் சுக்கிரன் தன்தெசையில் சனியின் பொசிப்பில் தனக்குண்டான பெரிதாகிய சுபாசுபபலன்களை விசேஷமாய்க் கொடுப்பன் அந்தச் சனியுந் தன்றெசையில் சுக்கிரபுத்தியில் தனக்குண்டான சுபாசுப பலன்களைக் கொடுப்பனென்று ஆலோசித்தறிவாய் என்பதாம். ௩௭

கோட்களின்குணங்களைப்பகுத்தறிதல்.

ஓரைதொறு முன்ன முரைத்தபடி கோட்குணங்கள்
சேர வரிசையதாய்ச் செப்பிடுவன்-காரமர்கட் [ய்
காம்புறுதோட் கண்டாற்சொற் கார்கூந்தற் காரிகையா
பாம்புறுநல் லல்குலினாய் பார்த்து.

பொ-ரை. கருமைபொருந்திய கண்களையும் மூங்கில்போன்ற தோள்களையும் கற்கண்டிற்கொப்பாகிய மொழிகளையும் மேகம்போன்ற அளகத்தையும் படம்போன்ற நிதம்பத்தையுமுடைய பெண்ணே! மேஷமுதல் பன்னிரண்டு பாவங்களும் முன்சொல்லியபடியே சூரியன் முதலான கிரகங்களுடைய சுபாசுப குணங்களை வரிசையாகத் தொகுத்துச் சொல்லுகிறேன் என்பதாம். ௩௮

மேடவிராசிபலன்விளம்புகின்றது.

மந்தனொடு மால்சுங்கன் மாபாவி நல்லவர்கள்
கொந்தலர்பூங் கோதாய் குருவிரவி-சந்ததமும்
தீயபலன் காரியொடுதேவபிரான் சேர்ந்தக்கால்
ஈயுமவ னேடொற்ற தே. ௩௯

மாரகத்தா னப்பதியா மன்னுகின்ற பார்க்கவனும்
மாரகத்தைச்செய்யானெம் மானவர்க்கும்-மாரகத்தைச்
செய்வார் சனிமுன்னோர் செவ்வியமேடம்பிறந்தோர்க்
கிவ்வா றுரைப்பீ ரிருந்து.

பொ-ரை. பூங்கொத்துகள் பொருந்திய அழகிய மாலையி னையுடையவளே! சனி-புதன்-சுக்கிரன்-இவர்கள் பாபிகள்-குரு-சூரியன் - இவர்கள்-நல்லவர்கள் சனி-சம்பந்தமுற்றால்-குரு-எப்போதும்-அவனுக்கொத்த பாபபலனைக்கொடுப்பன்-இதற்குதாரணம் - தன்மகன் மப்பதிக டாமெட்டு டன்பதி னொன் றின்றலைவனாவது-தான்மாரகஸ்தானாதிபனாகிய சுக்கிரன்கொல்லான்-சனி முதலானவர்கள் கொல்வரென்று மேடவிராசியிற் பிறந்தோர்க்குக் கூறுவாய் என்பதாம். சுO

இடபவிராசிபலனியம்புகின்றது.

குருவெள்ளி யிந்துகொண் டாடாக் கொடியர்
மருவுசுபக் கோண்மந்த னென்றாம்-திருவுருமா
யோகங்கொ டுப்பான் சனியொருவ னாமெனவே
ஆகுமெனப் பாவா யறி. சக

குரு முதலாய்க் கூறுகின்ற கோட்களே கொல்லும்
மருவினைய ராராயி னென்றுந்-தெரியும்
படியிடப வோரையினிற் பார்மிசையிற் றோன்றும்
முடியுடையோர் கட்கு மொழி.

க-ரை. பிரதமை போன்றவளே! குருவும் வெள்ளியும் சந்திரனும் பாபிகள் சனியும் இரவியும் நல்லவர்கள் சனியொருவனே சிறப்புப்பொருந்தி மேலான இராஜயோகங் கொடுப்போன் குரு முதலானவர் கொல்வரென இப்பலனை ஆராய்ந்து பார்க்கும்போது பூமியின்கண் இடப விராசியில் பிறக்கின்ற கிரீடத்தையுடைய அரசர்க்குத்தெரியும்படி சொல்லுவாய் என்பதாம்.

க-ரை. குரு-சுக்கிரன்-சந்திரன்-இவர்களுடன் சம்பந்தப்பட்ட கிரகங்களை யாராய்ந்து அவர்கள் நிலைகளறிந்துசொல்லத்தக்கதென்க. சஉ

மிதுனவிராசிபலன் கூறுகின்றது.

சேய்சிவ னேடிரவி சேராக் கடுங்கொடியர்
ஆயுபுக ரோனொருவ னனகோள்-சேயிழையாய்
மந்தனொடு மந்திரியும் வண்மையுடன் கூடுமெனல்
நந்துமே டப்படியே நாடு. சங

அசமர்த்த னிந்துகொல்லைக் காரன் முதலாய்
அசமர்த்த ரல்லநிதா ராயில்-இசையுற்
றிலங்கு மதிமுகத்தா யென்றறிமூன் றாகும்
நலங்கொளிரா சிக்கு நவில்.

பொ-ரை. செவ்விதாகிய ஆபரணங்களையும் புகழ்பெற்றுப் பிரகாசிக்கும் பூரணச் சந்திரன்போன்ற வதனத்தையுமுடையவளே! அங்காரகன் குரு சூரியன் கொடியபாவிகள் சுக்கிரன் ஒருவனே சுபன்-குருசனியுடன்சேருவானாகில் மேடவிராசியில் பிறந்தோர்க் கொத்தபடி அவயோக காரகனுவான் சந்திரன் துதியாதிபதி பத்தியதோஷத்தை அடைந்தவனு யிருந்தாலும் மாரகங்கொடான் குஜன்-குரு - சூரியன் இவர்கள் மாரகத்தைக் கொடுப்பார்களென்று மூன்று மிராசியாகிய மிதுன விராசியிற் பிறந்தோர்க்குச் சொல்வாயாக.

க-ரை. குருவும் சனியும் தருமகருமாதிபதிக ளாகையால் யோககாரகாள் வலியறிந்து சொல்கவெனக் கொள்க. சச

கடகவிராசிபலன் கூறுகின்றது.

சுங்கனிந்து மைந்தனிவர் சூழாக் கொடுங்கோட்கள்
மங்கலன்மா வேந்தனிவர் மன்னுகின்ற-துங்கமுள்ள
நல்லோர்க ணல்லயோ கக்கிறைவ னாகுமவன்
சொல்லூறிற் பூசிதனைச் சொல். சரு

ஆதித்தன் கொல்லான்மற் றாரென்னுங் கொல்லுமவர்
சோதித் துரைக்கிலோ சுங்கன்மால்-தீதுற்றோர்
கண்டென்று கண்டோ ருவக்குஞ்சொற் காரிகையாய்
கண்டி லுதித் தோர்க்கு நவில்.

பொ-ரை. கற்கண்டென்று கண்டோர்களுள்ளங் களிக்குஞ் சொற்களை யுடைய பெண்ணே! ஆலோசிக்கும் போது சுக்கிரன்-புதன்-பாவிகள்-செவ்வாயுங் குருவும் விசேஷசுபர், யோககாரகாள் - செவ்வாய் ஒருவனே நல்லவன் சூரியன் கொல்லான் கொல்வாரரெனில் சுக்கிரன்-புதன் கொல்லுவார் கடகவிராசியிற் பிறந்தோர்க்கு இப்பலனைக் கூறுவாய் என்பதாம்.

க-ரை. சூரியன் துதியர்தி பதியான போதிலுங் கொல்லான் என்க. சக

சிங்கவிராசிபலன் கூறுகின்றது.

பந்தியம் பார்க்கவனும் போற்றற் கரும்பாவி
செந்நிறத்தசெவ்வாயே செம்மைக்கோள்-அந்நிறத்தாய்
யோகமுற்றுர் தீப்பலனை யோரா தளித்திடுவார்
ஆகமதி யாரல் புகர். சஎ

புந்தி முத லாய்ப் புகரும் பொல்லாரே பூமிசையோர்க்
கந்தமதாய்க் கொல்வா ரவர்வினையில்-பந்தமுற்றுர்
ஆமாகி லாயிழையா யார்கலிசூழ் வையகத்தில்
தாமான சிங்கத் தவர்.

பொ-ரை. சிவந்த நிறத்தையும் ஆராய்ந்தெடுத்த ஆபரணங்களையு முடையவளே! கடல்சூழ்ந்த பூவுலகத்தில் புதன் சுக்கிரன்-துதிக்கத்தகாதபாபிகள் செவ்வாயொருவனே நல்லவன் யோககாரகாள்-செவ்வாயும்-சுக்கிரனும் இவர்கள் சம்மந்தமுற்றால் தீயபலனைக்கொடுப்பார் புதன்-முதலானபேர் மாரகக்குறி யுற்றுராளுல் கொல்வரென்று சிங்கவிராசியிற் பிறந்தோர்க்கு ஆலோசித்துச் சொல்வாயாக என்பதாம்.

க-ரை. செவ்வாயொருவனே யோககாரகனைபோதிலும், சதுர்த்த கேந்திராதிபதி சம்பந்தத்தினால் தீயபலனைக்கொடுப்பாரென்ற தாயிற்று. சஅ

கன்னியிராசிபலன் கூறுகின்றது.

செவ்வாயுஞ் செம்பொன்னுஞ் சேரா மதியுமிவர்
வெவ்வாயர் வெள்ளி விளம்புங்கால்-ஒவ்வுசுபன்

பார்க்கவனும் பங்கயமா வைரிமைந்தன் முனிவர்கள்
ஆர்ப்பொருமா யோகத்தா ராங்கு. சக

கொல்லான் பெரிய பிருகுகுச னாதியர்கள்
எல்லாருங் கொல்லு மியல்புடையார்-நல்லாயென்
றெந்நாளுங் கூறுவா யேரிவைமீ துதித்து
மன்னு மவர்க்கு மகிழ்ந்து.

பொ-ரை. செவ்வாய் - குரு - சந்திரன் பாபிகள் வெள்ளி யொருவனே சுபன்-வெள்ளியும் - புதனும் யோககாரகாள், வெள்ளி கொல்லான்-குசன் முதலானபேர்கள் எப்போதுங் கொல்வாரென்று கன்னிராசியிற் பிறந்தோர்க்குச் சொல்வாய் என்பதாம்.

க-ரை. சுக்கிரன்—துதியாதிபதியா யிருந்தாலுங் கொல்லா னென் றறிக. ருO

துலாவிராசிபலன்கூறுகின்றது.

குருவிரவி சேய்கொடியர் கூறு சனிபுந்தி
மருவு நலமுடையார் மண்ணில்-திருமருவும்
யோகத்தா ரிந்துவுமே யச்சுதனு மொண்ணுதன்மீ
தாகு மளகத்தா யறி. ருக

சேய்கொல்லான் சீவன்முன் னைவர்க ளேகொல்வர்
தேயு மதியனைய செந்நுதலாய்-ஆயும்
அறிவினோ ரெல்லா மளந்தறி கோலின்
குறியாகு மென்றுநீ கூறு.

பொ-ரை. ஒளிபொருந்திய நெற்றியினையும் மேலாகிய கூந் தலையு முடையவளே! பிரகஸ்பதி-சூரியன் செவ்வாய், இவர் கள் பாபிகள் - சனியும்-புதனும் சுபாள் சந்திரனும் புதனும் யோககாரகாள் செவ்வாய் கொல்லான் குருமுதலானவர்கள் கொல்லுவா ரென்று துலாவிராசியிற் பிறந்தோர்க்கு யூகித் துச் சொல்வாய் எனபதாம்.

க-ரை. செவ்வாய் துதிய சப்தமாதி பதியா யிருந்தபோதி லுங் கொல்லான். ருஉ

விருச்சிகராசிபலன் கூறுகின்றது.

புந்தியுஞ் சேயும் புகரும்பொல் லாக்கொடியர்
இந்து வொருத்தனே யேந்திழையாய்-சந்ததமும்
நல்லனிஞ் ஞால நலனளிப்போன் ஞாயிறுடன்
அல்லவனு மாக வறி. ருங

குருவென்ப வன்கொல்லான் கோதாய்கொல் வோர்கள்
மருவுபுதன் முதலோர் மன்னும்-திருவலியர் [யே
என்றுரைப்பாய் தேட்பிறந்தோ ரெல்லார்க்கு மிப்படி
குன்றெனவே கூறு முலை.

பொ-ரை. ஆபரணங்களையும் மலைபோன்ற கொங்கைகளையுமுடையவளே! புதன்-செவ்வாய்-சுக்கிரன்-பாபிகள்-சந்திரன்-ஒருவனே சுபன் சூரியனும் சந்திரனும் யோககாரகாள். குரு துதியாதிப்தியாயிருந்த போதிலும் மாரகத்தைச் செய்யானென்றும், புதன்-முதலானவர்கள் கொல்வார்களென்றும், விருச்சிக விராசியிற் பிறந்தோர்களுக்குச் சோதித்து அறிவாய் என்பதாம். ருச

தனுவிராசிபலன் கூறுகின்றது.

ஒருவன் புகர்பொல்லா னெண்சே யிரவி
மருவுநலர் யோகரென மன்னுந்-திருவுடையோர்
பார்க்கவனும் புந்தியென்று பாம்பே ரகலல்குல்
சீர்க்கமலச் சேயிழையாய் செப்பு. ருரு

கதிரவன்சே யாகிவளர் காரிகொல்லான் கொல்வர்
மதிநுதலாய் வெள்ளிமுன்னோர் மன்னும்-திதியுடைய
பாபிகளென் றோர்ந்திப் படிமிசையி லெந்நாளும்
சாபமதி லுற்றவர்க்குச் சாற்று.

பொ-ரை. அரவபடம் போன்ற வல்குலையும் சிறப்புற்ற தாமரைமலரில் விளங்கிய இலக்குமிக்குச் சமானமும் பிறை போன்ற நெற்றியினையு முடையவளே! சுக்கிரன் ஒருவனே பாபி, செவ்வாயும் சூரியனும் சுபாள், சூரியனும் புதனும்

யோககாரகாள், சனி ஒருவனே கொல்லான் சுக்கிரன் முத லானவர்கள் எப்போதும் கொல்வார்களென்று பூமியின்கண் தனுசிற் பிறந்தோர்க்குச் சொல்வாய் என்பதாம்.

க-ரை. சனி துதியாதிபதியா யிருந்தபோதிலும் கொல்லா னென்றறிக. ருசு

மகரவிராசிபலன் கூறுகின்றது.

ஆரல்பொன் னிந்துபொல்லா ரானவர்சுங் கன்புந்தி
வீரமிகு யோகபரன் வெள்ளியே-காரளைய
கூந்தன் மடமானே கும்பிகொல் லானென்றே
ஆய்ந்துணர்ந்தோர் தாமுரைத்தா ராம். ருஎ

சேய்முதலாய் முன்னமே செப்புமவ ரேகொல்வர்
வாய்ந்த மகரமதில் வந்துதித்துக்-காய்ந்திபெற
வாழுமவர்க் கென்றே வகுத்துரைத்தா ரென்றுமிகச்
சூழ்ந்துமட மாமயிலே சொல்.

பொ-ரை. மேகத்தை நிகர்த்த கூந்தலையும் மயிலை நிகர்த்த சாயலையுமுடைய பெண்ணே! செவ்வாய் குருசந்திரன் பாபி கள். சுக்கிரனும் புதனும் சுபர். வெள்ளி ஒருவனே இராச யோக காரகன், சனி கொல்லான் செவ்வாய் முதலானபேர் கொல்வாரென்று தெரிந்தவர்கள் ஆலோசித்துச் சொன்னார் களென்று மகரராசியிற் பிறந்தோர்க்குச் சொல்வாயாக என் பதாம்.

க-ரை. சனி துதியாதிபதியா யிருந்தாலும் மாரகத்தைக் கொடான். ருஅ

கும்பவிராசிபலன் கூறுகின்றது.

பொன்மதிசேய் பொல்லார் புகரொருவ னேபுனிதன்
நன்னயஞ்சேர் யோக நயந்தளிப்போன்-கன்னனிகர்
ஆனமொழி மாதே யசுரர் தமக்கென்றும்
ஞான நிலையுரைப்போ னன்கு.

வேந்தனென்போன்கொல்லான் வெறிகமழ்பூங்கோதைகொ
ஆய்ந்துணரிலாரன்முன் னனவரே-தேய்ந்துரையாய் [ல்வார்
வேலைபுடை சூழுலகில் வெம்புகுடந் தன்னில்
சாலவுதித் தோர்க்கென் றுசாற்று.

பொ-ரை. சருக்கரையை நிகரான சொற்களேயும் வாசனை வீசும் மாலையினையு முடையவளே! குரு சந்திரன் செவ்வாய் இவர்கள் பாபிகள், சுக்கிரன் ஒருவனே சுபன், அந்தச்சுக்கிரனே யோககாரகன் குரு கொல்லான், செவ்வாய் முதலான பேர்கள் கொல்வார்களென்று சமுத்திரஞ் சூழ்ந்த பூமியின் கண் கும்ப விராசியிற் பிறந்தோர்க்குக் கூறுவாயாக என்பதாம்.

க-ரை. குரு துதியாதிபதியா யிருந்தபோதிலும், மாரகத்தைக் கொடான் என்பதாம். கசுO

மீனவிராசியின்பலன் கூறுகின்றது.

காரிபுகர் வெய்யோன்மால் காணுக் கடுங்கொடியார்
ஆரலோ டிந்துவிவ ரானவரே-சேர்ந்தக்கால்
செய்யோன் குருவிவரே செல்வமளிக் கும்பெரியோர்
ஐய நுனி நூலிடையா யாய்ந்து. கசுக

பூசுதன்கொல் லான்கொல்வார் போந்தசனி முதலாந்
தேசுபெறும் பாவரென்று தேர்ந்துரைப்பாய்-காசினி
கட்கரிய மென்று கதித்துவளர் மீனத்தின் [யில்
உட்பிறப்போர்க் கெண்ணுதலா யோர்ந்து.

பொ-ரை. சந்தேகமுற்று நூல்போன்ற விடையினையும் ஒளிபொருந்திய நெற்றியினையு முடையவளே! சனி சுக்கிரன் சூரியன் புதன் பாபிகள். செவ்வாயும் சந்திரனும் சுபர்செவ்வாயுங் குருவும் இராசயோககாரர்கள் செவ்வாய்கொல்லான் சனி முதலானவர் கொல்வாரென்று மீனவிராசியிற் பிறந்தோர்க்குக் கூறுவா யென்பதாம்.

க-ரை. செவ்வாய் துதியாதி பதியாயிருந்த போதிலும் கொல்லான் கிரகங்களுடைய வலுமையை யூகித்துச் சொல்லுவாயென்க. கசுஉ

சுபாசுபர்களைப்பொதுவிற்கூறுகின்றது.

நல்லார்பொல் லார்களென்று நாடி நவிலாத
எல்லாரு மிவ்வுலகோர்க் கேந்திழையாய்-சொல்கின்ற
தானமதற் குந்தம்மைச் சார்ந்தகவாசத்திற்
கானுகூலமா யீவராய்ந்து.

பொ-ரை. ஆபரணங்களை யணிந்தவளே! பூமியிலுள்ளவர்கட்குச் சுபாசுபர்க ளென்று குறித்துச்சொல்லாத எல்லாக்கோட்களும் எல்லாருஞ் சொல்லுகின்ற தங்கள் தானத்துக்குஞ் சுபாளுடன் பிறர் சம்பந்தமுற் றிருக்கிறதற்கும் அனுகூலமாய்ப் பலன்களைக் கொடுப்பார்களென்று ஆராய்ந்துசொல்வாயாக என்பதாம்.

க-ரை. சுபர்கள் பாபசம்பந்தப்பட்டுத் துஸ்தானங்களிலாவது மாரகஸ்தானங்களிலாவது இருந்தால் பாபபலனைக் கொடுப்பார்கள் பாபிகள் சுபசம்பந்தப்பட்டுக் கேந்திர திரிகோணங்களி லிருந்தால் சுபபலனைக் கொடுப்பார்களென்க.

ஸ்தானபலன்பகர்கின்றது.

புத்திரதா ராதிகளைப் போற்றுகின்ற பாவத்திற்[ரர்தா
கொத்தசுபக்கோட்டெசையி லொன்பொசிப்பிற்-புத்தி
ரம்முதலாய்ப் பேரளிப்ப ராயிழையா யார்கலிசூழ்
அம்புவி வாழு மவர்க்கு.

பொ-ரை. ஆராய்ந்தெடுத்த ஆபரணங்களை யுடையவளே! கடல்சூழ்ந்த பூமியி லுள்ளவர்களுக்குப் புத்திர களத்திர தானமுதலான ஸ்தானத்துக் கொத்த சுபக்கிரகங்களுடைய தெசாபுத்திகளிற் புத்திர தாராதி சுபபலன்களைப் பெறும்படி கொடுப்பார்கள் என்பதாம்.

க-ரை. புத்திரதாராதி ஸ்தானங்களுக்கொத்த சுபராவது அத்தானாதிபதிகளும் காரகாளுந்தான்.

சுசு

கோட்சாரங் கொண்டு குறிப்பதல்லான் மானவர்தம்
நாட்பலனன் னுன்முகனை யன்றியே-வாட்கண்ணாய்

ஆர்வல்லார் கூறுவதற் கார்வல்லார் கேட்பதற்கே
யார்வல்லா ராராய்வ தற்கு.

பொ-ரை. வாள்போலும் கண்களை யுடையவளே! மனிதர்களுக்குத் தினபலன் சொல்வதற்குச் சோதிடநூல் வல்லவர்கள் கிரகசாரங்களைக் கொண்டு யுத்தியாகச் சொல்லிக் காண்பிப்பார்களே யன்றித் தாரதன்மியங்களைப் பிறிவினையாய்ச் சொல்லவேண்டுமென்றால் பிரமதேவ னொருவனைத்தவிர சொல்வதற்கும் கேட்பதற்கும் ஆராய்வதற்கும் யார்வல்லவர் என்பதாம். சுஉ

* ஒப்பற்றயோகத் துடனே பிறந்தோர்க்கும்
தப்புசுபர் யோகதிசை தானிலையேல்-எப்பயனும்
கொத்தலருஞ் செங்குங் குமப்பூப் பொதிசுமக்கும்
கத்தபத்தை யொப்பரவர் காண்.

யோகமதி லுற்பவித்து மோங்கும் பயனின்றித்
தாகமிக வுற்றிருப்பார் தாரணிக்குள்-வாகான
காஸ்மீர கண்டக் கழுதைகளென் செய்யுமவர்
தேசுதெசை சேரா விடில்.

பொ-ரை. பூமிக்குள் மிகவும் வளமை பொருந்திய காஸ்மீர கண்டத்தில் கழுதைக ளானவைகள் பிறந்திருந்தாலும் அவைகள் என்ன பலத்தை யடையும், அத்தன்மைபோல யோகத்திற் பிறந்தாலும் உயர்ச்சி செய்யும்படியான யோககாரக தெசை வாராதாயின், அந்த யோகபல னனுபவமில்லாமல் ஆசையை மாத்திர மிகுதியா யடைந்திருப்பார்கள் என்பதாம். சுஙு

ஆதித்தன் முன்னு யறைந்தோ ரகத்தவரேல்
மீதுற்று லாயபயன் வேறேது-காதகத்தில்
கைவந்தார் மீதுற்றால் யாதளிப்பார் காசினியில்
மெய்வந்தார்க் காமதைநீ வேண்டு.

பொ-ரை. பூமியின்கண் சூரியன் முதலாகச் சொல்லாநின்ற கிரகங்க ளெல்லாம் பாபிகளாய் விட்டால் அவர்கள்

கசஅ சோதிடச் சில்லறைக்கோர்வை என்னும்

உச்சம் ஆட்சி நட்பு முதலாகிய பலன்களை யடைந்ததினால் வரும் பயனென்ன சொல்லுகையில் கைதேர்ந்தவர்கள், பலவான்களா யிருந்தால் எந்தப்பலத்தைக் கொடுப்பார்களோ! அந்தப்புலன் சரீரமுடையவர்களுக் குண்டாகும் அதைநீ சொல்லுவாயாக என்பதாம். கஎ

கோவிந்த தீக்ஷதர்தங் கொள்கையினாற் செப்புகின்ற
மாவிந்த நூலின் வழக்கறிந்து-மேதினின்
தருப்போற்றும் பிண்டியன் செல்வன்சீர் கூறி
வருபவனப் பாவையன் வந்து.

பொ-ரை. தெய்வீகமா யிருக்கிற கற்பத்தரு தோத்திரஞ் செய்யும் அசோக விருக்ஷத்தின்கீழ் வாசஞ்செய்கின்ற அருகதேவதையினுடைய பெருமையைச் சொல்லி வாராநின்ற அப்பாவைய ரென்பவர் கோவிந்த தீக்ஷதருடைய அங்கீகாரத்தினால் பெருமை பொருந்திய இந்தத் தாண்டவமாலையைச் சோதிட நடையை அறிந்து செப்பியதாகும் என்பதாம்.

ஆதியாஞ் செய்யுளோ ராறுரு மாறைந்தின்
மீதிரண்டாய்ச் செப்பினான் மேதினியில்-வேதியன்றான்
ஆண்டகைய னண்டி மகிப னருள்வணிகன்
தாண்டவன் பேரைத் தரித்து.

பொ-ரை. இவ்வுலகத்தில் அருக அந்தணனாகிய அப்பாவையன் மனிதர்க்கொத்த நடையினை யுடைய ஆண்டி மகிபன் குமாரன் வணிகனாகிய தாண்டவராயனுடைய பேரைத் தரித்து ஆதிமுதல் அறுபத்தெட்டுப் பாடலாகச்செப்பினான் என்பதாம்.

தாண்டவமாலை

முற்றும்.

சிவமயம்.

# நவரத்தினமாலை.

## தெய்வவணக்கம்.

திங்கண்மும் மாரி பெய்யத் திருவறஞ் செழித்து ஸர்வ, மங்
கள கரங்க டங்க மானிலத் தரசை யாண்டு, பொங்குதத்து
வத்தைக்கொண்டு பொன்னெயின் மேவிநின்ற, வெங்கள்
புங்கவனைப் போற்றி யிலங்குஞ்சோ திடநூற் சொல்வாம்.

## அவையடக்கம்.

அன்னமுன் னடக்கக் காக மதினைக்கண்ட நடக்க நின்றுச்
சன்னதங் கொள்ளு மாப்போற் றமிழ்றி வாளர் முன்னர்
நன்னயமாகச் சொன்ன நவரத்ன மாலை யென்னும் [லோர்
பன்னுஞ்சோ திடநூ லின்னூற் படுபிழை பொறுப்பர் மே

## பாயிரம்.

பொன்னிலத் தவர்முன் னூன புகழ்பெறுந் தேகரெல்லா
மன்னிநின் றேத்தும் பிண்டி மாசிலா மணிமுன் னளிற்
சொன்னசோ திடத்துள் ளாகத் தோன்றிய வாருடத்தி
னன்னல முலகங் காண நவரத்ன மாலை சொல்வாம். ௧

நவரத்ன மாலையென்னு நாம்மார் நூலி னூளுங் [போற்
திவனொளிர் மணிகளொன்பான் சேர்ந்திருந் தொளிரு மார்ப்
குவலய மதனின் மாந்தர் கொளுஞ்சுபா சுபங்க டன்னில்
நவவித சுபாசு பத்தி னலமிகுந் தொளிரு மாதோ. ௨

சொன்னுமன் னலத்தின்பேர்கள் துயர்தவிர்த்தெனையாட்கொண்டோன், பல்வளம் போல நிற்கும் பலபொருள்பலாபலன்கள், வெல்லரும் வெற்றி தோர்வை விளங்குமா தாயநஷ்டங், கொல்லுமா ரகமே யோர்க்க் குணக்குண மகப்பேறுமே.

மகளணி மடத்துக் கேற்ற மங்கல மாசி லாதத் [னில்
தகமைக ளனைத்துங் கொண்டு தழைத்தபொற் கோயி றன்
செகமொரு மூன்று மேத்தத் திருவவ தாரஞ் செய்தோன்
பகரல கொருநூற் றெட்டின் பண்பிதொன் பதுவு மாமே.

ஒன்பதின் சுபாசு பத்தை யுறுதியா யுலகந் தன்னில்
அன்புட னுரைத்தானெங்கு மாரக மகத் துள் ளாகப்
பன்னருஞ் சிறப்பு வாய்ந்த பாற்கவ கோத்தி ரத்தி
னன்னல மெல்லாங் கொண்ட நாவல னப்பா வையன். எ

நாவல னப்பா வைய னவினவ ரத்ன மாலைப்
பாவினுற் சாத கத்தின் பருஞ்சுபா சுபத்து ளோங்கு
மாவலின் பொருளை யெல்லா மறியலா மைய மில்லை
பாவலங் காரங் கொள்ளும் பாயிரப் பொருளி தாமே. அ

பாயிரம்-முற்றிற்று.

---

முதலாவது

## பலபொருள் விளக்கம்.

ஆரூடச்சக்கரம்.

கடன்முகட் டெழுந்து தோன்றுங் கதிரவ னுதயம் போன்று
மடலவிழ் கமல மீதில் வந்தபுண் ணியனைப் போற்றி
படவுகொள் வட்ட மாயு மதிலறை யீரா றாயு
மிடபகோ கிழக்க தாயு மெடுநிலக் கயறி தாமே. க

ஆரூடகிரகம்.

கதிரவன் சேய்பொன் கற்றோன் கடும்புகர் காரி யோடு
மதிபணி யிவரெண் கோட்கள் வருதினந் தோறு மேடப்
பதிமுத லெந்து நாழி பரிந்திருந் தெழுவர் சாம
விதிமுறை தவறு தாகில் விளங்குவர் மேலுஞ் சொல்வாம்.

ஆரூடகிரகம்.

இனன்பரி தேவடன் சேய்பொன்னெறிற்புதன் தனுசுசுங்கன்
மணமறி நுட்பன் காரி மதிபணி தூம னின்னோர்

இனமறி யிடப மாதி யிராசிக டோறுஞ் சென்று
மனமுகந் திருக்கும் கால வரையிரண் டரைபார் மன்னே.

ஆரூடக்கிரகவெதிற்கயறு.

மன்னகேள் கதிர்க்குச் சுங்கன் மங்கலன் றனக்குக் காரி
பொன்னவன் றனக்குத் திங்கள் புலவனுக் கரவ மேலாய்ச்
சொன்னது மற்கு வில்லு சொலுநுட்பந் தனுக்கு வேட
முன்னுறு மாரூ டத்தின் முறைதெரிந் தொட்டிக்கொள்ளே

கவிவாக்கு.

ஓட்டும்போ தப்பா வைய னுரைத்தயிவ் வாரூ டத்திற்
காட்டுஞ்சீருதையா ரூடக் கவிப்பைமுன்பார்த்துக் கொண்டு
பூட்டிடும் கோட்க டங்கள் புதுமைகண் டுரைப்பா யாகில்
நாட்டுள மனிதற் கெல்லா நாயக மாவை நீயே. ௫

ஆரூடநிலைவருமாறு.

நீர்புடை சூழ நின்ற நிலத்தில்வாழ் மாந்த ரெல்லாஞ்
சீர்பெறக் கேட்கவந்து சேர்திக்கின் பதியா ரூடம்
பார்புகழ் மண்ட லத்தில் பகர்தொடு பதியுந் திங்க
ளூர்பதி யதுவு முன்னே ருரைத்தவா ரூடம் பாரே. ௬

உதையநிலை.

பாரினி லாரூடத்தை பகரும்போ துதிக்கு மோரை
சீரிய வுதைய மாகுந் தேரது ளோங்கும் பாண
வீரிய பேதந் தன்னை விளம்புவ ருதய மாயப்
பேரறி யிரவி யேறு வெருமம்சங் கோணம் வாரம். ௭

உதையாம்சநிலை.

சொல்லுமுன் னுதயத் துள்ளாய்த் துலங்கிடுமம்சங்களோய்
நல்லவேட் சியின வாம்சம் நயக்குமொன் பதுகூ றுகப்
புல்லுந்திரேக் காண மோங்கும் புகலதை மூன்ற தாக்க
மல்லலம் புவனந் தந்த வளமையி னிலமை சொல்வாம். ௮

திரேக்காணநவாம்சம்.

முதலுமஞ்சொன்பூரனென்பான் முதலஞ்சு மஞ்சமொன்பா
முதல்சரந்திரத்தினோடு பையபிம் முறைதிரேக்காணந்[ன்

துதிபரிமுன்கால்மூன்றாய் தோற்றிமெற்றொட் டெண்ணும்
விதியினா லிலகு மம்சம் விளங்கிடு மிதிலுங் கோட்கள். கூ

இடபவுதையநிலை இரவியுதையநிலை.

உதையநா ழிகையையோர்ந்து வோரிரண் டரைக்கொண்றாக
புதியயே ருதியாகப் பூட்டிப்பாரெதிர்க்கு மோரரை [ன்ன
உதையமென் றுரைத்தார் மேலு மொண்கதிர்பதிதொட்டெ
வெதிரிடும் பதியைக் கூட வெடுத்தன ருதைய மென்றே.

வாரவுதையநிலை.

வாரத்தி னதிப னாளும் வழங்குமீ சான மாதி
சீருற்ற திசைக டோறுஞ் சேர்வனோர் சாம காலம்
வாருற்ற முலையா யன்னோன் வரவறிந் தவன்பின் னாகப்
பேருற்ற கோட்க ளேழும் பிலப்படத் திரியு மென்றார். கக

இரவிவீதிநிலை.

நண்டரி யேறு தண்டு நாலுமே மேட வீதி
வண்டமர் குழலாள் கோல்மீன் மறிபெரு தானவீதி
பண்டமா குடங்தேள் வில்மான் பகருந்தண்டான வீதி
கண்டவிவ் வீதி மூன்றுங் கதிரெழும் வீதி யாமே. கஉ

மெற்கவிப்புநிலை.

மேதகு மாபூ டத்தால் விரிகதிர் வீதி மட்டுஞ்
சாதக மாக வெண்ணி சார்துகைக் குதையங் கொண்டு
சோதனை காணும் போது தோற்றிடு மிராசி வந்தோன்
மீதொளிர் குடையப் போல விளங்கிடைக் கவிக்கும் பாரே.

ஆரூடபலன்-கவிவாக்கு.

ஓதுமா ரூடச் சத்ர வுதையத்தை வுலகத் தோர்கள்
வேதனை கொளவெவ் வேறாய் விளம்பின ரதனை யெல்லாஞ்
சாதக மாகச் சொன்ன தமிழ்நவ ரத்ந மாலை
சோதனை காணும் நல்லோர் சோதிடஞ்சொ லும்வல் லோரே

ஆரூடபலன்.

ஓதுஞ்சி ருதையத் துக்கோ வொன்றுநான் கிரைந் தைந்துந்
நிதிலொன் பதுவு மாகச் சிறக்குமா ரூட மேவில்

நீதிசேர் சுபங்க ளெல்லா நிறைந்திடு மாறி லில்லை
கோதறு கோளுண் டாகிற் குணகுண மறிந்து கூறே. கரு

உதையபலன்.

உத்தவா ரூடத் துக்கே வுரைக்குஞ்சீ ருதையந் தானும்
பத்தும்பன் னொன்றுமஞ்சும் பகரொன்ப தொருநான்காகிற்
சித்திக்குங் கருமமெல்லாந் தீமையுண் டாகுமாறி
லத்தலத் தமருங் கோளி னளவறிந் தழகாய்ச் சொல்லே.

கவிப்புபலன்.

உதையத்துக் கஞ்சொன் பான்று னுடலினைக் கவிக்குமாகில்
சிதைவிலாக் கருமமெல்லாஞ் சிறக்குமென் மேலதாக
வெதிருறு பத்து மூன்று மீரிரண் டாகின் மேன்மை
விதிமுறை தவறிற்றீமை விளையுங்கோ ணயத்தாற் சொல்லே

கேந்திரகோணப்பார்வை.

நலமெனும் பொருளை யெல்லா நவிலுவன் கேண்மின் கேந்த்
தலமறி வொன்றி நாலுந் தக்கவே யேழைந் தாகும் [சத்
உலவிடுங்கோண மஞ்சோ டொன்பது மாகும் பார்வை
நிலமதி லேழ்கா ணங்க ணிறைந்திடும் பலன்க ளெல்லாம்.

கிரகபலாபலன்.

புந்திசேய் காரி பொன்னன் புகர்மதி யிரவி ராகு
தந்தமி லொன்றுக் கொன்று தக்கசீர் வலியர் கேந்த்ரத்
தந்தங்கொள் வலிய தம்மை யறுயிரண் டாகம் பொன்மால்
சந்திரன் புகர்சுன் பாம்பு தரணிசேய் யிரவி யாமல். கசு

சோதித்த சுபக்கோ ளாவர் சோமனும் புகரும் பொன்மால்
சாதித்த தீக்கோள் மற்றோர் தக்ககோள் குணங்க ளோர்மி
ஆதித்த னுறவு வில்மீ னாட்சிசொல் லரிசீ ருச்சம் [ன்
மீதுத்த மேடம் நீசம் விளங்குங்கோள் பகைமற் றெல்லாம்.

சந்திர னுறவு தண்டுந் தையலும் வில்மீ னாட்சி
சுந்தர நண்டா முச்சஞ் சொல்லெரு தாந்தே ணீசம்
தந்தசே யுறவு தண்டுந் தையல்கோ லாகுமாட்சி
முந்துமா மறிதே ளுச்சம் முடுகுமாணீசம் நண்டே. உக

புந்திநட்பாடு தேள்வில் புகல்துலே பெருது மான்சால்
முந்தும்நண் டாட்சியாழ்பெண் ணுச்சமாம் பெண்மீ னீசஞ்
சந்ததங் குருநட் பாருஞ் சால்துலே யரிபெண் தண்டாஞ்
சொந்தமாந் தனுமீ னுச்சந் தொத்துநண் டதுமா னீசம்.

வெள்ளிநட் பாடுதேள்வில் மிதுனஞ்சால் மகர மாட்சி
வெள்ளிய துலேயேறுச்ச மொண்கயல் நீசப் பெண்ணுந்
தெள்ளிய சனிநட்பேறு தெரிவைவில் மீன் தண் டாச்சி
துள்ளுசால் மகரமுச்சந் துலேயது நீசமேடம். உரு

நாகத்தி னுறவு பெண்மான் னற்றுலா மிதுனம் வில்மீன்
மோகித்த வாட்சி கும்ப முச்சந்தேள் நீசமேறு
ஆகவிக் கோட்கட் பேத மறைந்தன மறையா தெல்லாம்
சோகத்தைத் தரவெந் நாளுந் தோற்றிடும் பகைய தாமே.

நட்பாச்சியுச்சபகைநீசபலன்.

பேசுமிக் கோட்க டங்கட் பெலாபெல மறையக் கேண்மின்
நீசத்திற் பலன்கா லாகும் நேர்பகை பலன்காண் பாதி
தேசுறு முறவாட்சிக்கு சேர்பலன் குறையா தோங்கும்
வீசுநல் லுச்ச மாகில் விளங்கிடும் பலன நேகம். உ௬

கிரக குணருணம்.

சொல்லரும் பிறவியாவுந் துலேத்தருள்பிடித்தோ னெம்மான்
மெல்லடி வுருவம்போன்ற வெய்யவன் ஸ்திரக்கோள் மூலம்
நல்லசென் சிகப்பான் வேந்த நாலுகாற் சதிரந் தோரை
வெல்லும் பித்தனே யோடாயு விளங்கிடு மன்பதாமே. உ௬

சந்திரன் சரக்கோள் தாது தையலந் தணனேர் வட்டம்
வெந்தவெண் ணிறமே பல்கால் வெண்கல மெழுப தாயு
முந்துஞ் சேய் சரக்கோள் தாது முதிர்சிகம் பாண்கோணுற்கா
லந்தங்கொள் கடலேசெம்போ டடிதுடி வயதீ ரெட்டே. உஎ

புந்திகா னுபையஞ் சீவன் புகலலி யிருகால் பச்சை
தந்தமுக் கோணஞ் செட்டி தராபய ரிருபதாயு
வந்தண னுபயஞ் சீவ னுண்மஞ்ச ளிருகால் தோரை
பந்தனன் பொன்னீள் வட்ட மாறைந்தா மாயுவாமே. உஅ

புகர்திரக் கோளா மூலம் பொற்ருடி யிருகால் வெள்ளை
நிகரிலெண் கோணம்வேளா னேர்வெள்ளி வயதேழ் தோரை
பகர்சனி வுபையந் தாது பறையலி கறுப்பு நாற்கா
லிகலிரும் புளுந்து நூறு மேற்றபாற் சதிர மாமே. உக

பணிசரங் கறுப்பு தாது பறைபல கால் பெண்ணீள
மணியெழு குளுந்து நூறும் வயதிவை பதிக்கு மாகும்
கணிதஞ்செய் தறிந்துகொண்டு கமலவா கனனைப் போற்றித்
துணிந்ததிசெயிக்கச் சொல்வாய் சுபமுதலுனக் குண்டாமே

தாதுமூலசீவனறிக.

தகர்முத லாக நாடுஞ் சரஸ்திர வுபைய மேலும்
புகலுமந் தாதுமூல புண்ணிய சீவன் ருனும்
பகர்மதி சனியி ளேடு பாம்புசேய் தாது மூலம்
புகர்கதிர் சீவன் பொன்மால் புகன்றன மேலுஞ் சொல்வாம்

அருக்கனு மதியுந் தங்க லாட்சியிற் ருதே யாவர்
முருக்கும்வே றிடத்தில் மூலம் முடவற்கு மாட்சி மூலம்
தெறிக்கும்வே றிடத்திற் ருது தேர்புதற் காட்சி தாது
விறிக்கும்வே றிடத்திற்சீவன் விளம்பின மேலுஞ்சொல்வாம்

தாதுவி ராசி தன்னைத் தாதுதான் கவிக்க நோக்கிற்
ருதுவா மந்தவாறே தரித்திடு மூலஞ் சீவன்
ஓதுமெண் கோட்க ளுக்கு முறைக்கு மவ்வாறே யாகுந்
தீதில் நட்பாட்சி யுச்சச் செயலினை யறிந்து சொல்லே. ௩௩

தாதுமேல் மூலஞ் சீவன் தாதுகீழ் சீவன் மூலம்
தாதுதான் சீவன் கீழே தழைத்தினி திருக்கு மூலம்
ஓது மந்தாது மூலஞ் சீவனு மொன்ருய்க் கூடில்
சாதகமாய்ச்சொல்லன்னோர் தம்முன்பேர்வலிகொண்டம்மா

வேறு.

இலக்கினத் தவனேறிட வொற்றயிற்
கலக்கமற் றெதிர் காட்டிடுந் தாதுமுன்
றலக்குஞ் சீவன்முன் ருறுனு மிரட்டையென்
றிலக்கியத் தரி யம்பினர் காணுமே. ௩௫

உதையத் தொத்தையி லொண்மதி யுற்றிடி
லிந்தயத் துத்தநிந் தெண்ணுவை தாதுமுன்
பதியைத் தொட்டென்பர் பாருமிரட்டையேல்
விதையச் சீவன்முன் னாகக் குறிப்பையே. ௩௬

தாது வென்பது தக்கமண் ணாதிபொன்
னேதுமூ லம்பில் லாதி வுயர்மரந்
நீதில் சீவன் சிறுவனு வாதிதே
பேதம் யாவையுற் பேசுமுன் னூலிலே. ௩௭

நஷ்டமுஷ்டி சிந்தனை - வேறு.

இஷ்டமென வமுதமதி லென்னுளும் வீற்றிருக்க
பிடர்கண் காண
தஷ்டகுணந் தரித்தொளிரு மருகனெனு மெம்பெருமா
னடியைப் போற்றி
நஷ்டமெனு முஷ்டியெனு நாடியசிந் தனைமூன்றும்
நவில வேண்டில்
கஷ்டமென வுரைப்பரெலா மிஷ்டமுற வெடுத்துரைப்
பன் கண்டுகொள்ளே. ௩௮

வேறு.

ஓச மூசி வுதையந் திருடனும்
பேச மூக்குமம் பெண்ணுட லாதிபன்
வாசமாந் திக்கில் மண்ணினின் றோங்குவ
னீச சோர னிலையறி வாய்கொலோ. ௩௯

உடலி னாதிப னுசரினு ளாட்சியேல்
படரு நட்பெனில் பாரகந் தன்னிலே
இடர்கொள் வெம்பகை யேல்வெகு …ரஞ்சி
ரருட மூச்ச மவையெதி ராகுமே. ௪0

உதைய மூன்றி லுதிப்பவர் பாபரேல்
பதியில் நஷ்டத்தைப் பார்த்திடக் கண்டிடு
முதிருமூ னஞ்சே ழொன்பதில் முக்யமாய்
பதிய நல்லர் பருநஷ்டங் காணுமே. ௪௧

மூணிற் பாபர்முன் ஞாலந்தி னிற்சுபர்
பேண நஷ்டம் பிலத்தோ டெதிர்படுங்
காணுந் தூமர் கனத்துதை யத்துற
கோணு நஷ்டங் குதிக்கு மெதிரிலே. ௪௨

கடகங் கன்னிக் கலையி லெழும்பினும்
உடலை யொன்பானஞ் சோடிக் கவிக்கினும்
அடரும் பிட்டி லரிவனோ டாரியன்
சுடர வன்மதி தோன்றினுங் காணுமே. ௪௩

கவிப்பு.

இஷ்ட மாக யெதிர்வரு மாரூட
முஷ்டி சொல்லு முறைமையைக் கோடிடாய்
கஷ்ட மின்றிமுன் காட்டிய மூவித
இஷ்ட பேத மெடுத்துரை முன்னரோ. ௪௪

எடுத்து நிற்கி லிலங்கிடு மூலநேர்
தடுத்து நிற்கிற் றழைத்திடுந் தாதுகை
பிடித்தி ருக்கிற் பெலப்படுஞ் சீவனென்
றடுத்து ரைத்தன ராண்மையின் மிக்கவர். ௪௫

அகர வோசை யளபெழில் தாதுவா
மிகர வோசை யெழுப்பிடில் மூலமாம்
உகர வோசை யுலவிட சீவனென்
றிகபரத்துக் கினியவர் கூறினர். ௪௬

உடலி லெட்சியி லொண்கவிப் பாமதி
யிடைகொள் கேந்திரத் தெல்லையி லாட்சிகொ
ளடையி லன்னவர்க் காண்மையுண் டாயிடிற்
றொடரு முஷ்டியைச் சொல்லுவ னூளுமே. ௪௭

நா ளுமேலிமேல் நாடுங் கவிப்பினிற்
கோளை கொண்டு குறித்திடு முஷ்டியை
வாளின் வாயில் வருபவர் போலவே
கோளின் சாயல் குறிப்புரை கண்டதே. ௪௮

செம்பு சேய்மதி சேர்வெண் கலங்குரு
பைம்பொன் பித்தளை பாற்கரன் மால்தரா
வெம்பும் ராகுசன் மேவு மிரும்பென
நம்பிச் சொல்லுவை நல்வெள்ளி வெள்ளியே. சக

வே று.

தோலுங் கிழங்கும் பூவிலையுந் தூயபழங்காய்வேர்கொடியும்
பால கதிரோன் முதலாகப் பார்ப்பா யவர்தம் பதியுமதாய்
மேலு மவர்கள் சுபராகில் விளங்கு மரமா மவைபெரிதா
மூலமதனிற் றீயருறில் முடங்கு மறமுண் டகமறியே. ருo

வேறு - சிந்தனை.

கூறுஞ்சீ ருதையத் துக்கே கோதிலா ரூடந் தானும்
ஆறுமூன் றீரா றென்பா ஞகில்முன் கால சிந்தை
வீறுங்கேந் திரங்க ளுளும் விலங்கில்தக் கால சிந்தை
சீறுமெட் டாயம் ரெண்டஞ் செனில்வரும் கால சிந்தை. ()

வந்தா வாரூடத் தானும் வருங்கவிப் பாலும் நாலாய்
முந்துங்கேந் திரத்தி னுளும் முழங்குமிம் முறையிற் கோட்க
ளந்தமாய் மந்த வுச்சத் ததிசயத் தானுஞ் சிந்தை
இந்தவா றுகு மென்றே யெடுத்துரை யிதுதப் பாதே, ருஉ

மானிட ராசி யாக வருங்குடந் தண்டு பெண்கோல்
ஞானிபொன் புகரோ டிந்து ஞாயறேல் மனித சிந்தை
கூனனேல் நஷ்டமாஞ் சேய் கொடும்பகை பிணியி ராகென்
றானமி லாமற் சொல்ல வுயிர்ப்பல விதமுங் காணே. ருங

அரசனுங் கன்னுன் பாப்பா னுசரி ஞானி வேளான்
பெறுசுமை யாளன் கால பேதிசோ திடன்பாம் பாட்டி
வருமுறை யுடற்கோள் போல வகுத்தறி யுச்சமாகி
லருமதி யிரண்டோ னென்றே லவன்பல மறிந்து கூறே. ருச

உச்சமோர் கடிகை யாட்சிக் கொருதின முறவு திங்கள்
அச்சஞ்சேர் பகைநீ சத்துக் காண்டவை சனிபாம் புக்காம்
மெச்சிடு மயனம் வெய்யோன் மேதைபொன் திங்கள்பக்கம்
பிச்சைகொள் புகற்குச் சேய்நா ளிருமதிக்கொருமுகூர்த்தம்.

திரக்கால்கணிதம்-நக்ஷத்திரக்கால்கணிதம்.

ஓங்குஞ்சீ ருதையந் தன்னி லொண்மதி சேரு நாளை
பாங்குட னெண்ணிச் சொல்வாய் படிகேஷ்டஞ்சேர்காலத்தை
தீங்கிலாச் சரமொத் திப்பாந் திகழ்திர மிரட்டிப் பாகும்
நீங்கரு முபைய மாகி னேருமுத் திருப்ப தாமே. ருகூ

நிலத்தினி லழகா யோங்கி நிமிர்ந்தொளிர் சினைகள் தாங்கி
நலமுறு செயலை வேந்த நவரத்ன மாலை தன்னில்
உலவிடும் பொருள்க ளெல்லா மொருதுரை யாக நிற்கும்
பலபொருட் சருக்க மாமேற் பலாபலச் சருக்கஞ்சொல்வாம்.

பலபொருட்சருக்கம்-முற்றிற்று.

---

இரண்டாவது

## பலாபலச் சருக்கம்.

உதையத்தில் மதியும் பத்தி லொண்புகர் மேவி னாலும்
உதயத்தில் குருவும் பத்தி லொண் கதிர் தாவினாலும்
இதயத்துள் நினைத்த தெல்லா மெதிருறு மைய மில்லை
பதியுற்ற நவக்கோள் தன்னாற் பலாபல முதல்பார் மன்னே.

ஆரூடத்தாற் பலாபலமறிக.

உதையத்து மாரூ டத்து மோங்கிய கவிப்பி னுள்ளுந்
துதிபெற்ற கோணும் ஸத்துந் தூயகேந் திரத்து மேலும்
பதிபதி னொன்று மேற்றும் பதினொரா மிடத்து நற்கோள்
சிதைவில்நட் பாட்சி யுச்சச் செல்வரா யிருக்கப் பார்க்க. உ

பலனுறு மதிக மான பாக்கிய மெல்லாம் வந்து
சலனமில் லாம னிற்குந் தனிப்புக ழோங்கு நீண்ட
நிலமிசை நினைத்த தெல்லா நிச்சய மாகக் கூடும்
பலபொருட் சருக்க மெல்லாம் பார்த்ததி சயிக்கச்சொல்லே

சொல்லிடுஞ் சுபக்கோ ளுக்குத் தோற்றிடும் பகைநீ சங்கள்
புல்கலு மெல்லாப் பாபர் புணர்தலு மிருக்கு மாகில்
அல்லலுற் றவனி தோறு மழுதழு தறிவு சோர்ந்து
வெல்லலில் லாம லோங்கு மிடரினை யுடுப்ப ரம்மா.

தீயகோள் கேந்தி ரத்தில் சேர்ந்தினி திருக்குங் காலத்
தூயகோ ளாயம் பற்றித் தோன்றிடச் சுபமே யுண்டாம்
ஆயகோள் தமக்கு நட்பு மாட்சியு முச்சஞ் சேரில்
மேயதிந் தனைகை கூடு மேலதாஞ் சுபங்க ளெல்லாம். ௫

சொன்னதீக் கோட்க ளெல்லாந் தோற்றிடும் பகைநீ சத்தில்
மன்னிநின் றிருக்க நற்கோள் மகிழ்ந்துற வாடா ராகிற்
பின்னருஞ் சுபங்க ளெல்லாம் பறந்திடப் பாரோ ராலும்
மன்னவ ராலுந் தீமை மருவுமென் றுரைத்தி டாயால். ௬

இந்தவா றுக வந்தோற் கியம்பும்போ திலகும் பத்தில்
வந்திடுங் கோளி னாலும் வருகயற் கோளி னாலும்
சிந்தனை யின்ன தென்று தெளிந்துரைத் திடுவாய் மேலா
மந்தங்கள் வெற்றி தோர்வைய றிந்திடுஞ் சருக்கஞ்சொல்வாம்.

பலாபலச்சருக்கம்-முற்றிற்று.

ஆ சருக்கம் - உ-க்கு செய்யுள் - எஉ.

---

மூன்றாவது

## வெற்றிதோர்வைச்சருக்கம்.

தொல்புக ழணிந்து நீண்ட தூயவா ளுடந் தன்னைப்
புல்லிடுங் கவிப்பில் நற்கோள் புகுந்துற வாடப் பார்க்க
வெல்லுமென் றுலக மெல்லாம் விளம்புவ ரேனும் வெல்லா
தல்லனுற் றலைந்து போமென் றறைந்தன ரரிய நூலோர். க

மேலுரைத் திடுநற் கோட்கு விளங்குநட் பாட்சி யுச்சம்
சாலவே யமையு மாகிற் சதிரெலாங் குலைந்து வாடி
மேலுமே யரசர் தம்மால் மெலிவுகொண் டனேக காலம்
கோலமென் றேனுமில்லா கொடுமை கொண் டலைவர்பாரே.

அங்கவர்க் கருள்கண் காணு தரும்பகை நீசத் தோடு
[illegible]ய தீக்கோள் சினேக மருவிநின் றொளிரு மாகிற்
றங்கைபி லாத வெற்றி தனையணிந் தழகா யோங்கிப்
பொங்கமா யிருப்ப ரென்றே புலவர்முன் னுரைத்திடாயால்

உரைத்திடுங் கவிப்பிற் றீக்கோ ளுறவதைப் பார்க்கமேலாய்
நிரைத்தவா ரூட மெட்சி னின்றகோ ளும்ஸ கேந்திரம்
பெருத்திடு மாய மிந்த பெருநிலத் தினிய நற்கோள்
சிரித்தக மகிழ்ந்து நிற்கச் செயமதி செயமுண் டாமே. சு

மாதர்க ளழுக தாக மங்கல மணிந்து நிற்கும்
பாதலத் தொளிரு மாந்தர் படைத்திடும் வெற்றி தோர்வை
வோதுமிச் சருக்கந் தன்னை வுணர்வினு லறிந்து சொல்லின்
னீதிலா தாய நஷ்டச் செயலறி சருக்கஞ் சொல்வாம். ௭

வெற்றிதோர்வைச் சருக்கம் - முற்றிற்று.

ஆ சருக்கம் ௩-க்கு செய்யுள்-௭௭.

---

நான்காவது

## ஆதாய நஷ்டச்சருக்கம்.

கதிரொடு பாம்புஞ் சேயுங் காரியும் பகைநீ சத்தோ
டதிசெயக் குடையு ளாகி லதிகவா தாய முண்டாங்
துதிகொளா ரூட மெட்சி தூயகேந் திரகோ ளும்ச
மதிலதில் சுபக்கோ ணிற்க மதுவுமா தாய மாமே. க

தூயகோள் கவிப்பு ளாகத் தோன்றிடில் நஷ்டமாகுந்
தீயகோ ளுதையா ரூடஞ் சேர்ந்திடி லதுவும் நஷ்டம்
மாயமீ ரைந்து நாலேழ் மந்திரி கோளும் சத்தைத்
தீயெழுத் தீக்கோ ளேக்கச் சேர்ந்திட வதுவு நஷ்டம். உ

தூயநற் கோள்க விப்பிற் றேன்றிட வாரூ டத்திற்
றீயினுந் தீய கோட்கள் சேர்ந்திடப் பொருள்க ளெல்லாம்
போயவர் பிணம்போ லாகிப் புலம்புவர் புதுமை யாமிச்
சாயல்கண்டுரைமின்மேலாய்த்தயங்குமாரகத்தைசொல்வாம்.

ஆதாய நஷ்டச்சருக்கம்-முற்றிற்று.

ஆ சருக்கம் ௪ - க்கு செய்யுள் - ௮0.

---



## ஐந்தாவது
## மாரகச்சருக்கம்.

கடல்புடை சூழ நின்ற காசினி மாந்தர்க் கெல்லாம்
அடவுட னுரு டத்தா லறையுமா ரகத்தைக் கேளாய்
உடலுயி ராரு டத்து மோங்கிய கவிப்பி னுள்ளுந்
திடமுள கோணும் சத்துந் தீயகோள் தீதுற் றோங்க. க

பிறந்திடும் பிள்ளை யெல்லாம் பேருல கதனி லன்றே
பிறந்திடு மிதுதப் பாது யெட்டிக்கா றேழெட் டெண்ண
வறைந்திடு நிலத்திற் சந்த்ர னமர்ந்திட வவன்பாற் றீய
ருறவுகொண் டாடப் பிள்ளை யுடலம்விட் டோடிப் போமே.

கருமத்திற் றீய்க்கோள் நிற்கக் கதிரவ னதற்கு மூன்றை
விரும்பினுங் குடைதான் மூன்றும் விளங்கும்பன் னென்று
தரும்புக ழணியு மோரை தனதுநா ழிகையற் றூலும்[னுலும்
பெருஞ் சகடைகளா னுலும் பிறந்தசே யிறந்துபோமே. ந

கதிரிரு நாலே மேவக் காரிசே யிரண்டிற் றூலும்
துதிகொளு மேழிற் சேய்சுன் றேன்றுவ ரேனு மீரா
றதிபதி திசையா னுலு மறைந்தயிவ் விடங்க டோறுஞ்
சதிசெய்பாம் புறினும் பெற்ற தந்தைதா யலறப் போமே. ச

பூசஞ்சித் திரைபூ ராடம் புணருமுத் திரமும் நண்டிற்
பேசவுந் திடினும் ரெண்டிற் பேணுமீ ராறிற் றீய
ரேசவந் திடினும் புந்திக் கெட்டில்மா மதியுற் றூலும்
நாசமாம் பிறந்த பிள்ளை நயந்தினி தாகச் சொல்லே. ரு

கதிரவற் கேழ்சேய் காரி கலந்திடில் மரணந் தந்தை
மதியவற் கவையே யாகில் மரணமாந் தாய்க்கு மேலுந்
துதிபெறு மஞ்சீ ரஞ்சில் சொல்லுமின் னுல்வர் கூடில்
மதிபத்து மரண மாவர் மாமன்றுய் சிறுவன் றந்தை. சு

சொன்னவின் னெறிக டோறுஞ்சுபக்கிரகம்பொன் னோங்கு
முன்னினின் றிருக்கு மாகில் வளமையாய்ப் பிறந்த பிள்ளை
நன்னலத் தோடு மிந்த நானில மதனு ளோங்கும்
இன்னலமெல்லாஞ்சொல்வாயியம்புஞ்சாதகமுங்கொண்டே

கொண்ட சாதகத்தி னுண்மைக் குறிப்பெலா மறிவா யாகிற்
பண்டம ரிரண்டு மேழும் பருத்தமா ரகமா மத்தைக்
கொண்டவர் குடியாய் வந்தோர் குலவுமன் னேரையன்பாற்
கண்டவ ரவர்கள் காலங் கருதுமா ரவம தாமே. அ

எட்டுமீ ராறு மாறு மிலகுபன் னென்று மூன்றுந்
துட்டவீ டாகு மன்னோர் துரிதமா ரகரா மேலாய்க்
கட்டுகேந் திரநற் கோணுங் கனத்தமா ரகமா யோகங்
கொட்டினர் கோட்க ளன்னோர் குணமுறிற் கொல்வ ரம்மா.

சொன்னவிக் கோட்க ளெல்லாஞ் சுபந்தருங் கோளைநண்ண
நன்னல மணிவ ரன்னோர் நலிந்திருந் தோங்கிக் கொல்வர்
இன்னவா றிதனை யெல்லா மிருநில மாந்தர் முன்பாய்
பண்ணுமா ரகச் சருக்கப் பண்பிது வாகும் பாரே. க0

மாரகச்சருக்கம்—முற்றிற்று.

ஆக சருக்கம் ரு-க்கு செய்யுள்-கூ0.

---

ஆறுவது,

## யோகாயோகச் சருக்கம்.

ஒன்றினை வேண்டி ரண்டு மோதுங்கிட மூன்று மொன்றாய்
நின்றொருநாலைத் தள்ள நேரைந்தா றறிந்தே மெட்டை[ய்ச்
வென்றுபொன்னெயிலுளாகவிளங்குமொன்பதனுக்குள்ளா
சென்றவன் பாதம் போற்றிச் சிறந்தமா யோகஞ் சொல்வாம்.

கோதிலா ரூடத் துள்ளுங் கூறுமுன் கவிப்பி னுள்ளுந்
தீதிலா தெட்சிக் குள்ளுஞ் சிறந்தகோ ணம்சத் துள்ளு
மோதுகேந் திரத்தி னுள்ளு முச்சநட் பாட்சி யோடு
சாதக மாக நற்கோள் தழைத்துற வாடப் பார்க்க. உ

வந்தவ தரித்த மாந்தர் மகபதி போல நின்று
சந்தத மழகாய் வாழ்வர் சகலசம் பத்துமுண்டா
யிந்தமா நிலத்த ருன்றே ரேவல்கொண் டெழுவர் மேலா
யந்தங்கொள் ளரச ரெல்லா மன்பு பெறுவ ராமால். ங

நல்லகோள் நாலு பேரு நயந்தநட் பாச்சி யுச்சச்
செல்வரா யெட்சி தன்னிற் சிறந்திட வந்த மாந்தர்
சொல்லருந் திகிரி யேந்துந் தூயநல் லரச ராகி
மல்லலம் புவன மூன்றும் வந்தடி பணிய வாழ்வார். ௪

மதிக்கிரு புறமு நற்கோள் மகிழ்ந்துச்ச மருவி லேனுந்
துதிக்குநல் லெட்சி முன்பின் தூயகோ ளுச்ச மேனும்
விதிக்குநட் பாட்சி யுச்சம் விளங்கிய வோரை யேனும்
மதிக்குங்கேந் திரங்கோ ளுய மருவுங்கோ ணற்கோளேனும்

வந்திடு மாந்த ரெல்லா மாநிலத் தரச ராகிச்
சந்தரக் கோல்கொண் டோச்சித் துலங்குவ ரிமுன் னுக
வந்திட வதனி னற்கோள் வளமலிந் திருப்ப ராகில்
மந்திரி யாவ ரிந்த வளமைகண் டுரைத்தி டாயால். ௬

உடனுயி ரதனி னுச்ச மோங்கிட வரசை யாளும்
படர்புக ழெட்சி யுச்சம் பருநக ரதனை யாளுந்
திடமுட னிக்கோள் பெண்பால் சேர்ந்தன ராகி லன்னோர்க்
கடவுட னேவல் செய்யு மாசைநா யகிக ளாமே. ௭

அந்தமா முவாவின் கோளுக் கரும்புதன் முன்பின் னுக
வந்திடி லுலக மேத்த வளர்ந்திடுந் தனங்க ளெல்லாம்
சுந்தர மாக நற்கோள் தோற்றும்நல் லோரை முன்பின்
வந்திடி லதுவு மந்த வளத்தினை விளக்கு மாதோ. ௮

சன்மத்தா னத்தோர்க் குச்சங் கலைக்கவன் னேனன் பாகத்
தன்மத்தா னத்தோன் றன்னைச் சார்ந்ததி வேக மாகச்
சென்மத்தா னத்தில் வந்து சேர்ந்திட வவைநட் பாகி
யின்பத்தா லொளிர்நற் காட்சி யெழுந்தன யோக மாமே. ௯

தனமத்தான த்தோர்க் குச்சஞ் சார்ந்திடவவர்க்கேந்திரந்தை
வன்புற்றுப் பார்க்க நிற்க வன்புளோர் தனத்தால் யோகஞ்
சென்மத்தா னத்தோன் றன்பாற் சேர்ந்தழ காக நாளுந்
தன்மத்தா னத்தோ னிற்கத் தந்தைதன் தனத்தால்யோகம்

கருமத்துள் நற்கோ ளுச்சங் கண்டிடில் யோக வானுந்
தருமத்து மவையே யாகிற் றழைத்தொளிர் தனவா னுவன்

நிருமித்த வவரோ ரைக்குள் நின்றிட நிகரொன் றில்லாத்
திருவுற்ற செல்வ மெல்லாந் தினந்தின மணிவ ராமால். கக

அஞ்சொடீ ரைஞ்சென் றென்று மதிபதி மூவர் கட்கு
மிஞ்சிய பலன்மென் மேலாய் விளங்கிடு றதனுட் டோன்றி
பஞ்சுபோல் வினையி ரண்டும் பறந்திட யிகத்தை விட்டு
பஞ்சமொன் றேனு மில்லாப் பரகதி யடைவ ரம்மா. கஉ

இந்தவா றுக யோக மியம்பின மிதனை யெல்லாம்
சொந்தவா ரூடத் தானுஞ் சொலுநவக் கோளி னுனுஞ்
சந்ததம் புகல்வாய் நாளுந் தயங்குமா திசையால் யோகம்
வந்திடு மாதி பத்ய வளத்தினை விளக்கஞ் செய்வாம். கங

பகலவன் மதிசேய் ராகு பசியபொன் சனிமால் கேது
புகரிவ ரழ்ல்முன் னுவர் போற்றுமாண் டவர்க்குக் கேளாய்
பகர்தரு மாறீ ரைந்தேழ் பதினெட்டும் பதினு றேடும்
புகலும்பன் னொன்பான்னேழ் போற்றுமே ழிருபதாமே. ()

ஒன்பதஞ் சுடைய கோட்க ளுலகினி லெவரா னுலு
மின்பமே தருவர் நாலே ழீரைந்தொன் றுடைய கோட்கள்
பன்னரும் பாப ராகில் பகருமுன் சுபர்போல் நின்று
நன்னலந் தருவார் நல்லோர் நயமிலாப் பாப ராமே. கரு

பாபரென் றுரைத்தநல்லோர் பகருமுன்சுபக்கோள்தன்பாற்
கோபமுற் றிருக்கி லன்னோர் கொடியவெம் பலனை யீவர்
சீபதி யாகச் செல்வஞ் சிறந்திட வளிப்ப ரின்னோர்
பூபதி முதலா னோர்க்குப் புதுமைகண் டுரைத்தி டாயால். ()

தன்மத்தோன் கன்மத் தோனுந் தனியனு யிருக்கி லுந்தான்
கன்மத்தோன் தன்மத் தோனுங் கலந்துற வாடி லுந்தான்
தன்மத்தோன் கன்மத் தோனுந் தம்மிற்று மாறி லுந்தா
னின்பத்தோ டிருப்ப னிந்த விருநில மவனு தாமே. கஎ

கோணக்கோள்கண்டக்கோளுங்கூடத்தான்பார்க்கிலுந்தான்
பேணுற்ற விடங்க டன்னைப் பெட்புற மாறி னுந்தான்
காணுநட் பாட்சி யுச்சங் நலக்கத்தா னிருப்ப ராகிற்
பூணுமை யோக வானைப் புகல்நிதிக் கிழவ னுவான். கஅ

சொன்னவிக்கோட்க ளோடுந் தோற்றுமன் னிலமுன்பின்னு
மின்னுங்கேந் திரகோ ணத்தும் விளங்கிடு மெட்டி னுள்ளும்
பன்னுந்தீக் கோட்கள் நிற்பப் பகர்ந்தமா யோக மெல்லா
மன்னினின் றுடுங்கு மிந்த மகிமையா ரறிய வல்லார். கக

அதிபனங் கிருப்போ ரென்ன வறைந்திடு மிருவர் தாமு
முதையநா தனுக்கு மிக்க வுறவுண்டேற் பயனுண் டாகுஞ்
சதிசெய்சத் துருவே யாகிற் பலனுஞ்சத் துருவே யாகும்
மதிநுதன் மடவா யிந்த மறப்பையுஞ் சிறப்பக் கொள்ளே.

சொன்னவின் னெறிக டன்னிற் றோன்றிய சுபக்கோ ளோடு
மன்னிய ராகு கேது வந்துற வாடி லன்னோர்
பன்னரும் பாப ராவர் பகருமிவ் விரண்டு பேரும்
நன்னய மாக யோக நலத்தினை நலத்தி லீவார். உக

சுந்தர மாகச் சொன்ன சுபங்கொள்மா யோக மெல்லா
மந்தமாய்த் தருவ ரன்னோர்க் கறைந்திடு திசைகா லத்தி
லிந்தவா றனைத்தும் யோகத் தியற்கைகா ணிதனு டோங்கிப்
பந்தங்கொள் ளவயோ கத்தின் பண்பினைப் பகரு வோமே.

முந்தியா முரைத்தா ரூட முறைமுத லவையி லேனு
மந்தமில் தீய கோட்க ளமர்ந்தினி திருப்ப மேலும்
பந்தித்த பகைநீ சத்தின் பரிசதைப் பதத்தி னும்
சிந்தைநேர்ந் தலைந்து வாடித் திரிவரிவ் வுலகி லம்மா. உங

பதினொன்றின் மூன்றி னெட்டின் பகருமீ ராறி னாறி
னதிபதி யாவ ரங்க ணமர்ந்திட லவர்பா னுற்றோர்
சதிசெயும் பகைநீ சத்திற் றங்கிடு மதிப ரெல்லாம்
விதிதவ றுமற் றீமை விளைக்கவல் லவர்க ளாமே. உச

எந்தத்தா னத்தி லேனு மந்தத்தீக் கோட்க ணண்ண
வந்தத்தா னத்தி னுற்ற வரும்பல னொடுங்குங் கண்டாய்
பந்தித்த வவயோ கத்தின் பண்பிது வாகு மென்று
சிந்தித்த மகப்பே றென்னுஞ் சிறப்புள சருக்கஞ்சொல்வாம்.

யோகாயோகச் சருக்கம்-முற்றிற்று.

ஆக சருக்கம் கூ-க்கு செய்யுள்-ககரு.

---

ஏழாவது

## மகப்பேறு சருக்கம்.

கோதிவரும் புவியதனில் மகப்பேறைக் கொண்டாடிக் குலவிக் கேட்கும், மாதர்தமக் கெடுத்துரைப்பா யாருடத்த ரவுவரில் வருங்காண் பிள்ளை, யேதமறு மறுகோட்க ளிசைந் ததனி லிருக்கமக வில்லையென்றே, சாதகமா யறிமினதில் நற் கோட்க ணிற்கிலதி னயத்தைக் காணே. க

அஞ்சிடத்தி லரவுவறி லதனைமக வுறுமதனை யாளுங் கோட்கள், செஞ்சுடருங் கவிப்பாகிச் சேராது சனிபுதனேல் தெத்த துண்டாம், வஞ்சனைசெய் திடுங்குசனேல் வரும்பிள் ளையதமாகும் வழுத்து மிக்கோள், நஞ்சுறவுகொள்ளாதகோ ளேனு மிடமேனு நயக்கும் பாரே. உ

ஐந்திடத்தி லரியகுரு வமர்ந்திடினும் பார்த்திடினு மது வல்லாம, லைந்திடத்தி லதிபதியோ டமர்ந்தாலும் பார்த்தாலு மதுவுமின்றி, பந்தமுறுந் தீக்கோளின் பாலணுகில் வரும் புத்ர பலனைக்காணு, யிந்தவித மாகவிரு நிலத்தின்மகப் பே றதனை யெடுக்கலாமே. ௩

மகப்பேறுச்சருக்கம் முற்றிற்று.

ஆக சருக்கம் எ-க்கு செய்யுள்-கக௮.

---

எட்டாவது

## மங்கல சருக்கம்.

அந்தரதுந் திமிமுழங்க வமரர்குழாம் புடைநெருங்க
வசோகு நீழல்
வந்தவன்றன் மலரடியின் மலர்தூத்தி மங்கலத்தை
வழுத்துவன் கேள்
சந்ததமு மாரூடந் தனில்மதியு மெழிலுறுஞ்சீர்
தழைக்கப் பொன்னன்
வந்திடினு மால்கவிதான் வந்திடினு மிலக்குமியும்
வளங்கொள் வாளே.

வெங்கதிசேய் யேழிடத்து மிலக்கணத்து மிருந்திடவே
விதவை யாவாள்
அங்கரவஞ் சனியாகி லருமகவைப் பெற்றழிவா
ளதனிற் றிங்கள்
தங்கியிருந் திடின்மரணந் தீக்கோட்க ளதனினுறில்
தடிகொண் டேங்கி
யங்கனல கெங்கணும்போ யலைந்தலைந்து தடுமாறி
யலறு வாளே. உ

சொல்லரிய வேழிடத்து மிலக்கணத்தும் பத்திடத்துஞ்
சுபக்கோள் நிற்கில்
நல்லகுண வதியாகி நாயகன்பா லுறுநலனை
நாளுங் கொண்டு
கல்வியொடும் புவிமீதி லருந்ததிபோல் வாழ்ந்திடுவள்
கருணை யோடுங்
கொல்லும்பிவடி வேலனைய விழியாய்மங் கலத்தினிட
குணமி தாமே. ௩

மங்கலச்சருக்கம்-முற்றிற்று.

ஆக சருக்கம் அ-க்கு செய்யுள்-கஉக.

## ஆரூடம் சொல்லல்.

கO அ-ல் குறையக்கேட்டு ௩-ல் கழித்து, மற்ற மீதியில் இன்னொருவனைக் குறையக்கேட்டு ௩-ல் கழித்து, மற்றமீதியில் இன்னொருவனைக்கேட்டு, ௩-ல் கழித்து இப்படி ௩-தபா கேட்டுத்தெரிந்து பலன் சொல்லவும்.

| | | |
|---|---|---|
| க—க—க | சூரியன் | காரிசித்தி |
| உ—க—௩ | சந்திரன் | சுகம் |
| உ—உ—உ | செவ்வாய் | காரிய ஆனி |
| ௩—க—உ | புதன் | சுகம் |
| ௩—௩—௩ | குரு | ராச்சியசித்தி |
| ௩—உ—க | சுக்கிரன் | மகாசுகம் |
| க—உ—௩ | சனி | காரியநாசம் |
| க—௩—உ | ராகு | பந்தனம் |
| உ—௩—க | கேது | மரணம் |

ஒன்பதாவது

# அலகு சருக்கம்.

ரூ-ரூ-சங். க-க-உ உத்தமம்.

கல்பதரு தரிசனம்.

நிலமதனி லொருகோடி நிறைமதியின் றெளிரவன்போ
னேராய் நின்ற
விலகுகதி ரொளிமணிமுக் குடையோனே யனுதினமும்
வேண்டி யிந்த
வலகதனை யெடுத்துரைப்ப னலரியிரண் டம்புலியொன்
றுக நிற்கி
விலகுபுக ழணிந்திடுவெ னிருநிதியும் படைத்திடுவெ
னிதுதப் பாதே. க

கலிவிருத்தம்.

ரூ-சங்-ரூ. க-உ-க மத்திபம்.

சல்மலி தரிசனம்.

இரவிச் சந்திர னேழ்பரி யோனுடன்
வரவி தேச கமன வனமுறும்
பரவும் பந்தும் பகையுமுண் டாகிடும்
மரண வேதனை வந்திடுந் திண்ணமே. உ

ரூ-செ-ரா. க-ங-அ உத்தமம்.

பூரணகும்ப தரிசனம்.

சுடருஞ் சேயுஞ் சொலற்கரும் பாம்பொடு
படர பிஷ்ட பலப்ரத மாகுங்காண்
அடரு மாயுரா ரோக்யமு மாண்மையுந்
திடமு டன்றருஞ் சீர்த்தியுண் டாகுமே. ங

சூ-பு-சனி. ௧-௪-௭ மத்திபம்.

பிரியஜன தரிசனம்.

சூரி யன்புதன் சொல்லுஞ் சனியுடன்
சேர நிற்கத்தன் தேசஞ் சிறப்புறுஞ்
சாரும் ரோகஞ் சவிமறைந் தோடிடும்
பாரு மிந்தப் பலனையன் பாகவே. ௪

சூ-வி-சு. ௧-௫-௬ உத்தமம்.

லட்சுமி தரிசனம்.

ஒற்றை யாழிய னெண்பொன் புகரிடம்
பற்றி நிற்கப் பலிக்கும்பூ லாபமே
வித்து மேரும் வினவில் விளங்குஞ்சீ
ருற்று வாழ்வ ருலகங் களிக்கவே. ௫

சூ-சு-வி. ௧-௬-௫ மத்திபம்.

மிருத்தேக தரிசனம்.

வெய்ய வன்னொடு வெள்ளியும் வேந்தனும்
பைய வந்திடிற் பார்மின் மரணமே
வெய்ய ரோகமும் வெங்குட்சி ரோகமுஞ்
செய்யுஞ் செய்யுஞ் சிறைதனை தன்னையே. ௬

சூ-சனி-பு. ௧-௭-௪ உத்தமம்.

தேவவிமான தரிசனம்.

அலரி காரி யறிவனைக் காணவங்
கலவு பந்துவு ளோங்கிடுஞ் சீவனம்
மலகி லாதவ மாந்தவ மெய்திடுங்
கலக லத்தெதிர் கண்டிடு நஷ்டமே. ௭

சூ-ரா-செ. ௧-அ-௩ மத்திபம்.

காராக்கிரக தரிசனம்.

ஆத வன்பணி யங்கார கன்னுடன்
போத வந்துறப் புத்தி மழுங்கிடும்
வேத னைக்கும்வித் தாகும் விளங்குநோய்
பாத கத்தைப் பரிந்திடும் பாருமே. அ

சங்-கூ-கூ. உ-க-க உத்தமம்.

பத்மவன தரிசனம்.

இந்து தன்னை யிரவியும் பானுவும்
வந்து காண மகிழ்ச்சியுண் டாகிடுஞ்
சொந்த தேசச் சுகமுமுண் டாமெனச்
சந்த தம்புகல் சாதக மாகுமே. [illegible]

சங்-சங்-ரா. உ-உ-அ உத்தமம்.

விஜயலட்சுமி தரிசனம்.

மதியுஞ் சோமனு மாசுணத் தோடுற
நிதிகள் வந்து நிறைந்திடு நிச்சயம்
எதிர்கொண் டோங்கு மெழிலுள நன்மொழி
துதிகொள் வேந்தர் துணையுமுண் டாகுமே. [illegible]

சங்-செ-சனி. உ-கூ-எ உத்தமம்.

மகாமேரு தரிசனம்.

நிலவும் பூமனும் நீலன்றன் பாலுற
பலவி தத்திற் படுநஷ்டங் கூடிடுங்
கலக மின்றிக்கண் காணிம் விசையஞ்சீ
ருலவு மென்று வுரைத்திட லாகுமே. கக

சங்-பு-சு. உ-ச-சு மத்திபம்.

தவாக்கினி தரிசனம்.

சோமன் புந்தியுஞ் சுக்கிரன் பக்கலில்
நேம முற்று நெருங்கி யிருந்திடத்
தாம ரைத்தண்ணீர் போலத் தளும்பவே
தீமை யுற்றுத் திரிந்துழல் வார்களே. கஉ

சங்-வி-வி. உ-ரு-ரு உத்தமம்.

பத்மநிதி தரிசனம்.

குரங்கி பக்கலிற் கோமக னந்தண
னிரங்கி நிற்க விருதன தான்னியம்
நெருங்குஞ் சீர்த்தி நிலைக்கு நினைத்தவை
பரவும் வேந்தின் பலமுமுண் டாகுமே. [illegible]

சந்-சு-பு. உ-கூ-ச மத்திமம்.

சர்ப்பதரிசனம்.

பாதி மாமதி பார்க்கவன் புந்தியால்
நீதி யாக நெருங்கி யிருந்திட
வோது நல்ல வுறவிற் பகைகொளுங்
கோது ருமற் குணமும்பின் கூடுமே. கச

சந்-சனி-செ. உ-எ-ங உத்தமம்.

சுவேதக்குடை தரிசனம்.

பிறையு மந்தனும் பேர்குச னோடுற
நிறையு நீணிதி நிச்சய மாகுமே
லறையு மாண்மையு மாயுரா ரோக்யமு
முறைமு றைக்கு ளுறுதியுண் டாகுமே. கரு

சந்-ரா-சந். உ-அ-உ உத்தமம்.

தயிர்நெய் தரிசனம்.

களங்கன் பாம்புங் கவிமதி பக்கலில்
விளங்க வூர்பயம் வேந்தன் பயமுமாம்
வளங்கொ ளந்த மதிபதி யன்பினால்
விளங்கு நன்மைகள் மேலாம்பின் னாகவே. கசு

செ-குரு-ரா. ங-க-அ உத்தமம்.

மதக்ஜ தரிசனம்.

மங்க லன்கதிர் மாசுணத் தோடுற
பொங்கும் லாபம் புகலு மதிசயத்
தங்கும் வேந்தர் தமதரு ளாலுல
கெங்கும் போற்ற விருந்திட லாகுமே. கஎ

செ-சந்-சனி. ங-உ-எ மத்திமம்.

கேதகி தரிசனம்.

குசனு மிந்துவுங் கூறுஞ் சனியுட
னிசைய நிற்க வெழுமிடத் திற்பயம்
விசைய மேவி விளங்கு மிருப்பிட
முசித மாக வுரைத்திட லாகுமே. கஅ

செ-செ-ச. ரு-ரு-கூ உத்தமம்.

மன்மத தெரிசனம்.

பூமன் சேயும் புகரினைக் கண்டிடக்
காம தேனுவைக் கைக்கொளுந் தன்மைபோல்
வேம லாப மிலகும் புகழொடுங்
காம மேவிடுங் காரிகை லாபமே. க[illegible]

செ-பு-வி. ரு-ச-ரு மத்திபம்.

கேதகி தரிசனம்.

குருதி புந்திக் குருவினைக் கூடிடக்
கருதி நீசர்தங் காட்சியுண் டாகிடும்
விருது கொண்டு விளங்கு மிருப்பிடம்
அருமை யின்றி யதிற்சுகங் காணுமே. உ0

செ-பு-வி. ரு-ரு-ச உத்தமம்.

மதகஜ தரிசனம்.

வக்கிரன் குரு மாலவன் பக்கலில்
நிற்க வெம்பகை நீங்கச் செயந்தரும்
தக்க நற்பொருள் சாரு மிருப்பிடஞ்
சொக்க மாமதிற் றோன்றுஞ் சுபங்களே. உக

செ-சு-செ. ரு-சு-ரு உத்தமம்.

பூதேவி தரிசனம்.

ஆரல் சுங்க னருங்குச னோடுறச்
சேர நின்றிடுஞ் செய்கா ரியமெலாம்
ஊரு மாடையு மொண்டொடி யார்களுஞ்
சேரு மென்று தெளிந்திட லாகுமே. உஉ

செ-சனி-சந். ரு-எ-உ மத்திபம்.

சல்மலி தரிசனம்.

சேயு மந்தனுந் தேய்மதி பக்கலிற்
சாயு நாளுஞ் சகல தொழில்களுந்
தீயுஞ் செம்பொன் றிரண்டு வருண்டோடுங்
காயும் வெம்பகை காணும் விதனமே. உ[illegible]

செ-ரா-கு. ௩-அ-௧ உத்தமம்.

சிந்தாமணி தரிசனம்.

உதிர னோடு வுரகன் கதிருற
நிதியும் புத்ரனு நேர்கிளை யும்வரும்
அதிக மாக வமையு நினைத்தவை
விதிமு றைப்படி மேவிடுஞ் சீர்த்தியே. ௨௪

பு-கு-சனி. ௪-௧-௭ உத்தமம்.

ஐராவத தரிசனம்.

மதிமகன் கதிர் மந்தனைக் கண்டிட
மதிக னேக மதிதுறை யாய்வருந்
துதிகொளும் பொருட் சொல்லுநல் வித்தையும்
பதியில் வந்து பதிந்திடுங் காணுமே. ௨௫

பு-சந்-சு. ௪-௨-௬ மத்திபம்.

பாத்திர தரிசனம்.

புதனு மிந்து புகரரு காகிட
வதிகி லேச மமையு மனுதினந்
துதிகொள் பந்துவுஞ் சொல்லிடுஞ் சேயரும்
கொதிகொ ளும்பகை கொண்டிடு வார்களே. ௨௬

பு-செ-வி. ௪-௩-௫ உத்தமம்.

தேவாசுவ தரிசனம்.

புந்தி யாரலைப் பொன்னவன் கண்டிடச்
சந்தி தோறுந் தழைத்திடுஞ் சத்துரு
வந்திடும் பகை வான்பய ணத்தினற்
சொந்த தேசத்திற் றோன்றுஞ் சுகமெலாம். ௨௭

பு-பு-பு. ௪-௪-௪ உத்தமம்.

ஆம்பிரவிருக்ஷ தரிசனம்.

அறிஞர்மூவ ரணியணி யாய்வரப்
பெறுமி ராஜ பலமுந்த னகம
மறிவுளோ ருற வாகு மவரிடத்
துறச பத்தை வுகந்திடு வார்களே. ௨௮

பு-வி-செ. ச-ரு-௩ உத்தமம்.

ரத்தகமல தரிசனம்.

மாலும் பொன்னனு மங்கல ஞேடுற
மேலும் மேலும் விளங்கும்ஸ்திரி லாபமே
சால வேவருஞ் சந்தத மார்ச்சியங்
கோல மாகக் குவியுந் தனங்களே. ௨௯

பு-சு-சந். ச-சு-உ உத்தமம்.

கேதகி தரிசனம்.

மேதை சுங்கனு மேவச் சசியுட
ஞேது மாரோக்கிய மோங்குந் தனமெலாங்
காதல் கொள்ளுங் கமனமுண் டாகிடிற்
கோதி லாமற் கொடுக்குஞ் சுபங்களே. ௩௦

பு-சனி-ரு. ச-எ-க. உத்தமம்.

துளசிவன தரிசனம்.

பண்டி தன்சனி பானு விருப்பிடங்
கண்டு நிற்கக் கருத்தினி லேசுகம்
பண்டு சொன்ன பலத்தினி லன்னலங்
கொண்ட னற்பலங் கொண்டிடு வார்களே. ௩௧

பு-ரா-ரா. ச-அ-அ உத்தமம்.

ஐராவத தரிசனம்.

புலவன் பாம்பும் பொறியற வோடிருந்
துலவி நிற்க வொருதினந் தன்னிலே
இலகு சம்பத் தெழுமினி தாகவே
குலவு நன்மை குலாவு மிருப்பிடம். ௩௨

வி-ரு-சு. ரு-க-சு மத்திபம்.

நிரோதகதடாக தரிசனம்.

வேந்தன் பானு விளங்கப் புகருடன்
போந் திடத்திற் புகல்பலம் நிஷ்பலம்
சேந்த வன்பர் சிறந்திலர் தீமையை
யேந்தி நிற்ப ரிருநிலந் தன்னிலே. ௩௩

வி-சங்-வி. ஙு-உ-ஙு மத்திபம்.

நாசிகாசேத் தரிசனம்.

குருவு மிந்துவுங் கோவரு காகிட
மருவுந் துக்க மனமு மலைந்திடும்
பெருகும் பந்து பெரும்பகை யோங்கிடு
மருள டங்கு மவனியிற் கண்டனே. ௫௪

வி-செ-பு. ஙு-௫-௪ உத்தமம்.

தற்பண தரிசனம்.

மன்னும் பூமனு மாலரு காகிடப்
பன்னு கஷ்டம் பரிந்தெதிர் வந்திடு
மின்னு மேன்மை விளங்கும் விதரணந்
தன்னில் நாளுந் தழைத்திடுங் காணுமே. ௫௫

வி-பு-செ. ஙு-௪-௫ உத்தமம்.

நவரத்தின தரிசனம்.

அரசன் புந்தியு மாரவின் பக்கலில்
சரச மாகத் தழைக்கு நினைத்தவை
விரவி னோடு விளங்குஞ் சுகமெலாம்
பரவுஞ் சினேக பலிதமுங் காணுமே. ௫௬

வி-வி-சங். ஙு-ஙு-உ மத்திபம்.

தத்ததேகப்பிர தரிசனம்.

இரண்டு பொன்னு மிருமதி பக்கலிற்
றிரண்டு நிற்கத் தினமுந் தயாதிகள்
வெருண்டு நிற்பர் விலங்கிடுங் காரியஞ்
சுருண்டு நெஞ்சந் துயர்கொளுங் காணுமே. ௫௭

வி-சு-ரு. ஙு-சு-க உத்தமம்.

தேவேந்திர தரிசனம்.

இறையுஞ் சுங்க னிரவியைக் கண்டிட
நிறையும் வித்தை நெருங்கும் பிரதிஷ்டைகள்
குறைவி லாமற் குருவுப தேசச்சீர்
பெறுவ ரென்பதைப் பேசவும் வேண்டுமோ. ௫௮

வி-சனி-ரா. ௩-௭-௮ உத்தமம்.

சுப்பிரமணியர் தரிசனம்.

அந்த ணன்சனி யாடர வோடுற
சந்த தம்புவி சம்பத்துண் டாகுமேல்
வந்து நிற்பர் வளங்கொ ளரசர்சீர்
தந்து நிற்பர் தரணியில் மன்னரே. ௯௯

வி-ரா-சனி. ௫-௮-௭ உத்தமம்.

ஐராவத தரிசனம்.

பொன்னும் பாம்பும் புகல்சனி யோடுற
மன்னும் வெம்பகை மாறு சுகமுறும்
பொன்னு றும்புகழ் பொங்கும் நினைத்தவை
நன்ன லத்துடன் நாளும் நயக்குமே. ௱

சு-கு-வி. ௯-௧-௫ உத்தமம்.

தேவகன்னி தரிசனம்.

வெள்ளி பானு விளங்கும்பொன் னோடுற
பிள்ளை லாபம் பெருத்தத னுகமங்
கள்ள மான கனதனங் காணுஞ்சீர்
கொள்ளும் போகங் குதிகொளுங் காணுமே. ௱௧

சு-சந்-பு. ௯-௨-௪ உத்தமம்.

திக்கெஜ தரிசனம்.

சுங்கன் சோமன் சொலும்புத னோடுற
வெங்கு மங்கள மேறும் பகையறும்
பொங்கும் வாழ்வு புகழ்சென விர்த்தியாங்
தங்கு நாளுந் தழைத்தத னுகமம். ௱௨

சு-செ-செ. ௯-௩-௩ உத்தமம்.

புஷ்பபிரஷ்டினி தரிசனம்.

புகருஞ் சேயும் புவிமக னோடுறத்
தகைமை கொண்டு தழைப்பர் சிறுவர்கள்
இக பரத்துக் கினியத னுகமம்
புகுமிடந் தொறும் பூச்யமுண் டாகுமே. ௱௩

சு-பு-சந். சூ-௬-௨ உத்தமம்.

பூரகும்ப தரிசனம்.

கவியும் புந்தி கலைமதி யோடுறப்
புவியில் மன்னர் புகழ்சிறப் பெய்திடுங்
கவிகள் கொண்டு தழைக்குந் தன்காரியங்
கவிசொ லும்புல வோர்தினங் கண்டதே. ௬௬

சு-வி-கு. சூ-௫-க உத்தமம்.

சொர்னகும்ப தரிசனம்.

மழையின் கோளும்பொன் மார்த்தாண்டன் பக்கலில்
தழைய நிற்கச் சகலமுஞ் சித்தியாம்
இழையுங் கீர்த்தி யிருசுக மெய்திடுங்
கழற நாளுங் கனந்தருங் காணுமே. ௬௭

சு-சு-ரா. சூ-சூ-அ மத்திபம்.

ஊஷரபூமி தரிசனம்.

புகரி ரண்டும் புஜங்களைக் காணவே
மகிழ்ந்து நிற்க மனிதற்குப் பீடைமே
லிகப ரத்துக் கிழிவுவி தேசஞ்சென்
றகமெ லிந்து மழுதிடு வார்களே. ௬௮

சு-சனி-சனி. சூ-எ-எ உத்தமம்.

லதாமண்டப தரிசனம்.

சுக்கி ரன்சனி சொல்லுஞ் சனியொடு
நிக்க நிற்கு நிருபர்சௌ பாக்கியம்
மிக்க நாளும் விளங்குங் கமனமேல்
தொக்க நின்று துடருந் தனங்களே. ௬௯

சு-ரா-சு. சூ-அ-சூ மத்திபம்.

சண்டிகா தரிசனம்.

சுங்க னோடு புஜங்கனுஞ் சுங்கனுந்
தங்கி நிற்கத் தரணியில் மன்னரால்
குங்கும் போகங் குலையுந் தயிரியம்
மங்குஞ் செல்வ மரணமுண் டாகுமே. ௭௦

சனி-குரு-பு. எ-க-௪ மத்திபம்.

சம்பராசுர தரிசனம்.

கதிர்ம கன்கதிர் காணல் புதன்றனை
பதிகு லேந்திடும் பாக்கிய நாசமாம்
விதிமு றைப்படி மேவும் பகையெலாங்
குதிகொ ளுந்துயர் கோபமுண் டாகுமே. ௯௯

சனி-சந்-செ. எ-உ-ரு உத்தமம்.

சேஷ்டசாக தரிசனம்.

மந்த னிந்துவு மங்கலந் தன்னையே
வந்து காண வளரும் புகழெலாம்
சந்த தஞ்செயஞ் சாரும் புதல்வர்க
ளந்த மாக வமர்ந்திடு வார்களே. ௱

சனி-செ-சந். எ-ரு-உ உத்தமம்.

மகாலட்சுமி தரிசனம்.

மந்தன் மங்கலன் மாமதி யோடுற
வந்தி ருந்து வளருந் தனமெலாம்
அந்த மாக வரசர் புகழுணிந்
திந்தி ரைச்செய லெய்திடு வார்களே. ௱க

சனி-பு-குரு. எ-௪-க உத்தமம்.

நளின தரிசனம்.

மந்தன் புந்தியு மார்த்தண்ட னோடுற
வந்து தோன்று மகிழ்வித்தை யாகுமே
சந்த தம்புவி மீதித்த னுகமம்
அந்தி யத்தி லடரும் பயங்களே. ௱உ

சனி-வி-ரா. எ-ரு-அ உத்தமம்.

க்ஷீரசாகர தரிசனம்.

சனியுஞ் சிவனுஞ் சர்ப்பத்தி னோடுற
முனையும் புத்திர லாப முதலுறுங்
கனியும் வேண்டிய காட்சித னுகமம்
இன்மும் வேண்டிய தெல்லர்முண் டாகுமே. ௱௩

சனி-சு-சனி. எ-சு-எ உத்தமம்.

குலதேவி தரிசனம்.

பங்கு சுங்கனும் பங்குவைக் கண்டிடில்
தங்குந் தன்னிலே தன்னிற் சுகங்களே
பொங்கும் வியாதி புணருங் கமனங்க
ளெங்கு மெத்திசை யும்மெழுந் தீமையே. ௬௪

சனி-சனி-சு. எ-எ-சு. மத்திபம்.

ராகு சர்ப்ப தரிசனம்.

சனியி ரண்டுந் தனிப்புக ரோடுற
மனமும் வந்து மகிழ்ச்சியைக் கொள்ளுவ
னினமுஞ் சொல்வ னெடுக்குங் கமனமேல்
முனையுங் கெட்டு முடுகுங் கலகமே. ௬௫

சனி-ரா-வி. எ-அ-௫ உத்தமம்.

ஸ்ரீ தரிசனம்.

முடவன் பாம்பு முடுகக் குருவுட
னடரு மானந்த மாயுவி னோடுறுந்
துடர்வெ ளிப்புறந் தோன்றுங் கமனமே
லுடன் படும்வெகு பூஷண முத்தமம். ௬௬

ரா-கு-செ. அ-௩-௩ உத்தமம்.

ஐராவத தரிசனம்.

பணியும் பானுவும் பார்மக னோடுற
வணியும் ராச்சிய மரியத னாகமம்
மணிகொ ளாரம் வருமிடந் தோறுஞ்சி
ரணியு மென்று மறைந்திட லாகுமே. ௬௭

ரா-சந்-சந். அ-உ-உ உத்தமம்.

சுதர்சன தரிசனம்.

அரவி னோடு மருமதி ரெண்டுறப்
பரவும் யாத்ர பலமுள தாகுமால்
விரவி நாடி விளங்குஞ் சிநேகிதன்
தருணங் கண்டுரை சாதக மாகுமே. ௬௮

ரா-செ-சூ. அ-ஈ-க உத்தமம்.

தேவேந்திர தரிசனம்.

பணியு மங்கலன் பாற்கர னோடுற
வணியுங் கீர்த்தி யனேக சுகந்தரும்
பிணிபெ ரும்பகை பேயும் பறந்திட
மணிபொன் னுடையும் வாழ்வுமுண் டாகுமே. ருகூ

ரா-பு-ரா. அ-ச-அ உத்தமம்.

இராஜ தரிசனம்.

போகி புந்தி புஜங்கனைக் கண்டிடச்
சோக முற்றுச் சுழல்வ ரெதிரிகள்
தாக முற்ற தனிச்சுப மோங்குமென்
ருக மத்தி லறைந்தனர் மேலவர். சு0

ரா-வி-சனி. அ-ரு-எ உத்தமம்.

மகாலட்சுமி தரிசனம்.

சீறு பாம்பொடு சீவனு மந்தனும்
வீறி நிற்க விளங்கும் விஜயமே
கூறு மிந்திரை கொள்கைமென் மேலதாய்
வீறும் பிண்டி விமலனன் யாலரோ. சுக

ரா-சு-சு. அ-சு-சு மத்திபம்.

நஷ்டசந்திர தரிசனம்.

பாந்தள் சுங்கனும் பார்க்கவன் பக்கலிற்
சேர்ந்து நிற்கத் தினமதி ரோகமே
சார்ந்தி ருந்திடுஞ் சத்துரு மேலிடுந்
தீங்கெ ரிந்திடுஞ் செய்கா ரியமெலாம். சுஉ

ரா-சனி-வி. அ-எ-ரு மத்திபம்.

சோகசாகர தரிசனம்.

நாக நீல னயந்தபொன் பானுற
ஏகு மூரி லிலங்கும்வை போகமே
சோக மாறுஞ் சொலுங்கொஞ்ச நாளினிற்
சோகஞ் சொன்ன சுகமுமுண் டாகுமே. சுங

ரா-ரா-பு. அ-அ-ச உத்தமம்.

சொர்னகும்ப தரிசனம்.

அரவி ரண்டோ டறிஞ னுறநிதம்
பரவுஞ் செம்பொன் பயணத்தி னற்சுகம்
அரச னன்பு மசோகமர் முக்குடை
வரத னன்பும் வளருந் தினந்தினம். ௬௪

அலகு நூற்றெட் டதற்கறு பத்தினுன்
கிலகு செய்யு ளியம்பின னீதெலாம்
பலபொ ருட்சருக் கத்திற் படிந்திடு
மலகி லாப்பொரு ளாகு மறிமினே. ௬௫

அறிமின் முன்ன மறைந்த பலபொருள்
நெறியி னின்று நெருக்குமெண் கோட்களி
னுறவி னலறிந் தொவ்வொன் றுக்கெட்டதா
யறைய லாகின னம்புவி மீதிலே. ௬௬

வேறு.

அந்தரத் திருந்து லாவு மாடகக் கோயுள் நின்ற
சுந்தரன் பாதம் போற்றிச் சொன்னமுன் சருக்க மெட்டின்
வந்தொளிர் பலனைச் சொல்ல வருத்தமா யிருக்கு மாகி
லிந்தல கினையா னுனு மெடுத்துரை சரத மாமே. ௬௭

இந்தல கொருநூற் றெட்டி லெழுந்திடும் பலனை யெல்லாம்
அந்தமா கியமுன் செய்யு ளறுபத்து நாலுட் சொன்னோன்
சுந்தர வலகை நாளுந் தூக்கிநீ பார்க்க வேண்டில்
வந்தவா றறைவன் பிண்டி வரதனைப் போற்றிக் கொள்ளே.

சூரியன் றினத்தி லெங்கோன் சுந்தர பாதம் போற்றி
சீரிய தூபஞ் சொன்ன விமலனுக் காகக் காட்டி [ய்
தாரிகையார்கள் செரல்லுங் கணக்கறிந் தெடுத்துச்சொல்வா
சீரிய பலனுண் டாகுந் தேரவை யொருக்கால் பாரே. ௬௯

வந்தபோ தருகில் நின்ற மங்கையர் முகத்தை நோக்கி
யந்தநூற் றெட்டி லொன்றை யறையக்கே ளறைந்த லக்கை
முந்திவைய தின்சேடத்தில் மொழியக்கேள் மொழிந்தலக்கை
யந்தமா பதன்கீழ் வைத்து வதன்பின்மற் றதனை வையே.

வைத்தமுத் துகையை யெட்டால் மாற்றிட வருஞ்சேடங்
கோ, ளத்துகை கோள்காண் செய்யுளதிலுறுங் கோள்காண்
மேலாய், வைத்திடுந் தொகையி லொன்றை மாற்றிமற் றதை
மாறெட்டா, லத்துட னிடையைக் கூட்ட வதிலுறுங்கவிதை
தானே. எக

முந்திய முறைத்தா ரூட முறைபெரி ததிலா றுெம்
பிந்திய முறைத்தா ரூட பேரல கதிலா றுெம்
வந்துகேட் பவர்கள் நெஞ்ச மகிழ்ந்திடப் பலனைச் சொல்லி
சந்தத மவர்க ளாலே தரும்பொருள் கைக்கொள் வீரே. ()

பலபல பொருளை யெல்லாம் பாரினி லெடுத்துச் சொன்ன
சலசவா கனன்பொற் பாத தாமரை மலரைக் காண
வுலகினில் மனங்கொண் டோங்கு முத்தம னப்பா வையு
னலமணிந் தொளிரு மிந்த நவரத்ன மாலே யாமே. எங

நலமணிந் தொளிரு மிந்த நவரத்ன மாலே தன்னி
லிலகிய சருக்க முன்பா னிதிலிருந் தழகா யோங்கும்
பலனுறுங் கவிதை நூற்றன் பதின்மிசை நாற்பத் தைந்தா
மலகினுக் கிதனுட் செய்யு ளறுபத்து நால தாமே. எச

அலகுசருக்கம்-முற்றிற்று.

ஆக சருக்கம்-கூ-க்கு செய்யுள்-ககூரு.

நவரத்தினமாலே.

முற்றிற்று.

# தேங்காய்க்குறி சாஸ்திரம்.

**சித்திரைமாதம் பிறந்ததினத்தில் நாளிகேரம் உருட்டி ஸம்வத்ஸரபலன் அறியவேண்டியகிரமம்**

**இதனடியிற் பார்க்கலாம்.**

சித்திரைமாதம் பிறந்ததினம் காலையில் தேவதரிசன முதலான காரியங்களை நடத்திக்கொண்டு ஸ்வஸ்தசித்தனுக இருக்கிற சமயத்தில் தன்வீட்டில் சமமாயும் மாநியமாயும் இருக்கும் ஸ்தலத்தைசுத்திசெய்து அவ்விடத்தில்சுத்ததண்லேம் நிறைந்த படிகளாலும் தீபங்களாலும் அலங்கரித்து தகுந்தபடி ஆத்மபூஜாதிகளை செய்து குடுமியில்லாத உருளையான நாளிகேரத்தை அலம்பி அதின்முகத்தில் கந்தபுஷ்பங்களைச் சாத்தி கையிலெடுத்துக் கிழக்குமுகமாயிருந்து எனக்கு இந்தவருஷத்தில் உண்டாகப்பட்ட குணதோஷ பலன்களை இந்தலக்ஷணங்கொண்டு செம்மையாய்செய்யவேண்டுமென்று பக்திபூர்வமாய் ஈஸ்வரனை பிரார்த்தித்து மேற்படி நாளிகேரத்தை கிழக்குத்திக்கில் உருட்டவேண்டும். அந்த நாளிகேரம் உருண்டு நிற்கிறபொழுது அதின்முகம் எந்தத்திக்கில் இருக்கிறதென்று சூட்சமமாயறிந்துகொண்டு அந்த வருஷப் பலத்தை விசாரிக்கவேண்டும்.

தேங்காயின் முகம் கிழக்கு திக்கில் வந்தால் மேற்படி தேங்காயுருட்டிய மனுஷ்யனுக்கு அந்தவருஷத்தில் ஆயுள் பலமும், காரியஜெயமும், கிருஷிகுணமும், சதுஷ்பாதலாபமும், அசனசயன சௌக்கியமும், ஐசுவரியவிருத்தியும், ஆக்னேயதிக்கில் வந்தால் கலகமும் ஆயுதங்கொண்டு தேகத்தில் காயம்படவும், சொறிசிரங்குண்டாகவும், கிருஷிநஷ்டம் வரவும் செய்யும். தெற்குத்திக்கில் ஜீவனுசாதிதோஷ பலன், நிருதிமூலையில் வந்தால் ரோகாரிஷ்டமும் சத்துரு விருத்தியும் கிருஷிநாசமும் பந்துசனநாசமும் மேற்குதிக்கில் வந்தால் திரவியலாபமும், கிருஷிகுணமும், தூரதேசத்தில்தனப்பிராப்தியும், வாயுமூலையில் வந்தால் மனோதுக்கமும், பாரியாள் கலகமும், சோரபயமும், தாரித்திரியமும், அக்கினிபயமும், வடக்குதிக்கில் வந்தால் மங்களதிரவியலாபமும், ராஜபகுமானமும், ஆயுள்விருத்தியும், பூமிபலிதமும், ஈசான்யத்தில்வந்தால் காரியநாசமும், கிருஷிநஷ்டமும், சதுஷ்பாதநாசமும், துக்கமும், கீழ்பட்டு முகம்வந்தால் மிருத்தியுமுதலான தோஷங்களும் சத்துருபயமும் உண்டாகும்.

உ

வடிவுள வேலோன் றுணை.

திணசரிதை என்னும்

# சோதிட சிகாமணி

## மூலமும் - உரையும்.



### காப்பு.

அகாரமுதற் பிரணவத்தை யருணைகிரி யடிகளுக்கு
மடியர் வாழச்
சகாயமதாய் முருகாற்றுப் படையுரைத்த நற்கீர
முனித னக்கும்
மகாமலயத் தவனுக்குஞ் சிவனுக்கு முபதேச
மளித்த தெய்வச்
சிகாமணியைத்தொழு திறைஞ்சிசிகாமணியென்சோதிடநூற்
செப்ப லுற்றும்.

### வெண்பா.

உலகி லொருவன் பிறந்தநா டொட்டே
யிலகுதின நாளளவு மெண்ணிப்-பலமாய்த்
தினமுதய நாண்முதலாய்ச் சென்மநாண் மட்டுந்
தனதெண்ணிக் கூட்டிரெட்டி தான். ௧

தானத் துமைகயுடனே தான்பிறந்த நாண்முதலா
யானதொ ரிரேவதிநா ளாம்வரைக்கு-மானவெண்ணிக்
கூட்டுந் துருவமதிற் கூறுந் திதிவார
மீட்டு மிலக்கினமு மெண். ௨

எண்ணித் துருவத்தோ டேகூட்டி யொன்பானில் ல்
லெண்ணிக் கழித்தமிச்ச நாடியிட்டே-நண்ணிரவி
யூரும் புதன்பாம் புயர்தருபொன் கேதுமதி
காரிவெள்ளி சேய்நிறையாய்க் காண். ௩

காணுமுதற் பக்கம் பகலினுக்குக் காலமே
தானுமது வெழுமா திக்தன்கீழ்த்-தோனு
முதயக் கிரகமுத லோங்குமெண் கோளும்
புதைய வெழுதிடுவாய் பூண்டு. ௬

பூண்டுதயக் கோளாப் பொருந்துமுத லெண்கோட்குந்
தாண்டுபக லுழிகையைத் தப்பாம-னீண்டதிசை
யாம்பிரகா ரம்பிரித்தே யானமதி நாழிகையை
யேம்பக லுழிகைமேலேற்று. ௭

ஏற்றிடுமுன் பக்கத் திரவினுக்குச் சூரியனைத்
தோற்ற வெழுதித் துடர்ந்ததின்கீழ்ச்-சாற்றுபக
லண்ணுதயக் கோளுக்கேழ் வாரேச னேமுதலா
வெண்ணியெண் கோளு மெழுது. ௮

எழுதி யிரவிக்கொன் றுங்கடிகை யெல்லாம்
பழுதிற் பகல்போற் பகர்ந்தே-யெழுமமர
பக்கப் பகலினுக்குப் பாரிரவி கங்குலுக்கு
நிற்குமதி முன்னெழுதி நேடு. ௯

நேட்டியமற் றெல்லா நினைபூ ருவபக்கங்
கூட்டி யதுபோற் குறித்துப்பா-ரோட்டுமிரு
பாம்புதிக்கி லந்தக் கிரகப் படிவரிசை
தேப்ப வெழுதவிதந் தேர். ௧௦

தேரி வருகின்ற நட்சத் திரத்திதியுங்
கூருதய மாய்க்காலங் கூறுகன்னன்-மீறிநிற்கி
லந்தத் திதிநாளு மாங்கூட்டு மேலுபரி
வந்தநாள் கூட்டுமது வாகும். ௧௧

வாகா மிலக்கினங்கள் கூட்டும் வகையதுகே
டோகா யிதின்பலன்கள் சொல்பொழுது-பாகா
யுதிக்கு மிலக்கினங்க ளோது மதுதான்
விதிக்கும் வளர்பிறைக்கு மேல். ௧௨

மேலுத்த வோரை தினந்தோறு மேவலமாய்த்
தானடத்திப் பேர்தான் றருகாம-லூன

மிலாத முதற்பக்க நாட்கண் முழுதும்
வலமாக வெண்ணியதின் மீது. கக

மீதுதிதி ராசியைப்பின் பக்கத்தில் விண்டிடமாய்த்
தாதுதலை கீழாகத் தான்றினமுந் - தீதகல
வொவ்வொன்றாய்த் தானிற்கு முற்றவகை மேடமுதற்
கௌவல மாயெண்ணிக் காண். கஉ

காணுமது வாரங்கள் கூடிவருங் காரணங்கே
டோணுமா தித்தன்முதற் சொற்றினமு-மூணிவரும்
வாரமட்டு மெண்ணித் துரைகூட்டு வார்கடலி
ஞரவடம் பூண்முலையீ ரன்று. கங

அன்று முதற்பக்கத் தினிற்பகலி னின்மதிதா
னென்றுதிக்கி லேமதிதா னென்றுமே போ - தென்றிரவி
லாதவனே தாமுதிக்கி லாமேக சூரியனுங்
கோதிற்பிற் பக்கமுந்தான் கூறு. கச

கூறியிடு மேகமதி கோளிரவி யும்முதிக்கி
லேறு மவர்கடிகை யேயிவர்க்கே - தேறிவரு
முந்தியவர் புத்திக்குண் டாகுங் கடிகையெலாம்
பிந்திரு வொவ்வொன்றாப் பேர்ந்து. கரு

பேர்ந்துவருங் கோளுக்குப் பேசுமவர் கடிகை
சூரியனுக் குத்தானு மொன்றரையாம் - பேர்ந்திருக்கும்
புந்திக்கு நாலேகால் பொங்கு மிராகுவுக்குப்
பந்தமற நாலரையாம் பாங்கு. கசு

பாங்குபொன்னி னுக்குநால் பாழ்கேதுக் கொன்றுமுக்கால்
தாங்கு மிரண்டரையாஞ் சந்திரற்குத் - தீங்கு
சனிக்குநான் கேமுக்கால் சார்ந்தவெள்ளிக் கைந்து
தனிக்குசற்கொன் றேமுக்கால் சாற்று. கஎ

சாற்று மிதுதுகைகண் முப்பதுவாந் தன்னிரவுக்
கேற்று மிதுவுந்தா னேந்திழையே - போற்றித்
தினஞ்சிவனைப் பூசைசெய்து தேசுபகற் காலத்
தினம்பலனைச் சொல்விதங்க டேர். கஅ

தோர்ந்துதயக் கோளுக்கா ரும்புசிப்பு சேர்காலம்
பொந்த சுடுசோறு போசனமாஞ் - சேர்ந்தநீர்
விட்ட பழஞ்சோறு தின்பார்க்கு விள்சுபக்கோள்
தொட்டபுத்தி யிற்புசிப்பாஞ் சூழ்ந்து. கசு

சூழ்ந்துதய மாங்கோட்கள் சுக்கிரன்பொன் புந்தியதாய்
வாழ்ந்துவரில் வாலிபமும் வார்த்திகமு - மாழ்ந்தபெண்பான்
மூன்றுபே ராகப் பரிமாறு மொய்ம்புமதி
தோன்றிடிற்பெண் ணொிரண்டாஞ் சொல். ௨௦

சொல்லிடுமா ரும்புத்தி சுக்கிரன்போன் புந்தியெனிற்
றொல்லைமுன்போன் மூன்றுபேர் தோகையர்கண்-மெல்லப்
பரிமாறு மிந்துவெளிற் பார்விதவை வாலை
யிருவர் பரிமாறு மென். ௨க

என்னுமொன்ப தாம்புத்திக் கேழுந்தா னிப்படியே
பன்னியிடின் முன்போற் பரிமாறுஞ் - சொன்ன
விதன்குறிகள் கொண்டே விளம்பியிடு நாளுங்
கதங்கறிகா லம்மறிவீர் கண்டு. ௨௨

கண்டுசொன்ன மூன்றுதா னத்திற் கடுங்கோளாய்
வெண்டுகின் மெய்யழுக்கு வேடமாய்க் - கொண்டே
யழுக்குத் துணியோ டழுகுமில் லாதாராய்
விழுப்பிற் பரிமாறும் வேத்து. ௨௩

வேத்துதயத் துக்கஞ்சான் விள்கேது வாகியிடி
லேர்த்துண்ணும் பச்சை யிலைக்கறியும் - பார்த்திருந்த
தானமன்றி வேறிருப்பன் றானுதயம் பாவரெனி
லூனமிலை பின்னமா மோது. ௨௪

ஓதுதயத் துக்கிரவி யுற்றபொன்னு மானக்காற்
றீதுடைய தெற்குமுகந் தென்மேற்காம் - போதவெள்ளி
தன்கிழக்குத் தென்கிழக்கு சார்ந்தமுக மாயிருப்ப
னன்புதனுக் காம்வடமே றூட்டு. ௨௫

காட்டுசெவ்வா யாகில் வடகிழக்கு நன்கிழக்கு
வாட்டுசனி திங்கள் வடமேற்காங் - காட்டுமிரு



பாம்பினுக்குச் செவ்வே கிழக்குமுகம் பார்த்துண்பன்
கூம்புமுன் மாதேகேள் கூர்ந்து. உசு

கூர்ந்துதயத் துக்காறுங் கோள்கூ ரியனாகிற்
போந்திருந்த போசனத்திற் பூச்சிவிழுஞ் - சேர்ந்தரவ
மாகின் மயிரிருக்கு மானசெவ்வாய் கல்லிருக்கு
மேகசனி நெல்லிருக்கு மே. உஎ

ஏருதயத் துக்காறுங் கோள்வெள்ளி யென்றாலும்
பேருமந்த வாறுக்குப் பின்முன்னு - மூருகுண
மாகவது தீக்கோ ளிருந்தாலும் வன்சோறு
பாகமுடன் வேகாது பார். உஅ

பாராறிற் செவ்வாய் பதியினு மவ்வாறு
தீரா விருபுறமுந் தீக்கோட்கள்-நேராகி
லன்ன மளியு மதுகாந்தும் வெந்தபண்டம்
பின்னு முடைந்திடுமாம் பேசு. உகூ

பேசுங் கறிபருப்பிற் பீடுடைய பாகமன்றி
யூசும் லவணமிஞ்சி யுண்குறித்தே - தேசுகொடு
மாகாச் சனியுதிக்கி லாங்கறிசோ றம்பருப்பில்
வேகாச் சிறுதுண்டாம் விள். ௩0

விள்ளாறும் புந்தியல்லால் வேறுசுபக் கோள்புசிப்பாய்த்
தள்ளாமுன் னம்பாபர் தானிருக்கில் - வெள்ளாம
லுண்ணுமன்னஞ் சற்றழியு முப்புகந் தேகுறையு
மெண்ணுகறி யிற்பிரட்டை யோர். ௩க

ஓராறிற் றீக்கோளா யுற்ற விருபுறமு
மோராய்முன் பின்சுபக்கோ ளேற்றிருக்கிற் - சீரா
யருந்துமன்னஞ் சற்றே யழியுங் கறிகள்
பொருந்துருசி பாகமாம் பொற்பு. ௩௨

பொற்புதய மாறும்பொருந்திருவோர் நாழிகைபாற்
சொற்பதுண்டு தள்ளிச் சொலுங்கடிகை - யுற்பனமாய்க்
கூடுதுகை யிற்பாதி தள்ளிக் குலவுகன்ன
ஞடுதுகைக் கறிசொல் நன்று. ௩௩

நன்றுதுகை யாகின் முழுத்துகையைத் தாளுடி
லொன்றுவிருந் தாகிலஃ தொர்நாள்கா - ணன்றியின்பின்
வாரா திபனையெண்ணி வந்ததுகைக் கீரெட்டிச்
சீராகிச் சொல்லுந் தெரிந்து. ௩௪

தெரிந்துபின்னு மேலுந் திரளமது வர்க்கம்
பரிந்துவரு மென்றே பகரா - யிருந்த
கிரகங்க ளைப்பிடித்துக் கீரை கறிபேத
மறியச்சொல் லும்வகைகே ளாய்ந்து. ௩௫

ஆய்ந்திரவி சீவ னதுகாரம் வெண்மைநிறம்
வாய்ந்தமதி மூல மதுரமொழி - தோய்ந்தமஞ்சள்
செவ்வாய்மூ லம்முறைப்பு செய்யபுதன் றுதுகைப்போ
டொவ்வாது பச்சைநிற மோங்கு. ௩௬

ஓங்குவியா ழஞ்சீவ ஞெண்புளிப்புப் பொன்னிறமாந்
தாங்குவெள்ளி சீவனுப்புத் தான்வெண்மை - தீங்குசனி
தாதுவர்ப்போ டேகரிப்புத் தாளுமிரா கும்மூலை
மீதுகைப்புக் காறலா மீட்டு. ௩௭

மீட்டுங்கே தாந்தாது மேல்கசப்போ டேகரிப்புக்
கூட்டுமொன்பான் கோளின் குணமறிந்து - காட்டுங்
கறிவகைக ளாஞ்சுவைகள் கான்றநிற மெல்லாங்
குறியுடனே சொல்வாய் குறித்து. ௩௮

குறிக்குந்தா தாங்கொம்பு கூறுகொடி மீது
பறிக்குநார் வித்துள்ள பைங்கா - யறுத்தகறி
மூலங் கிழங்கிலைகண் மொய்ம்புடைய சீவனெல்லா
மேலது மாங்கிசமா மெய். ௩௯

மெய்யாங்கி சம்புசியா வித்தகர்க்கு விள்ளக்கேள்
நெய்பா லதிகமஞ்ச ணீர்குளிர்ந்து - செய்யச்
சடிமாங் கிசத்துக்குத் தான்சரியா மென்று
மடியாமற் சொல்வாய் மதித்து. ௪0

மதித்துதய மாகினுமே மாறுபடுந் தீக்கோள்
கதித்துதிக்கிற் சோறுகறி காந்தும் - விதித்தமது

கும்பியிடு மாறினின்முன் கோட்கள்கோ ளாகியிடில்
வம்புபடும் போசனங்கள் வாய். ௪௧

வாய்ப்புதய மெட்டொன்பான் வன்மூன்று பாவரெனிற்
சேய்க்குமன்ன மோர்பொழுதாந் தேர்ந்தறிவீ - ரேய்ப்புதய
மாறுவா ரத்தினுக்கே யாறுதி பாவரெனிற்
கூறுபடும் பட்டினியாங் கூறு. ௪௨

கூற்றுதய வாதிபனுங் கோலவா ராதிபனு
மேற்ற வொருசுபனு யேறிநிற்கிற் - சாற்றுமந்த
நாளுஞ் சுபப்பலமா நற்போ சனத்திந்தக்
கோளுஞ் சுவையதிகங் கூறு. ௪௩

கூறுமுத யாதிபனுங் கோல்வா ராதிபனு
மீறியொரு பாவராய் விண்டிருக்கிற் - றேறிவரு
மந்தத் தினத்திற் கொடூரமல மாம்புசிப்பில்
வந்தகோ ளின்சுவையாம் வன்பு. ௪௪

வன்புமுதற் பாகத்தி லேகமதி வந்துதிக்கின்
முன்புதிக்கு மந்தநாண் முச்சூடுங் - துன்பமில்லா
நற்பலன்கள் சேரும் நறுநெய்பா னற்பருப்பு
வர்க்கவகை முப்பழந்தேன் மாண்பு. ௪௫

மாண்பா மகேககறி மாதுரியங் காய்கறியிற்
காண்கவரு மொன்டிரண்டு கைப்பல்லாற் - பூண்பதுப்பா
மில்லாக் கறிசிறிது மேல்கலந்து சன்னவன்ன
நல்லார் விருந்தி னயந்து. ௪௬

நயந்து புசிக்குமிது மஞ்சணிற மாகும்
வியந்தகெந்த நற்சுகந்த மீதே - யியைந்திருக்குந்
தாகமது தீர்வலத்துஞ் சாரு மிதற்குமுந்தி
யோகமுடை னும்புசிப்பா னுற்று. ௪௭

உற்றுவந்த நாடிங்கள் வார முகந்துவரின்
மற்று மரசருக்கு மால்யானை - சுற்றுங்
குதிரைமுத்தி னைபாணங் கூறுவெண்மை யாடை
நிதியமது வுண்டா நிசம். ௪௮

நிசமுதயத் தேக விரவியது நிற்கில்
வசமேக சந்திரர்போ லாகுஞ் - சுபிபலன்க
ளாதிவா ரங்கூடி லாபரணம் வாகனமும்
போதவரு மென்றே புகல். சக௯

புகலுமன்னஞ் சற்றே யழியும் பொருந்தி
மிகலுஞ் சிறிதுகறி யேறுப் - பகர்கைப்பு
மற்றதெல்லாந் தானு மதுரமுடன் சாருஞ்
செப்பி னிளமுலையாய்ச் செப்பு. ருo

செப்புமா றிற்காரி சேய்ராகு கேதாகி
லொப்புபய பாரிசமு மொண்சுபக்கோ - ளப்பினிப்
பானபொழு துண்ணி லறுசுவையோ டேயணுகுங்
கான மயிலனையாய் காட்டு. ருக

காட்டுதயம் பொன்னவனுய்க் காணி லலைச்சலுண்டாங்
கேட்டவுடன் சோறு கிடையாதே - வீட்டிற்
கிடைத்திடினும் பத்தாது பத்திற்கி லேசம்
படைத்தவன்னம் பாங்காகப் பார். ருஉ

பாரு முதயங்கள் பாவரெனி லத்தினத்திற்
சாருபலன் றீதாகுந் தப்பாது - சேருஞ்
சுபர்க ளுதயமெனிற் றோன்றுஞ் சுபங்க
ளுபயமுலை மாதே யுரை. ருந

உரைக்குமுபயங்க ளோங்கு சனியாகிற்
றரைக்குள் விசாரமுஞ் சஞ்சாரம் - வரைக்காரும்
புத்திக் கிருபுறமும் போந்த சுபரிருக்கி
லுற்ற சவுக்கியமா மூண். ருச

ஊணும் பகலின்மே லோடும் விசாரங்கள்
பூணுஞ் சுபவார்த்தை பூண்டிருக்கும் - காணுமந்தி
நேரஞ் சுகந்த நினைத்தகந்த நற்கனிக
ளாரவரு மென்றே யறி. ருரு

அறிவுதய நாலா றிம் மூன்றும் பலமேற்
றிறுப் பெண்சாதி யோடே - வெறுசண்டை

யாகியவ ணஞ்சுதின்றே யாஞ்சாவ ளென்றுசொல்வ
ரேகபுலி யைப்போ லெதிர்த்து. ௫௬

எதிர்க்குமா றுன்புத்திக் கேறியிடு நாலான்
விதிக்குஞ் சுபராய் விளங்கின்-மதிக்குந்
திரவியங்க ளுண்டாகுஞ் சீறாவ மாகில்
விரவுபொருள் வாராது விண்டு. ௫௭

விண்டுதய மெட்டோன் பான் வீறுபனி ரண்டாலு
மண்டுமதி பாவர் மறைந்தோடு-கண்டுபிடி
பட்டால் விடுபிடிகள் பற்றி வருமென்று
மட்டார் குழலணங்கே மாற்று. ௫௮

மாற்றுதய மாறொன்பான் பன்னிரண்டிற் பாவரெனிற்
றேற்று முடல்வருத்தந் தோன்றியிடும்-வேற்றல்லாற்
காவன் மறியல்வருங் காண்போ சனநஞ்சா
மாவலுடன் சொல்வீ ரடுத்து. ௫௯

அடுத்தவிந்தக் கோளுக் கருகினிற் பாவர்
தொடுத்திருக்கில் வாந்திபண்ணுஞ் சோறுய்-விடுத்த
வயிறு கழிவன் வலுமூர்ச்சை யுண்டா
மயிலனையாய் நீசொன் மதித்து. ௬0

மதித்துதய மஞ்சேழி லொன்பானின் மாலு
முதிக்கு மதியாகி லுள்ளோர்-மதித்தடுத்தே
சஞ்சாரஞ் செய்திடுவன் றொன்புகர்பொன் னாகியிடி
னுஞ்சாஞ் சமீபநடை யுண்டு. ௬௧

உண்டசனி பாம்போ டியர்சூரி யன்குசனுக்
கண்டிடுவீர் தூரதேச சஞ்சாரங்-கண்டிதனைக்
கல்லுருகப் பேசுங் கனிமொழியீ ரெந்நாளுஞ்
சொல்லும் வகையாய்த் துணிந்து. ௬௨

துணிந்துதய மாந்தனக்குச் சொன்மூன் றஞ் சொன்பா னா
னணிந்தசுப ராகி லரசர்-குணிந்தனுப்பு
மோலை வருங்கற்ப வோர்கடிகை பாதிபண்ணி
மேலதிகத் துண்டுகள் விட்டு. ௬௩

விட்டதுகை நாழிகையாய் விண்டோ ததன்வரியு
டொட்டவதிற் காரியங்க டோற்றிவரு-மிட்டமுடன்
கோளாகி னல்வார்த்தை கூறிவரும் பாவரெனிற்
கேளாய் கிறுக்குமுண்டாங் கேடு. சுச

கேடதா லேயுதய மாந்தனக் கேழ் நான்கு
கூடுமெட்டுப் பன்னிரண்டாங் கோடியாய்-நாடியிடி
லோலையினவ் வார்த்தை யெனவுரையு மெத்தவடி
வேலைவென்ற கண்ணுப் விரைந்து. சுரு

விரைந்து தினபலத்தில் வீற்றிருக்கு நற்கோள்
பரிந்த வதிற்பயணம் பாங்காய்த்-தெரிந்தே
வசனங்க ளன்றுகு மானகருங் கூடுங்
கவன முடனுரைக்குங் கால். சுசு

காலபலன் சொல்லுங்காற் காவலர்க்குச் சொல்லிடினு
மேனுபல னெல்லாம் விரைந்துவரு-மேனுமல்லா
ருட்டவர்க்குச் சொல்லி னடக்கை யறிந்துசொல்லுங்
கோட்டினர்க்குச் சொல்லவருங் கோது. சுஎ

கோதமறப் பட்சத்திற் கூறுபதின் மூன்றுமுத
லோதியிடு மூன்றுதிதி யுள்ளநாள்-பேதத்
தினபலன்க ளோதுவாந் தேவையுநான் சொல்லுங்
கனமதனைக் கண்டுதேர்ந் தே. சுஅ

கண்டு தினபலன்கள் கண்டுரைக் கும்போதி
னன்றுநவக் கோளவர்க் கேநாடி-திண்டிறல்கூர்
நற்சரங்க டான்விளங்க நன்காய்ந்து நங்காய்கே
ளற்சாந்தி திங்களுக்கு நாட்டு. சுகூ

நாட்டு மிரவினுக்கு நற்பலன்கள் சொல்லும்வகை
யாட்டமுள வந்திகே ரத்துதய-மீட்டுபுத்தி
யன்னவர்க்கு நான்கா யமர்ந்தபுத்தி யிற்புசிப்பா
மின்னதனைக் கண்டேட் டிரு. எ0

இருக்குமந்தப் புத்திக்கு முன்சுபக்கோ ளாகில்
தருக்குமுடன் போசனங்கள் வாய்க்குந்-தருக்கல்லான்

மற்றநே ரம்புசிக்கின் மானுசுப புத்திபிற்சொல்
லுற்றதிது கண்டே யுறங்கு. எக

உறங்குமுந்தி யேயன்ன முண்டபுத்தி பார்த்துப்
பிறங்குபகற் போற்கறிகர் பேணித்-திறங்களுள்ள
பாகவிசே டங்கண்முதற் பைங்கிளியே தப்பாம
லேகமனத் தோடுரையா யிங்கு. எஉ

ஈங்குநா லுக்குநான் கின்சுபக்கோ ளேவிரைவி
லோங்கு மலையமா மூர்த்தேரப்-பாங்குகுரு
தேவ தரிசனமுந் தெய்வீக சொற்பனமு
மாவலுடன் காண்பா னடர்ந்து. எஙு

அடர்ந்து பிறந்தநா ளாமதற்கேழ் நாளைத்
தொடர்ந்து பகற்பொழுதிற் றோற்றும்-படர்ந்ததிதி
வார மிலக்கினமும் வந்தவகை கூட்டியொன்பான்
சேரக் கழித்தமிச்சந் தேர். எச

தேரு முதற்பக்கக் கோளுக்கேழ் சீர்புகர்பொன்
சாரிற் பலஸ்திரீகள் சங்கமுண்டாஞ்-சேருமதி
நீள்புதற்கு விந்துவிழும் நேர்சொற் பனத்திற்றீக்
கோடனக்குச் சங்கமில்லை கூறு. எரு

கூறு சனனநாள் முன்சணித்த நாட்களைத்
தேறுமுதற் பார்ப்பதுபோற் றேர்ந்தறிந்தே-யேருதய
மாமதற்கு நாலுக்கெட் டாமிடநற் கோளாகிற்
றுமனையா ளைக்கூடுந் தாழ்ந்து. எகூ

தாழ்ந்த விரதர்கள் காவலர்சன் யாசியர்கள்
சூழ்ந்தவர்க்கு மிப்படியே தோன்றியிடி-லாழ்ந்துறங்கும்
போது கனவிற் புளகிதமா மிந்திரியம்
வாதுடனே சொல்வாய் வகுத்து. எஎ

வகுத்தபுணர்ச் சிக்குறிக்கு வாருதய முன்னே
தொகுத்தெழுது சூரியனு முன்னே-வகுத்தமதி
தன்னையுந்தொட் டெண்ணியிடு தான்மற் றதற்கெல்லா
மன்னவரை விட்டெண்ணு யாய்ந்து. எஅ

கசுஅ சோதிடச் சில்லரைக்கோர்வை என்னும்

ஆய்ந்தவுல கிற்பிறக்கு மானிடருக் கன்பாக
வாய்ந்த பலமுரைக்கும் வண்மைகேள்-சேர்ந்திருக்குஞ்
சந்திர னுற்பலமுஞ் சார்ந்த தினபலஞ்சொல்
விந்துபல னீகே ளினி. எசு

இனிய முதற்பக்கத் தெழுமதியந் தானு
மனையவிரா சிக்கொன்பா னைந்து-தனிநின்ற
வோரையினி னின்றிடுமே லோது மநேகபலன்
சேருந்தே சாதிக்காந் தேர். அ0

தேரு மமரபக்கந் தீண்டு மிராசிக்கா
மோரா று நான்கெட்டில் வீற்றிருக்கிற்-சீருடைய
பட்டாபி டேகமும் பைம்பொன்னி னாபரணந்
திட்டாந் திரம்வருமாஞ் செப்பு. அக

செப்பு மிரவிபுத்திக் கேறுஞ் சிரோபாரந்
தப்புங் கொடூரச்சொல் சஞ்சாரம்-வெப்புபய
மார்க்கும்பார்த் துக்கால போசனந்தா னம்பிணையே
யேர்க்கையுடன் சொல்லுணர்ந் தே. அஉ

உணர்ந்தமதி புத்தி யுவகையுடன் வாழு
மணந்தகல் லோலைவரு மாதே-புணர்ந்த
சிரிப்பும் விளையாட்டுஞ் சேர்ந்துறவு மேலா
தரிப்பு ம்கவுண் டறை. அங

அறையுஞ்சேய் புத்திவரி லாயுதங்க ளேற்பர்
செறியோர்மே னிட்டேரஞ் சொல்வர்-க்றியமுது
பாகசா தங்களிலே பாகமில்லை போசனத்தி
லேக புளிப்பதி கமே. அச

ஏகபுதன் புத்திவரி லேந்திழைமார் தன்னிடத்திற்
போகமுண்டாம் புத்திகல்வி போதவரும்-யோகமுள்ள
பரிகள் குதிரைகளை யாரத் தெரிசிப்பன்
ஞானம்ணி மாதே நவில். அரு

[illegible] தும்வியா ழம்புதிப்பி னன்மறையோ ருற்று
[illegible] டனே பேசிடுவ ரல்லா-னுவமையுள்ள

வித்தைதன லாபம் விளைமதுர மானகறி
யொத்தவ மாம்புசிப்பா னோது. அசு

ஓதுவெள்ளி புத்தியினி லோங்குவெள் ளாடைகந்தம்
போது தனலாபம் பொருந்திவருந்-தீதகலுங்
காசிக்குப் போய்த்தோளமேற் காவடிகொண் டுற்றுரை
நேசமுடன் காண்பா னிலைத்து. அஎ

நிலைமைசனி புத்தியினி னீலவன்ன மான
சிலைமற்றுண் டானதுமேற் சிந்தை-யலைநடையா
னுவிரைகைப் புள்ளகறி நாடிடினுஞ் சென்னிவலி
யேர்பலன்கண் மத்திபமா மெஞ்சு. அஅ

எஞ்சிசிறு பாம்புபுத்திக் கேயரவ முங்காண்பான்
வஞ்சிவிசா ரங்கோபம் வன்கலக-மஞ்சவெனும்
பந்துவிரோ தங்களாம் பண்போ சனவருத்த
மந்தமுள்ள மாதே யறி அகூ

சீரா ரமரபட்சஞ் சேர்ந்தமதி ராசிக்கே
யோராரு மெட்டாறி லேய்ந்திருக்கப்-பாராளும்
பட்டாபி டேகமொடு பைம்பொன்னி னுபரணந்
திட்டாந் திரம்வருமாஞ் செப்பு. கூ0

இந்நூற்குரை.

சென்ம நட்சத்திரமுதல் உதயநட்சத்திரவரையிலெண்ணி எண்ணின தொகையுடனே வாரேசனுக்கு ஒன்பதாம் வாரத்தொகை, ஒன்பது இந்தஇரண்டு தொகையுங்கூட்டி எட்டிற்கழித்தமிச்சம் உதயக்கிரகம் இந்த உதயக்கிரகமு மேற்சொல்லியிருக்கிற வரிசைப்படிக்கு எட்டுக்கிரகமு மெழுதி கடைசியில் வந்தகிரகத்தை முதல்வைத்துத்தலைக்கீழாக எழுதிதலைக்கீழாக ஆரும்புத்தி சுபக்கிரகமானுல் அந்ததினத்தில் ஆதாயம் வருமென்றறிவது

சுக்கிலபட்சப்பகலுக்குப்பார்க்கிற விபரம்.

சென்ம நட்சத்திரமுதல் தினநட்சத்திர வரைக்கும் எண்ணியது ஒரு தொகை, தினநட்சத்திரமுதல் சென்மநட்சத்திர

வரைக்கும் எண்ணியது ஒருதுகை, இந்த இரண்டு துகையும் ஒன்றாகக்கூட்டி இரட்டித்து வைத்துக்கொண்டு மேல் சென்ம நட்சத்திரமுதல் இரேவதிநட்சத்திரவரைக்கும்எண்ணிக் கண்டதுகையுடன் அன்றைய திதிவாரம் உதயலக்கினம் இவையெல்லாம் சுக்கிலபட்சப்பகலுக்கு சவ்வியமாயெண்ணிக்கூட்டி முன்துகையுடன் சேர்த்து ஒன்பதிற்கழித்து மீந்தசேடம் க-க்கு, ரவி உ-க்கு, புதன் ௩-க்கு, ராகு ௪-க்கு குரு ரு-க்கு, கேது ௬-க்கு, சந்திரன் எ-க்கு, சனி-அ-க்கு சுக்கிரன் கூ-க்கு, குசன் இந்தப்படி சுக்கிலபட்சப் பகலுக்கு இரவி ஆதியாய்ப்பார்த்து திசை கட்டிக்கொள்ளவும், இப்படிப் பார்த்துவருகையில் நட்சத்திரமாவது திதியாவது சில நாழிகையிருந்து அப்பால் அதற்கடுத்த திதிகளாவது நட்சத்திரங்களாவது வந்தால் அப்போதைக்கு நூதனமாய் துருவங்கட்டி திசைபிரித்து அப்பால் பலன்சொல்லவும், சுக்கில பட்சத்தில் சந்திரன் உதயமானால் பெலயீன சந்திரன் இந்த சந்திரனுக்கு ரவியினிட நாழிகை க-க்கு எழுதிப் பலன்பார்க்கவும், கிரகங்களுக்கு அவாளவாள் திசை வருடம் க-க்கு நாழிகை காலாகப் பார்த்துக்கொள்ளவும்.

சுக்கிலபக்ஷ இராத்திரிக்கு.

சுக்கிலபட்சம் இராத்திரிக்கு சென்மநட்சத்திர முதல் தினநட்சத்திர வரைக்கும் எண்ணி வைத்துக்கொண்டு தின நட்சத்திரமுதல் செனம நட்சத்திரவரைக்கும் எண்ணி இரண்டு துகையும் ஒன்றாகக்கூட்டி இரட்டித்துக்கொண்டு சென்மநட்சத்திர முதல் ரேவதிநட்சத்திர வரைக்கும் எண்ணி அன்றைய திதிவாரத்துடன் அஸ்தமனமான லக்கினம் இவைகளை சவ்வியமாயெண்ணி ஒன்றாக்கி முன் ரெட்டித்திருக்கிற துகையுடன் கூட்டி ஒன்பதில் கழித்து மேற்படி பட்சத்திரவில் உதித்தகிரகத்துக்கு ஏழாங்கிரகம் ஆதியாய்ப்பார்த்துக் கொள்ளவும் இப்படி பார்க்கையில் ராத்திரியில் ரவியுதித்தால்பெலயீனரவியாகையால் சந்திரனிட நாழிகையை எழுதிப் பார்த்துக்கொள்ளவும்.

## கிருஷ்ணபட்சப் பகலுக்கு.

கிருஷ்ணபட்சப் பகலுக்குசென்மநட்சத்திரமுதல்தின நட்சத்திரவரைக்கும் எண்ணிவைத்துக்கொண்டு தினநட்சத்திரமுதல் சென்மநட்சத்திரவரைக்கும் எண்ணி இந்தஇரண்டுதுகையும் ஒன்றாகக்கூட்டி இரட்டித்து வைத்துக்கொண்டு சென்மநட்சத்திரமுதல்ரேவதிநட்சத்திரவரைக்கும் எண்ணி உதயலக்கினமும் திதியும் இக்கிரமமாயெண்ணி வாரம் கிரமமாயெண்ணி இந்தத்துகையெல்லாம் முன்ரெட்டித்த துகையுடன்கூட்டி ஒன்பதிற்கழித்த சேடம் க-க்கு, ரவி உ-க்கு, குசன் ங-க்கு, சுக்கிரன் ச-க்கு, சனி ரு-க்கு, சந்திரன் சு-க்கு கேது எ-க்கு, குரு அ-க்கு, ராகு கூ-க்கு புதன் இந்தப்படி கிரகம் இக்கிரமமாகப் பார்த்துவருகையில் திவாவில் சந்திரனுதித்தால் பெலயீன சந்திரனுக்கு ரவியினிட நாழிகை சந்திரனுக்கெழுதி பலன்பார்க்கவும் கிரகவரிசையில் ராகுகேது உதயமானபோது மாத்திரம் கிரமமாய் திசைபார்க்கவும்.

## கிருஷ்ணபட்ச இராத்திரி.

கிருஷ்ணபட்ச இராத்திரிக்கு சென்மநட்சத்திர முதல் தினநட்சத்திர வரைக்கும் எண்ணி வைத்துக்கொண்டு தினநட்சத்திரமுதல் சென்மநட்சத்திரவரைக்கும் எண்ணிஇந்த இரண்டு துகையும் ஒன்றாகக் கூட்டிவைத்துக்கொண்டு அப்பால் சென்மநட்சத்திரமுதல் இரேவதி நட்சத்திரவரைக்கும் எண்ணி அஸ்தமன திதி லக்கினம் இவை இக்கிரமமாயெண்ணி வாரமாத்திரம்கிரமமாயெண்ணி இந்தத்துகைகளெல்லா முன் ரெட்டித்ததுகையுடன் கூட்டி ஒன்பதிற்கழித்த மிச்சம் க-க்கு, சந்திரன் உ-க்கு, கேது ங-க்கு, குரு ச-க்கு, இராகு ரு-க்கு, புதன் சு-க்கு, ரவி எ-க்கு, குசன் அ-க்கு, சுக்கிரன் கூ-க்கு, சனி இந்தக் கிரகவரிசையாய் பார்த்துவருகையில் இராகு வுதித்தால் கிரமமாயெண்ணிவரவும், இராத்திரியில் ரவியுதித்தால் பெலயீனனாகையால் சந்திரனிடநாழிகையை எழுதி திசைபார்க்கவும் இப்படிப் பார்த்துவருகையில் ஒன்பதிற்கழித்த மிச்சம் நாலு - இரண்டு மிச்சமானல்

இராகு கேது கிரகங்களாச்சுது அப்போதைக்குக் கிரமமாய் பார்க்கவும் புஷ்யா துருவங் கட்டிக்கொண்டால் அப்போதும் இராகு - கேது உதயமானால் கிரமமாகவே பார்த்துக் கொள்ளவும்.

---

# போககாண்டம்.

## திவாவில் போகம் உண்டு இல்லை என்பதற்கு.

சென்ம நட்சத்திரத்துக்கு ஏழாநட்சத்திரமுதல் தின நட்சத்திரவரைக்கும் எண்ணிவைத்துக்கொண்டு அன்றைய உதய திதிவாரம் இலக்கினமுங்கூட்டி முன்னதையுடன் சேர்த்து ஒன்பதிற்கழித்த சேடம் இரவி ஆதியாய் கிரமமாய்ப் பார்க்கையில் சுக்கிரன்-குருசந்திரன் இந்த மூன்றுகிரகமும் உதய கிரகத்துக்கு ஏழாங்கிரகமானால் திவாவில் பரஸ்திரீ கவனமுண்டென்று சொல்லவும் இதில் புதன் உதயத்துக்கு ஏழாங்கிரகமாகவந்தால் ஸ்திரீ ஆலிங்கனமும் விந்து நஷ்டமும்படும்மற்ற ஐந்துகிரகமும் உதயகிரகத்துக்கு ஏழாங்கிரகமாகவந்தால் ஸ்திரீபோகமில்லையென்று சொல்லவும்.

## திவாவில் சோரஸ்திரீபோகம் உண்டு இல்லைஎன்பதற்கு

சென்ம நட்சத்திரத்துக்கு நாலாம் நட்சத்திர முதல் தின நட்சத்திரவரைக்கு மெண்ணி உதயலக்கினம் வாரம் திதி இதுகளை எண்ணி அத்துடன்கூட்டி எல்லா மொன்றாய்ச்சேர்த்து ஒன்பதில்கழித்த மிச்சம் க-க்கு இரவி ஆதியாயெண்ணி உதயமான கிரகத்துக்கு இரண்டாங்கிரகம் குரு சுக்கிரன் சந்திரன் இவர்கள்வந்தால் திவாவில் சோரஸ்திரீ போகமுண்டு உதயகிரகத்துக்கு இரண்டாங்கிரகம்புதனானால் ஆலிங்கனம் விந்து நஷ்டப்படும் மற்ற ஐந்து கிரகங்களும் உதயக்கிரகத்துக்கு இரண்டாங் கிரகமானால் ஸ்திரீபோக மில்லையென்று சொல்லவும்.

இராத்திரி பரஸ்திரீபோகம் உண்டு இல்லையென்பதற்கு.

ஜென்ம நட்சத்திரத்துக்கு ஏழாம் நட்சத்திரமுதல் தின நட்சத்திரவரைக்கு மெண்ணி அன்றைய அஸ்தமான இலக்கினமும் அஸ்தமன திதிவாரமுங் கூட்டி ஒன்பதிற் கழித்த சேடம் இரவி ஆதியாய் எண்ணி எந்தக்கிரகம் வருகிறதோ அதற்கு ஏழாங்கிரகம் குருசுக்கிரன் சந்திரன் உதயத்துக்கு ஏழாங்கிரகமானால் இராத்திரி அன்னியஸ்திரீ போகமுண்டு.

உதயத்துக்கு ஏழாங்கிரகம் புதனாகவந்தால் ஸ்திரீ ஆலிங்கனம் விந்துநஷ்டம் இல்லாவிட்டால் சொற்பனத்தில் விந்து நஷ்டம் மற்ற ஐந்துகிரகங்களும் உதய கிரகத்துக்கு ஏழாங் கிரகமாகவந்தால் ஸ்திரீபோக மில்லையென்று சொல்லவும்.

சுயஸ்திரீபோகம் உண்டு இல்லை என்பதற்கு.

ஜென்ம நட்சத்திரத்திற்கு நாலாம்நட்சத்திரமுதல்தின நட்சத்திரவரைக்கும் எண்ணி அஸ்தமன திதி வாரலக்கினமுங் கூட்டி ஒன்பதிற்கழித்தமிச்சம் இரவியாதியாய் எந்தக் கிரகம் உதயமாகுதோ அதற்கு இரண்டாங்கிரகம் குரு சுக்கிரன் சந்திரன்வந்தால் சுயஸ்திரீபோகமுண்டாம், உதயத்துக் கிரண்டாங்கிரகம் புதன்வந்தால் ஸ்திரீ ஆலிங்கனம் விந்து நஷ்டம், இல்லாவிட்டால் சொற்பனத்தில் விந்துநஷ்டப்படும் மற்ற ஐந்துகிரகமும் உதயகிரகத்துக் கிரண்டாங்கிரகமானால் சுயஸ்திரீ போகமில்லையென்று சொல்லவும்.

பகலில் இராத்திரியில் பத்திரிகை வரும் என்பதற்கு.

எந்தப் பட்சத்துக்கும் திவாவில் உதயக்கிரகத்துக்கு மூன்றாங்கிரகம், ஐந்தாங்கிரகம் ஒன்பதாங்கிரகம் இவர்கள் சுபக்கிரகமானால் இராஜாக்களாலும் இராசமுத்திரைபெற்ற அதிகாரிகள் பிரபுக்களிடத்திலிருந்து பத்திரிகைகள் வரும் இந்தக்கிரகங்கள் திசைவருஷத்தைப் பாதிபண்ணி எத்தனையாகுதோ அத்தனை வரியுள்ள பத்திரிகைவருமென்று சொல்வது மேற்படி கிரகதிக்கிலிருந்து வருமென்பது.

இராத்திரி உதயகிரகத்துக்கு மூன்று-ஐந்து - ஒன்பது சுபக்கிரகமானால் முன்போலறியவேண்டியது, முன்போல் வரியும் பார்த்துச் சொல்லவும்.

இலாபம் வருவதறிய.

சென்ம நட்சத்திரமுதல் உதயநட்சத்திரவரைக்கு மெண்ணி அந்தத்துகையுடன் வாரேசனுக்கு ஒன்பதாம் வாரத்துகை ஒன்பது இந்த இரண்டு துகையுங்கூட்டி எட்டிற்கழித்த மிச்சம் உதயக்கிரகத்துக்கு ஏழாங்கிரகம் தினம்சொல்லிய கிரகத்துக்கு வரிசைக்கிரமப்படியே எழுதி கடைசி கிரகத்தை ஆதிகிரகமாய் வைத்து தலைகீழாக எண்ணிப் பார்க்கையில் ஆறுங்கிரகம் சுபக்கிரகமானால் மேற்படி தினத்தில் ஆதாயமுண்டென்று சொல்லவும்.

போஜனத்தில் பரிமாறுகிற ஆண்பெண்ணறிய.

உதயக்கிரகம் புதன் - குரு - சுக்கிரன் இவர்களானால் பாலியஸ்திரீயாம், சுக்கிரன்-குருவானால் எவ்வனஸ்திரீயாம், புதன் வாலிபஸ்திரீயாம், சந்திரன்உதயமானால் பெண்-ஆண் இரண்டு பேருங்கலந்து பரிமாறுவார்கள், உதயக்கிரகத்துக்காறுங்கிரகம் புதன் - சுக்கிரன் — வியாழமானால் முன்போல் மூன்றுஸ்திரீகள் பரிமாறுவார்கள், மேற்படி ஆறுங்கிரகம் சந்திரன்வந்தால் பெலமறிந்து ஆண் பெண்ணென்று சொல்லவும்.

உதயத்துக் கொன்பதாங்கிரகம் புதன் குரு - சுக்கிரன் இவர்களானால் முன்மூன்று கிரகத்துக்குச் சொல்லியிருக்கிறபடி ஸ்திரீகள் பரிமாறுவார்கள். க்ஷீணசந்திரன் ஆண், விர்த்தி சந்திரன் பெண்.

போஜன முகமறிய.

உதயத்துக் கிரண்டாங் கிரகம்-நாலாங்கிரகம் - ஆறுங் கிரகம் இந்தமூன்று கிரகங்களில் பெலத்த கிரகதிசை நோக்கின்முகமாக போசனமென்று சொல்லவும், இராத்திரிஉதய கிரகத்துக்கு இரண்டாங்கிரகம் நாலாங்கிரகம் பெலத்தை

யறிந்து போசனஞ் சொல்லவும், உதயக்கிரகம் இரவி குரு வானால் தெற்குமுகம், அல்லது தென்மேற்கு முகம், இந்த முகமாயிருந்து சாப்பிடுவன், சுக்கிரனானால் கிழக்கு அல்லது தென்கிழக்கு, புதன் வடக்கு மேற்கு, குசனுக்கு கிழக்கு வடகிழக்கு, சனி சந்திரனுக்கு வடக்கு-வடமேற்கு, இராகு-கேதுக்கு நேர்கிழக்கென்று திக்கறிந்து கிரகபெலமறிந்து சொல்லவும்.

போஜன இலையறிய.

உதயத்துக் கைந்தாங் கிரகம் கேதுவானால் வாழையிலை கிழிந்தயிலை, பாதிசாப்பிடுகையில் வேறே முகமாயெழுந்திருந்து திரும்பவுட்கார்ந்துண்பன், உதயக்கிரகம் பாபக்கிரகமானால் தையலிலையென்று சொல்லவும், சுபக்கிரகமானால் தலை வாழையிலை நுனியிலையாக விருக்கும்

காய்கறி வகையறிய.

இரவி சீவன், காய் வெண்மைநிறம், கைப்பு சீவக்கிரகம் உதயமானால் மாமிசமுஞ் சொல்லவும், மாங்காய்-பிலாக்காய் வாழைக்காய் காரல்-பெருமரக் கறிவகையென்று சொல்லவும், சந்திரனுதயமானால் மூவகை மதுரம்-மஞ்சள்நிறம்-வெளுப்பு கிழங்குவகை-கீரைவகைகள் - புடல்-பீர்க்கு-பாகல்-அவரை-மொச்சை-துவரம்பருப்புவகை, குஜனுக்குமூலவகை, உறைப்பு-சிவப்பு சிறுபயறு-துவரை இது முதலானதும் சுடுகறி-பொரிக்கறி - வெங்காயம், புதனுக்குத் துவர்ப்பு வகை கைப்பு-பச்சைக்கொடியில் விளையப்பட்ட கறிவகைகள் குத்துச்செடியில் காய்வகைகள் நார்-வித்து மிகுதியா யிருக்கும் முள்ளுடைய கண்டங்கத்திரி முட்காய் பாலில் வெந்தகறிகள், குருவுக்கு சீவன்நிறம் புளிப்பு முதிர்ந்தமாமிசம் மரக்கறிகளில், தேங்காய்-மாங்காய்-நெய்-பால்-உளுந்து வெல்லம் சர்க்கரை-கற்கண்டு கலை இந்த ருசியுள்ள பதார்த்தம் புசிப்பன் சுக்கிரன் சீவக்கிரகம் உப்பு - வெண்மை-புளிப்பு கிரகெலு வறிந்துசொல்லவும், செலத்தில் சம்பந்தமுள்ள மச்சமாமிசமும் பூசினிக்காய் சுரைக்காய்-பால்-தயிர்-நெய்- நிலமாக்

தில் விளையப்பட்ட பதார்த்தம் சனி தாதுக்கிரகம் கைப்பு-கசப்பு-துவர்ப்பு-ரசம்-எள்ளு - எண்ணெய்-உளுந்து விருக்ஷசாதங்கள் வரகுசாதம்-துவரம்பருப்பு, ராகுவுக்கு மூலவகை கைப்பு காறல்-தூதுவேளை - ஆதண்டை - பழுபாகல் இவைகள் எண்ணெயில் பக்குவமானது கம்பு, கேதுவுக்கு கசப்பு-பொன்னிறம் கொள்ளுபருப்பு-காராமணி - தட்டைப்பயர்-பரங்கிக்காய் - கக்கரிக்காய் - வெள்ளரிக்காய் கறி எத்தனையென்றால் உதயக்கிரக நாழிகையும் ஆரூடக்கிரக நாழிகையும் இராக்காலங்களானால் கண்டதுகையிற்பாதி சொல்லவும் பகற்காலமானால் சரியாய்ச்சொல்லவும், இராஜாக்கள் பிரபுக்களுக்கு கண்ட துகையைச் சரியாய்ச்சொல்லவும் மற்ற இதர சனங்களுக்குப் பாதிசொல்லவும், அதற்குக் கீழ்ப்பட்ட சனங்களுக்குக் கால்வரிசை சொல்லவும்.

விருந்துபோஜனமறிய.

ஞாயிறு முதலாய் சாப்பிடுகிற வாரம் வரைக்கும் எண்ணி இரட்டித்து அந்தத்துகைப்படி கறிசொல்லவும்பூர்வபட்சத்தில்பூரணச்சந்திரனாகவும் திங்கட்கிழமையுமானால்அன்றையதினத்தில் நல்ல பலன்களாயும் நெய்பால்வர்க்கவகைபருப்பு தேன் சர்க்கரைபதார்த்தமும் சவுக்கியபலனாகவும் விருந்து சாப்பிடுவன் மேஷம் ரிஷபம் மிதுனம் இது உதயமானால் பால் தயிர் நோக்கானால் மோர் சிங்கம் மீனம் துலாம் மகரம் கடகம் விருச்சிகம் உதயமானால் உதயக்கிரகம் வலிபெற்றிருக்கில் காய் பழம் உதயத்தில் பாபி உதித்தால் அன்றையதினத்தில் காந்தினகறி அழிந்தும் காந்தலுமாம் ஆரூடக்கிரகம்பாபியானால் கும்பல் வாசனையுள்ளசாப்பாடு உதயம்பாபியாயும் ஆரூடக்கிரகம் பாபியுமானால் சாப்பிடுகையில் சண்டைப்பட்டு எச்சல் விழுகிறது மனதுக்கு வியாகூலம் உதயம் எட்டு ஒன்பது இந்த மூன்றுபேரும் பாபியானால் ஓரேவேளைசாப்பாடு உதயம் ஆரூடக்கிரகம் வாராதிபன் இந்த மூன்றுபேரும்பாபியானால் அன்றையதினம் நிர்ச்சளம் உதயக்கிரகமும் வாராதிபனும் ஓரேசுபரானால் அன்றையதினம் போசனசவுக்கியம் சந்தோஷமும் சுபங்களாக இருக்கும் உதயக்

கிரகமும் வாராதிபனும் ஒரேபாபியானால் அன்றைய தினத்தில் குரூரபலனாகவும் கஷ்டபோசனமும் சண்டையும் விரோதமுமாக் நடக்கும். விருந்துகறிவகையறிந்துசொல்ல, உதயக்கிரகம் இரண்டாங்கிரகம் இவர்கள் சுபரானால் அபூருபக்கறியும் சிறுசம்பாசாதமும் இதுகள் புசிப்பன். சந்திரனுதயமானால் மஞ்சள் அதிகமான கறிபதார்த்தம் சாப்பிடுவாயென்றும் சாப்பிடுகிறதற்கு முன்னே தாகத்துக்குச் சாப்பிட்டு அப்பால் போசனம்பண்ணுவாயென்றுசொல்லவும். இரசமுஞ்சாதமும் போசனஞ்செய்வாயென்று சொல்லவும்.

### வாகனயோகமறிய.

பூர்வபட்சம் பூரணச்சந்திரனும் திங்கட்கிழமையுஞ் சேர்ந்துவந்தால் ராசாக்கள் பிரபுக்களாயிருந்தால் யானைகுதிரை முத்தாபரணம் வெள்ளியாபரணம் வெள்ளை வஸ்திரங்கள் இதுகளுண்டாம். பூர்வபட்சமாயிருந்து உதயத்தில் சூரியனுதித்து ஞாயிற்றுக்கிழமையா யிருந்ததானால் ஆபரணம் வாகனங்கள் சவுக்கியபலனாக வருமென்று சொல்லவும்.

### கஷ்டபலன்.

குருவேதை எமகண்டம் உதயத்துக் காமுங்கிரகம்சனி இராகு கேது-குசன் இவர்கள் உதித்தால் தற்காலத்தில் இரண்டுபோரிசமும் சுபக்கோள் நின்றால் சாயுங்காலத்தில் சவுக்கியபோசனமும் ஒரேபொழுதாயிருக்கும் உதயத்தில் குருவுதித்து வேதைவந்தாலும்அத்துடன் எமகண்டவேதை கூடினாலும் அன்றையதினம் அலைச்சலும்கோபமு மன்றியில் சாப்பாடு கிடையாது கிடைத்தாலும் வயிறுநிறம்ப அகப்படாது மனதுக்கு வியாகுலமா யிருக்குமென்று சொல்லவும். உதயக்கிரகம் பாபக்கிரகமானால் முன்சொல்லியபலன் தப்பாமல்வரும். மேற்படி உதயக்கிரகங்கள் பாபராகி சுபக்கிரகங்கள் கூடினால் பாபபலனும் சுபபலனுங் கலந்து சொல்லவும்.

### தனலாபம்வருவதறிய.

உதய கிரகத்துக்கும் ஆறுங் கிரகத்துக்கும் நாலாங்கிரகம் சுபராகில் தனலாபமுண்டு மேற்படி நாலாங்கிரகம் பாப

ராகில் லாபமில்லை. பூர்வபட்சத்தில் ஒன்று ஐந்து ஒன்பது இதுகள் சந்திரனானால், மேற்படி சந்திரவோரை சந்தித்தால் அன்றைய தினத்தில் லாபமுண்டு. அமரபட்சத்தில் ஒன்று நாலு எட்டு இரவியானால் இரவி வோரையுஞ் சந்தித்தால் அன்றைய தினத்தில் வெகுலாபங்கள் இராச்சியாதிபத்தியங்கள் ஆண்டயாபரணங்களுண்டாகும்.

காவல்கூடபந்தனம்.

உதயம் எட்டு ஒன்பது பாபரேயாகில் அதிகாரிக்குப் பயந்து தலைமறைவாய் ஒடையில் அகப்பட்டுக் கட்டுப்படுவான் காவல்கூடத்தில் சேருவன்.

உரோகமறிய.

உதயம் - ஆறு - ஒன்பது - பன்னொன்று - பாபக்கிரகமாகில் தேகத்தில்வாதங் கடுப்பு வலியுமீறிபோசனவருத்தங் காணும். உதயம் இரண்டு ஏழு பத்து இவர்கள் பாபராகில் வயிறுகழிவன் மூர்ச்சையுண்டுசோறுசெரியாமல் வாந்திபண்ணுவன். உதயத்துக்கு ஆறுங்கிரகம் இரவிசனி இராகுகேது செவ்வாயானால் அந்தக்கிரகவேதையுங் கூடினால் வயிறுகழியும் மூர்ச்சையுண்டாம். மேற்படி இரவி சனிகேது இராகு குசன் இவர்கள்உதித்தால் அன்றைக்கு அலைச்சல்சஞ்சாரம் வேளைக்குச் சாப்பாடில்லாமலிருக்கும். இப்படிக்கு அஸ்தமனத்தில் கிரகமுதித்தால் அன்று இராத்திரி முப்பதும் நித்திரையில்லாமல் அலைவரென்றறியவும்.

பிரயாணமறிய.

பிரயாணமறிய, உதயத்தில் சுபக்கிரகங்கள் உதித்தால் சுபகாரியமாய் ஊருக்குப்பயணம்போய் வருவதும் காரியம் அநுகூலமாயிருக்கும். உதயம் ஐந்து ஒன்பது இவர் புதன் சந்திரனாகில் உள்ளூர் சமீபத்தில் நடையுண்டு. மேற்படி கிரகங்கள் சுக்கிரன் குருவானால் சமீபத்தில் நடையுண்டு.

விந்துநஷ்டம்.

உதயமான கிரகத்துக்கு இரண்டாங்கிரகம் சுக்கிரன் குரு - சந்திரன் - புதன் - இவர்களானால் சன்னுசியாயிருந்தாலும் வயது சென்றவர்களானாலும் இளைத்திருந்தாலும் விந்து நஷ்டப்பட்டிருக்கிறவர்களுக்கும் இந்தக்கிரகங்களுதித்தால் சொற்பனத்திலாவது விந்து நஷ்டப்படும் சுக்கில பட்ச இராத்திரிக்கு இரவி ஆதியாகவும் மற்ற இரண்டுதிவாவுக்கும் குரு ஆதியாய்ப்பார்க்கவும் உதயம் நாலு ஆறு இந்த மூன்றுகிரகமும் பாபியானால் பெண்சாதியுடன் சண்டைப்போட மேற்படி பெண்சாதி நஞ்சுபுசித்துச் சாவளென்று சொல்லவும். இந்தப்பலன்களெல்லாம் இராஜாக்கள் பிரபுக்கள் இவர்களுக்குச்சொன்னால் பலிக்கும் மற்றபேர்களுக்கெல்லாம் தாரதன்மியமறிந்து சொல்லவும் தினபலன்சொல்லுகையில் திரயோதசிமுதல் அமாவாசைவரையில் இந்தப்பலன்கள்சொன்னால் பலியாது அதேனென்றால் சந்திரனுக்குப் பலமில்லை கிரகங்களுக்குமொத்தபலன் சூரியன் சிரோபாரம் கொடூரச்சொல் சஞ்சாரம் வெப்பு பயம் அகாலபோசனம் வெண் சிவப்புவகையறு காண்கையும் சந்திரன் நல்ல சேதியாய் ஓலை பத்திரிக்கை வருகையும் சிரிப்பும் விளையாட்டும் சினேகிதருடன் சாவகாசமும் பயந்துவந்துசொன்னவர்க்கு பயப்படாதேயென்றுசொல்லுகையும், சுக்கிலவர்ணவஸ்திரம் பார்க்கையும் பரிமளகந்த புஷ்பங்கள் பார்ப்பதும்செவ்வாய் ஆயுதப்பரிட்சையும் மித்திரசெனவிரோதமும் நிஷ்டூரவார்த்தையும் சாப்பிடுகையில் நறுக்கரிசிச்சோறும் புளிப்பு அதிகமும் சகோதரவிரோதம்புதன் அழகியஸ்திரீகளுடன்செய்தி சொல்லுகையும் புத்தியுடையார்யானை குதிரைகாண்கையும் குருசாமளவர்ணம் காண்கையும் தெய்வப்பிராமண விசுவாசமும் உற்றாருடன் பேசுகிறதும் சாஸ்திரப்பிரசங்கமும்மதுரபோசனமும் சுக்கிரன் வெள்ளை யாடையாபரணமும் சுகந்த புஷ்பங்கள் காண்கையும் தனலாபமும் கங்காஸ்நானமும் அகண்டயோக வாகனம் வருகையும் சனி நீலவர்ன ஆடையாபரணங் காண்கையும் சாப்பிடுகையில் உறைப்பு உப்பு

அதிகமும் அகாரணசண்டையும் பாம்புகண்டு பயப்படுகை யும் இராகுஸ்திரீ மூல்யவிசாரமும் பயப்படுகையும் பந்துவி ரோதமும் போசனவருத்தமும் கேது கறுப்பாடைகாண்கை யும் இந்தப்பலன்களாக கிரகங்கள் பெலன்களறிந்து பார்த் துச்சொல்லவும்.

லாபபலன்.

ஜென்மநட்சத்திரமுதல் தினநட்சத்திரவரைக்குமெண் ணினதுகையும் அன்றைய உதையவாரேசனுக்கு ஒன்பதாம் வாரம்வரைக்கும் எண்ணி அந்தவாரேசனுடைய திசாவருஷ மும் முன்சொன்னபடியே எட்டிற்கழித்த மிச்சம் உதயக்கி ரகம் வரிசையாய் எட்டுக்கிரகமுமெழுதி உதயக்கிரகமுதல் தலைகீழா யெண்ணிப்பார்க்கும்போது ஆறுங்கிரகம் சுபக்கிர கமாயிருந்தால் ஆதாயம்வரும்.

கிரகக்கிரமம்.

சூ-பு-ரா-வி-கே-மதி-சனி-சு-செ.

தினச்சரிதை என்னும்

சோதிடசிகாமணி உரைபாடம்

முற்றிற்று.

---

வடிவுள வேலோன் றுணை.

# நடராஜத் தம்பிரான்

## மகாதிசை வெண்பா.



### காப்பு.

குறள் வெண்செந்துறை.

எந்தனை யளிக்கு மெந்தையைச் செந்தூர்க்
கந்தனை நினைக்கிற் கலங்கிடும் வினையே.

### சூரிய மகாதிசை.

அக்கினியாற் பீடை யவமிருத்துப் பொன்சேத
மிக்கபயஞ் சத்துருவால் வீணலைச்ச-லொக்கவே
கண்ணோய் சிரரோகங் காணும் பிதிர்கண்டந்
திண்ண மிரவி திசை.

சூரியமகா திசையிற் சூரியன்புக்தி.

மன்னர் பகையுண்டாம் வாணிபஞ்செட் டாகாது
பின்னும் பொருட்போம்பி தாவரிட்ட-மென்னுஞ்
சிரரோக மும்பயமுஞ் சேருங்கண் ணோயா
மிரவிக் கிரவிபுசிக் கில்.

சந்திரன் புக்தி.

தனலாப மின்பந் தருஞ்சம்பத துண்டாஞ்
சினமாம் பிணிபகையுந் தீரு-மனமகிழ்ச்சி
வந்து சுகங்கொடுக்கு மார்த்தாண்ட னார்திசையிற்
சந்திரன்வந் தேபுசிக்கிற் றான்.

அங்காரகன் புக்தி.

செல்வந் தனலாபஞ் சேரு நவமணியு
முல்லாச வஸ்திரமுண் டாகுமே-யெல்லோன்

பொருந்து மகாதிசைக்குட் பூபாலன் செவ்வா
யிருந்து புசித்தே யிடில். ௬

இராகு புத்தி.

மிகுவரதை யாந்தனம்போ மின்னுசை மாகுந்
தகையான சத்துருவாற் சண்டை-தொகுதியுட
னெப்பொருளு நாச மிரவிதிசைக் குள்ராகு
தப்பாம லேபுசிக்கிற் முன். ௫

குரு புத்தி.

பாவம் பகைபோம் பரவிவந்த நோயகலு
மேவியசம் பத்து மிகுதியாந்-தாவுபுகழ்
செங்கதிரோன் றன்றிசையிற் செய்யவியா ழம்புசிக்கிற்
சங்கரனுர் சொன்னபடித் தான். ௬

சனி புத்தி.

உற்ற றுறமுறையா ரொன்னலரான் மன்னவரான்
மெத்தப் பலபலவி ரோதமா-மெத்திசைக்கும்
பொல்லாப்பு பொன்சேதம் போஜனவி ரோதம்ரவி
நல்லமந்த னுர்புசிக்கு நாள். ௭

புதன் புத்தி.

குட்டம்வரு நெஞ்சிற் குலைமார்பி னோய்விளையு
மட்டற்ற வாய்வுவந்து மாறுமே-துட்ட
ரடிக்க வடிபடுவா னுதவனில் வித்தை
படிக்கும் புதன்புசிக்கிற் பார். ௮

கேது புத்தி.

இருந்த பதியிழக்கு மின்பம் பொருள்போம்
பொருந்துமுறமுறைபொல் லாப்பாந்-இருந்த
மரணம்வரும் வெய்யோன் மகாதிசையிற் கேது
இரணமது தான்புசிக்கிற் கேள். ௯

சுக்கிரன் புத்தி.

சூலபதி சாரஞ் சுரஞ்சிரரோ கங்களுடன்
சக்கர மெய்வருத்தங் காட்டுமே-கோலப்

பருதி மகாதிசையிற் பண்பாம் பிருகு
கருதி புசிக்கிலது காண். கஎ

சூரியமகாதிசை-முற்றிற்று.

---

## சந்திரமகாதிசை.

பண்பாய்ச் சுபசோ பனம்பாக்கி யம்பசுபால்
கண்காட்சி தீரவா சங்களுண்டாம்-பெண்பேறு
முத்தியோக மாரோக் கியந்தனமே யுண்டாகுஞ்
சித்திதரு சோமன் றிசை. க

சந்திரமகாதிசையிற் சந்திரபுக்தி.

மனைவியுற் றூர்சால வருவர் மகிழ்ந்தே
வினவுவிவா கந்துயிலு மெய்துங்-கனகா
பரணமுட னன்மை பரவுஞ் சசிதான்
றாணியிலிந் தேபுசிக்கிற் றான். உ

அங்காரகன் புக்தி.

வாதங் கிரந்திசொறி பன்னர்கள்ள ரக்கினியாற்
கோதமிகு நாற்காலி கொள்ளையாம்-வேதமிகு
மிந்தப் படிநடக்கு மிந்துதிசை யிற்செவ்வாய்
வந்தேழு மாதமள வும். ங

இராகு புக்தி

சத்துருவால் ரோகத்தாற் றூரத்தாற் பந்துஜனத்
துற்றூரால் வேதைதுட ருண்டாகும்-புத்தி
மெலிவாஞ் சிரரோக மெய்துஞ் சசியில்
வலியகருங் கோள்புசிக்கு மால். ச

குருபுக்தி.

மன்னவரா னன்மைசுகம் வாகனம்பொன் னுடைசெல்வ
முன்னிதவி வாகமிக வுண்டாகு-மென்மேலுஞ்
சம்பத்து மக்களுண்டாஞ் சந்திரனி லேகுருவும்
வந்தபதி னாறுதிங்க டான். ரு

சனி புக்தி.

துக்கம் பயமிகுநோய் சூழ்புத் திரபீடை
தக்கமனை விக்கினந் தானகு-மக்கினியாற்
பீடை மரணம் பெருகுஞ் சசிதிசையி
னூடு சனிபுசிக்கு நாள். சு

இதுவுமது.

சோரரால் ரோகந் துயரமிகு பத்தியங்கள்
கோரம் வறுமை கொடுரங்க-ளாரு
முனிவாற் பொருட்சேத முக்கன் மனையாள்
சனிமதியி லேபுசிக்கிற் றன். எ

புதன் புக்தி.

கொற்றவர்கண் மெச்சிக் குதிரைகுடை தண்டிகையோ
டுற்றவெகு மான முடன்செய்வார்-மற்றுங்
குலஸ்தி ரிக்காண் பிள்ளைவருங் கூர்சந் திரனி
லலத்த புதன்புசிக்கு நாள். அ

இதுவுமது.

மார்பிற் கபஞ்சோக மாறுமிகு வாழ்வுண்டாங்
கார்குழற்பெண் ணாலே களிப்புண்டாம்-பாரதனில்
வித்தைக்கு நட்டமில்லை மேவுபிறை யிற்புதனார்
புத்திபதி னேழுதிங்கள் போக்கு. கூ

கேது புக்தி.

மார்பிற் பிணியா மனதில்வெகு சஞ்சலமாம்
பார்வை யுறவு பகைநாசஞ்-சேருஞ்
சுதன்மரண மாம்பயமா ஞ் சொற்சந் திரனி
லிதமாகுங் கேதுபுசிக் கில். கய

இதுவுமது.

பதிபேத கங்காலி பாக்கியங்கள் பொன்போஞ்
சிதாமற் சர்ப்பபயஞ் சேரு-மதிராத

பேதியதி சாரசுரப் பீடையிரு தன்றிசைக்குள்
கேதேழு மாதமென்பர் கேள். கக

சுக்கிரன் புக்தி.

சோகம் பயம்போஞ் சுபசோப னங்காலி
வாகனம்பொன் னாபரணம் வஸ்திரங்க-டேகத்தி
லாரோக்ய பாக்கியமுண் டாம்பிறையில் வெள்ளிபுத்தி
பாரோர்க் கிருபதுமா தம். கூ

சூரியன் புக்தி.

தக்கமிரு கங்களினற் சத்துருவான் மன்னவரா
லக்கினியா லும்பயமுண் டாகுமே-திக்கெனவே
பீடை சரீரப் பிணியாஞ் சசிதிசையி
னாடுங் கதிர்புசிக்கு நாள். கரு

இதாவுமது.

மன்னவராற் கோபம்வந்து பின்புவரும் பாக்கியங்க
ளின்னிலத்தின் முன்புதுன்பம் பின்புசுக-மன்புடையோர்
கோதம் வரும்பின்பு குணமாம் வெகுசுகங்க
ளாதவனா ராறுதிங்க ளாம். கச

சந்திரமகாதிசை-முற்றிற்று ஆக-உச.

---

## அங்காரக மகாதிசை.

சித்தப் பிரமையுண்டாஞ் செங்கோலாற் சோரரான்
மெத்த பயம்பாண்டு வீக்கங்கள்-ரத்தபித்தங்
காச முழலை கபாலரோ கங்களுண்டாம்
பேசுஞ்செவ் வாய்திசைக்கு ளே. க

அங்காரகமகாதிசையில் அங்காரகன்புக்தி.

அரசர் பகைகலக மாயுதத்தாற் பீடை
விரவுந் தமரும் விரோதந்-தரைமிசையி
லச்சம் வெகுவாகு மங்கார கன்றிசையின்
மெச்சி யவன்புசிக்கு மேல். உ

இராகு புக்தி.

பித்த சுரவாத பீடைகஸ்தி யக்கினியாற்
சத்துருவி னான்மரணந் தானாகு-மெத்தலத்துங்
கள்ளர்பகை யங்கார கன்றன்ம காதிசையின்
மெள்ளவிரா குப்புசிக்கு மேல். ௩

குரு புக்தி.

பார்மேன் மனமகிழ்ச்சி பைந்தொடியார் கூட்டுறவு
சேருந் தனதான்யஞ் செல்வம்வித்தை-பேர்பெருகு
மீறுங் குருபுத்தி முந்நூற்று முப்பதுமொ
ராறுநா ளாமென் றறி. ௪

சனி புத்தி.

சத்துருவா னோயாற் றனநாசந் தேகபங்க
முற்ற பதியிழந்தே யோடுவா-ரத்தலத்தின்
மங்கலனார் தன்றிசையின் மந்தன் மதிமூன்று
திங்கணா ளொன்பதெனச் செப்பு. ௫

புதன் புக்தி.

ஆபரண வஸ்திரமுண் டாஞ்சகல பாக்கியமுந்
தாபம் பிரமியமுந் தானுண்டாஞ்-சோபமுட
னீரிழிவு நோய்வருமே நின்றசெவ்வா யின்றிசையி
லோரி புதன்புசிக்கி லோர். ௬

கேது புக்தி.

வெகுவறுமை துன்பம் வியாதிமனத் தேக்கம்
பகுவா யரவ பயமா-மகிமீதிற்
கிட்டுங் குசன்றிசையிற் கேதுபுத்தி நூற்றுநாற்
பத்தேழு நாளென்பர் பார். ௭

சுக்கிரன் புக்தி.

தாரசுக போகமின்றித் தாழ்விதல்வை போகமுண்டா
மார்பிற் கபம்வறுமை வந்தெய்துஞ்-சோரபயம்
வாது குசன்றிசையில் வன்சுங்க னீரேழு
மாதம் புசிக்கும் வகை. ௮

சூரியன் புக்தி.

தனதானி யஞ்செல்வந் தன்மபுத்தி மேன்மேன்
மனமகிழ்ச்சி ராசவரிசை-யரிவையின்ப
மங்கார கன்றிசையி லாதித்த னூற்றிரண்டோ
டிங்காறு நான்குநா ளில். கூ

சந்திரன் புக்தி.

அதிசுகமே தாத்தி யயனங் கமலப்
பதியா டருஞ்செல்வம் பார்சே-ருதுசாந்தி
செய்யும் விவாகமுண்டாஞ் செவ்வாயி லிந்துபுத்தி
யையமற வேழுதிங்க ளாம். கO

அங்காரகமகாதிசை-முற்றிற்று. ஆக-ருசு.

## இராகுமகாதிசை.

துற்குணம்பொல் லாப்பீடை துன்பமன தேகஙஷ்ட
மக்கினியான் மன்னரா லச்சமுண்டாந்-திக்கெல்லாம்
பாவியென்று பேரெடுக்கப் பண்ணுந் தனநாசஞ்
சீவபயம் ராகு திசை. க

இதுவுமது.

அங்கபங்கஞ் சூதகமுண் டாங்கிரந்தி யாம்விரண
மெங்குஞ் சொறிவறுமை யெய்துமே-பொங்கரவ
பீதியாங் காலிநட்டம் பிள்ளைமனை யாள்ரோகஞ்
சேதியாம் ராகு திசை. உ

இராகுமகாதிசையில் இராகுபுக்தி.

சர்ப்ப பயமரணந் தாகசோ கந்துயரம்
பொற்புறவு நாசம் பொருட்சேதம்-வெப்புடனே
யின்னிலத்தில் ராகுபுத்தி யெண்ணன்கு திங்களுடன்
பன்னிரண்டு நாளிப் படி. ங

குரு புக்தி.

துன்பமறு மின்பமுண் டாஞ் சோபனகல் யாணமுண்டாம்
பொன்பணிதி வாகனங்கள் பூபதிதந்-தென்புடனே

பொங்கரவி னிற்குருவின் புத்தியிரு பத்தெட்டுத்
திங்களு ளாறு தினம். ௪

இதுவுமது.

துக்கமிலை நோயகலுந் துர்ச்சனராற் பீடையில்லை
மிக்கதெய்வ விப்பிரரான் மேன்மையா-மக்காலத்
தன்னியமின் போக மணுகுங் கருங்கோளின்
மன்னுமர சன்புசிக்க வாம். ரு

சனி புத்தி.

சித்தப் பிரமைகொண்டு சேர்தலம்விட் டேகவைக்கும்
பித்தமிகு பீடை பெருங்கலக-மத்த
மகலும் பிதிர்பீடை யாம்வாத மாகு
மிகல்கோளின் மந்தன்வரி னே. சா

இதுவுமது.

வாதபித்த ரோகத்தான் மன்னரா லன்னியரால்
வேதைவிப சாயமற்ப மிக்கதுயர்-பூதலத்தின்
மீறரவிற் காரிபுத்தி முப்பத்து நாலுதிங்க
ளாறுகா ளாமென் றறி. எ

புதன் புத்தி.

வாணிபத்தா லாபம்விவா கம்பணிதி சம்பத்துப்
பூணு மனைவிசுக போகமுண்டா-நீணிலத்தி
லாடரவிற் புந்திபுத்தி யையாறு திங்களுட
னாடும் பதினெட்டு நாள். அ

இதுவுமது.

கூர்ந்தறிவு நன்மைவருங் கூறுந் தமரோர்கள்
சார்ந்த சகோதரம்பெண் சாதியாற்-சேர்ந்தவின்ப
மெய்துஞ் சிலதுக்க மெய்துந் தொளாயிரநா
ளுய்யவரு மூன்றுபுத னூண். கூ

கேது புத்தி.

சுரமரச ரக்கினியாற் றுன்பந் தொடுத்த
கருமங் கெடுமனைவிக் கல்லாற்-பரவு

சுதனுக்குந் தாய்தமர்க்குந் தன்பம் பிதாவுங்
கதங்கேது வேபுசிக்கிற் காண். க0

சுக்கிரன் புக்தி.

நாளு சுகபோக நன்மைசுப சோபனம்பொன்
கோனுல் வெகுமதிகள் குஞ்சரங்கண்-மேனுடுந்
தூண்டா விளக்கரவிற் சுக்கிரனுர் தன்புசிப்பு
மூன்றூண் டிதுவே முறை. கக

இதுவுமது.

சுக்கிரனுண் டோர்மூன்று துய்ய தனஞ்சேரு
மிக்கதெய்வ தாசியின்ப மெய்துமே-திக்கெனவே
யாளடிமை சேருமர சர்சன்மா னஞ்செய்வர்
நீள்கரும்பாம் பின்றிசையி னின்று. கஉ

சூரியன் புக்தி.

வன்னிகள்ளர் சத்துருவான் மன்னவரா லேயினு
லுன்னுபயம் பொன்சேத முண்டாகுந்-துன்னுகரும்
பாம்பின் றிசையிற் பரிதிநாளே மூந்நூறுந்
தாம்புசிக்கு நாலாறு தான். கந

இதுவுமது.

சொறிவிரண நானுத் துயரம் விபசாயங்
குறைவாம் பலகலக் கூட்ட-மறிவழிவு
மோலிகருங் கோடிசையின் மூந்நூற் றிருபத்து
நாலும் பரிதிபுத்தி நாள். கச

சந்திரன் புக்தி.

பூமியினுன் மன்னவராற் பூவையரா லாபமுண்டா
மாமிதயி லாமகிழ்ச்சி வந்தெய்து-மாமின்
னெதிராளி னோதிபகை யேறரவி லிந்து
பதினெட்டு மாதமிது பார். கரு

ஆங்காரகன் புக்தி.

சதிதா னியநட்டஞ் சஞ்சலம்பொன் சேதம்
பதியிழக்குஞ் சோர பயமா-மெதிர்கலகந்
தேவர்ப்பணிதிசையிற் செவ்வாயீ ராறுதிங்கண்
மூவாறு நாளாய் மொழி. கக

இராகுமகாதிசை-முற்றிற்று. ஆக-ருo.

---

## குருமகாதிசை.

தேசாதி பத்தியங்கள் சேரும்விப சாயமிகு
மாசாரம் பூசைபல வாபரணங்-கூசாமன்
மாமாது வந்திடுவள் வாகனவி வாகமுண்டாஞ்
சீமான் குருவின் றிசை. க

இதுவுமது.

வித்தைசெயம் புத்திரசம் பத்து மிகுராசர்
சித்தமகிழ் சன்மானஞ் சேருமே-மெத்த
வபிஷேகம் பூஷணமு ராதிபத்தி யங்கள்
பவிஷாங் குருதிசைக்குப் பார். உ

குருமகாதிசையிற் குருபுக்தி.

கலித்துறை.

புத்திரலாபந் தருமன்னர் சேவையும் பூமியினு
லுத்தமும் வித்தை விவாகமும்பூஷண மாடைகளுஞ்
சித்தமுண்டாகுந் தனலாபஞ் சம்பத்து தேவமந்திரி
யித்தின மையைந்து மாதந்தினம்பதி னெட்டளவே. ங

சனிபுக்தி வெண்பா.

தாரசுத பீடைவருந் தாரத்தா லேகலகம்
பாரறிய வாரோக்ய பாக்கியங்கள்-சேருமே
கப்பல் குருதிசையிற் காரியிட தன்புத்தி
முப்பதுமுந் நான்குநா ளே. ச

புதன் புக்தி.

தனதா னியலாபஞ் சற்குருமேற் பக்தி
மனைவிக்கு நன்மையுண்டாம் வாழ்வு-மினசனத்திற்
றக்க தமையன் றனக்குநோய் மன்னவனின்
மிக்க புதன்புசிக்க வே. ரு

கேது புக்தி.

துக்கம் விஷபீடை தூரதிசா ரம்பிரமை
தக்க பயமனைவி சண்டைதினை-மிக்கதமிழ்
வித்வ சனர்பகையாம் வேந்தர்திசை யிற்கேது
புத்தி தனையறியும் போது. சு

சுக்கிர புக்தி.

சத்துருவி ரோதம்விப சாயநஷ்டம் பந்துசன
குத்திரம்பொல்லாரோகங் கொண்டபெண்டீர்-பெற்றபிள்ளை
தேசத்தி லேதிரியுஞ் சீவதிசை வெள்ளிபுத்தி
யேசுகல கம்பயமு மே. எ

சூரிய புக்தி.

தீரவா சம்ராச சேவைபுண்யம் பூசையா
சாரமனுஷ் டானம்விப சாயம்வெற்றி-பேர்சவுக்ய
மன்னவஸ்த்ரஞ் சத்ருபகை யந்தணர்க்குப் பானுதிங்க
ளொன்பதுமீ ரொன்பதுநா ளோது. அ

சந்திர புக்தி.

மன்னரான் மெய்வரிசை வாகனங்க ளன்னவஸ்த்ரஞ்
சொன்னஞ் சுபசோ பனமுண்டாஞ்-சென்னெனுமே
மென்மேலுஞ் சீவதிசை வெண்மதியீ ரெட்டுதிங்கள்
பொன்மயமா மென்றே புகல். கூ

இ.துவுமது.

விலமாத ராற்போகம் வேந்தரா னன்மை
தலைநாட் பகைஞர்நட்புத் தானு-முலவுபிணி

வாரா தரசன் மகாதிசையிற் சந்திரனு
நேராய்ப் புசிக்கு நெறி ௧0

அங்காரக புக்தி.

மெய்யிற் குறுநோயு மீறுசுர பீடையுண்டாஞ்
செய்யசௌ பாக்கியமுஞ் சேருமே-யையமில்லை
சத்துருவு நாசஞ் சௌரியங்க ளுண்டாகு
மெத்தச்செவ் வாய்புசிக்கு மேல். ௧௧

இராகு புக்தி.

சோரக் கினிபயமாந் தோதகவி யாதிமிடி
யேராக் கலகமனத் தேக்கமாம்-பாராளும்
ராசன் றிசையதனில் ராகுவிரு பத்தெட்டு
மாசமூ வெட்டுதின மாம். ௧உ

இதுவுமது.

கலக மிருகவிடங் கள்ளராற் றுக்கந்
தலபேத மாம்புத்தி தாழ்வாங்-குலவுபுகழ்
வீரியங்க ணட்ட மிருந்தவுற வும்பகையாங்
காரியரா குப்புசிக்கிற் காண். ௧௩

குருமகாதிசை-முற்றிற்று. ஆக-சுா௩.

---

**சனிமகாதிசை.**

பகைநீசத் தேயிருந்த பங்குதிசை வந்தால்
வகைவகையாய் ரோகம்வந்து வாட்டுஞ்-செகமீது
பிச்சையெடுத் துண்பார் பிறிவார் தலமிழப்பார்
லச்சையாங் காரிதிசை நாடு. ௧

இதுவுமது.

சோகம் பயம்விலங்கு துக்கமும கோதரமுண்
டாகுமபி மான மதுகெடுமே-வாகான
மாட்டுக்குச் சேதம் வருமுயுத்த முண்டாகுந்
தீட்டு சனியின் றிசை. உ

இதுவுமது.

பொல்லா மிடிவிலங்கு பொன்சேதம் ரோகபய
மில்லாள் சுதன்வழக்கு மெய்துமே-யெல்லோர்க்கு
மகாதா னுக்குமா டாடுபயிர் சேதமுடன்
போகமறும் பங்குதன்பொ சிப்பு. ௩

புதன் புக்தி.

ஆசாரம் பூசைமா டாடுவிப சாயம்பொற்
காசுபண மன்னமிகு கல்வியுண்டாந்-தேசாதி
பத்தியமுண் டாஞ்சனிக்குள் பண்டிதனு லெட்டுதிங்கள்
சித்தமா யொன்பதுநாள் செப்பு. ச

கேது புக்தி.

துக்கமனு சாரந்தூர்ச் சொர்ப்பனம்பூ தாவேச
மக்கினிரோ கம்மனைவி யாற்றுன்பம்-விக்கனேய்
சென்னேய் சனியிற் சிகெதின்மூன் றுந்திங்க
ளொன்பதுநா ளாமென்றே யோது. ரு

சுக்கிர புக்தி

வேந்தரால் வாழ்வுவரும் வெள்ளாண்மை யும்பலித
மாந்தருமா தானமா போக்கியமாஞ்-சேர்ந்தசுப
சோபனமாங் காரியினிற் சுங்கன்மூன் றுண்டேனே
கோபமின்றி ரண்டுதிங்கள் கூறு. சு

சூரியன் புக்தி.

செய்யதந்தை தேசாந் திரம்போவன் புத்திரர்க்குந்
தையலுக்கு நோயிடுக்கந் தானுண்டாம்-வெய்யமிடி
மூப்பாஞ் சனிதிசையி லொய்கதிரோன் மூந்நூற்று
நாற்பத் திரண்டுநா ளைச்சு. எ

சந்திரன் புக்தி.

பொல்லாப்புத் துன்படிடி போசனவி ரோதமிகு
மில்லான் குருவுக் கிடையூறு-மெல்லார்க்குந்




சுற்றத்தார்க் கும்பகையாஞ் சூழ்காரி யிற்றிங்கள்
பத்தொன் பதுமாதம் பார். அ

அங்காரகன் புக்தி.

மாதா பிதாமரணம் வாழ்தலம்விட் டோட்டிவைக்குஞ்
சூதாய்ப் பலவிசனஞ் சூழுமே-சேதம்பொன்
மந்தனுக்குள் சேய்புத்தி மாதம் பதின்மூன்று
சுந்தரமா யொன்பதுநாள் சொல். கூ

இராகு புக்தி.

சத்துருவி ரோததன தானியமெல் லாநஷ்ட
மற்றுமதி சாரகரம் வந்தெய்துங்-குத்திரமா
மீறுசனி யிற்கருங்கோண் முப்பத்து நாலுதிங்க
ளாறுநா ளாமென் றறி. க0

குருபுக்தி.

தனதா னியம்பூமி புத்திரர்தம் பூசைசெல்வ
மனைவிசுகங் களிப்பு மாம்வா-கனமுற்றூர்
தன்னு னலங்காரி தன்பொன்திங் கண்முப்பான்
பன்னிரண்டு நாளாகும் பார். கக

சனிமகாதிசை-முற்றிற்று. ஆக-எச.

---

## புதமகாதிசை.

பன்னுவிப சாயம் பலிக்கும்வியா பாரத்தா
னண்ணுந் தனம்பூமி லாபமாம்-பெண்பெறுமா
டாடேனே வீடுவிவா கங்களும்வந் தெய்துமே
தேடும் புதன்றிசையின் சீர். க

புதமகாதிசையிற் புதன்புக்தி.

பூசச்சவ் வாதுகந்தம் புட்பம் பசுவெருமை
தேசப்பொ ருள்குதிரை சேருமே-பேசுநிய
ஞானந் தமையினு னன்மைசுகந் தன்மபுதன்
றானுந்தா னேபுசிக்கிற் றுன். உ

### கேது புக்தி.

உற்றார் பகைரோக முளமத்தம் பொன்சேத
மற்றரச ராலும் வரும்பிடை-பற்றுகள்ளர்
நன்னாற் குலத்துக்குத் தானீன மெய்பிடை
பின்னுபுத னிற்கேது வே. ௩

### சுக்கிரன் புக்தி.

அலங்கார வஸ்திரம்பொன் னாபரணஞ் சித்தங்
கலங்கா விவாகங் களிப்பு-நலம்பெருமை
விப்பிரரான் மன்னவரான் மேவுபுத னிற்சுங்கன்
முப்பத்து நாலுதிங்கண் மூட்டு. ௪

### சூரியன் புக்தி.

பூமிவிப சாயமிகும் போஜனசவுக்கியம்பொன்
மாமிதயில் லாச்சுகங்கள் வந்தெய்துங்-காமியஞ்சேர்
சீராறும் புந்தியினிற் செங்கதிரீ ரைந்துதிங்க
ளோராறு நாளாமென் றோது. ௫

### சந்திரன் புக்தி.

தந்தைதாய் பெண்டீர் சகோதரத்துக் கேயீனஞ்
சிந்தைதனி லேவிசனஞ் சேருமே-பந்துசனப்
பீடையயம் புந்தியினிற் போரஞ் சசிபுசிப்புச்
சூடுபதி னேழுதிங்கள் சொல். ௬

### அங்காரகன் புக்தி.

போசனவி ரோதமுற்றார் பொல்லாப் புடன்கிரந்தி
சிசங்கி லேசமுண்டு செந்துகிலும்-ராசர்மகிழ்
தேசாதி காரமுண்டாந் திங்கள்பதி னொன்றுநா
ளிரசிருபத் தேழுகுசனாம். ௭

### இராகு புக்தி.

வாதைபிரு கத்தினன் மன்னவர்கோ பங்கலகம்
வேதைநோய் ஞாதிமரு வார்விகற்பங்-தாதுநட்ட

மேளிதமி ராகுபுத்தி ரெண்டரையாண் டிரொன்பா
ளாளஞ் சிறிதுநன்மை யாம் அ

குரு புக்தி.

நன்மைசுக துன்பமுட னேராச நிஷ்டூரம்
வன்மந் தனச்சேத மானபங்கம்-புன்மைப்
பிணிசத் துருபயமாம் பேசும் புதனி
லணியரசன் வந்துபுசித் தால். சு

சனி புக்தி.

கெண்ட மவமானங் கேடுறவுக் ஈனமா
மண்டுசிவப் புத்தவசம் வந்தெய்துந்-திண்டிரனுற்
காற்சீவ னலாபங் காட்டும் புதன்றிசையிற்
போர்ச்சனிவந் தேபுசிக்கும் போது. கO

இதுவுமது.

ஆத்துமசு மானசன கெண்டமா பத்தீன
நாற்றிசையுங் கீர்த்தியதி காரநன்மை-மாற்றலர்கள்
கூப்பிட்டுச் சண்டைசெய்வார் கோபிப்பார் வீண்கலகத்
தாப்பிடுவார் காரிபுசிப் பாம். கக

புதன் மகாதிசை - முற்றிற்று. ஆகஅரு.

---

## கேதுமகாதிசை.

பித்தஞ் சயம்வறுமை பெண்டீர் விவசாரஞ்
சுற்றத்தா ரும்பழிப்புச் சொல்லுவார்-தத்துண்டாஞ்
சென்னிவலி பொல்லாப்பு சேருங்கே தேழாண்டி
லுன்னியறிந் தன்பா யுரை. க

கேதுமகாதிசையிற் கேதுபுக்தி.

குலத்துக்கோ துன்பங் கொடுங்கோலா லச்சம்
பிலத்ததோர் சத்துருவாற் பீடை-நலத்த
புதல்வர்பொருட்சேதம் பொருள்கலகக் கேது
பதியி லவன்புசிக்கும் பண்பு. உ

சுக்கிரன் புக்தி.

ஆளடிமை காலிநட்ட மாங்கார மேசெனிக்குங்
கோளும் பகைபசியே கூற்றுறேந்-தேளின்விஷ
முண்டாமு டன்றீரு முள்ள பயிர்பலிக்கும்
கண்டவரேழ் திங்கள் கவி. க

சூரியன் புக்தி.

தாக முழலைசுரஞ் சத்துருவாற் கன்னியராற்
சோகமன்ன ராற்பீடை துன்பமறி-மேகரோ
கங்களாஞ் சோராரிது கண்வலியாம் பானுபுத்தி
திங்கணு ளாறுநாள் செப்பு. உ

சந்திரன் புக்தி.

துன்பமிரும் பின்பு சுகங்கலங்க தோகையராற்
பொன்பணிதி பைங்கூழ் பொலிவுண்டாந்-தென்புண்டாந்
தேகசோ கம்பலவாஞ் செம்பாம்பி லேழுதிங்க
டாகமுட னிந்துபுத்தி தான். ௩

அங்காரகன் புக்தி.

வாதுசெய்வார் தன்னினத்தோர் வஞ்சனைசெய் வாண்மனைவி
யூதியமுண் டாஞ்செலவு மொக்கவருங்-கேதுதிசை
தன்னிற் குசன்புசிப்புத் தாறுலு மாதமு
மொன்பதுநா ளாமெனவே யோது. ௪

இராகு புக்தி.

இல்லில் விரோத மிகல்பகைய நாசாரம்
வல்லகள்ளர் சத்துருவால் வாதைவரு-மெல்லக்
கலகமிரு பாம்புங் கலந்தோர் வருட
முலவியநா ளீரொன்ப தும். ரு

இதுவுமது.

பெண்சாதி பிள்ளை பெரும்பகைசெய் வார்கலங்கிக்
கண்வலியா மெத்தக் கரிப்புண்டா-மண்ணின்

மதியா ரடிப்பார் வறுமையோ ராண்டு
பதினெட்டு நாளரவு பார். அ

குரு புக்தி.

மணிசுகம் வாழ்வுமகண் மாடாடு லாபங்
கனவறுமை நீங்குங் களிப்பு-மிடமுடனே
செம்பாம்பிற் றேவகுரு திங்கள் பதினொன்று
வம்புடனே யாறுநாள் வை. சு

சனி புக்தி.

அங்கத்தி லீனமா மக்கினியாற் பீடையாம்
பொங்கு தலபேதம் பொருட்சேதந்-திங்கள்
பதின்மூன்று மொன்பதுநாள் பாழ்வாத பித்தஞ்
சதிகாரி புத்திகுணந் தான். கഠ

புதன் புக்தி.

பூமிவிப சாயமிகு பொங்கமுட னேவிளையு
மாமிதமில் லாமகிழ்ச்சி வந்தெய்துங்-காமமிகு
மந்தத்திற் றுன்பமுமா மானபுத னோராண்டு
தந்தத்தின் மூன்றுநா டள்ளு. கக

கேதுமகாதிசை - முற்றிற்று ஆக - கூசு.

---

சுக்கிரமகாதிசை.

உச்சமித்ர சொட்சேத் திரத்திற் பிலவானு
யிச்சைசுங்க ளூர்திசைவந் தெய்தினு-சச்சமற
வாழ்வுமா டாடுசுக வாகனமுண் டாநீசந்
தாழ்வுவரும் வெள்ளிதிசை தான். க

சுக்கிரமகாதிசையிற் சுக்கிரபுக்தி.

மன்னராற் சாமரைகள் வாகனம்பொன் ஞைடைநிதி
யுன்னியவே ளாண்மையினு லூதியமாம்-பின்னுஞ்
சுபசோ பனங்கீதஞ் சுங்கன் சுயபுத்தி
தபனுற் பதுமாதந் தான். உ

சூரியன் புக்தி.

கண்வலிமெய் பீடைதுன்பங் காவலன்றன் றூற்பயமு
மென்றுஞ் சுரதாப மெய்துமே-தின்னமர்ய்த்
துன்னுஞ் சிறிதுசுகஞ் சுக்கிரனிற் பானுபுத்தி
பன்னிரண்டு மாதமெனப் பார். ௩

சந்திரன் புக்தி.

சிரரோகங் காமாலை சேருமுக சன்னி
மருவு மனைகட்டி வைப்பன்-றுரிதங்கள்
வந்துடனே தீரும் வருஞ்சுங்க ளுர்திசையி
லிந்துமிரு பத்துதிங்க ளாம். ௪

அங்காரகன் புக்தி.

பீனிசமா மார்பிற் பிணிசஞ் சலமனது
மானிலமுஞ் செம்பொருளும் வந்தெய்து-நானிலத்தின்
ஞாதிபகை யுண்டா நல்வெள்ளிக்குசனார்
மாதம் பதினாறு மாம். ௫

இராகு புக்தி.

புலவர்பகை நீரிழிவு பொல்லாச் சிரரோகம்
விலகும் பிணிபோம் விடத்துக்-குலையுமே
யின்ப நிதிலாப மிராகுபுத்தி மூன்றாண்டு
துன்பமின்பம் ரெண்டுமுண்டாஞ் சொல். ௬

குரு புக்தி.

சுபசோபனமகிழ்ச்சி சொன்ன மணியாடை
விபசாய விர்த்தியு மேன் மேவுங்-கபரோகந்
தாதுநஷ்டம் பீடையாஞ் சஞ்சலம்போ நாலெட்டு
மாதங் குருபுசிப்பாய் வை. ௭

சனி புக்தி.

பட்டணப்ப ரப்பதியம் பார்த்தவர்க்கு டம்பமுண்டு
வட்டமுலைப் பத்தினியை வஞ்சிப்பன்-செட்டுப்

பலிக்குமதி லாபமில்லை பாரிற் சனிபூ
ணலைக்குமுப்பத் தெண்மாத மாம். அ

### புதன் புக்தி.

சிந்திதம னோரதங்கள் சித்தியாம் வாணிபத்தான்
மைந்தரிஷ்டா லாலாபம் வாழ்வுண்டாஞ்-சந்ததமு
மேலுண்மையாஞ் சுக்கிரனின் மான்புத்தி முப்பத்து
நாலுமா தம்புசிக்கு நாள் கூ

### கேது புக்தி.

சத்துருவாற் பீடை தனநாசஞ் சஞ்சலமாஞ்
சித்தப் பிரமை சிரரோக-முற்றூர்
மதிமயக்கஞ் சுக்கிரனில் வன்கேது புத்தி
பதினாலு மாதப் பலன். க0

### வாழ்த்து புத்தி.

திங்களுமும் மாரிபெய்யச் செங்கோ னெறிநிற்கச்
சங்கரன்மெய் யன்பாய்த் தழைக்கவே-பொங்குதிசை
யோதும் பயனை யுணரும் பெரியோர்கண்
மேதினியிற் றூன்விளங்க வே. கக

சுக்கிரமகாதிசை - முற்றிற்று.

ஆக - திசை - கூ-க்கு வெண்பா - க0எ.

## நடராஜத் தம்பிரான் மகாதிசை வெண்பா

## முற்றிற்று.

---

வடிவுள வேலோன் றுணை.

சுப்பிரமணியர் அகஸ்தியர்க் குபதேசித்த

# சோதிடசாந்திதீபம்.



காப்பு.

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பராபரையாய் நிறைந்துநின்ற சத்தி காப்பு
பாதிமதி தரித்தசடைச் சிவனே காப்பு
நிராதார மானசின் மயமே காப்பு
நெடும்புழைக்கைக் கரிமுகவ னிமலன் காப்பு
தராதரமீ ரேழ்வகுத்த மறையோன் காப்பு
சாத்மீக குணசகிதத் திருமால் காப்பு
புராதனராம் மும்முதற்கும் முதலாய் நின்ற
புனிதஜெக ஜோதிபரம் பொருளே காப்பு.

பரமான மனோன்மணியா முலக மாதாள்
பார்வதியா ளென்னையுமே மடியில் வைத்துத்
திரமா யெந்த னுக்குச்சோ திடதீ பத்தைத்
தெளிவாக ஐம்பத்தொன் றுபதே சித்தாள்
வரமாக யானுமிதை வாங்கிக் கொண்டு
வையகத்தில் மனுக்களுக்கிங் குதவி யாக
அறஞ்செய்வா யென்றுசாந் திலெண்ணி நிற்கு
மகஸ்தியா யிந்நூலை யருள்செய்தேனே.

செய்தேனு னிந்நூலை யுனக்குச் சொன்னேன்
தேர்ந்துகொள்வாய் பொதிகைவரைக் கும்பநாதா
வையகமேல் வாந்தமைச்சு மனுவுக் கெல்லாம்
வாழ்க்கைநலம் இருப்பிடத்தின் மனதி னேவு

தையலெனும் மாதர்கள்பால் மோகம் வைத்துத்
 தாரணியிற் றீவினைகள் செய்த வாறும்
ஐயமென்ற கொலைகளவு முன்னோர் செய்த
 அறமழிவு பொருளில்வந்த ஆசை பாவம். உ

பாவமென்ற தோஷமெல்லாம் சொல்லக் கேளாய்
 பாலகனே மனமடிவின் பயனைத் தானும்
சீவன்முத்தி தேடுகின்ற பெரியோர் தங்கள்
 செலவுக்காய் வைத்திருந்த பொருளைப் பார்த்து
ஆவலுட னெடுத்துப்பின வைரைக் கொன்று
 அநுதினமும் நெஞ்சில்வைப்பா ரறியா மற்றுன்
தாவி விழும் பயிர்தனிலே ஆடு மாடு
 சாடியபோ தேபிடித்துத் தண்டித் தாரே. ௩

தண்டித்த பாவமெல்லாந் தீர்க்க வேண்டிச்
 சரியாக லக்கினக்கோ ளியல்பு கண்டு
கண்டித்த சாஸ்திரத்தின் வகையும் பார்த்துக்
 கவனித்து மனதடக்கம் வைத்துக் கொண்டு
பண்டுரைத்த சாந்திமுதல் அநேக நூல்கள்
 பகுத்துரைத்தோர்கோணின்றபலனுஞ்சொல்வோம்
வண்டிருந்த குழலுமையாள் பாதம் போற்றி
 வரைமுனியே சொல்லுகிறேன் அஞ்சிடாதே. ச

வேறு.

அஞ்சாறுக் குடையோன் காரி யானதோர் பதினொன் றேக
மிஞ்சியே இந்து தானும் மேஷியே யிருக்கு மாகில்
எஞ்சலில் குளிகன் றானும் இருபக்க மிருக்க நோக்க [கும்
வஞ்சியர் கொலைப்பெண்வீட்டில் வளர்க்குந்தாய்போலேநிற்

நின்றதிற் செவ்வா யாறில் நேர்த்தியாய் வியாழன் நோக்கில்
வன்றினி லிருக்குந் தெய்வம் வசமியன் சொந்த மாகும்
இன்றுநற் சுபரோ பத்தில் இருந்திடப் பார்க்கும் போது
நன்றுதா னெனினு மத்தை நயப்பட வுரைசெய் வீரே. ரு

உரைசெயு மைந்தாம் வீடு சிங்கமாம் உதயோன் காரி
குறைசெயுங் கேது புந்தி கூடியே இருக்கும் போது
மறையவன் நோக்கா ணாகில் வாள்விழி ரோக மாகும்
நிறைவுடன் பானு பூசை நித்தியங் கூறி டாயே. ௭

கூறிலா பநவன் பத்தோன் கூடிடப் பிரபுஸ் தானம்
சீறிய ராகு மந்தன் செவ்வாயுந் திரும்பிப் பார்க்க
வீரியத் தானத் தோனும் வியமதி லிருந்து வாழில்
ஆரிய ராஜன் கையி லரும்பொருள் கவர்ந்த தோஷம். ௮

தோஷத்தின்விதமேதென்னிற் றுலக்கமா யுரைக்கக்கேளாய்
பாசத்தோன் வாதை யெல்லாம் பறந்திட ராஜன் கையில்
வாசித்த முன்னோர் வாங்கும் மாநிதி பிரதி பூதம்
நேசித்த தாலே வந்து நேரிட்ட ரெத்த காசம். ௯

காசமே போவ தற்குக் கருமங்கள் சொல்லக் கேளாய்
வாசமாய்த் தீர்த்த மாடல் வளர்புண்ய க்ஷேத்தி ரங்கள்
நேசமாய் அன்ன தானம் நேர்த்தியாய் ஓமஞ் செய்தால்
நாசமாய்ப் போகும் நோயே நவசிதம் பரத்தைக் கட்டே. ௧௦

ஓசைபா மைந்தி னுத னுக்கும ராசி யேறி
நீசமா யிருக்கப் பின்னும் நிலமகன் கூடி நோக்கில்
ஆசையா மானு ரோடே அநுபவித் தேகும் போது
பாசமா யிவன்பின் னாலே பற்றிடுங் கறுப்புத் தானே. ௧௧

கருமத்தோன் நீசனாகிக் கேதுவுங் கலந்து நிற்கில்
வருமத்தோன் மந்த னாகி மாந்தியு மதியுங் கூடிற்
கெருவித மாக மாற்றார் கிரகத்தி லிரவிற் சென்று
நெருப்பிட்ட தோஷ மென்று நிக்ஷய மிவர்க்குச் சொல்லே.

அந்தநன் வியாழன் றானும் ஆறெட்டிற் பகைத்து நிற்கச்
சுந்தர லக்ன நாதன் தோன்றினு லவற்கங் காறில்
முந்தவே தன் குலத்தில் முன்னோர்கள் மறையோர்க் கீய்ந்த
தொந்தமாம் பூமி தானம் இவன்வசம் வந்த தோஷம். ௧௩

அந்தணன் பூமித் தான மமர்ந்திட வுச்ச மாகச்
செந்தலைச் செவ்வாய் தானுஞ் சேர்ந்துமே நோக்கி நிற்கில்
மந்திர மாக முன்னோர் வைத்தநிம் பாசுக் குத்தான்
சுந்தரப் பந்து வோடு சுபமணஞ் செய்யாத் தோஷம். ௧௪

நல்லவன் தனத்தா னாகி நாலுள்ளோன் கூடி னாலும்
மெல்லவே செவ்வாய் தானும் ஆறும்வீட் டுடையோ னாகில்
வல்லமை கேதுஞ் செவ்வாய் மாலுமே கூடி நோக்கில்
அல்லலாம்நிதியைப்பேர்ப்பா ரலகையாலனர்த்தமுண்டாம்.

உண்டான வினைக டூர உண்மையா யுரைக்கக் கேளாய்
சண்டாள நீசத் தெய்வந் தானுமே அணுகித் துன்பம்
பெண்டாட்டிபிள்ளைதன்னைப் பிணிகட்குள்ளாக்கிவைக்கும்
கண்டநா ளோம சாந்தி செய்துடன் ரக்ஷை கட்டே. ௧௬

மந்திரி யான நற்கோள் மறைந்துபின் னாலே பார்க்கில்
சந்த்ரனைச் சிரசிற் சூடும் சம்புவை நிந்தை செய்து
சந்தரு முன்னோ ராத்ம பூசையை இவன்த விழ்த்து
விந்தையாய் ஞானமார்க்கம் விளம்பின தாலே தோஷம். ௧௭

நாவிடம் பாவ ராகி யாறுளோ னவனை நாடில்
மாலுட னுருதா வோடு வருந்திட நாற்கால் ஜீவன்
சீலமாய்ப் பயிரிற் றின்ற சேதத்தைச் சகித் திடாமற்
றூலத்தி லடித்த தோஷந் தன்னையும் பிடித்த தன்றே. ௧௮

களத்திரத் தான னோடே கள்ளர்கள் கூடி நோக்கத்
தழைத்திட லக்ன நாதன் அவர்தனக் காறில் நிற்க
விளைத்திடச் செவ்வாய் தானும் மேவியே யிருந்து பார்க்கக்
களையத்துப் போகக் கள்ளப் புருடனைக் கடிந்த தோஷம்.

கண்டமாம் நாலாம் வீட்டிற் காரியுஞ் செவ்வாய் சேர
அண்டர்தம் மாசா னோடே ஆதித்தன் கூடி நோக்கப்
பண்டுள முன்னோ ராலும் பார்த்திபர் பாவ ராலும்
முண்டைகள் கெற்ப மாகி உயிர்தனை முடித்த வீடாம். ௨௦

வீட்டையுஞ் சுத்தட் பாழாய் விளங்கவு மிடித்துப் போடு
நீட்டிய சேதுஸ் தான நிலத்தினி லோமஞ் செய்து
நாட்டினிற் சுமைக ளாங்குங் கல்லையு மிடித்து நாட்டித்
தூட்டிக மாகத் தானும் உடன்வர்க்கத் தகடு கட்டே. உக

ஆறிடந் தீக்கோ ளாகப் பகைவீட்டி லேறி நிற்க
சேருடன் நாலு மொன்றும் நினைவுடன் பார்த்து நின்றால்
கூறிடு மிவன்கு லத்திற் குலதெய்வ மாக மாடன்
சீறியே அதட்டி வாங்கிச் சிந்தித்து பலனை செய்யும் உஉ

அதிபில மிரவி யொன்பான் வியமதி லேறி நிற்கப்
பதிதனிற் பிதுர்க்கள் முன்னோர் பழிகளாய்ச் செத் திறந்து
கெதிபெற விருந்த தோஷங் கெடுதிகள் மிகவே செய்யும்
சதிபெறப் புத்ர லாபந் தந்துமே கெடுத்துப் போடும். உங

போடுமென் றெண்ணரிமைந்தா புத்தியோ டிதனைச்செய்வாய்
நீடிய தீர்த்த மாடல் தலங்களில் நிவர்த்தி யாக்கல்
தேடிய நதித டாகம் சிந்துவிற் றானஞ் செய்யிற்
கூடிய பிதுரின் சாபந் தீர்ந்துபோங் குணமாம் சாந்தி. உச

சாந்திக ளெல்லோ ருக்குஞ் சாற்றுவேன் றெய்வ முன்பில்
ஏந்திழை கரத்திற் றீபம் இலங்கிடப் பதுமை வைத்து
வாய்ந்திட வேணு மந்த மனைதனிற் சாந்தி வோமம்
சேர்ந்திடு திருவி னொத்ரம் குறித்துநீ மனையில் வையே. உரு

ஒன்பதுக் குடையோ னாறில் ஒப்புர வாக மேவி
அன்புடன் லக்ன நாதன் அவனையும் பகைத்து நிற்கில்
இன்பமீ யிவன்கு லத்தி லெய்திய பிதுர்க்க டோஷம்
நன்மையோ டதனைத் தீர்த்து ரட்சையு மெழுதிக் கட்டே. ()

ஆறிடம் வியாழ னாக வதற்கெட்டில் மேவி நிற்கச்
சீறியே குளிகன் றானுஞ் சிதைக்கவே அவரை நோக்கில்
மீறியே மனையில் நாற்காற் சீவனுந் தீயால் வெந்து
பாரிடந் தன்னிற் செல்வம் பறந்திடுந் திருவும் நீங்காள். உஎ

நாலிடம் மந்த னாகப் பத்தினில் நாடி நிற்க
ஏலவே இவனி ருந்த இல்லினிற் பில்லி மாடன்
கோலமா யிருந்து புத்ரன் கொடுத்துமே கெடுத்துப் போடும்
மூலமா மதைநீ போக்கி மனைதனில் முன்போல் வாழே.

எந்திரத் தகட்டுக் கேமம் களஞ்சிநா லெடுக்க வேணும்
சுந்தர மார்பொன் மாது ரட்சையின் சொரூபத் யானம்
மந்திரம் லெட்ச யோமம் தர்ப்பணம் வழியாய்ச் செய்து
தந்திர சுசியா யில்லிற் றூபித்துப் பூசிப் பாயே. உ௲

சத்துருத் தானந் தன்னிற் சனிமகன் கேதுங் கூடில்
மித்திர னாக மந்தன் மேவியே இருக்க நோக்க
வைத்திடும் பில்லி சூன்யம் வருங்குட்டிச் சாத்தன் றோஷம்
நித்தனைத் தினமும் போற்றி நீயபி டேகஞ்செய்யே. ௩௦

செய்பவன் பாப்பா னாகில் அவனுமே செய்து கொள்வான்
வையக மதனில் மற்ற சாதிக்கார் வழியாய்ச் செய்வார்
வெய்யவன் போலே யுள்ள வேதியன் றன்னைக் கொண்டு
செய்யவே மண்ட லாபி ஷேகமும் பூசை செய்வாய். ௩௧

வாய்த்திடு மனதிலெண்ணி வருந்திய துயரம் நீங்கும்
ஏய்த்திடும் பில்லி சூன்யம் இருந்திட மகன்று போகும்
காய்த்திடுங் கொடிகள் போலக் கவருகள் வீசிப் பூத்துச்
சாய்த்திடுங் குழைகள் போன்ற தனமிகு மகிழ்ச்சிசேர்வான்.

வே று.

அட்டமத்தோன் சுக்கிரனும் பிலம தாக
அவனையுமே குளிகனுந்தா னன்பாய்ப் பார்க்க
வட்டமுலை மின்னாட்கு முன்னே வந்து
வாழ்ந்திருந்த சுமங்கிலிப்பெண் கோப முண்டு
கஷ்டமுறு மதனாலே கவிதன் வாரம்
கருதியந்த விரதமதை வைத்துக் கொண்டு
இஷ்டமுடன் செம்புடவை படையற் போட்டு
இயல்பாகத் தொழுதிடவே யின்ப மாமே. ௩௩

தன்மமென்ற வொன்பதுள்ளோன் பத்தோனுந்தான்
தயவாக வொர்தவிடத் திருந்திட் டாலும்
வன்மமென்ற ஆறோனும் பகைத்துக் கூடி
மருவியே சனிமகனும் பார்த்து நின்றால்
நன்மையுள்ள நந்தவனஞ் சாலை சோலை
நாட்டினிலே மடாலயங்க ளன்ன சத்ரம்
இன்னபல னென்றிதனை யறியா மற்றோன்
இவனழித்தோ னென்றுறுதி யியம்பு வாயே. ௩௪

தானான பாவமது தீர்க்க வென்றால்
தாரணியில் நந்தவனஞ் சாலை சோலை
தேனான கருப்பஞ்சார் நீர்மோர் மாங்காய்
திகட்டவே மாந்தருக்குக் கொடுக்கவேணும்
மானான நதி மதியைப் புனைந்தோனுக்கு
வாரவபி டேகமொன்று செய்ய வேணும்
கோனான சிவன்சிரசில் வில்வம் போடக்
குடிவிட்டோ டிடுமப்பா தோஷந் தானே. ௩௫

காரகத்தோ னேழிடத்தோ னிருந்த வீட்டிற்
களத்திரமாந் தானமதி லேழிற் கேது
சாரமா யிருந்தாலும் பார்த்திட் டாலுஞ்
சார்ந்ததொரு தோஷத்தின் விபரங் கேளாய்
நீரணிந்தோன் சத்திமுத லாலயத்தில்
நிட்சயமாய் மங்கையரைப் புணர்ந்த தோஷம்
ஆரணத்தோன் வழிவந்தோர்க் கன்ன தானம்
அரனுற்கு மபிடேகஞ் செய்யச் சொல்லே. ௩௬

சந்திரனும் மந்தனுமே யொன்றாய்க் கூடுந்
தானமதிற் குளிகனுமே இருப்பானாகில்
அந்தணன்மூ பிரண்டெட்டுப் பன்னிரண்டில்
அன்புடனே இருக்கவந்தோர் தமக்குக் கேளாய்
தந்திரமாய்க் கோவிலிலே மணியஞ்செய்வார்
சரசமாய்ச் செவ்வாயுஞ் சனியைப் பார்த்தால்
எந்தவித மாகவுமா லயத்திற் கொள்ளை
யிட்டவனென் றிவன்றனையு மியம்பு வாயே. ௩௭

இட்டுவந்த தோஷமதைத் தீர்க்க வென்றால்
இயல்பாக நானுரைப்பேன் கேளாயப்பா
திட்டமுட னாலயத்திற் றேவிக் கேதான்
சிறப்பாகச் சொர்னநகை சாத்தச் சொல்லு
அட்டபந் தனமுதலாய்ச் செய்து பாப்புக்
கன்னமிட்டா லவன்தோஷம் போகுங் கண்டாய்
அட்டதிக்கி லவனெதிர்த்தாற் செல்லும் வெல்வா
னவனியிலே அதிகசெல்வ னாவான் பாரே. ௩௮

வீரியத்தோன் குஜனாக களத்ர கர்மம்
மேவிநிற்க வந்தவற்குப் பலனைக் கேளாய்
கூறியதோ ரிவன்குலத்தில் விவாக மில்லாக்
கோதைகொலை யான்தினால் வந்த தோஷம்
பாரியதன் குலந்தனிலே இல்லா விட்டாற்
பாரியவள் கொடிவழியும் பாரு பாரு
ஆரிதனை யறிவார்கள் கணேசன் வைத்து
அரசுக்கும் வேம்புக்கும் மணமுஞ் சூட்டே. ௩௯

லக்கினத்தோன் நாலிடத்தில் மேவி நிற்க
லக்கினனைச் சத்துருதான் பகைத்துப் பார்க்கத்
திக்கெனவே அவனிருந்த காணி யாட்சி
சேர்ந்ததையும் வேறொருவன் பிடிங்கிக் கொள்ள
அக்கணமே அவன்வெறுத்தங் கவனைக் கொல்வான்
அதனாலே வந்ததடா அவற்குத் தோஷம்
சிக்கெனவே அவனைப்போ லுருப்பி டித்துச்
செய்யோமம் சாந்தியேந் திரத்தாற் றீரும். ௪0

வேறு.

புத்திரத் தானன் பொன்னன் போயுறை யிடத்திற் றானும்
குத்திர மந்தன் ராகு சிகியுடன் மாந்தி கூடப்
பெத்திடும் பிள்ளை கட்குப் பிரபல சர்ப்ப தோஷம்
சித்திர மாய தற்குச் செய்யச்சொல் லரவ சாந்தி. ௪௧

ஆறுளோன் பொன்கோ ளாகி யவனேழில் மேவி நிற்க
சேருள்ள வேழோன் றானும் அவனையே பகைத்து நிற்கப்

பாரினில் வீரியந்தோ னவரைப்பார்த் திட்டா லுந்தான்
காரியர் போலே சேரும் நயந்துமோகினியாம் மாதே. ௪௨

மாதெனும் மோகினிப்பெண்வராததற்குபாயஞ் சொல்வேன்
சாதக வனுமா னேந்த்ரந் தகட்டினி லெழுதிக் கட்டி
கீதவேதத்தி லோதுங் கிரகசாந் தியுமே செய்து
தீதற வீட்டு வாசல் செபஞ்செய்து முழக்கி டாயே. ௪௩

பத்தாவின் தானந் தன்னிற் பாவிகள் பிலத்தி ருந்து
முத்தார மாக மாந்தி யுடல்தனைப் பார்ப்பா னாகில்
வத்தாத தீர்த்தம் சோலை மலைதனி லிருந்த பேய்கள்
எத்தேச காலம் வந்து மிவனையே போகிப் பாரே. ௪௪

போகங்கள் செய்த தெய்வம் போவதற் குபாயங் கேளு
தேகங்கள் துவாலே போட்டுத்தெய்வத்தைப்பிரித்துவைத்து
ஆகம சாந்தி யோமம் கும்பத்தின் நீரா லாட்ட
வேகமா யனும னேந்த்ரம் வீட்டுமே கட்டி டாயே. ௪௫

பூவையர்க் கோன்பான் வீடு தனிற்சிகி போந்தி ருந்தால்
ஆவது அஞ்சாம் வீடு குருவுக்குப் பகையே யானால்
தாவளந் தன்னிற் றானே தரைவரைந் தொட்டிப் பின்பு
தூவிடு பெலியுஞ் சாந்தி துறைமுறை தகடு கட்டே. ௪௬

கட்டிடா திருந்தா யானால் காசினி யோரே கேளும்
வட்டணி கொங்கை மின்னாள் மறுபடி பூப்பு றாமற்
கட்டிடச் செய்து வைக்குங் காலத்திற் பலனி ராது
ஓட்டிடும் வாதை தீர்த்தா லுலகினில் வாழுவாளே. ௪௭

வேறு.

உக்குமத்திற் பிறந்தோர்க்கு உடனே சொல்லு
ஒசையதிற் பிறந்தோர்க்கு முன்னிச் செப்பு
பக்குவமாய் லக்கினத்தின் கோள்கள் நின்ற
பலாபலத்தைப் பார்த்துநீ விரித்து ரைப்பாய்
லக்கினத்தோ னங்கிஷங்க ளோறும் ராசி
லகுவாகப் பாராதே மனது வைத்துச்
சக்கரமா மிதனுடைய ஆட்ட மல்லாற்
சாகசத்தி லிதன்பெருமை யில்லைப் பாரே. ௪௮

வாழப்பா இந்தநூ லுலகத் தோர்க்கு
வகைவகையாய்ச்செல்வதற்குத்தெரியச்சொன்னேம்
நாளப்பா முதற்சென்மம் இந்தச் சென்மம்
நலமாகப் பார்த்துமே கேட்டு நீயும்
பாழப்பா போகாமற் சொன்ன சாந்தி
பதிவாகச் செய்துவிடப் பறக்குந் தோஷம்
தேளப்பா முட்கொடுக்கை யெடுத்தா யானல்
தெய்வகடாட் சமுமவற்குச் சிறக்குந் தானே. சகூ

கேளப்பா இந்தநூ லேம்பத் தொன்றுங்
கிடைத்ததென்றால் கணிதமெலா மிதன்கீ ழாகும்
வேளப்பா யென்றனுக்கு விரித்துச் சொன்ன
விதமெல்லா முன்றனுக்கு விளம்பி னேன்தேர்
வாழப்பா இந்நூலே மனத்துள் வைத்து
வையகத்தில் வருந்திவந்தோர் தமக்குச் சொல்லு
கோளப்பா இல்லையடா உனக்குத் தானும்
குவலையத்தோர் குற்றமெலாந் தீர்ந்துப் வாரே. ருO

ஆரப்பா இந்தநூல் கொடுக்கப் போறூர்
அவனியிலே கிடையாது அருமை யாகும்
சீரப்பா மெஞ்ஞானி யானோர் முன்புந்
தெய்வபக்தி மிகவிருந்தோர் முன்பிற் காணும்
நேரப்பா அவருடைய பாதம் போற்றி
நீமறவா திருந்தாக்கா லுனக்குக் கிட்டும்
தேரப்பா இதையறிந்து உலகிற் சொன்னாற்
றேவரினு முனேப்பெரிதாய்த் தேடுவாரே. ருக

சோதிடக் கன்மகாண்டம்.

**சாந்திதீபம்.**

முற்றிற்று.

---

உ

வடிவுள வேலோன்றுணை.

அகஸ்தியர் சுந்தரானந்தற் குபதேசித்த

# சோதிடக் கன்மகாண்டச் சுருக்கம்.

காப்பு.

ஆரணப் பொதிகை வாழு மகத்திய முனியே யுன்றன்
பூரணப் பாதம் போற்றிப் புகலுவேன் சுந்தரா னந்தா
காரண மாக விந்தக் கலியுகந் தன்னி லுள்ள
வாரணஞ் சூழ்ந்த பூமி வந்ததோர் மனிதர் செய்கை. க

செய்கையைக் கேளு மையா ஜென்மநா ளறியா தார்க்கும்
பையவே மாசம் வாரம் பக்கமுங் கரண யோக
மையனே பிறந்த நேர மறிந்தவ ரறியாப் பேர்க்குந்
துய்யனே துயர மின்பந் துக்கமும் வாழ்வுண் டாச்சே. உ

ஆச்சையா கிரக தோஷ மறிந்தவர் தீர்த்துக் கொள்வார்
ஆச்சையா கிரகதோஷ மறியாத பேர்கட் கெல்லாம்
ஆச்சையா தோஷந் தீர்க்கு மதுவகை யெனக்குச்சொல்வீர்
ஆச்சையா தாகம்பொத்தஅதற்குநா னுண்மை கேட்டேன். ௩

கேட்டசுந் தரனே மைந்தா கேளுநீ முற்கா லத்தில்
நாட்டிலே கர்ம காண்டம் நாமது வகுத்துச் சொன்னோம்
கூட்டியே யதனை நன்றாய்ச் சோர்வின்றிச் செய்வா யாகிற்
பூட்டியே கிரக தோஷம் போய்விடும் நல்ல தாமே. ௪

நல்லது கேளு மையா நாட்டிலே மனிதர் தம்மிற்
செல்வர்க ளநேக ருண்டு சிறுமைய ரநேக ருண்டு
எல்லவர் தமக்குங் கர்ம காண்டத்தி னியல்பைச் செய்யார்
வெல்லுதே வறுமை யாளாய் வெந்துயர் படுகின் றாரே. ௫

படுகின்ற துயரந் தன்னைப் பார்த்துநான் கிலேச மாகி
யடுமைந்தா னும்மது பாலி லதுவகை கேட்போ மென்று

சடுதியில் வந்தே னையா தாமினி யெளியோர்க் காக
விடுகவே கர்ம தோஷம் மெல்லிதா யருளு மென்றான். சு

என்றசுந் தரனே நன்றே இசைத்தனே யுலகந் தன்னிற்
கன்றவ ரெளியோர்க் காக கர்மசூஸ் திரத்தைக் கேளாய்
அன்றவர் ஜெனித்த வாண்டும் அதுமுதல் நடப்பி னுண்டுஞ்
சென்றதோர் வருட மெண்ணிச் செய்முறை செப்புவோமே.

செப்புவோ மாண்டொன் றுக்குச் செப்புமஞ் சாடி வீதம்
துப்பறுந் தங்க மொன்று தூவெள்ளி யதுபோ லாகும்
இப்படி யொவ்வோர் நாகம் இணக்கியே இருப்புக்கிண்ணம்
ஒப்புடனுண்டுதோ றுமொவ்வொன்றாய்ச் செய்துகொள்ளே.

கொள்ளவே தங்க நாகர் குழமையாம் வெள்ளி நாகர்
மெள்ளவே செம்பு நாகர் வேறுவே றியற்றி வைப்பாய்
உள்ளதோ ராண்டொன் றுக்கு ஒருபடி யுளுந்து வீதம்
தள்ளாதே யெள்ளவ் வீதந் தானென்றாய்ச் சேர்த்துவையே.

சேர்த்துமே சென்ற வாண்டிற் சேகரித் தொன்றாய்வைத்துப்
பார்த்துமே வெள்ளைச் சேவற் பழந்தேங்காய் தூப தீபஞ்
சாத்துபச் சரிசிப் பொங்கல் சமைபடி யொன்றே முக்கால்
தோத்திய விடு முத்தந் துப்பற வாக்கிக் கொள்ளே. கO

வாக்கினுற் கர்மந் தீர வாசல்முன் சதுர மாகத்
தீர்க்கமாய் மெழுகிக் கொண்டு தீபமுந் தூபங் காட்டிக்
காக்கவே சாணத் தால கணபதி செய்துவைத்து
ஆக்கமாய்ப் புட்பஞ் சாத்தி யர்ச்சனை செய்து கொள்ளே.

கொள்ளவே பழமுந் தேங்காய் குறிப்புட னிளநீர் வெல்லந்
தெள்ளவல் கடலை யோடு சீனிச்சக் கரையென் னுண்டை
துள்ளிய பொரியு மப்பம் சுகமுள்ள பலகா ரங்கள்
மெள்ளவே படையலிட்டு விநாயகன் முன்னில் வையே. கஉ

வைத்துத்தெட் சணைதாம்பூலம் வகையுடனியற்றிக்கொண்டு
சித்திமா முகனைப் போற்றித் திடமுடன் குடத்திற் றண்ணீர்
வைத்தந்தக் குடத்து வாயில் மாவிலை சாத்திப் பின்பு
சத்தியாய்க் குடத்து முன்னுற் சாத்துவாய் நாகர்தன்னை. கங

நாகரைச் சாத்திப் பின்னும் நலமுட னுளுந்தோ டென்னைச்
சேகரித் தருகில் வைத்துந் தெட்சணை யதுக்கு மிட்டே
பாகமா யரிசி யைங்காற் படியதைப் பொங்க விட்டு
ஏகமா யிரக்கி வைத்து இயல்பது சொல்லக் கேளே. ௧௪

சொல்லக்கேள் தோஷமுள்ள மனிதரை யழைத்துக்கூட
யல்லவே அவர்க்குக் கோடி யாடையு முடுத்திப் பின்பு
மெல்லவே குடத்து முன்னால் விளங்கவே யிருக்கச் செய்து
வல்லசோ திடத்தி லுள்ள மந்திர மோது வாயே. ௧௫

ஓதுவா யாயி ரத்தெட் டுருவையு மேத்திப் பின்பு
சாதுவாய்க் குடத்து நீரைத் தலைதனி லெடுத்து விட்டுத்
தீதறக் களைந்து மற்றோர் சேலையைக் கட்டச் சொல்லிப்
போதவே நாகர் தன்னை நலைசுத்தி யெட்டப் போடே. ௧௬

எட்டவே போட்ட பின்பு எட்பயி றதனை வாங்கிக்
கிட்டவே சிரசைச் சுத்தி கீழதை வைத்து விட்டுத்
திட்டமாய்ப்பொங்கற்சோ த்தைச்சென்னியைச்சுத்திப்பின்பு
சட்டமா யறுத்துச் சேவற் றலைதனைச் சுத்திப் போடே. ௧௭

சுத்தியே விநாயகன்முன் சுகமுடன் பணிந்து போற்றி
வெத்தியாய் பயிறு மெள்ளும் விளங்கிய நாகர் சேவற்
சத்தியாய்க் களைந்த சேலை தனிப்பொங்கற் சாதத் தோடுஞ்
சித்திமுன்படைத்ததெல்லாஞ் சேரவேயெடுக்கச்சொல்லே.

எடுக்கவேமறையோன்வாரா னிதற்குடன்படவுமாட்டான்
அடுக்கவள்ளுவனைத்தானும்அழைத்துமேயெடுக்கச்சொல்லு
முடுக்கவேயெடுத்துக்கொண்டு முன்னவன்தெருவில்வந்தாற்
றொடுக்குமேயெதிர்த்தபேர்க்கு தொல்லையும்வறுமையாமே.

வறுமையாயுள்ளபேர்க்கும் வன்பிணியடைந்தபேர்க்கும்
சிறுமையாயிருந்தபேர்க்கும் செல்லுமோரிவைகள்செய்யப்
பொறுமையாயிதிற்சுருக்கம் போதவாறாய்ந்துநன்றாய்த்
தருமமாய்ச்சொல்லிவையா தாலத்தோர்க்குதவியாமே. ௨௰

ஆமப்பா கந்த ராகே ளரைவாசி செய்தாற் றீரும்
போமப்பா யதிலே பாதி செய்தாலும் போதுங் கண்டாய்
தாமப்பா மலடி யோர்க்குஞ் சந்ததி யிறந்த பேர்க்கும்
நாமப்பா சாந்தி யோமம் நவின்றதா லோடுந் தானே. உக

ஓடுமே கரும தோஷம் உற்றதோர் கிரக தோஷம்
சாடுமே பழிசெய் தோஷம் தாய்தந்தை தமரின் தோஷம்
கூடியே பிறர்தா ரத்தைக் குணமிலா தழித்த தோஷம்
தேடியே மூத்தோர் தம்மைத் திடுக்கிடப் பறைந்த தோஷம்.

பறைந்திடப்பெரியோர்தம்மைப் பதறவேயுரைத்ததோஷம்
குறைந்திடு மிதுபோற் செய்தாற் குணமுண்டு குற்றமில்லை
நிறைந்திடுஞ் செல்வந் தானும் நீங்காத தோஷம் நீங்கும்
சிறந்திடும் நோய்க ளெல்லாந் தீருமென் றருள்செய் தேனே.

அருளினே மீதில் லாம லன்புட னின்னங் கேளாய்
பெருவயின் பிரம கத்தி பேய்செவி மேமை குன்மம்
மருள்குட்டம் குருடு நொண்டி வஞ்சனை பில்லி யேவல்
திருவிலி யிந்த நோய்கள் தீருமென் றுரைத்தே னப்பா. ()

உரைத்தது கிரக தோஷம் உகந்துகே ளிரண்டு நாலிற்
பரைத்ததுமேழோ டெட்டிற் பன்னிரண் டினிலேசெவ்வாய்
நிரைத்தது ராகுகேது நீங்கிய வியாழ தோஷம்
வரைத்தது சனியினாலே வந்ததோர் பாவம் போமே. உ௫

போமையா வென்றீர் நன்றே புகலும்வின் ணப்பங் கேளீர்
ஆமையா குன்மங் குட்டம் அரிமயல் செவிடோ டூமை
வாமையா குருடு நொண்டி வலியொடு சயநோ யெல்லாம்
தானிமயா வந்த வாறு தமியனுக் கருளு வாயே. உசா

அருளுமென் றுரைத்தாய் சுந்தரானந்தா சொல்லக்கேளாய்
குருமையாய்ப் பரண்டு வந்த குணமது தாய் தகப்பன்
சிறுமையாய்ப் பார்த்தி ருக்கத் தேவியும் அவனுங் கூடிப்
பருகிய அன்னத் தாலே பாவஞ்சேர்ந் ததுவுண்டாச்சே.உஎ

ஆச்சுதே குட்டம் வந்த தறுவகை சொல்லக் கேளாய்
பேச்சதைப் பலவா றாகப் பேசியே சீறு மாறாய்
வாச்சுதே அடித்த தோஷம் வளர்ந்துதே குட்ட ரோகம்
கூச்சமாய்த் தாய்த கப்பன் கோபத்தால் வந்ததாமே. உஅ

வந்ததோர் சயரோ கத்தின் வாறுதா னென்ன சொல்வேன்
முந்தவோர் பிறவி தன்னில் மோசமாய்ப் பிறருன் னுமற்
சிந்தையோ டரிவை மார்க்குச் செலுத்திய மருந்தீட் டாலே
தொந்தமாய்ப்பாவந்தோன் றித் தொடர்ந்ததின்னமுனீகேளாய்.

கேளப்பா குருடு வந்த கெடுதியின் வகுப்பைச் சொல்வேன்
சூளப்பா மின்ன னுரைத் தூகில்களைந் தவாவி னோடு
மீளப்பா பார்த்த பாவம் மேருபோ லாகிப் பின்னால்
தாளப்பா வறுமை கொண்டு தான்ஜெனித் திருப்பர் பாரே.

பாரப்பா குன்மம் வந்த பாதகம் பெரிதென் சொல்வேன்
ஆரப்பா பெரியோர் தங்கட் கமுதிலே யென்ற போதே
தூரப்பா அவர்கோ பத்தாற் றோன்றுமே உதரந் தன்னில்
தீரப்பா அன்னந் தானுஞ் செல்லாது வலியுண் டாச்சே. ()

செல்லவே ஊமை வந்த செய்திகே ளகிலந் தன்னில்
நல்லவர் பெரியோர் தம்மை நாவினுற் சுட்ட தோஷம்
வெல்லரி சிவன்ற லத்தை வெகுளியாய்ப் பழித்த தோஷம்
அல்லவோ ஊமை யாகி அருந்துயர் படுகின் றூரே. ௩௨.

படுக்கைசப் பாணி கொண்டி பலித்ததோர் செய்கைகேளாய்
துடுக்கதாய்த் தந்தை தாயைத் தூஷணித்துரைத்ததோஷம்
அடுக்கவே பெரியோர் தம்மை அடித்துமே மிதித்ததோஷம்
நடுக்கவே சூழ்ந்த தப்பா நல்லோர்கள் சாபந் தானே. ௩௩

சாபந்தான் செவிடு வந்த சங்கட மதனைக் கேளாய்
பாபந்தான்செவிபிற்கேளா ப்பறைந்திடும்வார்த்தையெல்லாம்
சோபந்தான் எளியோர்முன் பொய்சொல்லியேகெடுத்ததாலே
கோபந்தான்வளர்ந்துமீறிக் குற்றமாய்வந்தவாறே. ௩௪

வாறுகேளிவர்களெல்லாம் மகாபவஞ்செய்ததாலே
தேறுமத்துன்பமுற்றுத் திடுக்கிட்டுவிதனமாவார்
ஆறுமேஇதுகளெல்லாம் அவர்செயுநன்மையாலே
தீருமேசுந்தரானந் தாதிடமறிந்துகொள்ளே. ரு.இ

அறிந்தனனையாமெய்யா அடியன்விண்ணப்பமொன்று
செறிந்ததோர்சோகைபூண்டு திடுக்கிடுஞ்சன்மமென்னும்
எறிந்தநோயிம்மூன்றுந்தான் எளியவர்க்காகத்தீர்க்க
நெறியுடன்குருவேநன்றாய் நீக்கவேஉரைக்கவேண்டும். ரு.சு

உரைக்கவேகேளாயப்பா உலகத்திலேழையோர்க்குச்
சுருக்கமாய்க்கருமசாந்தி செய்திடிற்றொலைந்துபோகும்
பெருக்கமாயிதுபோற்செய்தாற் பிஞ்சகனருளினாலே
இருக்குமோஇந்தநோய்க ளிருக்காதுதீருந்தானே. ரு.எ

தீருமேகருமசாந்தி செப்பியகிரகசாந்தி
பாருமேநாகசாந்தி பகர்திருச்சக்கரங்கள்
காருமேவர்னசாரம் கருத்துடனக்ஷரங்கள்
பேருமேலெக்கம்பீஜாட் சரம்போடச்சொல்லக்கேளே. ரு.அ

வே று.

கேளப்பா கருமத்தை யொழிக்க வென்றாற்
  கெடியான சிதம்பரத்தை நிலத்திற் கீறி
ஆளப்பா அஞ்செழுத்தை யுள்ளே சாத்தி
  அரைதோறும் மாறியே எழுத்தை நாட்டு
மீளப்பா அஞ்சு வர்ன மடைத்துக் கொண்டு
  மெய்யான எழுத்தையதன் மேலேசாத்தி
வாளப்பா நாலுதிசை தன்னி லேதான்
  வளமான தென்வடல்முக் கோணமாமே. ரு.கூ

ஆமப்பா கீழ்மேலு மாறு கோணம்
  அரைதோறு மாறெழுத்தை நன்றாய்ச் சாத்தி
காமப்பா ஓம்ஆம் ஐயும் ஊம் ஹ்ரீயென்று
  நன்றாகச் சிதம்பரத்தில் காட்டிப் போடு




தாமப்பா முக்கோணம் அகார மிட்டு
சடாக்ஷரியை நடுவீட்டி லிருத்தி வைத்து
வாமப்பா கன்னியிலே ஓமஞ்செய்து
வாழ்த்துவாய நசிமசியென் றுருவை வோதே. ௫௦

ஓதுவாய் செவ்வரளிப் பூவைக் கொண்டு
உத்தமனே ஜெபித்துற்ற மங்கை கையில்
சாதுவுடன் நீகொடுக்க அவளான் தாங்கித்
தலைசுத்தி ஒயத்திற் போடச் சொல்லு
நீதமாய் இப்படியா யாயிரத்தோ டெட்டு
நீயோதிக் கொடுக்கவவள் வாங்கிப் போட்டால்
போதவே பாவமெல்லா மொழிந்து போச்சு
போச்சுதப்பா கருமமின்னஞ் செய்யக் கேளே. ௫௧

செய்வாய்நீ கிரகதோ ஷங்கள் தீரச்
செப்புகிறேன் சுந்தரா னந்தர் கேளாய்
மெய்யாக அவள் பூத்த நேரந் தன்னில்
விளங்கியதோர் பன்னிரண்டு வீடுங் கோட்டி
அய்யமிலா தம்பாசக் கிரகம் நின்ற
வடையாளங் குறித்துலக் கினமுஞ் சாத்திப்
பொய்யொன்றும் வாராமற் கிரக வீட்டைப்
பூமியிலே கீறியதில் வர்னஞ் சாத்தே. ௫௨

சாத்திடவே வர்னமதிற் கிரகம் நின்ற
தானவர்க ளிருந்த இடம் போலே தானும்
வாழ்த்திடவே வர்னத்தின் மேலே வைத்து
வகையான நாலுதிசை தெல்வா டக்காய்
போத்தியே முக்கோண மிட்டு நீயும்
பொருந்தவே முன்போல சாத்திக் கொண்டு
மாத்திவிட லாகாசட் கோணந் தன்னில்
வளமாக முன்போலே யெழுதிக் கொள்ளே. ௫௩

எழுதியே கன்னியிலே ஓமஞ் செய்து
ஏந்திழையை நடுவாக இருத்திக் கொண்டு
பழுதில்லாச் செவ்வரளிப் பூக்கொண் டோதி
பரிவான ஓமத்திற் போடச் சொல்லு
முழுதுமுன் சொன்ன மந்திரத்தி னாலே
முக்கியமா யாயிரத்தெட் டுருவைச் சேவி
வழுவில்லை யிப்படியே செய்வா யாகில்
மகிமையுண்டு தப்பாது மடலொன் றில்லை. சஎ

மலடியென மனதிலுன்னி யிருந்தி டாதே
மாற்றுவாய் தோஷங்கள் தீர்ப்பா யாகிற்
பலனுமபி ஷேகப்ர திஷ்டை செய்தால்
பைங்கொடிக்குப் பிள்ளையுண்டு பதிவு கேளாய்
நலமான நவக்கிரக சக்க ரத்தை
நன்மைபெறத் தங்கத்தி லெழுதிக் கட்டு
அலகையுட னுடுசிவன் வாக்காற் கேட்டு
அப்பனே உனக்குரைத்தேன் சுருக்க முற்றே. சஙி

அகஸ்தியர் சுந்தரானந்தற் குபதேசித்த

**சோதிடக் கன்மகாண்டச் சுருக்கம்.**

முற்றிற்று.

---

வடிவுள வேலோன்றுணை.

# ஆரூட நக்ஷத்திரபலன்.

இந்தச் சாஸ்திரம் பார்க்கும்போது விநாயகரைவைத்து புஷ்பஞ்சார்த்தி தேங்காயுடைத்து வாழைப்பழம் வெற்றிலை பாக்குடன் கூடன்சாம்பிராணி தூபதீபங்காட்டிக்கடவுளைப் பிரார்த்தித்து உபசாரத்துடனே வந்தவரிடத்தில் இருபத்தேழு நட்சத்திரத்தில் ஒரு நட்சத்திரம் சொல்லச்சொல்லி சொன்ன நட்சத்திரத்தின் பலனைப்பார்க்கவும்.

அசுபதி.

அசுபதி யுதய மாகி லாக்கமாங் காமக் கோட்டி
பசுபதி யருளி னாலே பாக்கிய மிகவுண்டாகும்
சிசுபதி மனையும் வாழ்க்கை செட்டுடன் லாபஞ் சேரும்
கசபதி கிருபை தன்னாற் காரியங் கூடும் நன்மை. க

பரணி.

பரணியு முதய மாகிற் பதிபசுங் கன்று போகும்
தரணியில் விளைவு கேடாஞ் சார்மணங் கூட மாட்டா
அரணிய மான பெண்ணா லகமதிற் சண்டை யுண்டாம்
இரணியஞ் சேத மாகும் இலக்குமி யேகு வாளே. உ

கார்த்திகை.

கார்த்திகை யுதய மாகிற் கனபொருள் செட்டு லாபம்
கீர்த்தியும் ஜெயமு முண்டு கிளைஞருங் கூடிவாழ்வார்
பூர்த்தியாய் மணமுங் கூடும் பூமியும் விளையுண் டாகும்
மூர்த்திக ளருளி னாலே மொழிவது நன்மை தானே. ந

உரோகணி.

உரோகணி யுதய மாகி லூரினில் மழையு மில்லை
சரோருக முகத்தி னாளைச் சார்மணங் கூடா தாகும்

குரோதமுந் தேக பீடை கொண்டுபல் நோய்க டரும்
விரோதம் வஞ்சனைக ளாலே மெய்யது குன்றுந் தீதே. ச

மிருகசீரிடம்.

மிருகசீ ரிடமே யாகில் மிகுப்பிணி மெய்யிற் றோன்றும்
திருகப்பின் வினைக டீர்ந்து திருமணம் பெற்று வாழ்வர்
உருகவோர் பகையுந் தீரும் உற்றதோர் கரும மெல்லாம்
முருகனா ரருளி னாலே முடிவது திண்ணந் தானே. ரு

திருவாதிரை.

ஆதிரை யுதய மாகி லங்கொரு பெண்ணாற் சண்டை
மூதிரை முற்றுங் கேடாம் மூப்பினில் வியாதி யுண்டாம்
மாதரை மழையு மில்லை வளர்பயிர் விளைவ தில்லை
நாதரைப் போற்றி செய்யின் நலம்பெற வாழ லாமே. சா

புனர்பூசம்.

புணர்தமே வுதய மாகிற் பூமிக ளாடு மாடு
கொணர்தலோ டதிக கீர்த்தி குபேரனை யொப்ப தாக
மணமது வந்துசேரும் மனைமக்க ளுற்ற ரோடு
குணமிகப்பொன்னும்பெற்றுக் கூடிவாழ்ந்திருப்பனென்னே

பூசம்.

பூசமே யாகிற் சாவு போனவர் மீள மாட்டார்
நாசமே நினைத்த தெல்லாம் நாற்றிசை மழையு மில்லை
மோசமே பகைவர் முன்னே மொழிவது மழிவ தாகும்
வீசமே பொன்னும் வாரா விளைவது தீமை தானே. அ

ஆயிலியம்.

ஆயிலே வுதய மாகி லரசனால் வாழ்வுண் டாகும்
வாயிலே வந்த வார்த்தை வானவ ரமுத மாகும்
வேயிலே வுதித்தோன் கங்கை வேணிய னுமையாள் வாழும்
கோயிலே கண்ட பேர்க்குக் கோரிய தெல்லா முண்டே. கூ

மகம்.

மகமது பலிக்குங் கன்று மாடுபொன் குதிரை யோடு
அகமது மனைவி பந்து யாவரு முறவ தாவர்

சுகமது போஜனங்கள் சொர்னபூ டணங்க ளாடை
இகமது வாழ்க்கை யாலே யெய்திடுங் கீர்த்தி தானே. கம

## பூரம்.

பூரமே பொருளுஞ் சேதம் போனவர் வரவு மாட்டார்
தாரமே யிழந்து போகுந் தவமது பலித்தி டாது
கோரமே மிகவுண் டாகுங் கொண்டதோ ரடிமை மோசம்
ஆரமே பூண்ட தேசத் தரசர்கள் பகையுண் டாமே. கக

## உத்திரம்.

உத்திரஞ் செட்டு லாப மோங்குயர் மனைவி யோடு
புத்திரர் மிகவுண் டாகும் பூமியுங் கொடுக்கல் வாங்கல்
பத்திர மெழுதிக் கொள்ளல் பரிதியின் கிருபை யாலே
சித்திரை மாதத் தோடு சேர்தனம் நன்மை யாமே. கஉ

## அஸ்தம்.

அத்தமு மதிகச் சேத மரசர்கள் பகையுண் டாகும்
வித்தமுங் கல்வி யில்லை விவேகிக ளுறவு மில்லை
சுத்தமுஞ் சம்பத் தில்லை சுற்றமு மடுத்தாற் கேடு
நித்தமும் பெண்கள் சண்டை நேரிடுந் தீமை தானே. கங

## சித்திரை.

சித்திரை தனமே லாபஞ் செய்திடுங் கருமம் நன்று
பத்திரை கன்று கொள்ளப் பாக்கிய மிகவுண் டாகும்
நித்திரை சுக மணங்கள் நேர்ந்திடு மனையாள் பூமி
முத்திரை பத்தி ரங்கள் முடிவது திண்ணந் தானே. கச

## சுவாதி.

சோதியே செட்டுச் சேதந் துக்கமுங் கலகம் பீடை
தாதியே கொள்ள மோசந் தாத்திரி யோர்கள் போற்றும்
பாதியே பரைமெய் கொ[illegible] பரமனார் கிருபை யாலே
நீதியே மனைபொன் பின்[illegible]நேரிளை சேருந் தானே. கரு

## விசாகம்.

யோகமே விசாக மாகும் உற்றதோர் செட்டு லாபம்
தேகமே நோய்க ளுருஞ் சிந்துவிற் சேட னென்னும்

நாகமேற் பள்ளி கொண்ட நாரண னருளி னாலே
பாகமே மனைவி மக்கள் பாக்கிய மிகவுண் டாமே. ஈசா

அநுஷம்.

அநுஷமே தெய்வ குற்ற மாகுமா டாடு சேதம்
கனுஷமே சிவப்புச் சேலைக் காரியைப் பூசைசெய்வாய்
மனுஷனே வழக்குப் பெண்ணால் வந்திடும் மணமுங் கூடா
இனுசகத் தின்ப வாழ்க்கை யெய்திடா திருக்கை பின்னே.

கேட்டை.

கேட்டையா லிராஜ யோகங் கீர்த்தியு மிகவுண் டாகும்
வீட்டையா ளில்லா ளோடு மேவியே கூடி வாழ்வான்
நாட்டையா ளரச ராலே நன்மைபொன் பூமி சேர்க்கை
சேட்டையா ளேகி யேநற் றிருமனை யிருப்பள் பாரே. கஅ

மூலம்.

மூலமே யென்ற யானை முன்புவந் ததனைக் காத்த
காலமே கராவைக் கொன்ற காரண னாதி மூலம்
சாலமே செய்யா தெங்கள் சந்ததி தழைத்து வாழச்
சீலமே செய்ய வல்லான் தெரிசனஞ் செய்ய நன்றே. கசு

பூராடம்.

பூராடம் பூமி நட்டம் பொருந்திய கருமமாகா
போராட வழக்குச் சாயும் போனவர் வரவு மாட்டார்
பாராடப் பழிகே டாகும் பயணமுந் தவறிப் போகும்
நீராடப் போன மங்கை நிச்சய மரணந் தானே உ0

உத்திராடம்.

உத்திரா டம்ப ரந்தா னேங்கவே மழையும் பெய்யும்
குத்திரா டம்ப ரந்தான் குறைந்துபாக் கியமுண் டாகும்
வத்திரா டம்ப ரந்தான் வகைவகை பூட ணங்கள்
மித்திரா டம்ப ரந்தான் மிகவுநற் கல்வி யாமே. உக

திருவோணம்.

ஓணமே சேத மாகும் ஊர்களில் மழையு மில்லை
மாணமே யுடைய நீதி மன்னவர் பகையா மார்பிற்

பாணமே பட்டாப் போல பதைபதைத் திருப்பான் சிந்தை
நாணமே யில்லை யில்லாள் நாடொறுங் கலகந் தீதே. உஉ

அவிட்டம்.

நன்றுகா ணவிட்ட மாகில் ராஜயோ கத்தின் மேலாம்
அன்றுகாண் மணமுங் கூடும் அவனியில் மழையும்பெய்யும்
கன்றுகா லிகளுஞ் சேரும் கருதுபொன் பூமி லாபம்
சென்றவர் வருவார் பின்னுஞ் செட்டுவே ளாண்மை யாமே.

சதயம்.

சதயமே கலக முண்டாம் தானியங் குறைவ தாகும்
இதயமே நினைத்த தெல்லாம் இட்டறதாங் கைகூடாது
பதயமேற் சேதங் காட்டும் பாரினிற் பானு தன்னை
உதயமே தொழுவா யாகி லுனக்கொரு குறைவு மில்லை. உச

பூரட்டாதி.

ஆனகம் போன்ற பூரட் டாதிதா னதிக லாபம்
கானகம் போனோர் மீள்வர் கருதிய தெல்லாஞ் சேரும்
சானகம் பிடித்த மன்னர் தனங்கொடுத் துறவு மாவர்
போனகம் சுகம தாகும் புத்திரப் பேறுண் டாமே. உரு

உத்திரட்டாதி.

உத்திரட் டாதி யாகில் ஊருடன் பகையு முண்டாம்
சித்திரட் டாதி யாலே சினத்துடன் போனோர் மீள்வர்
பத்திர மெழுதப் போகப் பாக்கியம் பலித்தி டாது
குத்திரஞ் சூனி யத்தாற் கொம்பனை யாளுஞ் சாவள். உசு

ரேவதி.

ரேவதை மகிழ்ச்சி பொங்கும் ரெட்டிப்புக் கொள்ள லாபம்
பாவதைப் பாடிப் போற்றப் பலனுறும் பாக்கி யங்கள்
கோவதைக் கொள்ள நன்று கொண்டதோர் மனைவிவீட்டுத்
தேவதை கிருபை யாலே திருநடஞ் செய்வாள் பாரே. உஎ

முற்றிற்று.

---

# தேங்காய்ச் சகுனம்.



முடிபெருத்து வட்டமிடத் திருவேசேரும்
மூன்றிலொரு பங்குடைந்தால் முசியாவாழ்வு
நெடியபங்கி லைந்திரண்டு குறையாச்செல்வம்
நீங்குநரம் பேபிடித்தால் நிதானவாழ்வு
கடுகளவே வுள்ளானால் ரத்னஞ்சேரும்
கைதவறிக் கீழ்விழவே கனத்தபூசல்
அடியவருக் கருள்புரியும் வடிவேல்முன்னோன்
ஆனைமுகன் தேங்காயி னளவிதாமே. க

ஒண்டிரண்டு தனக்கு நன்மை யோர்நாலாறு
யுடையவெகு துன்பமது வோதக்கேளு
கண்டுமெய்யிற் கண்தெறித்தால் மரணமாவான்
கனத்தநல் லோடுவிட்டா லசனம்வெல்லும்
விண்டோடு தெறித்திடுமேற் பிணியாமெய்யில்
மேதினியி லேவிழுந்தால் விலையாங்கண்டீர்
பண்டுதமி ழறிந்தோது மயனார் சொன்ன
பாடற்றேங் காய்ச்சகுனம் பகரக்கேளே. உ

வாங்கிய தேங்காய தன்னை மகிழ்வொடு சிற்பன் றானுந்
தாங்கியே யுடைக்கும் போது தவறியே வீழ மாகிற்
பூங்கொடி மரண மாவள் பூமகள் தானும் நில்லாள்
பாங்கொடு மயனார் சொன்ன பண்டுநூ லிதுவு மாமே. ங

உற்றிடு முகூர்த்தத் தேங்கா யுடைத்திடும் பலனைக் கேளு
மற்றது தெரிக்கச் சாவன் வளர்முடி பெருக்கிற் செல்வம்
கற்றறி புதல்வ ருண்டாங் கண்விடில் வாழ்வு குன்றும்
சற்றதி லழுக லாகிற் றுன்செயுங் கருமந் தீதே. ச

☞ ஆறுமுகக்கடவுள் அகஸ்தியற் குபதேசித்த தேங்காய்ச் சகுனச் செய்யுள் 200-சொச்சம் அதில் இப்போது கிடைத்தமட்டும் சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்தஏடுவைத்திருக்கும் புண்ணியவான்கள் எழுதி அனுப்பினால் மறுபதிப்பில் சேர்த்து அச்சிடப்படும்.

---

வடிவுள வேலோன் றுணை.

# சந்திரகாவிய மூலம்.

காப்பு.

சாரமுத மாஞ்சந்த்ர காவியவி யாக்யான
சாரமெனுஞ் சோதிடத்தைத் தான்தெரிந்து-ஏர்பெறவே
செந்தமிழாற் பாடுதற்குச் செந்திவேற் பன்னிருகை
கந்தனுக்கு முன்னவனே காப்பு.

வெண்பா.

அஞ்சொன்ப துக்கதிபர் பாவிசுப ராவலும்
மிஞ்சுபல னைத்தருவர் மென்மூன்று-றெஞ்சுபதி
ஞென்றுக் கதிபதியு மிப்படியே யொன்றிவரிற்
பொன்றசுப மேகொடுப்பார் பூண்டு. க

நிசகேந்தி ராதிபதி நீதிசுப ராவ
லசுபபல மேகொடுப்ப ரல்லா-விசைகேந்
திரபதிகள் பாவிகளாய்ச் சேரிலதி சுபங்கள்
பரவி யிடக்கொடுப்பர் பார். உ

பாரதனிற் சுக்கிரனும் பண்டேவர் தங்குருவும்
மாரககேந் ராதிபதி யானக்காற்-றேர்மிகவும்
பாவியவர் பின்னும் பகர்புந்தி பாவியலாற்
றேய்மதியும் பாவியாந் தேர். ங

தேறுமது பாவிகளிற் சேய்கேந்தி ராதிபனாய்
ஆறி லவனேக னல்லாமல்-வீறுசனி
நல்ல னதைவிட்டால் நன்கிரவி தானுஞ்சேய்
வல்லகோ ணேசனெனின் மாண்பு. ச

ஏறு மிரண்டுபனி ரண்டா மிடத்ததிபன்
கூறுஞ் சுபருடனே கூடிநிற்கில்-வீறுநல்லன்
பாவியுட னேகூடிப் பாவித்தா னத்திருந்து
மேவியிடிற் பாவனும் விள். ரு

எட்டுக் கதிபதியும் பாக்கியத்துக் கேவசையாய்த்
தொட்ட வியாதிபனுய்த் தோன்றுமந்த-வட்டமத்துக்
காதிபதி பொல்லா தவனிலக்கி னுதிபனு
யோதிலவ னேகநல்ல னேங்கு. சா

ஓங்குமட்ட மாதிபதி யோர்தோடஞ் சூரியற்கு
மேங்கு மதிதனக்கு மில்லையே-பாங்கல்லால்
வேறு மொருமதத்தில் வீழ்ந்தோடங் கொஞ்சமாய்த்
தேறியிடச் சொல்வதெனத் தேர். எ

இலக்கினத்துக் காமிரண்டேழ் மாரகமா மென்று
மலக்குமிரண் டான்கொல் லானல்லா-விலக்கினத்துத்
தோன்றுமந்தப் பாவிகளுண் காமனிற் சொல்லுகின்ற
மூன்றெட்டு மாரகமாய் மூட்டு. அ

மாரகத்தா னந்தன்னில் வந்தோர்சம் பந்தமுள
பேருந்தான் மாரகமாய் பேசிபிடிற்-சீரரசர்
யோகம் பிறந்தவருக் கோர்மாறுப் புத்திதிசை
யாகவரும் யோகங்க ளாம். கூ

மாரகத்தோ டத்தினுக்கு வன்குருவுஞ் சுக்கிரனும்
மாரகனே யானல் வலுதோடம்-பாரதனை
விட்டாற் புதனிந் திரவிசனி மேற்செவ்வாய்க்
கட்டாம் பிலநிறையாய்க் காண். ௧0

உற்ற தமமுந்தா னோர்மார கத்தானம்
பற்றியிருக் கின்றாலும் பார்த்தாலும்-வெற்றியுற
மாரகா டன்னுடனே கூறுகினு மாரகர்போ
லார வதைத்திடுவ ரன்று. கக

பன்னொன்று மூன்றுடெட் டாதி பதியிசை
தன்னுடைய சம்பந்தஞ் சார்ந்தவரும்-வன்பாவி
சம்மந்தர் கூடுவதும் பார்க்கிறதுந் தானதுவா
மிம்மகிமை கண்டே யியம்பு. ௧௨

பிலகேந்த்ர கோண நாதருக்குப் பேதஞ்
சொலும்பாவி சம்பந்த தோட-மிலேமயிலே
யன்னியகண் டங்கோணத் தாதிபருக் குண்டாகு
மின்னதனைப் பார்த்தறிவா யே. ௧௩

சாடுந்த்ரி கோணத் ததிபதிக ளன்னுடனே
நாடுகண்ட மாதிபர்க ணற்கோளாய்க்-கூடியிடின்
மெத்தப் பலன்றருவர் மேலவர்க ளன்றிசையில்
வெற்றியோ கங்கொடும்பார் விள். ௧௪

கேந்திரத்திற் பத்தாங் கிளர்திரிகோ ணத்தொன்பா
னுய்ந்தபெல மாம்பெயர்க ளந்ததிபர்-சேர்ந்திருக்கப்
பார்க்கவொரு வர்க்கொருவர் பார்யோகக் காரகரா
மார்க்கு மரிதா மறி. ௧௫

ஒன்பதுபத் தல்லா ருறுதிரிகோ ணங்கண்ட
மன்னியயோ கப்பெயரா மந்ததிப-ரன்பாக
வொன்றுக்கொன் றுய்மருவிச் சம்மந்த முண்டாகில்
நன்றரசர் யோகமாம் நம்பு. ௧௬

பத்துக் கதிபதிதன் பாக்கியத்தி லேயிருக்க
வைத்தாம் னீரைந்தில் வாய்த்திருக்கச்-சத்தோ
டவரவர்கள் வீட்டி லமர்ந்திருக்க யோக
முவமாக மேவருமா மோது. ௧௭

ஒன்பதுபத் துக்குடையா ரெட்டுப்பன் னொன்றதிபர்
இன்பயோ கங்களிலே யென்றிடினும்-பின்னர்திரி
கோணேசர் சம்மந்தங் கூடினும்யோ கங்களுண்டா
மாணேறு யோகமுடை யார்க்கு. ௧௮

விண்டபத்துக் காதிபர்க்கு வில்கோணத் தோரிலொன்று
தண்டியிடுஞ் சம்மந்தந் தானிருக்கில்-வண்டமிழோர்
சொன்னபத்துக் காதிபதி சொல்யோகக் காரகனு
மன்னரிகந் தான்கொடுப்பான் வந்து. சுகூ

நன்கேது ராகுவுந்தா னற்கோளைக் கூடுகினும்
பன்சுபர்கள் நோக்குத்தான் பட்டாலு-மன்புடைய
நற்றான மேகுகினு நல்லபல மேகொடுப்பார்
சொற்றியகேள் தங்களுக்குச் சொல். உ0

கெடிராகு கேந்திரங்கள் கிறுதிரி கோணக்
குடிநாதர் நற்கோளைக் கூடித்-திடனுகக்
கேந்திரத்தி னிற்சுபர்கள் நோக்கக் கிளர்யோகஞ்
சேர்ந்திருக்கச் செய்வான் றினம். உக

செல்திரிகோ ணதிபருஞ் சேர்ந்தகண்டத் தாதிபருங்
கொல்கேது ராகு வுடன்கூடில்-வல்பிலமாய்க்
கூடின் வரும்பாம்புங் கொல்யோகக் காரகராம்
காடியிதைச் சொல்வாய் நயந்து. உஉ

மீறுமிரு பாம்பிருந்த வீட்டுக் கதிபதிதா
னேறுமிரா சிக்குடையோ னோாகி-யூருய்க்
கலந்தகோ ளின்பயனைக் கண்டளிப்பார் காரக்
குலமரவு தம்மரவாங் கூறு. உங

கூறு மரவுடனே யெத்தனைகோள் கூடிகினு
மீறுபில வான்பலனை விண்டளிப்பார்-வேறுமற்றப்
பேர்பலனைத் தாரார்கள் பேதைநீ யாராய்ந்து
பாரிதனைச் சொல்வாய் பகுத்து. உச

கண்டத்திற் பாம்புமுதற் றீயோர் கலந்திருக்கிற்
றண்டகோணத்ததிபர் சம்மந்த-முண்டெனினுங்
கோணத்தி ருக்கிற்கண் டத்ததிபர் சம்மந்தம்
பூணயோ கங்களுண்டாம் பொற்பு. உரு

கேந்திரகோ ணங்களதிற் கேடில்லாக் கோள்கூடி
யார்ந்திருக்கி லன்னியகோ ணாத்ததிபர்-போந்தமலர்க்
கண்ணாலே பார்த்திடினுங் கூடக் கலந்திடினும்
நண்ணுமன்னோர் யோகநல்கு நாடு. உசு

தாங்குகண்டங் கோணத் ததிபதிகள் சம்மந்தம்
நீங்கிமூன் றாறெட்டு நேர்பதியோன்-றாங்கதிபர்
காரகசம் மந்தந்தான் சாரில்யோ கத்தினுக்குக்
காரகமா மென்றே கருது. உள

நன்யோகக் காரகர்க ளன்றிமற்றோர் நற்றிசையின்
மன்யோ கமுமுண்டாம் வந்திடினும்-பன்யோகக்
காரகரே யாகிற் கனபலனீ வார்மற்றோ
ராரநிறை யக்கொடுப்ப ராய்ந்து. உஅ

இரவிமுத லொன்பதுகோ ளோர்க்குந் திசையிற்
சருவுமவர் புத்தியினிற் றாரார்-மருவுபலன்
வேறொருவர் புத்தி யநுசரித்து விள்பலன்கள்
கூறுகூ றாய்க்கொடுப்பார் கூறு. உகூ

கேந்திரத்துக் காதிபதி கேட்கிலுந் தன்றிசையிற்
போந்ததிரி கோணேசர் புத்தியினிற்-சேர்ந்தபலன்
றந்திடுவர் கோணேசர் தன்றிசையில் கேந்ரேசன்
சொந்தபுத்தி யிற்கொடுப்பார் சொல். ௩0

சொல்லுமிருவோர்க்குந் தோடமுண்டாய்க் கேந்ரேசன்
புல்லியிடுஞ் சம்மந்தம் பொய்த்திடினு-நல்லதுதான்
பூண்ட திசையதனிற் கேந்ரேசன் புத்தியினில்
நீண்ட சுபவளிப்பார் நின்று. ௩க

ஏற்றதிசை யிற்பலன்க ளெப்போ தருள்வரெனி
லாற்ற லவர்க்குமூன் றாறெட்டுத்-தோற்றுபதி
யொன்றுக் குடையரல்லா வொத்தசமா னக்கிரக
நன்றுபுத்தி யிற்கொடுப்பார் நல்கு. ௩உ

ஏற்றதிசை நாதனுக்கு மேந்துபுத்தி காரனுக்குந்
தோற்றமூன் றாறெட்டுத் தொல்பதினொன்-றூற்றதிபர்
சம்மந்த மில்லையெனிற் றாமிருவோ ரும்பலன்கள்
செம்ம னளிப்பார் சிறந்து. ௩௩

தானுவெனு மாயோகக் காரகாள் சம்மந்த்
தோனுமூன் றாறெட்டுத் தொல்பதினொன்-றூணதிபர்
வன்றிசையில் வெற்றியுள மாயோகக் காரகாள்
தன்புசிப்பில் யோகந் தரும். ௩௪

சீரரசர் யோகமது சேர்ந்துவரும் காலங்கண்
மாரகா டன்றிசையில் வந்தெய்தும்-பாரதனுள்
பாவபுத்தி யின்மிகுதி பாக்கியமுங் கீர்த்திகளு
மேவுமற்றப் புத்திசமன் மெய். ௩௫

சாற்றும் பவர்சுபங்க டந்தார் சுபர்திசையிற்
போற்றுசுப புத்திவரிற் பொங்குசெல்வந்-தோற்றிவிடு
மென்பதற்குச் சந்தேக மில்லை யிளமுலைமேற்
பொன்புனையு மாதே புகல். ௩௬

மன்யோக காரகா ளாந்திசையில் வந்திடுமேற்
பன்புத்தி காரனுக்குப் பாவமுரிற்-றன்றோட
மில்லையந்தப் பாவிபுத்தி யில்யோக மெத்தவுண்டாஞ்
சொல்லும்பின் யோகங்க ளேண்டு. ௩௭

தூண்டுவர் சம்மந்தந் தோன் றாநற்கோ ளில்யோகம்
பூண்டளிப்பன் சம்மந்தம் பூணத்-தீண்டுநற்கோள்
புத்தியுந்தான் முன்போற் பொருந்துஞ் சமபலனை
மெத்தத் தருவார் விரைந்து. ௩௮

விரைந்துவரு மாயோக காரகாள் வெற்றிப்
பொருந்துஞ்சம் மந்தமில்லாப் போந்தே-யிருந்துவரு
மன்னியோ கங்களுட காரகா ளாம்புசிப்பில்
மண்ணுயோ கங்கள் வரும். ௩௯

சார்யோக காரகா டங்கூடு சம்மந்த
மேர்கிலாக் கோளி லெதிர்திசையி-லார்யோகக்
காரரவர் புத்தியினிற் காணும் பலன்கொடுப்பர்
பேறு மொருவிடத்தே லீள். ௪௦

வின்கேது ராகுவுக்கு போல்யோக காரகா
ளென்மருவு சம்மந்த மில்லையெனு-நன்திசையில்
யோகமுள காரர்புத்தி யுற்றபொழு தேயோகம்
வாகு படக்கொடுப்பார் மாண்பு. ௪௧

பாவிதிசை யாயவர்கள் சம்மந்த மேபரவத்
தேய்வுசுபக் கோள்புசிப்பிற் றீதுபலன்-மேவியிடு
மன்னோர்சம் மந்தமுள நற்கோட்க டன்புசிப்பி
லென்று திருவினையு முண்டு. ௪௨

திசைநாதன் பாவியாய்ச் சேர்ந்தபுத்தி னாத
னசையோக காரகரா னாணி-னிசையாக
ராசயோ கங்கணல்கி யேயரிட்டங் கூடத்த
ராசுநிறை போலளிப்பார் சாற்று. ௪௩

ஆகாத யோகமுள காரகா ளாந்திசையில்
வாகாநல் யோகமுந்தான் வந்தெய்தும்-யோகா
வருங்காலெப் போதென்றால் மாயோகக் காரர்
பெரும்புசிப்பி லுண்டாகும் பேசு. ௪௪

தீயோர் திசையிலந்தத் தீயோர்சம் மந்தமுள
மாயோக காரகர்த மன்புசிப்பிற்-றேயு
மவபலன்கண் மெத்தவுண்டா மானபலன் றூரா
ருவமையுள்ள மின்னே யுரை ௪௫

மாரகன் றன்னுடைய சம்மந்த மார்க்கமுள
சீர சுபர்புசிப்பிற் றூன்கொல்லா-னேருடைய
சம்மந்த மில்லாத்தீ யோர்புசிப்பிற் றூன்கொல்லா
னம்ம விதுகண்டே யறி. ௪௬

இன்னவகை யெல்லா மிசையு மிலக்கினங்கள்
பன்னிரண்டி னுள்ளும் பரவியே-மன்னியிடு
மாரகரைப் பாவிகளை மாயோக காரகரைச்
சேரவெல்லாஞ் சொல்வேன் றெரிந்து. சஎ

மேஷலக்கினபலன்.

மென்மேட லக்கினத்தை மேவிப் பிறக்கிலிந்து
பண்புகர்மா லுஞ்சனியும் பாவிரவி-நன்குருசேய்
நீடுநல்லர் பாக்கியகர் மாதிகுரு நேர்சனியுங்
கூடியிடில் யோகமில்லை கூறு. சஅ

கூறுமந்த ணர்குருவும் பாவிவெள்ளி கொல்லான்பின்
வேறுசனி யும்புதனும் விண்டுகொல்வன்-றேறிப்
பகுந்தரிந்து பார்த்துப் பலாபலன்கள் கண்டே
தொகுத்துரையா யெல்லாந் துடர்ந்து. சகூ

ரிஷபலக்கினபலன்.

தன்னிடப லக்கினத்தைச் சாரச் செனித்தவர்க்குப்
பன்னுமதி பொன்புகரும் பாவியா-மன்னிரவி
காரியுந்தா னல்லவர்கள் காண்சனியன் மாத்திரந்தான்
சாரரசர் யோகந் தரும். ருo

தருகுருவுஞ் செவ்வாயுஞ் சார்ந்த மதியும்
வருமா ரகனுகை வாட்டி-வெருவியிடக்
கொன்றிடுவர் புந்திகொல்லான் கூறுதிசை தன்னிலுந்தா
னன்றறிவாய் சொன்னே னயந்து. ருக

மிதுனலக்கினபலன்.

சொல்மிதுன லக்கினத்திற் றோய்ந்து பிறந்திடவே
புல்சேயும் பொன்னிரவி பொல்லாதார்-நல்லவெள்ளி
தானொருவ னல்லன் சனிகுருவுங் கூடியிடில்
மேனரச யோகமில்லை மீது. ருஉ

மீது மதிகொல்லான் மீண்டுசெவ்வா யாதித்தன்
வர்குருரு மூவர்களு மாரகமாய்-சேதமுறக்

சொல்லுவர்க ளென்றே குலவுகடல் சூழுலகி
லெல்லவருஞ் சொல்லா ரிசைந்து. ருங

கடகலக்கின பலன்.

கர்க்கடக லக்கினத்திற் காணச் சனித்தவர்க்குச்
சொற்புதனுஞ் சுக்கிரனுஞ் சொல்பாவி-நற்குருவுஞ்
செல்சேயு நல்லவர்கள் சேய்குருவுங் கூடியிடில்
நல்யோகந் தந்திடுவர் நாடு. ருச

நாடிரவி கொல்லான் நற்கவிமான் மாரகராய்க்
கூடிநின்று கொன்றிடுவர் கோபமதாய்-நீடுமவர்
தன்றிசையி லும்புத்தி தன்னிலுந்தான் றப்பாது
பொன்னனையு மாதே புகல். ருரு

சிம்மலக்கினபலன்.

சேர்ந்தசிம்ம லக்கினத்தைச் சேரச் செனித்தவருக்
கேந்துசனி சுக்கிரனு மேபாவி-போந்தசெவ்வா
யேறு மிரவிநல்ல னின்புகர்சேய் கூடியிடில்
வீறியயோ கங்களுண்டாம் வேறு. ருசு

வேறுபுதன் கொல்லான் வினைபுகர்மை கொன்றிடுவர்
கூறுமற்றப் பேர்கள்தான் கொல்லார்க-ணேறிப்
பகுத்தறிந்து பார்த்துப் பதராமல் யார்க்கும்
வகுத்தறியு மின்னே மதித்து. ருஎ

கன்னியாலக்கினபலன்.

கன்னியா லக்கினத்திற் காணச் செனித்தவர்க்குப்
பன்னுகுரு சேய்மதியும் பாவியா-மன்னுசனி
வெள்ளியுந்தா னல்லவர்கள் விண்புகர்மா லுங்கூடிற்
றெள்ளரசர் யோகமுண்டாஞ் செப்பு. ருஅ

செப்புபுகர் புந்திகொல்லான் சேர்ந்தசெவ்வாய் சந்திரனு
மொப்பு குருவோ டென்மூவர்-தப்பாமற்
கொல்லுவர்கள் கண்டாய் குலவு மிதன்குறிப்பை
யொல்லையினிற் சொல்வா யுகந்து. ருகூ

துலாலக்கின பலன்.

துலையிற் பிறந்தார்க்குச் சூரியன்சேய் பொன்னுஞ்
சொலும்பாவி புந்திசனி சுங்கன்-நிலைசுபர்கள்
புந்திமதி யுங்கூடிற் போரரசர் யோகமுண்டாம்
வந்தசெவ்வாய் கொல்லான் வளர்ந்து. சுo

வளர்ந்தகுரு சூரியனும் வன்மா ரகராய்க்
களங்கமறக் கொல்லுவர்கள் கண்டாய்-விளங்கியிடு
சூதளவு மென்முலையாய் சோராம லிந்தவகை
போத வறிந்தே புகல். சுக

விருச்சிகலக்கின பலன்.

தேளிற் பிறந்தார்க்குச் சேய்புகர்மான் மைப்பாவி
நாளுமதி பொன்னிரவி நல்லவரா-நீளிரவி
சந்திரனும் கூடியிடிற் றூரரசர் யோகமுண்டாஞ்
சொந்தகுரு காரிகொல்லான் சொல். சுஉ

சொல்புதனுஞ் செவ்வாயுஞ் சுக்கிரனு மாரகமாய்
வல்லிரவிற் கொன்றிடுவர் வஞ்சகமாய்-நல்மயிலே
யிந்தவர லாறு மிதனிலையு மேநினைந்து
புந்தியினுட் கொள்வாய் புகழ்ந்து. சுங

தனுசுலக்கின பலன்.

தனுசிற் பிறந்தவர்க்குத் தண்புகர்பொன் பாவி
சனிசெவ்வாய் சூரியன்று னல்லர்-சனிமதியுங்
கொல்லான் புகர்புதனுங் கொல்லுவர்மால் சூரியனும்
மொல்லையினிற் கூடிலுண்டாம் யோகம். சுச

மகரலக்கின பலன்.

தூய்மகர லக்கினந்தான் றோன்றப் பிறந்தவருக்
கேய்விளங்குஞ் சந்திரனு மேகுருவுந்-தீய்பாவி
வெள்ளிசெவ் வாய்நல்லன் விளங்கிரவி காரிகொல்லான்
மின்னமதி யுங்குருவு மேல், சுரு

மேலிருவ ருங்கொல்வர் வெள்ளிபுதன் கூடியிடிற்
சேர்ல்யோக மெல்லாங் கொடுத்திடுவர்-நூல்வழியே
பார்த்துவர லாறறிந்து பார்மா ரகரையெல்லாஞ்
சேர்த்துரையு மின்னே தெளிந்து. சுசு

## கும்பலக்கின பலன்.

கும்பவிலக்கினத்திற் கூடிப் பிறந்தவர்க்குப்
பம்புகுரு சேய்பாவி பண்பிரவி-விம்புபுகர்
புந்திசனி நல்லன் புகர்சேயுங் கூடியிடிற்
றந்தரசர் யோகந் தரும். சுஎ

தருகுருவு மேகொல்லான் சந்திரனுஞ் சேயும்
வெருவி யிடக்கொல்வர் பிக்காய்-வருவிபரங்
கண்டு பிலனைக் கருத்திலறிந் தேயுரையும்
கண்டுமொழி நல்லாய் கசிந்து. சுஅ

## மீனலக்கின பலன்.

மீன விலக்கினந்தான் மேலாய்ப் பிறந்தவர்க்குச்
சூனசனி புந்திபுகர் சூரியன் பொன்—னூனமுடன்
பாவியாஞ் சேய்மதியும் பண்புடைய நல்லவர்கள்
கோவுகுரு செவ்வாயுங் கூடில். சுகூ

கூடி லிராசரிக்க யோகமுண்டாங் கொற்றமதை
நாடுசெவ்வாய் கொல்லா ளவிசனியோ-டுபுகர்
பானுபுதன் கொல்வார்கள் பைம்பாகி னேடளவுந்
தேனுமொழி மாதே தெரி. எ0

## ஆயுள்நிர்ணயம்.

சொல்லிலக்கி னாதிபனுந் தோன்றுமட்ட மாதிபனும்
செல்லுசர ராசியுறிற் றீர்க்காயுள்-வெல்லுஞ்
சரந்திரங்கண் மத்திபமாந் சாருஞ் சரமும்
வருமுபய மும்மற்ப மான்பு. எக

மாண்பிலக்கி னாதிபதி மன்னுதிர ராசியுறி
லூனெட்டி னாத னுபயமுறிற்-காண்வயது

தீர்க்கந் திரஞ்சரங்கள் சேரிலது மத்திபமா
மார்க்குந் திரங்களற்ப மாம். ௭௨

அற்ப மிலாதிலக்க ஞதிபதி யாமுபயம்
விற்பனமெட் டோன்றிரங்கள் வீற்றிருக்கி லற்புதஞ்சேர்
மெத்த வயதுபய மேனுபய மற்றையற்ப
மொத்துபய முஞ்சரமு மோது. ௭௩

ஓதுமிது வல்லா னுதய விலக்கினமு
மீதாரா லக்கினமு மேன்மையுள-சீதமதி
செல்லு மிலக்கினமுந் தேர்ந்தே வயதுகளை
மெல்லவே நிச்சயித்து விள். ௭௪

ஒருகுளிகன் மேவு மிராசிதனக் கோசை
தருதிரிகோ ணத்திற் சனியன்-வருங்காலம்
வல்லபந் லிற்பிறந்த பேர்கண் மடிந்திடுவர்
தொல்லையுல கோர்தமக்குச் சொல். ௭௫

ஏறுங் குளிக னிருந்தவிரா சிக்கேழு
சேருமிரா சிக்குத் திரிகோணங்-கோரச்
சனிவருங்கா லத்திரவிற் றுன்பிறந்த யோக
னனிமரண மாவார் நவில். ௭௬

பன்னுமட்ட மாதி பதியிருந்த ராசிக்கு
மன்னுந் திரிகோண மாதமாந்-துன்னுமந்த
மாதத்தி லேமரண மாந்த ருடவயதைச்
சோதித்துச் சொல்வான் றுணிந்து. ௭௭

இரவி யிருக்கு மிராசிக்கு நேச
மருவுந் திரிகோண மன்னி-வருகின்ற
நட்சத் திரத்தின் மரணமந்த நாதனுக்குச்
சொட்சேத் திரமறிந்து சொல். ௭௮

இலக்கினத்தோ னங்கிசங்க ளேறுமிரா சிக்குப்
பிலத்ததிரி கோணம் பிழையா-விலக்கினமா

மிந்த விலக்கினத்திலே மரண மென்றறிவாய்
கந்த மலர்க்குழலீர் கண்டு. எ௬

வயதுநிலை மாரகங்கண் டாய்வருட மாதஞ்
செயநா ளிலக்கினங்க டேர்ந்தே-நயமாய்
நிரியாண காலங்க ணிச்சயமாய்ச் சொல்லும்
பெரியோர் பெரியரெனப் பேசு. அ௦

புத்திரதோஷம்.

அஞ்சொன்பா னென்றி லரவு சனிகுளிகன்
மிஞ்சவே நோக்க மிகவிருக்க-வஞ்சியரே
சற்பத்தைக் கொன்றதினாற் சந்ததிக்கே டாகுமென்று
விற்பத்தி சொன்னோம் விரைந்து. அக

கிரகங்களின் நட்பாட்சி யுச்சம் பகைநீசம்.

சூரியன்.

ஆதித்தற் காட்சி யரிதனுசு மீனுறவு
கோதற்ற வாடுச்சங் கோனீசம்-பேதித்துச்
சொல்லாத ராசியோ ரேழும் பகைசொல்வ
ரல்லார் குழலா யறி. அ௨

சந்திரன்.

சந்திரற்கு நண்டாட்சி நண்டுவில்மீன் பெண்டுறவு
வந்திடப முச்சமென மன்னுமே-முந்தவே
நீசந்தே ளாகும் நிலையைந்து ராசிகளும்
பேசும் பகையெனவே பேண். அ௩

செவ்வாய்.

சேய்க்காடு தேளாட்சி தேண்டெருது கோலரிவை
வாய்த்தநட் புச்சமே மானாகும்-தேய்த்துநகர்
நண்டதுவே நீசம் நலமலம்யா தாகிவரும்
பண்டுரையா நான்கும் பகை. அ௪

புதன்.

புதன்மங்கை தண்டாட்சி பொற்றொடியா ளுச்சம்
நிதம்பகையாஞ் சிங்கம்மீ னீசம்-இதம்பெறவே

சாற்றரிய ராசியிரு நான்கையு மேதாலத்
தேற்றமுயர் நட்பாகத் தேர். அ௫

வியாழன்.

பொன்மீனம் வில்லாட்சி போராடு தேட்பகையாந்
துன்னலவ னுஞ்சஞ் சுறுநீசம்-பொன்மலைபோற்
பாரமுலை மாதரசே பற்றியவோ ராறிடமுஞ்
சேரவுற வென்றிதனைச் செப்பு. அசு

சுக்கிரன்.

புகரேறு கோலாட்சி பொங்கலைமீ னுச்சம்
நிகரற்ற கன்னியதே நீசம்-பகராய்
குடங்தேள் சமன்பகையாங் கூறுத ராசி
தொடங்தே தொகையுறவாய்ச் சொல். அஎ

சனி.

மந்தனுக்குக் கும்பம் மகரமே ஆட்சியதாம்
சொந்தவுச்சங் கோலாகச் சொல்லலாம்-முந்துவிதி
யாடொன்றே நீச மரியபகை நண்டரியாம்
நீடுமிரு மூன்றுறவாய் நேர். அஅ

இராகு.

காரரவுக் காடேறு கற்கடகம் வல்லுறவாம்
சீருலவு மாட்சிபெண் டேளாகும்-ஆரணங்கே
நின்முலைபோற் கும்பமுச்சம் நீணிறைமான் மீன்பகையாந்
தன்னிடையே கோளரிநீ சம். அசு

கேது.

செம்பாம்புக் காடுந் தெரிவை யுறவுச்சம்
அம்மிதுனந் தேளா மதிநீசம்-அம்பெருது
மன்னுதுலை மீனம் மகரஞ்சா விந்நான்கும்
பன்னுட்சி யென்றே பகர். கூ0

குளிகன்.

சேர்த்தகுளி கற்குநண்டு தேனுறவாஞ் சேல்விடையோ
டார்த்தவரி சால்பகையென் றுகிடுமே-சேர்த்தபெரும்

வில்லோடா டுச்சம் மிதுனந் துலைநீசம்
நல்லாட்சி கன்னிமக ரம். ௬௪

ஆண் பெண்.

சரமுன் னரிவையாஞ் சாற்றுபின் னிரண்டாண்
திரமுனிரண் டாண்பின்பெண் செப்பில்-உரமுடனே
தோன்றுபய முன்பின்னாண் சொல்லில் நடுப்பெண்ணும்
மூன்றுகூ றுக முடி. ௬௫

போதகன் வேதகன் பாசகன் காரகன்.

கூறு பலனைக் கொடுவென்போன் போதகனும்
வேறுபண்ணித் தட்டுவிப்போன் வேதகனும்-தேறுபலன்
கூட்டுவிப்போன் பாசகனும் கோல மகாதிசைக்கே
ஈட்டுபொருள் காரகனீ வான். ௬௬

பானு திசைக்குமந்தன் பாசகனுஞ் சுக்கிரனே
மானேகேள் வேதகனு மன்னவனே-தேனனையாய்
காரகனுஞ் செவ்வாயோ காசினியோர் தாமறிய
தரணியும் போதகனு மே. ௬௭

இந்து திசைக்குவெள்ளி யேற்றதோர் பாசகனும்
விந்தைமலர் நண்பனே வேதகனும்-மந்தனே
கங்கா நதிபுடைசூழ் காசினியிற் காரகனும்
அங்கார கன்போ தகன். ௬௮

மங்கலனார் தன்திசைக்கு மார்த்தாண்டன் பாசகனும்
திங்களுமே போதகனுஞ் சேயிழையீர்-பொங்குபுகழ்
ஏயபுதன் வேதகனு மித்தரணி யோரறிய
ஆயசனி காரகனே யாம். ௬௯

புந்தி திசைக்குப் புரவலனே போதகனும்
சந்திரனே பாசகனுத் தானவ-ளிந்துநுதல்
மின்னனையீர் செவ்வாயோ வேதகனும் வெள்ளியோ
மன்னுபுகழ் காரகனு வான். ௭௦

வேந்தன் மகாதிசைக்கு வெய்யவனே வேதகனும்
போந்துவருஞ் செவ்வாயோ போதகனுங்-காந்திசெறி
சந்திரனே காரகனுந் தையலே தாரணியில்
அந்தகனே பாசகனு வான். ௯௯

வெள்ளி மகாதிசைக்கு வேந்தனே போதகனும்
தெள்ளுபுதன் பாசகனுஞ் செங்கதிரோ-மெள்ளவரும்
காரகனே தானாகும் காரியோ வேதகனும்
வாரணியும் கொங்கைமயி லே. ௧௦௦

சனியின் றிசைக்குச் சசிபோ தகனும்
இனியசெவ்வாய் வேதகனென் றேத்தும்-கனிமொழியாய்
வெள்ளியே பாசகனும் வேந்தனே காரகனும்
தெள்ளுதமி ழோருரைத்த சீர். ௧0௧

ஒருவர் மகாதிசைக்கு ளுற்றபல னுண்ண
வருவர் நவக்கிரக மாதே-அவரவரில்
போதகனும் பாசகனும் போற்றுபொருள் காரகனும்
வேதகனு மாகிவரு வார். ௧0௨

இந்தப் படிநால்வ ரெய்தியொரு கோள்திசைக்குள்
வந்துபல னுண்ணும் வகையறிந்தே-சிந்தித்
துரைத்தபல னெத்திருக்கு மொண்டொடியே கேளாய்
தரைத்தமிழோர் தாமறியத் தான். ௧0௩

ஆக்கியோன் பெயர்.

பேசுமதி ராசிதனிற் பெம்மான்ச தாசிவன்சொல்
வாச மெனுங்கவிதை வையகத்தில்-நாசமிலை
என்றெவரும் போற்றி யீச னருள்பெறுவர்
மன்றதனில் மெய்யாம் மதி. ௧0௪

சந்திரகாவியமூலம்

முற்றிற்று.

---

வடிவுள வேலோன்றுணை.

# சந்திராபரணம்.

## இலக்கின பாவகம்.

உருத்ததாமொன்றுவாக்குக் குடையகோள் பன்னொன்றாம்
திருத்தமாய் மூவர் கூடிற் றிரவிய வானுமென்க [கோள்
வருத்தபன்னொன்றுவாக்கோன் வலியபன்னொன்றில்வாழப்
பொருத்தமா யாட்சி யுச்ச மாமெனிற் பொன்னுண் டாமே.

பொன்னனைய் சென்மம் வாக்கோன்பொலிந்தபன்னொன்றிற்
நன்னய மாகச் சென்ம ராசியை நண்ணு மாகிற் [கோளும்
சொன்னது குடும்ப நட்பாய்த் தூயலக் கினக்கோள் சாரத்
தென்னவ னுக மிக்கத் திரவியந் தேடு வானே. ௨

தேடிய லக்கி னக்கோள் சிறுவன்றன் வாக்கில் நின்றால்
நீடிய பெலமா யாட்சி யுச்சத்தே மேவி நிற்கிற்
கூடிய நிதியும் முத்துங் குறையாது மரண மட்டுஞ்
சேடிய ரோடு வீட்டிற் றிரவிய முண்டா மின்னே. ௩

## இரண்டாம்பாவகம்.

மின்னிய வாக்கு நாதன் வியாழத்தி னோடு கூடப் [கோணஞ்
பன்னொன்றோன்னவத்தோன்நான்கோன்பாங்குதாய்க்கேந்திர
சொன்னதோ ரில்லி லேறச் சுகமுட னுயர்ந்த வாழ்க்கை
தென்னவ னவனே லட்சந் திரவியந் தேடு வானே. ௪

வானேகேள் லக்கி னக்கோள் மருவுகேந்திரத்திலாகத் [னோர்
தேனேபார் நான்கோ னஞ்சோன் தெரிந்திடுநவத்தோ னின்
தானேகேந்திரகோணத்திற் சார்ந்திடச் சுதற்குப்பூமி
யானோரற் றனமுங்கீர்த்தி யடையுமென் றுரைப்பாய்தேனே.

வேறு. [றோன்

தேனுமொழிக்குடையோ னுந்திரண்டவாக்கோன்பன்னொன்
ஆனால் நவத்தோன் தசமடத்தோன் ஆட்சி யுச்சமாகிடினும்

கோனு மரசர்க் கபிமானி குறுகாச்செல்வன்குலோத்துங்கன்
கானு வகையில் நிதிசேரும் நன்மை பெறுவ னிவனென்றே.

வேறு.

ஒன்று நான்கு முயர்பத் திடத்துளோ
ரொன்று ளோனிவர் கேந்திரத் துற்றிடின்
மன்றி லேபெரு வாழ்வுநற் கீர்த்தியும்
வென்ற மன்னபி மானியு மின்கொடி. ௭

கொடிய வாக்குக் குடையவன் பாவியாய்
நெடிய லக்கினத் தாதிபன் றீயனாய்
மிடியன் பாவி குலத்தினில் வேறதாய்ப்
படியி லுந்தன னென்றனன் பாவையே. அ

பாவத் தான்பாவர் பற்றி னுடனுயிர்
மேவத் தான்றீயர் மெல்லியே நோக்கினும்
தாவத் தானவன் றன்குல நாசமாம்
ஆவத் தாலழி வன்றுன் மரணமே. ௯

வேறு.

மரண மிரண்டி லட்டமத்தில் வருலக் கினத்தி னுடன்றுனோ
சரணம் பாவ ரிருந்திடினுந் தமையச் சுபர்கள்நோக்கிடினும்
திரண மாயுள் சிசுவுக்குச் செல்வக் கேடு பிதாவழிதல்
தரணஞ் சிறிது தனதான்யஞ்சாரி லேகுமெனும்பொன்னே.

மூன்றும் பாவகம்.

பொன்னிலேபரிதிமூன்றிற் பொலிவிலாத்தீக்கோள்சேரில்
தன்னிலே நேர்மூத் தோர்கள் சாஞ்சனி செவ்வாய்மூன்றில்
மின்னிய தீக்கோள் நோக்கில் வேந்தனுக் கிளைய தேகா
தன்னமே தப்பா தென்று ரறியநூல் தெளிய வாய்ந்தோர்.

ஆய்ந்ததோர் மூன்றி னுதன் ஆறெட்டு வியத்தி லேனுந்
தோய்ந்தவர் பவர்க ளோடே தோன்றினுற் பகைநீ சத்திற்
சாய்ந்தசே யதற்கு முன்பின் சகோதர மில்லை யென்று [டே.
வாய்ந்தநன் முனிவோ ரன்று வகுத்தனர் குணமாய்க்கொ

நான்காம்பாவகம்.

கொம்பேநான்கோன் வெள்ளமதியோன் குலாவக்கேந்த்ரகோ
நம்புஞ் சுபர்க ளுடன்கூடி நண்ணு மாகில் நல்நாரி [ணமதில்
வம்பு மில்லை நலஞ்சேரும் மாதுர் சுகமும் வித்தைவரும்
பம்பும் பூமி வாகனங்கள் பாரி லிவற்குப் பரியென்னே. கங

பரிசேர்நான்கோனேழிடத்தோன் பத்துநவத்தோன்பதிஞெ
உரியகேந்த்ரதிரிகோணம் உச்சமாட்சிநட்பிலுறப் [ன்றேன்
பெரிய யோகம் உத்யோகம் பெருகு மேன்மை யந்தமதிற்
பிரிய முள்ளோ னரசரிடப் பேணச் சிவிகை தான்மன்னும்.

மன்னும்நான்கோன் தனமநேசோன் மருவக்கேந்ரதிரிகோணம்
பின்னும்ஆட்சியுச்சமுறப் பிதற்றும்நவக்கோள்நோக்கிடவே
சொன்னஞ்சிவிகைகளிறுவிடைதுரகம்வளர்சாமரையுமினங்
கன்னிமோகன் தமிழ்ப்பிரியன் காங்கேயங்கள்மிகக்காணும்.

காணும்நான் கோன்பதி ஞென்றேன் கருதுமோரைக் கதி
பனுமே, பூணும் நவத்தோன் தனத்தோனும் போகவாநெ
ட்டீராறில், ஆணும்அவர்கள் பகைநீசம் அத்தமனங்களாகி
டினுந், தோணுமிடியன் பொய்சொல்வன் சுகமொன் றில்லா
னெனுந்தோகாய். கள

ஐந்தாம்பாவகம்.

தோகைகே ளஞ்சோன் வாக்கோன் சுருதிமால் மறையோனு
தாகநட்பாட்சி யுச்சந் தனிற்றிரிகோணகேந்த்ரம் [றேன்றித்
பாகநல் லவரோ டெய்தப் பார்த்திடச் செகத்தின்மீது
யோகநற் களத்ர புத்ர பௌத்ரனல் யோக மின்னே. கஎ

மின்னிய வாக்கு நாதன் விபாழத்தி னேடுகூடி
நன்னய மாக வெள்ளி மேதையும் மதியும் நண்ணில்
பொன்னுடன் கலந்து வாழ்வன் புவியினி லடிமை கீர்த்தி
கன்னல்சொல் மொழியினுளே யோகவான் கருதிச்சொல்வே.

கருதிய வாக்கி னேனுங் கணக்கனுங் கேந்த்ர கோணம்
வருதியா பாட்சி யுச்ச மாமவர் திடவித் வானும்

சுருதியா மாறு சாஸ்திரஞ் சொல்லவா சிக்கப் பண்பாய்ப்
பொருதிய கணிதஞ் சொல்லப் புலவனும் புவியின் மாதே.

மாதுறுஞ் சிறிது கோட்கள் வாக்கினில் மருவி நிற்கத்
தீதுறும் பவக்கோ ளோடே சேர்ந்திடிற் பகைநீ சத்தில்
வாதுறும் பிணியும் நோவும் மக்களும் நசியு மின்னும்
போதுறு மிடிய னாகி யிரந்துண்பன் பொன்று மட்டும். ௨௦

மட்டுறை யஞ்சோன் பொன்னன் மருவுநட் பாட்சி யேனுஞ்
செட்டுறை கேந்தி ரத்திற் றிரிகோணஞ் சேரு மாகிற்
பட்டுவஸ் திரங்க ளன்னம் பரிமள சுகந்த மத்தங்
கட்டுநற் குலத்துக் கெல்லாங் காரிய னிவனுஞ் செவ்வை. ()

செவ்விய கணக்க னிந்து சீர்பெரு மசுரர் கோமான்
திவ்விய கேந்தி ரத்திற் றிரிகோணஞ் சேரு மாகிற்
பவ்விய முள்ள ஞானி பலகலை யுணர்ந்த தீரன்
கவ்விய புத்ரப் பேறு கவிதைகொண் டாட வல்லன். ௨௨

ஆறும்பாவகம்.

வல்ல விருமூன் றிடத்தோனும் மறையோனைக் கதிபனு
செல்லமூன் றிலீரா றிற்றீக்கோ ளுடனேசேர்ந்திடினும் [மே
அல்லல்நிதமும்ரோகத்தா லடைவோர்பகைவராயுதத்தாற்
கொல்லுமழுவாற்குறைபடுவ ரென்றேயதனைக்கூர்ந்துரையே

வேறு.

உரைக்கு மாறிடத் தோன்பாவ ராயுற
நிரைக்கும் பாவர்க டன்னுடன் நின்றிட
வரைக்கும் பூண்முலை மாதுகே ளிச்சுதன்
மரைக்கு மேதுன் மரணமுஞ் சாற்றுமே. ௨௪

ஏழாம்பாவகம்.

சாற்றுமேழோன்சுபனாகித் தானத்திருந்தோர்நற்கோளாய்
ஏற்றுஞ்சுபர்கணோக்கிடவேயெட்டுஞ்சுத்தமெனப்பொருந்
போற்றுங்களத்ரயோகமெனப் புவியாபரணநற்கிரகம் [துப்
ஆற்றுங்கீர்த்திபிரபலமாயவற்குக்கிடைக்குமெனச்சொல்லே





சொல்லுமேழுக்குடையோனுரூசுபக்கோளிகிற்சுபருடனே
செல்லக்கேந்த்ரதிரிகோணஞ் சேரத்தீயோர்நோக்கிடவே
நல்லகளத்ரமதிவாழ்வுநாரி யதனுற்றனச்சேர்த்தி
இல்லிற்கருமமுடிப்பனென விசைத்தார்பண்டுமறையோரே.

மறையோன்கேந்த்ரமதியுடனேவழங்கும்புகருமறைவின்றித்
திறைசேரிருநான்கேழிடமுஞ்சிலகோளிலதாற்சுத்தமெனபர்
பிறைசேர்நுதலேயதியோகன் பெரியோருண்மைகுருபக்தி
குறையாவாழ்வுஞ்சுதற்பேறுங் கொடுக்கும்பலனுமிகவாமே.

கொம்பேவெள்ளியேழிடத்தோன் குறுகவெட்டிலீராறில்
வம்பும்பவக்கோள்நோக்கிடினும் மறைந்தகிரகந்திட்டிபட
நம்பும்பெண்டீர்மிடியுண்டாம் நலமொன்றில்லையிருதுகுணம்
வெம்புங்களத்ரம்போகுமெனமேலோர்முன்னமுரைத்தாரே.

எட்டாம்பாவகம்.

உரைக்கு மிருநான் கிடத்தோனு முற்ற காரி மதிபுகரும்
விரைக்கக்கேந்த்ர திரிகோணம் நிற்க மறையோ னிவர்நோக்க
இரைக்கு முடனு முயிர்சுத்த மீன்ற சுதனுக் காயுளுந்தான்
வரைக்கு முயர்ந்த முலைமாதே மைந்தன் வயது வலுவாமே.

ஆமே யிருநான் கிடத்துள்ளோ னுகுஞ் சனியும் பாவியுடன்
தாமோ ராறெட் டீராறில் நிற்கச் சுபர்கள் சாராதாற்
போமே வயது மற்பாயுள் புந்தி சேரி லாரெட்டிற்
சாமே யெனவு முன்னோர்கள் சாற்றும் பலன்கள் தப்பாதே.

தப்பா திரவி குருதிசனி சாரவெட்டிற் சுபரிலதால்
இப்பார் பகைகள் நீசமதி லிருக்க வத்த மனமாக
முப்பால் வினையுந் தன்னாலே மூடியுஞ் சிசுவுக் கற்பாயுள்
இப்பால் வயது பன்னிரண்டி லிருந்தா லுயிரு மிழப்பானே!

இழக்கு முயிரை யுடல்தனிலே இரவி குருதி யரவுசனி
வழக்குமிகவேமருவிடினும் மைந்தர்க்காயுள்குறைந்திடுமால்
குழக்குட்டுடையகுவிமுலையே குருகுமாண்டிற்பதினெட்டில்
விழக்குமுயிரும்இருவிதியு மேரும்பலனுமேலோரே. நகஉ

வேறு.

ஓரைத்திரி கோணத்திலே யொர்கேந்திர மதனில்
சீரைத்தரு சனிசேர்ந்திடிற் றிறமாஞ்சுப ருடனே
வாரைத்தறி மானேசிசு வயதும்வளப் புறவே
பேரைத்தரு தீர்க்காயுசு பெரியோர்சொன சொல்லே. ௩௩

ஒன்பதாம் பாவகம்.

பாக்கியபலன்.

சொல்ல லாஞ்சசி கேந்த்ரதிரி கோணத்தில்
செல்ல வேசுபர் நோக்கினுஞ் சேர்ந்திடில்
வல்ல வன்றன வானவன் மக்களோ,
டல்லல் தீர்ந்திந் தவனியில் வாழ்வனே. ௩௪

நாரி வாகன லாப நவத்துளோன்
சீரி யராக நட்பாட்சி சேர்ந்திடில்
ஏரி வாகனம் பூமியு மின்புறப்
பாரில் யோகம் பலிக்கும் பலமுற்றே. ௩௫

முற்றுயிர் வாக்கு மூன்றுபன் னொன்றுளோன்
குற்ற மன்றிவர் கூடநட் பாட்சியில்
வெற்றி வேந்த ரமச்சர் விருப்புறும்
நற்றி றக்கீர்த்தி வாணு யிருப்பனே. ௩௬

பிதுர்பலன்.

தருவொன்பதி லரவெய்தியுத் தானுதிபன் பவரால்
வருமாதவன் பிதுர்தானத்தை மருவப்பவ ருடனே
இருமூன்றினின் மும்மூன்றினி லீராறினிற் றந்தை
அருளாயுசு நசியுஞ்சொல வமைத்தாரறி வுள்ளோர். ௩௭

வேறு

கன்னிமீனந் தண்டுசிங்கங் கைவில்கும்ப மிவையிலே
பன்னுங்கோட்க ளொன்பதும் பதியவாறு ராசியில்

மன்னர்யானை சேனைகள் வணங்குமா பரிவுடன்
தென்னனென்று ராஜயோகஞ் செப்பினார்க ளொன்றிலே.

பத்தாம் பாவகம்.

ஒன்றுமேழு நான்குபத்தி லுறுதியாகச் சந்திரன்
நன்றுசுக்கி ரன்வியாழன் நயனபார்வை நண்ணவே
என்றும்வாழ்வன் மன்னனு மிருந்தவேதி யர்க்கெலாம்
மன்றலென்று கோடிகாலம் வரிசையாக மின்னுமே. ௩௬

பதினோராம் பாவகம்.

மின்னியலா பத்துடையோ னேறியவங் கிஷேத்தான்
மிக்கதனத் துடையவரா யவ்வீ டேறப்
பின்னுநவாங் கிஷேத்தாலக் கனகேந்தி ரத்திற்
பிரிவிலா தவருமுன்பின் புக்கா லேற
மன்னியவா யுட்பாக்ய லாபம் பெற்று
மதிபுகர்பொன் மாலிவர்கள் மருவப் பார்க்க
இன்னிலத்திற் சிறுபொழுதே வாக னங்க
ளேறுசெல்வம் மிகுந்தவய தெழுபத் தெட்டே. ௩௭

மிகுந்தவா கனங்களிரு வருங்கேந்தி ரிக்க
மிக்கசுப ரோடுசுபர் பாவரோடு பாவர்
புகுந்திடலா பத்திற்று னத்தினிலுற் றிருக்கப்
புதியலா பாதிபர்தா னுச்சபரும் பார்க்கப்
பகுந்திடா துடனிருக்கும் செல்வமும்பல் லக்கும்
பாக்கியங்கள் தந்தைதாய் பார்த்துநிதங் களிப்பர்
முகுந்தனிவன் கலையெனினும் உலகிற்சம் மதிப்பார்
மோசமெழு பத்தாறின் முடிந்திடுவா கனமே. ௩௮

பன்னிரண்டாம் பாவகம்.

வாகனக்கா ரகனுதித்த வராகிஷேத்தி லுள்ளோன்
வலியலா பத்திருக்க வயவிடத்தி லுள்ளோன்

போகத்தா னத்துடனே பொருந்திடவவ் விடத்தோன்
புதியதோர் பன்னிரண்டு நான்கிடத்தி லுள்ளோன்
சேகரமா யுயிரினுக்கு மூன்றுபன் னொன்றில்
திருந்தியவர் குழாத்தோடு வியமதனிற் றுவ
வாகனமுள் ளவராவர் பதினொன்கு முதலாய்
வழங்கிடுவா யெழுபதுட னெட்டுவய தென்றே. சஉ

வே று.

என்ற வைந்திற் குளிகனுற வியலு மஞ்சோ னெட்டாகக்
குன்று மதியும் ராகுவுடன் கூடிற் பிறர்விந் தெனமொழிவர்
மன்றி லஞ்சி லிரவியுடன் மலியுமஞ்சோன் ராகுவுடன் [மே.
ஒன்றைமதிபொன் பார்க்கிலையா லோதும்பிறர்விந்தெழுந்தன

வே று.

தனமங்குரு சனியம்புலி தருசுங்கனு மேதைத்
தினமங்கிஷ னவராகுதல் கேந்த்ரத்திரி கோணம்
கனகம்பெரு மகுடந்தரு சுவினம்பெறு மதிற்சேய்
மனமும்பிரு கலதுங்கனும் வளர்சோர சவனே. சச

சந்திரா பரணம்

முற்றிற்று.

உ

வடிவுள வேலோன்றுணை.

விடனூர்முனிவரருளிச்செய்த

# சர்வார்த்தசிந்தாமணி

துவாதசபாவமும்,

திசை விளக்கமும் மூலபாடம்.



## காப்பு.

குறள் வெண்செந்துறை.

மருமலர்க் கடப்ப மாலைமார் பகத்தெம்
முருகனைப் பணிந்து முத்தமிழ்க் குறித்தே.

## நூல்.

இலக்கினபாவதிசைப்பலன்.

இலக்கினத் துடையோ னிரண்டுநான் கைந்தே
ழீரைந்தோன் பானுடை யோர்கள்
கலக்கமில் லாத திசைபொசிப் பதனிற்
கண்டிடும் பலனெலாஞ் சுபமாஞ்
சொலற்கரும் விழியா யேழிரண் டுடையோர்
சுபபலன் விசேடமாச் சொல்வர்
விலக்கருஞ் செல்வம் புத்திர லாபம்
விவாகங்க ளுண்டென விளம்பே

இதுவுமது.

கண்டலக் கினத்தோன் பாபியு மாகிற்
கலந்தவர் பொசிப்பெலாங் கடினங்
கொண்டலக் கினத்தோன் றிசையினிற் றுர்ன
கூறிய வாறெட்டு மூன்றும்

விண்டப்பன் ஞென்றீ ராறினுக் குடையோர்
விரும்புமூண் பலன்விப ரீதம்
வண்டமர் குழலா யிலக்கின பாவம்
வரும்வழி யாய்ப்பல னுரையே. உ

இரண்டாம்பாவ திசைப்பலன்.

வாக்கெனு மிரண்டுக் குடையவன் பவனுய்
வக்கிரன் சனியர வுண்ணிற்
போக்கிடுந் தனங்க ளிரண்டினிற் பாபர்
பொருந்திடி லவன்றிசை ராச
நோக்கெலாம் போமே தானமு நீங்கி
நுண்ணிய காவலும் வருமே
நாக்கெலாம் பிசகு மானவீ னமுமாய்
நடந்திடும் பாபருண் ணிடினே. ௩

இதுவுமது.

அன்னவன் றிசைமேற் சோதர பீடை
யன்றியுங் களத்திர நாசஞ்
சொன்னவை கொடுப்பர் சுபரதிற் கூடிற்
றூர்ப்பலன் சமனெனச் சொல்வர்
முன்னமே யிரண்டி லிருந்தவன் சுபனுய்
மொழிந்திடு முடையவன் சுபனல்
இன்னவர் திசையிற் சுபர்களு முண்ணி
லெய்திய பலனெலாஞ் சுபமே. ச

மூன்றாம்பாவ திசைப்பலன்.

மூன்றினுக் குடையோன் பாபனு யிருக்க
முகிழ்த்துமே பாபருங் கூடிற்
றேன்றிய திசையு ளக்கினி பயமுஞ்
சோரர்நோ யாயுத விரணம்
ஊன்றியபாவி யொருவனு யிருக்கி
லொன்றிய திசைபுத்தி சோரம்
மான்றிகழ் கண்ணு யிராசகோ பமுமே
வந்திடும் விசனமும் வளரும். ரு

உச்சமே மூன்றி லிருந்திடும் பாபிக்
குரைத்தவை சமபல னுறுமால்
லச்சமி ராத சோதர நாச
மாய்விடு மூன்றினுக் குடையோன்
கச்சணி முலையாய் சுபன்றிசை சுபருண்
காட்டுமே சவுரிய லாபம்
நிச்சய மான சோதர லாபம்
நிறைதன லாபமுண் டாமே.

நான்காம்பாவ திசைப்பலன்.

கொடியவர் நான்கிற் குடையவன் திசையிற்
கூடியே பாபரு முண்ணிற்
படிமிசை பந்து மாணமுங் கிலேசம்
பண்ணுவர் தனமுநா சமதாங்
கடியநீ சத்தோ டுறைந்தவ ருண்ணிற்
கருதிய புத்திர நாசம்
மிடிபடு மூன்றோன் மிசைந்தன னுகின்
மெலிகுவ ரென்றனர் மின்னே.

இதுவுமது.

எண்ணொரு நான்கிற் குடையவன் சுபனு
யேற்றவன் றிசைசுப ருண்ணிற்
றண்ணெனுஞ் சொல்லும் பூமிலா பமுமே
தான்வரு மிராசயோ கத்தாற்
பண்ணழ கியசொற் பைந்தொடி கேளாய்
பகர்நர வாகனம் வருமே
யெண்ணுமோ ரைந்திற் குடையவன் பாபி
யிருப்பவன் றன்றிசை யிசைப்பாம்.

ஐந்தாம்பாவ திசைப்பலன்.

உண்டிடுங் கோளும் பாபியே யாகி
லுரைப்பது புத்திர நாசங்
கண்டிடும் பொசிக்கும் போசன மற்பங்
கண்டவைந் துடையவன் சுபனுய்ப்

பண்டதி லுண்போர் சுபருமே யாகிற்
  பகர்வது புத்திர லாபம்
வண்டமர் குழலாய் ராசநோக் கமுமே
  வருமென்பர் சோதிட வல்லோர். ௯

ஆறாம்பாவ திசைப்பலன்.

ஆறினுக் குடையோன் பாபனு மாகி
  யவன்றிசை பாபர்வந் துண்ணிற்
கூறிய ராச கோபமே மீறுங்
  கொண்டிடும் வாந்தியு மேகம்
வீறிய காசம் வியன்சட மெல்லாம்
  விரைந்திடு மக்கினி பயமே
மாறியே சுபனுய் சுபருண்ண வதிலே
  வளருஞ்சத் துருவென வகுத்தார். ௧௦

ஏழாம்பாவ திசைப்பலன்.

சத்தமத் துடையோன் பாபனு மாகிச்
  சார்ந்துண்போர் பாபரே யாகில்
சித்தமும் பூசல் களத்திர விரோதம்
  சீர்ச்சுருக் குற்றிடுங் கடனும்
மெத்தவுந் தனம்போம் இராசகோ பமுமே
  விளம்புவர் சுபரெனின் மின்னே
உத்தம மாகுங் களத்திர லாப
  முண்டுபொன் சவுக்கியம் வருமே. ௧௧

எட்டாம்பாவ திசைப்பலன்.

அட்டமத் ததிபன் பாபியு மாகி
  யதிற்சனி சேயர வுண்ணில்
கட்டம தாயுட் டனமுமே நாசம்
  நாடிய புத்திர நாசங்
கட்டழ கியபூந் தாரமு நாசங்
  கண்டவ னுடையவன் சுபனுய்
இட்டமாய்ச் சுபரு மெய்திடப் பலனு
  மியம்புவ னேந்திழை முலையே. ௧௨

தடம்குளங் காண்பன் புண்ணிய தீர்த்தஞ்
சரீரவா ரோக்கியம் பெறுவன்
இடம்பெறுஞ் சுபரும் பாபருங் கலந்தே
யிருந்திடும் பலனையே யிசைக்கில்
வடம்பெறு முலையாய் சுகதுக்கஞ் சரியாய்
வருமென்ப ரிராசிக டோறுந்
தொடர்ந்ததோர் சுபரும் பாபருங் கலந்தாற்
சுபபலன் றீமையுந் தொடரும். கக

ஒன்பதாம்பாவ திசைபலன்.

ஒன்பதுக் குடையோன் பாபனு மாகி
யுண்பவர் பாபரே யாகிற்
றன்பதி தனிலே காவல்நோய் துக்கந்
தணலென வெரிவுநோ யுண்டாந்
துன்பமில் லாத சுபனுடை யவனுய்த்
தோன்றிமே சுபருண் ணுங் காலை
யின்பமே யல்லால் வெகுதன லாப
மிணங்குவே ளாண்மையும் வருமால். கஉ

க0-கக-கஉ-ம் பாவதிசை இவற்றின்பலன்கள்.

வல்லவீ ரைந்துக் குடையவன் கொடிதாய்
வந்துண்போர் கொடியரே யாகிற்
புல்லிய திசைபோம் பேணுவார் பொன்போம்
புதுமதிப் பசுக்களைப் போக்குஞ்
சொல்லிய சேயிற் சோதர விருத்தி
துயர்சனி ராகுவி னாலே
நல்லிய வின்றிப் பேய்புண்ணைக் கொடுப்பன்
நடந்திடு மிராசகோ பமுமே. கங

இதுவுமது.

காட்டு மீரைந்துங் குடையவன் நலனுய்க்
கருதிய சுபருமங் கிருந்தாற்
றாட்டுவோர் நன்றேல் வெகுதன லாப
மோங்கிய கீர்த்திநற் றருமந்

தீட்டுறு மிராச யோகமுண் டுலகிற்
 றிசையெலாம் பெற்றால காள்வன்
ஈட்டு பன்னொன்று மூன்றுமோர் பலனு
 மிரண்டுமீ ராறுமிப் படியே. கசு

சூரியதிசைப் பலன்.

சொல்லுநல் லிடமாய்ச் சூரிய னுச்சந்
 தோன்றிடி லரசியல் கொடுப்பன்
புல்லுதுர்த் தானம் பொருந்திடி லிபமும்
 பொன்றுறுந் தானமும் போகுஞ்
சொல்லுநீ சத்தே சேர்ந்திடத் திசையிற்
 றுன்பமா மாபத்துச் சேரும்
வெல்லுமூ லத்ரி கோணமுற் றிருந்தால்
 மேவிய திசையின்ப மேவும். கஎ

இதுவுமது.

கேந்திரந் துக்கஞ் சத்துரு வில்லங்
 கிட்டுமே சத்துரு பீடை
சார்ந்தவட் டமத்தி லிருந்தவன் றிசையிற்
 றுன்வரு மரணந் தப்பாது
போந்தன வர்க்கம் பொருந்திய போகம்
 போய்விடுஞ் சவுக்கியம் பொருந்துஞ்
சேர்ந்தநற் பெலமாய் வெகுதன லாபஞ்
 சிறந்திடச் சவுக்கியம் வருமே. கஅ

இதுவுமது.

மேவிலக் கினத்தே வருங்கதிர் திசையேல்
 விரும்பிய ராச்சியம் பெறுவன்
றுவிலக் கினத்துக் குடையவ னிருந்த
 தானத்துக் குடையவன் பொசிப்பி
லோவருந் தனங்க ளுற்றிடும் பாப
 னொன்றிட னருந்திடப் பெற்றாற்
காவிசேர் விழியாய் கேளதி ரோகங்
 கண்வலி யுண்டெனக் கருதே. கக

ஆறினை யுடையோன் வீட்டினிற் கதிரு
மழகிய வேழினு தனுமாய்ச்
சீறிய வாறிற் சேர்ந்திடத் தனம்போஞ்
செப்பிய களத்திர மாளும்
மாறிவ ளுட்சி நாட்குடை யவனாய்
வளருஞ்சத் துருவெனும் வீடேற்
கூறிய வித்தை போய்விடுந் துக்கங்
கொடுத்திடு மர்த்தநா சமுமே. உ௦

இதுவுமது.

அட்டமத் திருந்தாற் கோத்திர நாசு
மாயுத பீடைசத் துருவாற்
றெட்டகேந் திரங்க டோன்றிடின் முழங்காற்
றடைபுண்பிற் பாதியே தோன்றுங்
கட்டழ குடையா யட்டமத் ததிபன்
கலந்திடிற் றேசசஞ் சாரந்
திட்டமா யாறிற் சேர்ந்திடிற் சுரமே
செப்புவ ரதின்மகத் துவமே. உக

இதுவுமது.

மேடமே கதிரேற் பூரண யோகம்
விடையினிற் சனவிரோ தமுமாம்
நாடவே யாழிற் சாத்திர வித்தை
நற்சுப வரத்துவே ளாண்மை
கூடவே ஞெண்டில் வெகுதன லாபங்
கோளரி யிப்படி யாகுந்
தேடவே பெண்பொசர் றுலைசர்வ நாசந்
தேளெனிற் றனத்தையே கொடுப்பன். உஉ

இதுவுமது.

சிலைதனிற் றனமா மகரத்திற் பாபஞ்
சேர்குடம் வியாதிபா மீனம்
உலைவிற் றுயாதி தனுபூவன் கொள்வன்
உரைத்தவை யாவெட்டு மல்லால்

நிலை பெறு மீரா றுமெனிற் பலன்கள்
நிகர்த்தலத் தூர்ப்பலன் கொடுப்பன்
கலையறி மானே சூரியதிசை யூண்
கருதுமுன் னிடமறிந் துரையே. உரு

சந்திரதிசைப் பலன்.

சந்திர னுச்ச மிராச்சிய லாபஞ்
சவுக்கியம் யாவையுங் கொடுக்கும்
பிந்திய நீச மந்திரி பகையாம்
பேசிய பெரும்பகை குருவும்
வந்திடு மதியந் தேய்ந்திடத் துக்கம்
வளர்குன்மங் கிராணியாம் வளர்வோன்
முந்திய திசையி னுரியர் போகம்
முத்துவெண் பட்டுகள் வருமே உச

இதுவுமது.

மனத்தினிற் றுக்கங் கிராணிகள் காணும்
மயங்கிட வெவர்களுங் காணக்
கனத்தினின் மேட மந்நிய தேசங்
களும்வன வாசமுங் காட்டுஞ்
சினத்தினிற் கீர்த்திச் சிரரோக மாகுஞ்
சேர்ந்திடு மிடபத்திற் றனே
சனத்தவி ராச யோகமும் புத்ரர்
சவுக்கியஞ் சதா தினம் வருமே. உஎ

இதுவுமது.

குலம்புரி தொழிலி லாபம்வா கனங்கள்
கூறிய வாச்சியம் பெறுவன்
நிலம்புகழ் திசையிற் பின்வருங் கூறில்
நிகழ்த்திய பலனெலாம் வருமே
கலன்பெறு முலையாய் பாபரைக் கூடிக்
கண்டமுற் பாகமே தாய்போம்
பலன்பெறுஞ் சுபரேற் பலனிலை கண்டாய்
பகர்பிதாச் சேதம்பிற் பாகம். உஅ

தண்டுறை மதியின் றிசைவருங் காலஞ்
சஞ்சார சீவன மாகும்
நண்டுறை போதிற் கடற்றுறை லாபம்
நல்லிசை தனங்களும் வளரும்
பண்டுசொல் சிங்கம் வெகுதன லாபம்
பகர்சனம் வளர்விக்கும் பெண்ணேல்
வண்டுறை குழலாய் நீசர்பெண் போகம்
வர்த்திக்கக் கூடியே மகிழ்வார். உ௭

இதுவுமது.

துலைவரு மதியேல் டெண்கள்வஞ் சனையாற்
றுக்கமுந் தரித்திரம் வருமே
நிலைபெறு தேளி லரிட்டம தாகும்
நெடும்பகை தரித்திர நாசஞ்
சிலைகொஞ்ச லாபம் வாணிபம் பலிக்குஞ்
சேர்ந்திடு நோய்சில பொருள்போங்
கலைதனிற் றணியாப் டயித்திய ரோகங்
கண்டபுத் திரிகளு நாசம். உ௮

இதுவுமது.

கும்பமே நோயுந் தரித்திர விரணங்
கொடுத்திடுங் கோபமே மீனம்
அம்புவிப் பேறு நீசர்சன் மான
மாகிய ரோகமே காவில்
வெம்பிய பிணிபோஞ் சவுக்கிய லாபம்
விளங்கிடு மென்றனர் விருந்தே
வம்புகொண் முலையாய் துர்த்தான மில்லா
மதிதிசைக் கிப்பலன் வருந்தே உ௯

செவ்வாய்திசைப் பலன்.

நிலமகன் பகைத்தோர் வீட்டினி லிருந்தால்
நெடும்பகை யாயுத விரணங்
குலம்பயிற் றனம்போ மித்திரர் வீட்டேற்
கூறுவர் மித்திர விரோதம்

நலம்பெறு மங்கண் களத்திர விரோதம்
நாடிய தந்தநோ யாகும்
பலனின்றி விடுமே தாகநோ யிளைப்பும்
பகர்ந்த சஞ்சாரமும் வருமே. ௩௦

இதுவுமது.

எண்ணிய வுச்ச மிராச வல்லபமா
மெய்திய பூபதி வரத்து
நண்ணிலக் கினமே லுச்சநாட் குறைத்த
நற்பலன் பெறுவனே கோணம்
புண்ணிய தானஞ் சனபரி வாரம்
பூபலன் யாவையும் பொருந்துங்
கண்ணிசேர் குழலாய் மித்துரு வீடு
காணினிட் சேபமே காணும். ௩௧

இதுவுமது.

எரிதகர் சேரிற் பயித்திய ரோக
மெய்திடு மக்கினி மந்தம்
விரியுமா யாசங் கீர்த்தியுச் சாகம்
விடையினில் ரோகசோ கமுமாந்
தெரிவுறும் பிறர்க்குத் தந்திரம் வியங்கோள்
சிறந்திடும் வேதியர் சாபம்
வரிவிழி மயிலே வருமென முன்னோர்
வழுத்தின ருலகெலா மகிழ. ௩௨

இதுவுமது.

வஞ்சியே யாழிற் பரதேச வாசம்
வர்த்திக்கும் வித்தியா விநோதம்
அஞ்சிய செலவு சனங்களின் விரோத
மழகிய சம்பத்தி லாபம்
மஞ்சியல் கடகம் யாத்திரை விரோத
மறப்பொடு புத்திர நாசம்
கொஞ்சிய மடவா ருபாதியா மிளைப்புங்
கொண்டிடு கிலேசமும் கூடும். ௩௩

கூடிய சேய்மந் திரியுடனாகிற்
குதப்பிணி குதிரையும் வரத்து
நீடிய கீர்த்தி தேகவூ னமாம்
நெருங்கிய மந்திர வயிரம்
நாடிய கடக நீசத்தி லாகி
னடந்தகா ஞன்கிரி லிருக்கிற்
றேடிய சிங்கந் தனமழு சேதஞ்
செலவிடு மாயுத விரணம். ௩௪

இதுவுமது

கன்னியிற் சுபமாம் பாவுப காரங்
களத்திர புத்திர லாபந்
துன்னிய பூமி பலிதப்வ ராது
துலைகடை தீர்த்தயாத் திரைபோம்
பின்னியல் போதே திரும்புவா கனம்போம்
பேசிய மித்திரர் கலகம்
முன்னியல் பான தரித்திர நாளு
முடியுமென் றுரைந்தனர் முன்னோர். ௩௫

இதுவுமது.

விருட்சிகம் வித்தை தானியந் தனங்கள்
விரும்பும்வே ளாண்மைகள் கிணறு
திருப்பெறல் வருமே தனுசினின் மறையோர்
தேடிய பொன்னையே கொள்வன்
மருக்கமர் குழலா யிராசசன் மானம்
வளர்கின்ற சம்பத்துக் குடைமை
நெருக்கிய மகர முச்சமுன் விளம்பு
நெறியிலே பலன்களை நிகழ்த்தே. ௩௬

இதுவுமது.

மகரமந் தியத்திற் றனம்வரு மல்லால்
வரும்பெரும் புவியினாற் பயமாம்
பகருவ தின்ன நட்புமா யுற்றோர்
பயங்கும்ப மதிற்கள்வ ராலே

தகருமே செல்வங் கடன்பகை யாதற்
றரித்திர மீனத்தில் ரோகஞ்
சிகரமா முலையாய் தேசசஞ் சாரந்
தேகத்தில் விரணவா தையுமே. ௩௭

இராகுகேதுகளின் திசைப்பலன்.

எட்டிரு மூன்றீ ராறினிற் றானே
யியம்புவன் றார்ப்பலன் கோபம்
நட்டகேந் திரங்க ணற்பல னிராகு
நடத்திடு பலனையே நவிலத்
தொட்டவ னிருந்த ராசிக்கு நாதன்
றுலங்கிய பலனதாங் கேதித்
திட்டமே சொல்ல வென்றனன் விடனூர்
சிறந்திடு முனிவரன் றானே. ௩௮

குருதிசைப் பலன்.

பொன்னவ னட்பி லரசர்தன் மகிழ்ச்சிப்
புகல்கின்ற காரிய சித்தி
பின்னவன் பகைத்தோர் வீடெனில் விரோதம்
பேசிடு மிகுமப வாதம்
கன்னய நீங்கி நித்திரை மறையும்
நாட்டிய சுரமுட னிளைப்பும்
இன்னமுஞ் சிரத்தே வேதனை யெரிவு
மிருந்திடும் வீடழி வாமே. ௩௯

இதுவுமது.

வருதிரி கோணஞ் சம்பத்துச் சாகம்
வளர்ந்திடு புத்திர லாபம்
மருவுகேந் திரங்கள் பூமக ளிலாபம்
வருந்தெய்வ பத்தியு மாகும்
பொருதகர் ஞானஞ் சற்குரு நேயம்
போற்றுமன் னவர்தனம் பெறுவன்
றிருவுறு மாதர் புத்திரர் மகிழ்ச்சி
சேருமென் றுரைத்தனர் தெரிந்தே. ௪௰

விடைபகை வளரும் நித்தமுச் சாகம்
மேவுமே வெகுதன லாபந்
தடையிலா மிதுனங் களத்திர தோடந்
தர்மம்வே ளாண்மையும் வளருங்
கொடையுடை யவனுங் குலங்கள்வர்த் திக்குங்
கொடுத்திடும் பயமங்க வீனம்
இடைபிடி யனமே கட்கந்தங் குலத்திற்
கெய்துமா சாரத்தை வளர்க்கும். ௪௧

மன்னவ ராலே சகலபோ கமுமே
வர்த்திக்கும் வித்துவா னாலே
யின்னநல் லுச்ச மிராச்சியந் தனங்க
ளெய்திடு மிறைபவ னுவன்
சொன்னதோர் போக மில்லையே யமைச்சர்
தோன்றிய னுச்சத்துக் கடையி
லன்னமே நீச மங்கையர் நட்பு
மாம்பிதா தாய்துக்க மேவும். ௪௨

அணிகலம் விற்குங் கவடுகள் பேசு
மரியெனின் மன்னரான் மகிழ்ச்சி
தணிவிலா மகவுங் களத்திர முண்டாந்
தருமங்கள் புரிதொழி லிலனும்
பணிபெறு கன்னி நாழ்ந்தபெண் சிநேகம்
பகர்தன லாபமேல் வருகுந்
துணிவுட னெறிந்த தனம்வருந் துலையிற்
றார்த்தனுங் களத்திர கோபம். ௪௩

விரணநோய் கோற்கே போசன பீடை
விரும்பிய வணிகரே யுறவு
முரண்மிகு தேளிற் றேவதா பத்தி
முழுகுவன் றேசங்கள் பார்ப்பன்
காணமே வென்றோன் றுறவியுச் சாகி
காணியா மூலத்தி கோணஞ்
சரணமா மறையோர் தனைப்பணி யாசர்
சாற்றிய சுகமொரந் தருமே. ௪௪

சிலைதன பதியாம் புத்திவித் தாரஞ்
சிறந்திடு மண்டல பதியாங்
கலைதெரி வல்லன் குருபத்தி யுடையன்
கருதும்வியா பாரத்தில் வல்லன்
உலவுறு மகர நோயது துக்க
மோங்கிய தரித்திரம் வளரும்
மலைவுகொள் துயரம் யாத்திரை கெடுதி
மன்னரா லாயுத விரணம். சரு

சொல்லது நீசம் தூஷிக்கப் படுவன்
துணிபுள விராசதண் டனையாம்
நல்லவூ னுறியான் கூலிசெய் துண்பன்
நாரியர் நீசரை யணைவான்
மெல்லமான் கடையே லகமுடைத் துண்பன்
வேடர்பொன் பெறுவனே விரும்பி
யல்லிசேண் மரம்விற் றுண்பது மன்றி
யாடுமேய்த் துண்பது மவனே. சசு

இன்னமான் கடையிற் றரித்திர முளனு
மின்பம்பின் வாகன மெய்துஞ்
சொன்னதோர் கும்பஞ் சவுரியஞ் சோரந்
துலங்கபி மானியா பாரி
யன்னமீ னத்திற் கலைகள் சாற்றிடுவ
னுனதோர் சவுக்கியம் வீரம்
பொன்னவன் றிசையி லிளமுலை யாளே
பூசுரர் தமையென்றும் போற்றும். சஎ

கண்டவிப் பலன்கள் சுபத்தான மாகிற்
கருதுதூர்த் தானங்க ணடுவே
யண்டிடப் பலன்போங் கேந்திர கோணத்
ததிபதி யாகிலே யிளைக்கும்
விண்டகேந் திரத்தே யிருந்திடச் சுபமாம்
விளங்கிடா துறைந்திடி னீசம்
வண்டமர் குழலாய் மூலத்ரி கோணம்
வந்திடி னற்பலன் வருமே. சஅ

சனிதிசைப் பலன்.

காரிகட் பிருந்த திசைசெப்ப நல்ல
கருமங்கள் பூமனை மனைக்கஞ்
சீரிய கீர்த்தி சிநேகமா மறைந்த
திசைபிறர் மாதினைப் புணர்வன்
பாரியல் காமிப் பாரியைப் புணர்வன்
பண்ணுமே விரோதங்கள் பலவும்
வீரிய வுச்சஞ் சுகஞ்சுப மல்லால்
விளங்குசே ஞடாதி யிவனும். ௫௯

காணதி யுச்சம் வெகுபிர தாபி
கருதிய சனபரி பாலன்
பேணவே யுச்சக் கடையில்வியா பாரி
பேசிய தலம்பல பெறுவன்
பூணணி மைந்த ருண்டுமே டத்திற்
பொருந்திட வமைச்சர்நட் புண்டாங்
கோணவே யழலே வழிசன விரோதி
கொண்டிடும் வாதரோ கமுமே. ௬௦

நீசமாம் பாகந் தேகநோய் பொன்போல்
நிகழ்மறை வேதியர் பகையாம்
வாசமா நீசக் கடையினிற் றேக
வருத்தமுந் தவமுமல் லாதே
நாசமாந் தலங்க ளிளைப்புநோய் வந்தே
நடுங்குவ ரென்றமுன் னவின்றார்
காசமா முச்சங் காணதின் பலன்கள்
கருத்துணர்ந் திடமறிந் துரையே. ௬௧

விடைதனிற் பெரியோர் சங்கதி விசேடம்
விளங்குப மானங்கள் வீரந்
தடையிலாச் செயங்க ளரசர் சன்மானந்
தாட்டிகம் பெறுவனே மிதுனங்
கொடைபுரை யில்லான் புத்திர ருண்டாங்
கோதையர் திருடவே கொடுப்பன்

கடைவிழி காதி னேய்வரு மேகங்
கலந்திடத் தனியனுங் காணே. ருஉ

கடகத்தி லாபங் கடற்பொரு ளெய்துங்
காரிய விசாரிவல் லவனும்
நடமிடு சிநேக மநேக ரோகங்கள்
நாடிய புத்திர நாசம்
விடமிடுங் கண்ணுய் பந்துவே விரோதம்
மேதினி பிறந்திடுங் கன்னி
தொடர்தரும் வியாதி சுபம் விபசாயந்
தோன்றிடு மிராசவல் லபமே. ருங

துலைதவந் தருமம் போக பாக்கியமுந்
தோன்றிடும் விருட்சிகங் காட்டி
லலைவதீ தன்றிக் களவுசெய் துண்ப
னருங்கவி நீசரா லெபதுஞ்
சிலைசுகங் காமங் களத்திர சுகமாஞ்
சிறந்திடு மடிமைகள் பெறுவன்
கலைதன லாப மித்திரர் மகிழ்ச்சி
களத்திர போக முண்டாமே. ருச

சாடியிற் சுகமாம் மூலத்ரி கோணந்
தராபதி திருக்கணேக் குண்டாங்
கூடிய தனம்யா பாரிமா னங்கள்
கொடுப்பது மீனத்துச் சாகம்
நாடிய புரங்கட் கதிபனு மாவன்
நாடுமுச் சாகமி லாபந்
தேடிதுர்த் தானந் தள்ளியிப் பலனைச்
செப்புக வென்றனர் தெளிந்தோர். ருரு

புதன்திசைப் பலன்.

மதிமக னட்பில் வித்தைக டனமும்
வளர்ந்திடு மன்னரான் மகிழ்ச்சி
புதியசத் துருவேல் பங்கமு ரோகம்
புத்திர களத்திர துக்கம்

அதிகவெம் பவங்க ளாயுத விரண
மல்லது புத்திமே நாசம்
விதிபெறு மரபி லாபத்து துக்கம்
விழிவலி சுரங்களும் வருமே. ருசு

திரிகோண புந்தி சோதர வின்பஞ்
சிறந்திடு மெக்கலை புரிதல்
புரியும் வஞ்சனைகள் மேடத்தில் வீரம்
புகலய லகத்தில் சஞ்சாரங்
கரிவுசே யின்பம் வெகுதனச் சேதம்
காவிடை யன்னை விரோதம்
வரிவிழி மடவாய் குலசிரேட் டமும்பொன்
வருமக விர்த்திக்கு மாதோ. ருஎ

புந்தியான் சேர வஸ்திரா பரணம்
புத்திர ரநேகமே யாகும்
முந்திபங் கதிலே சிரேஷ்டனு மாகி
மோகியாங் களத்திர பலனுஞ்
சிந்திசந்தான விருத்தியாங் கோட்கள்
சேர்ந்தவர் தானுறும் பலனும்
பிந்திய கடக மற்ப சம்பத்து
பெரும்பகை யொக்கலுங் கவரே. ருஅ

சிங்கத்து ஞானி யிராசபூ டணனே
சிறந்திடு மேலுப காரி
மங்கையுச் சத்தே லுன்னித யோகம்
வத்திரா பரணமும் வருமே
துங்கனன் முனிவ ரூர்வசம் பெறுவன்
றுயன்றிய புத்திரர் வளருந்
தங்குமோ ருச்சக் கடைபுத்தி வித்தை
தருமக வுடையனுண் டாமே. ருகூ

இன்னமுங் கீர்த்தி தருமமும் பெறுவ
னேந்திய மூலத்திரி கோணஞ்
சொன்னமுற் படியா மரசர்கள் போற்றத்
துலங்கிய தருமமே புரிவன்

மீண்டுசேய் சிங்கம் பிரபல மாதா
 வெகுமதி மன்னர்கோ பத்தைக்
கண்டுசென் றிடுவன் பரதேசம் வித்தை
 கல்வியிற் சீவன மாமே. கூ

கன்னியில் விசாரம் களத்திர போகங்
 காணுமே யக்கினி வாதை
தன்னிகர் கோபி பிரபல விரோதந்
 தன்னவர் தனங்களே நாசம்
உன்னிய காமி மூலத்ரி கோண
 மோங்கிய தனம்பசு வுண்டாம்
மின்னிய கன்னி வெறுத்திட வேண்டும்
 வேண்டிய சம்பத்து வருமே. கூ

விருட்சிகந் தளமாஞ் சஞ்சார முண்டாம்
 மேவிய தனுசுசத் துருவாம்
தருமுத்தி யோக மகரத்திற் கிலேசஞ்
 சத்துருபீ டையும்விவ சாயம்
வருங்கும்ப ஞானி தண்ட நாயகனுய்
 வருத்தங்கள் பலருக்கும் புரிவன்
பொருங்கயன் முன்னிற் சம்போக மாகப்
 புகலுறுஞ் சவுக்கிய மாமே. கூ

காட்டிய மீனம் பின்வரும் பாதி
 காவலஞ் சுவனி தன்றித்
தீட்டிய யோக வான்சம வானுஞ்
 சேர்வனே மடந்தையர் பலரை
நாட்டிய கருமங் கூபநற் றடாகம்
 நடத்துவன் கடற்றுறை லாபம்
பூட்டிய பணியாற் புனைமுலை மடவாய்
 புகரெனிற் புகல்வரிப் பலனே. கூ

சர்வார்த்தசிந்தாமணி
முற்றிற்று.

---

உ

வடிவுள வேலோன்றுணை.

# துடி நூல்.

## காப்பு-வெண்பா.

ஆராயுஞ் செந்தமிழா லாய பயனெடுத்துச்
சீரார் துடிநூலைச் செப்பவே-காரார்
களத்து விநாயகன் காத்தருளும் பூத
களத்து விநாயகன் காப்பு.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீருடனே துடிக்கிலுச்சி யிடரே நீங்கும்
சிறந்தவுச்சி வலந்துடிக்கி லச்சஞ் சொல்லும்
பேருடனே வுச்சியிடம் பெருமை யாகும்
பின்றலையே துடிக்கிற்சத் துருக்க ளுண்டாம்
ஊருடனே தலையடங்கற் றுடிக்கு மாகில்
உயர்கீர்த்தி பெருமைசம் பத்து முண்டாம்
நேருடனே நெற்றியிடந் துடிக்கு மாகில்
நேர்வார்த்தை சம்பத்து நிறைய வாமே. க

நிறையநெற்றி வலந்துடிக்கிற் பிணியே நீங்கும்
நீண்டவலப் புருவமிகப் பெருமை யாகும்
பிறையனைய புருவமிடந் துடிக்கு மாகிற்
பெரியதோர் பொல்லாங்குப் பேச்சுண் டாகும்
குறையறவே யிருபுருவந் துடிக்கு மாகிற்
கோதில்லை பெருமைமிக வெய்து மென்பர்
மறையுறவே வலதுநிமை மேல தாகில்
வழக்குண்டாய்த் தீருமிது வாய்மை தானே. உ

வாய்மைவலக் கண்ணினிமை கீழ தாகில்
வல்விசனத் தாலழுகை வந்து மாறும்
சேய்மைபெறு முற்குவளை துடிக்கு மாகின்
தீராத வழக்குதனக் காக வெல்லும்




தீய்மையறப் பிற்குவளை துடிக்கு மாகின்
சிறந்தபெரும் புகழுடனே செல்வ முண்டாம்
தூய்மையிடக் கண்ணினிமை கீழ தாகின்
துணைவனுக்கே யிடறுவருஞ் சொல்லுங் காலே. கூ

சொல்லிடக் கண்ணினிமை மேல தாகின்
சுகமிருக்கு சம்பத்தாந் தொலைவி லாத
வல்லவலக் கண்ணடையத் துடிக்கு மாகின்
வருத்தமுறும் பிணிசிறிது வந்து மாறும்
எல்லையிலா விடக்கணெங்குந் துடிக்கு மாகின்
இருநிதிய மிகப்பெருகு மியம்புங் காலே
அல்லலுடன் கழுத்தடங்க லுந்துடிக்கின்
அவன்சிரமங் கற்றுவிழு மறுதி தானே. ௬

தானமவன் பிடறிவலந் துடிக்கி னன்மை
சார்ந்தவிடப் புறமாகிற் றகைமை யுண்டாம்.
கானமுள முதுகுபிட ராக்க மாகும்
கனவலது புயப்புறமே வழக்கு நன்மை
ஈனமிலா திடதுபுயப் புறமே யாகின்
ஏந்திழையுண் டினியவலப் புறமே முற்றும்
ஊனமுட னொருசெய்தி தூரத் தெய்தும்
உறவிடப் புயஞ்சாவென் றுரைப்பார் தாமே. ௭

உரைக்கில்வலக் கண்டக்கை யுடையே றுகும்
ஓங்குமிடக் கண்டக்கை தோஷந் தீரும்
தரைக்குண்மிகு தவப்பயனும் வலமு ழங்கை
தாவுமிட முழங்கைதனஞ் சார்வ தாகும்
பெருக்கமுள பேறுகும் வலது முன்கை
பிறர்கேடா மிடதுமுன்கை பேசுங்காலே
விரிக்குமகங் கைவலத்தே துடிக்கி லீனம்
மேவுமெனப் புலமையினோ ரியம்பி னாரே. ௮

இயம்புமகங் கையிடத்தே லாப மாகும்
இயல்புடனே வலப்புறங்கை வழக்க தாகும்

பயமுறுமே யிடப்புறங்கை துன்ப மேவும்
பருத்தவலப் பெருவிரலி லாப மாகும்
நயம்பெறுமே சுட்டுவிரல் செம்பொன் சேரும்
நடுவிரலில் நற்கரும மெய்து மிக்க
வயம்படைத்த வணிவிரலிற் பெருமை யாகும்
மறுவில்சிறு விரலுற்றூர் சேர்ந்த சாவே. ௭

சேர்ந்தவலக் கையடியே துடிக்கு மாகின்
சிறந்தவொரு கருமமுற்றுஞ் செல்வ முண்டாம்
நேர்ந்தவிடக் கைப்பெரிய விரல தாகின்
நிறைபெருமே சுட்டுவிர லிராச நோக்கம்
சார்ந்தநடு விரலின்வழக் கொன்றுண் டாகும்
தவிசிலகு மணிவிரலோ தனமு நன்மை
வார்ந்தசிறு விரலாயின் மரண மில்லை
வஞ்சகம [illegible] கேட்டே. ௮

கேட்டவிடக் கையதனிற் றுடிக்கு மாகின்
கிலேசமுட னவனிருந்த பதியி ழக்கும்
நாட்டமுறு நெஞ்சதனிற் றுடிக்கு மாகின்
நயமில்லை நோக்காடு வந்து மாறும்
ஈட்டமிலை வலமுலையிற் றுடிக்கிற் சாவாம்
இடமுலையிற் சுகஜீவி யனைய தொப்புள்
நீட்டநிறை விசனமாம் வயிறே யாகின்
நிதமுமொரு நோய்வந்து நீங்கக் காணே. ௯

காணவலப் புறமுதுகு துடிக்கு மாகின்
கரியவிடம் கோய்காட்டிக் கடிதிற் றீரும்
கோணவிலா விடதுபுற முதுகே யாகின்
குடியிருந்த மனையகன்றே தூரத் தேகும்
தாணுைய முதுகடையத் துடிக்கு மாகின்
றுபமுத லாகியநோய் தணியா வென்பர்
தோணவலச் செட்டையினிற் றுடிக்கு மாகின்
துணிகிடைக்கும் புதிதாகத் தோன்றிப் பாரே. ௧௦

பார்த்தவிடக் கைச்செட்டை பிரியஞ் சொல்லும்
பரிந்திரண்டு கைச்செட்டை பழிதென் றோதும்
சேர்ந்தவல மூக்கடைபத் துடிக்கு மாகின்
செல்வமுறும் பாக்கியசம் பத்து முண்டாம்
ஏர்த்தவிட மூக்கடைபத் துடிக்கிற் செல்வம்
எய்துமிதழ் மேற்றுடிக்கி லினிய வார்த்தை
பூர்த்தகீ ழுதடுதனிற் றுடிக்கு மாகின்
புதியதின் பண்டங்கள் பொருந்து மெல்ல. கக

மெல்லவிலா வலந்துடிக்கின் விசன மாகும்
மிகுந்திடது விலாத்துடிக்கின் வீடி ழக்கும்
வல்லவலத் திசையாகின் பொருளே சேரும்
வருபயணம் போதநுறுந் தயவு நன்மை
மல்லலுறுந் திசையிரண்டுந் துடிக்கு மாகின்
வருந்தியே நோய்தீரு மின்ப மாகும்
அல்லலும்போ மதிபார விணையும் தீரும்
அறிந்தவராற் கைப்பொருளும் விரய மாமே. கஉ

விரைவாக விடைதுடிக்கின் வேள்வி செய்யும்
மிகப்பேறு வுண்டாகு மேவுங் காலே
அரையிலே கோசமது துடிக்கு மாகின்
அருவிசனந் தூரத்தா ராலே யாகும்
வரையிற்கீழ் சோகமது துடிக்கி னன்மை
வல்விதையே கரிகுதிரை யேறுமென்னும்
நிரையவிட விதைதுடிக்கின் நோயே தீரும்
நேரிரண்டுந் துடிக்கில் வழக்கெய்துந் தானே. க௩

எய்தியதோர் வலத்தொடையிற் றுடிக்கு மாகின்
இயல்பலா தொருவழக்குண் டாக வெல்லும்
செய்தியிடத் தொடையினிய வார்த்தை யாகும்
சிறந்ததொடை யிரண்டிலுஞ் செம்பொ னுண்டாம்
நொய்துவல முழந்தாளிற் கோப முண்டாம்
நோக்கிலிட முழந்தாளிற் பந்து சேரும்

திப்திமொழி மைந்தர்முழந் தாளி ரண்டிற்
செகமாளு மென்பரிசைப் புலவர் தானே. ௧௪

புலவரிசைப் பார்வலக்கால் கண்டை யாகின்
பொருந்துநல் லடிமைதான் பொருவி லாத
வலதுகணைக் கால்துடிக்கிற் சம்பத் துண்டாம்
வளரிடது கணைக்காலிற் சாவின் வார்த்தை
இலமிலா விடக்காலின் கண்டை யாகின்
இலேசமுறும் பெருநோயுங் கிளரு மென்ப
நலமுடனே யிரண்டுகணைக் கால்து டிக்கின்
நடுக்கமுட னோட்டந்தா னயந்து கூறே. ௧௫

கூறுவலப் புறவடியிற் றுடிக்கி னோயாம்
கோதிலிடப் பிறவடியே வழக்காய் வெல்லும்
ஊறும்வல துள்ளங்கால் பிணியாய் மீளும்
ஊன்றுமிட துள்ளங்கால் தேச யாத்திரை
காறுமணி கழற்றுணைக்கால் சிவிகை யேறும்
கால்விரலீ ரைந்ததனிற் றுடிக்கு மாகின்
நாறுமலர்த் திருமகளுஞ் சேரும் வேண
நன்மையுமுண் டாம்வாழ்வு நற்சீ ராயும். ௧௬

இந்நூலாசிரியர்.

மன்னன் விக்கிர மாதித்தன் சொல்வழிப்
பன்னி ரண்டொரு நால்விருத் தப்பாவில்
துன்னு சீர்துடி நூலைத் தொகுத்தனன்
நன்னி லம்புகழ் ராமனு தன்றானே.

துடி நூல்

முற்றிற்று.

---

உ

வடிவுள் வேலோன் றுணை.

# சந்தானதீபிகை.

## பாயிரம்.

காப்பு.

கடலான கலைஞானத் தேசிகனைக் கயமுகனைக் குகனைக் கான்குழ்
மடலார்தண் பூவினிலும் நாவினிலும் வதிந்தருளும் வாணி மானை
யடலாருமொன்பதுகோ ளாயவா னவர்கள் தம்மையடியனேன் றன்
இடரானதறத்துறப்பீரருள்சிறப்பீர் புறப்பீரென் றிறைஞ்சுவேனே.

நூற்பொருள்.

செல்வ மைந்தரில் லாததுஞ் சேர்வதும்
புல்லு தெத்துப் புதல்வர்கி டைப்பதும்
மல்கு புத்திரச் சேதமு மைந்தர்கள்
நல்க றுனும் பெருக லளவையும். உ

இதுவுமது.

நோயு மாரண முந்திரு நோக்குந்தா
ஆயு மாந்த ரறிய வடமொழித்
தேய்வில் சந்தான தீபிகை தன்னையான்
ஏயு தென்மொழி யாலின் றியம்புகேன்.

அவையடக்கம்.

நீதி வித்தகர் சொற்றிடு நீள்பொருள்
ஆத லாற்கற் றறிந்த புலமையோர்
தீதினைத்தள்ளித் தேன்கொள்ளல் போலென்சொற்
கோதினைத்தள்ளிக் கொள்வர் பொருளையே. ச

பாயிரம்-முற்றிற்று.

## முதலாம் பாவம்.

### பிணி மரணம்.

எழுமோரையி லதிபன்கொடி யோர்மத்திமத் திருப்ப
கழுவாதிலக் கினத்தேகொடுங் கோளானவர் நண்ண
வழுவாக்கலைப் புலவோன்மிக வலிகுன்றிடப் பிறந்தோன்
முழுநோயினி லழுந்துற்றுயிர் முடிவாமிது திடமே. ௧

ஏரார்தரு மெட்டாதிப னீசம்பகை யெய்தச்
சீரார்தர வருமோரையிற் றீயோர்புக நல்லோர்
பாராமலிப் படிக்கேவரும் பாலன்பல நோயால்
வாசார்முலை யாளேயுயி ரிழப்பானெனல் வழக்கே. ௨

ஒருபன்னிரண் டெட்டாறினிற் றுராபதி யோங்கத்
தருமோரையி லதிபன்றனைச் சனிபாவகன் கூட
வருமோரையி னல்லோர்விழி வைப்பற்றிடப் பிறந்தோன்
பெருநோய்கொடு நமனூருறை பெருந்திக்கினிற் புகுமே. ௩

பிறையுங்குளி கனுங்கூடியெட் டாறந்தம் பிறங்க
நிறையுமிலக் கினத்தேகொடி யோர்நின்றிடப் பிறந்தோ
னறையும்பெரும் பிணியான்மிக வழுங்கிப்பக ரூரு
மிறைவன்பதி புகுவான்மயி லிணையாமிய லாளே. ௪

உதையத்திறை தீயோருட னுறவோரையிற் குளிகன்
வதியத்திகழ் மதியத்தொடு கொடியோர்களு மருவித்
ததையெட்டினி லாறிற்பனி ரண்டிற்றயங் கிடுமேல்
விதுவொத்திடு நுதலாயுயிர் வீவானெடு நோயால். ௫

அறியார்புதன் குளிகன்றெரு மனைகூடிய வற்றில்
நெறியார்பனி ரண்டெட்டினில் நிலவானது குலவப்
பிறியாமலொன் பானைந்தினிற் கொடுங்கோளது பிறங்கில்
வெறியார்குழ லாளேகொடு பிணியாலுடல் விழுமே. ௬

தயங்கும்முப யத்தேபொலி சராசியங் கிஷத்தே
நயங்கொண்டிடு மதிமந்தனு மோரேசனு நண்ணி
மயங்கத்திரி கோணத்திடை கொடியோர்களும் வதிந்தால்
இயங்கும்பிணி யாற்பாலக ரிறப்பாரென விசைப்பார். ௭

பிணிசாந்தம்.

காவுறு தீயவ ரோரை கைக்கொளப்
பரவுமெட் டாறுபன் னிரண்டிற் பான்மதி
விரவிட நல்லரோ ரேசன் மேல்விழித்
தரவரி னெய்கொடு பிழைத்தல் சாருமே. ௮

உடலுயிர்க் கிறைவரி லொருவர் பாவியர்
நடுவுற வோரையை நல்லர் நோக்குறத்
தொடுகெடற் புவியிடைத் தோன்று மைந்தருக்
கிடுகிடை யாய்ப்பிணி யெய்தித் தீருமே. ௯

ஓரைமன் ஞட்கெட புச்ச முற்றலார்
காருறு மோரையை நோக்கி லாட்கெட்
பேர்பெறு முச்சந்தா னிசைக்கு மங்கிஷஞ்
சார்தரு நோயிலா தாயுள் சாருமே. ௧௦

பிணிப்பெயர்.

குறைவிலோ ரேசனூர் கதிரைக் கூடினும்
அறையுமெட் டினிற்கதி ரனுக வோரையிற்
றுறையுறு நல்லர்நோக் கின்றித் தோன்றிடிற்
பிறைநுத லாயவள் பித்த ரோகியே. ௧௧

திறவிய வோரைதான் நீரி ராசியாய்
மறவுடைக் குறைமதி தீய ரோடுவந்
துறைகர வாறினிற் கொடிய ருற்றிடிற்
றெறுகய ரோகந்தான் சேரு மென்பவே. ௧௨

உடுத்திடு மோரைநல் லோர்கள் நோக்கறத்
துதித்திடும் பொன்னுடன் பாபர் தோய்ந்துதான்
மதித்திடு மற்றெட்டு மருவிச் சேர்ந்திடிற்
கதித்திடுங் கொடுங்கய ரோக மென்பரே. ௧௩

நிலமக னோரையை நெடிது பார்த்திடப்
புலவனைத் தீயவர் பொருந்தி யெட்டினில்
இலகிடு மிரண்டிலரி லிருப்ப வெய்தினேன்
உலகினிற் கறைசுர ரோகஞ் சேர்வனே. ௧௪

உசனனெட் டிரண்டினி லோங்க வோரைதா
னசைவிற்றீ யோர்மனை யாக வாதிபன்
பசையினீ சம்பகை யாக வோரைதீ
யிசையுநோக் குறிற்பிர மேக ரோகியே. ௧௫

அரவுதை யத்துற வாரல் நோக்கிட
விரவுமெட் டாதிப னேழின் மேவிட
வுரவுநீர்க் கருங்கட லுலகிற் றேன்றிடுன்
மருமலர்க் கூந்தலாய் வயூரி சொல்வனே. ௧௬

இதுவுமது.

சந்த விருத்தம்.

பண்புடை யோரையில் வெய்ய ருறச்சுபர்
பார்வை செயாததிபன்
எண்பயி லாறினி லெட்டி லிராகுவொ
டெய்தி யிருந்திடினும்
விண்பயில் பங்கு வுடன்பவு மன்றிரி
கோணம் விளங்கிடினும்
வண்புவி மீது பிறந்தவ னைந்து
வயூரியின் மாளுவனே. ௧௭

சத்துரு நீல னிலக்கின மன்னுற
வாறிரு நாலுதனிற்
புத்தியி றீய ருறக்கலி யம்பவு
மன்விழி பொலிவுறினும்
பத்தியில் பாப ருடன்பிறை கண்ட
முறக்குசன் பார்வையுயிர்க்
குய்த்திடி னுங்கொடி தானவை யூரியி
னுள்ளுயிர் மாளுவனே. ௧௮

சேயு மிலக்கின நாதனு மோர்மனை
செவ்விதி னெய்தியிருந்
தேயு மிலக்கின மெல்விழி வைக்க
விராகுவு மம்புலியும்

போயொ ரிடத்துற நல்லவர் பார்வை
பொருந்து தலைத்தவறின்
மாயு முதித்த சிறூர்நணி யாத
வயூரி யெனும்பிணியால். ௧௯

சிறப்புறு மோரையி னுரியவ னாகிய
செவ்வாய் பாபருடன்
உறப்புக வாறுடை யான்பகை நீசம்
துற்றவ ரோடுபுகின்
நறப்புறு மாமதி யந்தனி லோரையி
னல்லவ ரிருகணுறப்
பெறப்பெறு மைந்தன் வயூரியி னொந்து
பிறப்பொழி வான்மயிலே. ௨0

பாவிய ரானவ ரோரையி லேயிரு
பார்வை செயப்பவுமன்
மேவி யுரைக்கு மிரட்டை கொணுலின்
வியப்பின் விளங்கியிடத்
தாவியொ ரெட்டி ரெண்டினி லேசிகி
சார்வுற நின்றிடுமே
லோவிய மொத்த மினேயிர ணப்பிணி
யுற்றிடு நித்தியமே. ௨௧

பிணியாளி.

சனியுதை யத்துற வாறிரு நாலிடை
சந்திரன் வந்தாபுகத்
துனிபெறு மிக்கசெவ் வாய்விழி நோக்குற
வோரை தனைத்தொடரப்
பனிதரு மைக்கடல் சூழுல கத்திடை
பால ருதித்திடுமே
லினிய மடக்கொடி வாத மெனும்பிணி
யெய்துதல் சத்தியமே. ௨௨

ஏறிய வில்லெழு மோரைய தாக
　　விராகு விருந்திடவே
ஆறில் வியாழ மமர்ந்திட வந்தமன்
　　கேந்திர மணுகியிட
மாறில் புவிக்கிடை தோன்றிய மைந்தர்
　　வயங்கெழு குட்டமுடன்
றேறு தரித்திர மற்றுள நோய்மல
　　டாகுவர் தேன்மொழியே. ௨௩

காரி யிலக்கன வாதிப ஞயுயி
　　ரைந்து கலந்துறையச்
சீரி யரைத்தவிர் தீயரி லக்கின
　　மீது விழித்தல்செய
வேரிய னற்கலை சார்மதி யத்துட
　　னீன ரடுத்திடவே
பாரி லுதித்தவன் வாதமெனும் பிணி
　　யாலுயிர் பாறுவனே. ௨௪

காரர வம்வரு மோரை புகுந்திட
　　நல்லவர் கண்செயலற்
றீர மறும்பல தீயவர் கண்செய
　　லெட்டினி லாறுதனிற்
கோர முறுஞ்சனி யெய்திட வந்த
　　குமார ரெலாமடைவா
யாரமு தந்தனை யுண்கினும் வாத
　　மடுத்துயிர் மாளுவரே. ௨௫

நாலிடை நீலனு மாறிடை பாபரும்
　　நண்ணி யிலக்கினமன்
ஏல்லையி னோரையை நோக்கினு மாமதி
　　யிராகுவொ டொய்திடச்
சால்தரு நல்லவர் நோக்கற வும்புவி
　　தன்னி லுதித்திடுவோர்
மாலுத வுஞ்சல மெய்கய ரோகமும்
　　வந்துயிர் மாளுவரே. ௨௬

வேறு.

இலகு சந்திர னெட்டினி லாறினிற்
றீய ரோடடுத் தெய்தக்
குலவு மட்டமா திடன்மனை ராகுவுங்
கொடிய கேதுவும் பார்க்க
வுலகி னுற்பவஞ் செய்திடு மாந்தர்தான்
குய்ய ரோகமுற் றேய்வார்
கலக வாள்விழித் துடியிடைப் பிடிநடைக்
காதன் மென்மொழி யாளே. ௨௭

வன்மங் கூர்சனி யோரை யெய்திடக்
குறைந்த சந்திரன் வந்து
கன்மந் தீயரைக் கூட வாறெட்டிற்
கொடிய வர்களுந் தோங்கச்
சென்மந் தானிவன் றேன்று பாலகன்
செழும ருந்தினிற் றீராக்
குன்மத் தானுயிர் வாடுவன் வாடிய
கொடியெ னும்மிடை யாளே. ௨௮

இணங்கு மோரைக்கோள் ராகுவைக் கூடிட
வல்ல தேழினி லெய்த
வணங்கு சேர்சனி யெட்டுறி னுந்திய
வனையுஞ் சுன்னவணைந் தானு
முணங்கு சேய்கூடி தேள்சுருக் குளிர்
கயலின் கூறுற் றுலுஞ்
சுணங்கு பூத்தொளிர் முலையாய் குட்டநோய்
தொடரு மென்றிது சொல்லே. ௨௯

வேலை யாகிய வோரையி லதிபதி
வலிமை குன்றிட மிக்க
காலை யோர்கரும் பாம்பிடம் பிடித்திடத்
தீயர் பார்வையி னண்ணில்

வாலை யாம்வய தினிற்பல நோயினன்
மயங்கு வான்மணஞ் சேர்ந்த
சோலை யாமெனப் பூக்களு மாக்களுஞ்
சூழ்ந்தி டுங்குழ லாளே. ௩0

தடங்கொள் சந்திர னெட்டினி லாறினிற்
றயங்க வாறெனச் சாற்று
மிடங்கொள் கொற்றவன் கேந்திரம் பெற்றிட
விலங்கி லக்கினந் தன்னின்
முடங்கொ ணீலனு ரிருந்திடத் தோன்றினோன்
முழுப்பி ணியுடை யோனும்
வடங்கொள் பூண்முலைக் குடங்க ளாற்றினம்
வாடு நுண்ணிடை யாளே. ௩க

வஞ்சனை.

கூறி லக்கினம் பாவியர் பார்த்திட
வெட்டு ளான்வலி குன்ற
வீறி லட்டமஞ் சனியன் பார்க்கினும்
பத்தி னுக்கிறை யேகி
மாறில் பன்னிரண் டுறக்குச னோரையை
விழிக்க வாறினின் மன்னன்
வீறி லக்கின மருவினும் பிறர்புரி
வினையத் தான்மெலி வானே. ௩உ

சேயு நீலனு மோரையை நோக்கவா
றுடையவன் கேந்திரஞ் சேரு
மாயி னுங்குச னிலக்கின திபனுட
னணுக வல்லது செவ்வாய்
மேய கேந்திர முற்றிட வாறுளோ
னோரை யில்விரைந் தேற
வேயு மிப்புவி பிறந்தசேய் பிறர்புரி
வஞ்சத் தாலிட ரெய்தும். ௩௩

கல்வி யஞ்சர மாகவா றதிபதி
யோரை யைங்கலப் பச்சே
யொல்லு மொன்பதி லாபத்திற் புகவல
துபைய ராசிபி லேழிற்
புல்லி னும்வெகு வஞ்சனே புகும்புக
லோரை நாளை வங் கேது
மெல்ல வேறிடிற் கேந்திரங் குளிகனார்
மேவில் வஞ்சனை மேவும். ௩௪

துஷ்டதேவதை பசாசு இவற்றால்மரணம்.

அடுக்கி னீள்சர வோரையாய்ச் சேயுற
வோரைக் காரிபன் கூட
விடுக்கப் பாவிய ரிருக்கினு மிலக்கினஞ்
சுப ரிருந்திட வேழில்
வடுக்கொ டுஞ்சனி யிருந்திட மதியினைத்
தீயர் பார்த்திட வந்தோன்
மிடுக்கு மேவிய தேவராற் பசாசினால்
வீவ துதிட பாமே. ௩௫

நிதி ஆடை ஆயுள்.

உதைய நாதனத் தூச்ச மாகவே
யோரை மீதினிற் றாயர் மேவிடச்
சிதைவி லாமுழுப் பார்வை செய்யவெண்
டிங்கள் கேந்திரந் திகழ வந்துளான்
றதையு நாண்மலர்த் தாம மோடகிற்
றுவு தூபமுஞ் சாரு மோதியாய்
நிதியு மாடையு மாபு ளானது
நிறைய வெய்தியே நீடு வாழ்வனே. ௩௬

பிணி தரித்திரம் குய்யரோகம்.

பருதி யோரையிற் றனி ருக்கவே
பாபர் முன்னிலும் பின்னி லும்புகக்
கருது மாறிலு மெட்டி லுங் கொடுங்
கடிய வெய்தவே வந்த காதலன்

பெருகு வாலிபந் தன்னி லேபெரும்
பிணியி னன்மிகப் பீடை யெய்தியே
வருத ரித்திரங் குய்ய ரோசமும்
மருவி நித்தமும் வாடு வானரோ. ௧௭

முதலாம்பாவம் முற்றிற்று.

---

## இரண்டாம் பாவம்.

### தனச்சேதம்.

பன்னி ரண்டினின் மூவி ரண்டினிற்
பகரி ரண்டினுக் குரிய னெய்தினுந்
துன்னி ரண்டினிற் பன்னி ரண்டுளோன்
றெருக்க மேவினுன் தூய வாமென
மன்னன் மூவிரண் டாறி ரண்டுடன்
மருவு நாலிரண் டதனில் வைகினும்
மின்னல் வந்திடும் பொருள்கள் சேதமா
மென்று மெய்துமே யின்மை யென்பதே. ௧

சாற்றி டுந்தனத் தான வாதிபன்
றனது நீள்வலித் தகமை குன்றவே
போற்று கின்றதோர் பன்னி ரண்டினிற்
புலவ னார்தொழுங் குரவன் வைகவே
யூற்ற முற்றதற் கால வோரையு
நல்லர் பார்வைதா னின்றி டாதுறத்
தோற்ற முற்றுளோர்க் குரிய மென்பொருட்
டொகுதி யாவையுந் தொலையு மென்பவே. ௨

### தனச்செல்வன்.

இரண்டி லாதிப னுய மெய்தவவ்
விறைவ னுருவந் திரண்டி னெய்தினும்
மரண்ட ரும்பெருங் கேந்தி ரத்திவ
ரனுகி னுந்திரி கோண மாகவே

மூரண்ட ராதிரண் டுடைய னெய்திட
மொழியி ரண்டனிற் சுபரி ருப்பினுந்
திரண்டெ ழுந்தனஃ செல்வி யேயவன்
றிரண்டெ ழுந்தனச் செல்வ னவனே. ௩

ஆய மானபன் னொன்றி லாதிப
னழகு சேர்தரு மிரண்டி லாதிபன்
நேய மேவினுங் காணரி மேவினும்
நிகழு முச்சமாப் நேர நிற்பினும்
போயி லக்கினங் கேந்தி ரந்திரி
கோண மெய்தினும் புவியி லெய்தினோன்
றாய நன்னிதித் தலைவ னென்னவே
செல்வ தாம்பெருஞ் செல்வ னவனே. ௪

மந்திரி.

மெச்சி ரண்டினு மொன்ப தின்கணும்
விளங்கு மாதிபர் சேந்தி ரங்களா
யுச்ச முற்றிலக் கினத்தை நோக்கவே
யுலக மீதுவந் தூற்ற பாலக
னச்ச மற்றவே லரசர் நண்புகூ
ரரிய மந்திரித் தொழி னடத்துவன்
இச்சை யற்றசெல் வத்துண் மந்திரிக்
கிவனை யல்லதா ருவமை யென்பரே. ௫

இராஜசமானன்.

ஐயி ரண்டினுக் கதிப னுட்சிநட்
பரிய கேந்திரத் துச்ச மாயினும்
மெய்யி ரண்டிலக் கினம தாயினும்
மேதை பொன்புகர் காண நிற்பினும்
மையி ரண்டிலக் னேசஃ னோடிவர்
மன்னி னுந்திரி கோண நண்ணினுங்
கையி ரண்டெடுத் துலகெ லாந்தொழுங்
காவ லர்க்கரு காளி யாவனே. ௬

இரண்டாம்பாவம் முற்றிற்று.

---

# மூன்றும்பாவம்.

## சகோதரம் இன்மை.

மூன்று ளான்பகை நீச மாகவம்
மூன்றிற் றீயவ செய்த நோக்குறச்
சான்ற நல்லர்நோக் கில்லை யாயினுந்
தக்க மூன்றினுக் குடைய ளுறினிற்
றேன்று பன்னிரண் டெட்டி லெய்திடச்
சுபரொ ழிந்துளோர் பார்க்க மைந்தனை
யீன்ற வன்னை தான் பின்னை மைந்தரை
யீன்றிடா ளிதற் கைய மில்லையே. ௧

## சகோதர விருத்தி.

கிளரு முச்சநட் பாட்சி யுற்றுநன்
கேந்தி ரந்திரி கோண மெய்தினுந்
தளர்வி லாதநல் லவர்கள் பார்த்திடச்
சாரு மூன்றினிற் றலைவ னெய்தவே
வளரு மிப்புவிக் கிடையு தித்துளோன்
வளர்ச கோதர மிருதி சேர்வனு
லொளிப மூத்தபொற் குழையி ரண்டினு
மோடி யோடிநின் றுலவு கண்ணியே. ௨

## சகோதர நாசம்.

கொடியர் மூன்றினிற் குடியி ருந்திடக்
கோதி லாதவத் தான வாதிபன்
நெடிய கேந்திரத் தெய்தி னுந்திரி
கோண மென்னுமங் கிலையி னிற்கினும்
நொடியி னல்லர்தம் பார்வை யில்லெனில்
நுவல்ச கோதர மாயுதித்துப் பின்
மடியு மிக்கசந் திரனை யொத்திடும்
வடிவ மெய்திடும் வதன மங்கையே. ௩

மூன்றும்பாவம் முற்றிற்று.

---

## நான்காம்பாவம்.

மாதுரு மரணம்.

திங்க ளுலினிற் றங்க வன்னவன்
தீயர் பார்த்திடச் சேரு நாலுளோன்
பொங்கு நீசநீள் பகையி னெய்தினும்
பொருவில் சந்திரன் றீய ரோடுறப்
பங்க முற்றமுன் றைந்தி னிற்கொடும்
பாப ரெய்தநா லாதி நீசமாய்
மங்கு ளப்பகை யோரை மேவினும்
மைந்த னைப்பயந் தாண் மரிப்பளே. ௪

வேறு.

காலான விடங்கொடியோ ருறமதியங் கொடியோர்க்கு நடுவி னெய்த
மேலானோர் நோக்குறினு நாலதிபன் பன்னிரண்டெட் டாறின் மேவிப்
பாலான வலிகெடினு மலதிரவி குசனுலிற் பயின்றிட் டாலும்
ஆலால மெனும் விழியா யம்முகவின் றுப்மரண மடைகு வாளே. ௫

இந்நான்கி லதிபதிசத் துருநீசம் பெற்றுவலி யிழந்தோ னாகப்
பின்னுன வம்புலிபோய்ப் பேணுமீ ராறதனிற் பிறங்கி னாலும்
பன்னுளுங் கொடியவரா லணுகிடினும் புவியினிடைப் பாலன் றோன்றி
யன்னேவோ வென்றசொல்லு மறியுமுன்னந் தாய்மரண மடைகு வாளே. ௬

மாதுரு தீர்க்காயுள்.

குற்றமிலா னலிருப்ப வதிபதிநட் பாட்சிதிரி கோணங் கண்டம்
பற்றுடையுச் சம்பெறினு மப்புலியை நல்லவர்கள் பார்க்க நல்லோர்

சற்றுடைக்கேந்திரத்தினிடைத் துலங்கிடினும்பழுதுபடாச்
சுதனைத் தானே
பெற்றவட்குப் பூரணமா மாயுளுண்டு செழுங்கமலப்
பெண்ணி ணுளே. ௫

கிரகம் உள்ளவன்.

ஓதியநா லினுக்குடையா னோரையினி லுச்சமுற
வோரை தன்னி
லாதிபதி தனலாபத் திரிகோண கேந்திரநட்
பாட்சி யுச்சஞ்
சோதிமிகப் பெற்றிருக்கத் தோன்றுமவன் றிசாபதியாய்த்
துலங்கு மாடந்
தாதின்மிகு நறுங்கூந்தற் றையலே மையலருட்
டடங்கண் ணுளே ௬

கிரகம் இல்லவன்.

காண்டகுநா லாமிடந்தான் சரராசி யாய்த்தீயர்
கலப்ப வெட்டி
லாண்டகையைந் தினிலிருப்ப வாறுடையான் வீறுடையீ
ராறி லாதன்
மாண்டகுமா றிடையாதல் வதிந்திடவே யிப்புவியில்
வந்த மைந்த
னீண்டுறையு மில்லமில்லை யென்பாரன் பாற்கயற்க
ணிணையி ணுளே. ௬

பூஸ்திதி யற்றவன்.

சேமிக்கு நாலுடையான் சத்துருநீ சத்தினிடைச்
சேர வீரா
றுமட்ட தானமுள்ளான் தனத்தானத் தணுகியிட
வன்போ டாருங்
காமிக்கு மோரைதன்னி லோரேழின் மிகக்கொடியோர்
கலப்ப விந்தப்
பூமிக்கு ளுதித்தமைந்தன் பூமிப்பே றில்லாமற்
போகு வானே. எ

தனம் பூஸ்திதி முதலிய சுகம் உள்ளவன்.

ஆட்சிபதா யுச்சமதாய் நட்பாய்நா லினுக்கதிப
ரணுகி மேவ
மாட்சிமையுள் ளோரிவனை மகிழ்ச்சியுட னேகூடி
மருவி னுலும்
நீட்சியுற விருந்துநல்லோர் நோக்கிடவுந் தோன்றுகின்ற
நீதித் தோன்றல்
காட்சியுறு பொன்பூமி முதற்பொருள்கை கூடிமனங்
களித்து வாழ்வான். ௪

நான்காம்பாவம்-முற்றிற்று.

---

## ஐந்தாம்பாவம்.

### மலடன்.

அடையு மோரைபோ டைந்தினுக் கேழினுக்
குடையர் பொன்வலி குன்ற வதித்துளோன்
மடந டைப்புதல் வர்ப்பெறு மாண்பிலான்
றொடைதொ டுத்துச் சொருகுங் குழலியே. ௧

அஞ்சிற் றீய ருறவதற் காதிபன்
நெஞ்சில் நீசத்தி னெய்த விவர்களை
வஞ்சந் தீர்சுபர் நோக்கற வந்துளோன்
கொஞ்சு மின்சொற் குமரசீ ரற்றவன். ௨

வில்லின் மீனின் வியன்மதி சேர்தரப்
புல்லு மைந்தினிற் பாபர் பொலிவுற
நல்லர் நோக்கிவற் கற்றிட நண்ணினோற்
சில்லை யில்லை யெழில்கெழு மைந்தரே. ௩

ஐந்திற் பாபர் புகுத வதிபதி
யைந்து பாபர் நடுவினில் நண்ணியே
யுந்து மாறிரண் டாறெட் டுறச்சுபர்
வந்து பார்ப்பின்றி யைகின் மலடனே. ௪

வெய்யர் கூடவைந் தாதிபன் மேவிட
வையந் நீர விவனியு மைந்தையும்
நொய்யத் தீயவர் நோக்கிடத் தோன்றினோர்க்
குய்யச் செய்யு மதலையின் றுண்மையே. ௫

புத்திர நாசம்.

அட்ட மாதிப னைந்துற வைந்துளோன்
எட்டி னெய்த வினையர்க்கு நல்லர்தாந்
திட்டி வைப்பறத் தோன்றிய செம்மலுக்
கிட்ட மாய்மைந்தர் தோன்றி யிறப்பரே. ௬

வேந்தன் றீயர் நடுவினின் மேவிட
வாய்ந்த வைந்துக் கதிபன் வலிகெடச
சாந்தர் நோக்கமுஞ் சார்தலு மின்றெனின்
மாந்த ரீனுமகவு மரிக்குமே. ௭

பகைநீச மைந்ததி பன்சேர்வ னேனும்
பாடெய்தி னும்பன்னி ரண்டாறெட் டெட்டுந்
தகையாக வுடையோ ருடன்கூடி னாலுந்
தருமைந்த யைந்ததி தனைநான்கி லுள்ளோர்
வகையான விழிவைத்தி லாரேனு மைந்தா
மகரத்தின் மீனத்தில் வன்சீவன் மேவ
மிகையா திருந்தூயர் பாராது வந்தோன்
வியன்மைந்த ருயிர்மாய மெலிவெய்து வானே. ௮

அற்ப புத்திரர்.

வருபுத்தி ரத்தானம் வரிவில்ல தாக
மகிழ்பொன் புகுந்தந்த மனையுற்றி ருப்பத்
திருவுற்ற தற்கால வோரைதனை வெய்யோர்
தீநோக்கு வைப்பச் செகத்தே யுதித்தோன்
இருபுத்திர ரொருபுத்திரர் பெற்றுலகில் வாழ்வோ
னிளமைந்தர் பலபேரை யீனத்த காணும்
ஒருசித்திர வுருவத்தனு திகரொத்த வடிவ
முள்ளகுபி லேயமுத வள்ளவிதழ் மயிலே. ௯

### அற்பபுத்திரரும் வெகுபுத்திரிகளும்.

ஐந்தான தானத்தி லாதிபதி கலைசா
லம்புலி தனைச்சுங்க னைக்கூடி யடையவே
வந்தான கேந்திர மறப்பொன்ன வன்றான்
மாபாப ரைக்கூட வன்பாப ரைந்திற்
சிந்தாகு லப்பார்வை செய்யமமை யத்தீத
செகமீது திக்குந் திறம்புருட னீனுஞ்
சந்தான மதுதன்னி லாண்மகவு குன்றுந்
தருகின்ற பெண்மகவு தழைவெய்தி மிகுமே. கo

### வெகுபுத்திரரும் அற்பபுத்திரிகளும்.

சாமனுடனேமனிவ ரைந்திலதி பதியைத்
தானனுகி னுங்கேந்தி ரத்தினிடை தங்கச்
சோமனுடனே பவ னிருஞ்சனியி ராகு
துலங்கிவரு மைந்தில்விழி வைக்கவரு தோன்றல்
நேமிபுடை சூழுலகி னெஞ்சின்மகிழ் வுற்ற
நீதியுற மாண்மகவு நீடியுயிர் வாழுங்
காமனடி பேணவரு காமர் மடமானே
காதலுறு பெண்மகவு காசினி யிராதே. கக

### தெத்துபுத்திரர்.

இயலைந்து புதன்வீடு சனிவீட தாக
விதின்மைந்த னுறினு மிவன்மைந்த னேனும்
நயமொன்றி நின்றாலு நயனஞ்செய் தாலும்
நவிலைந்தில் வலியின்றி நனிநல்வர் தங்கப்
பயிலைந்தி லதிபன்ற னைத்தூய ரானோர்
பாராமல் விடவிட் படிக்கே பிறக்குஞ்
செயலொன்று புருடன்சி றாரைப் பெறானே
திகழ்தெத்து புத்திரச் சிறப்பெய்து வானே. கஉ

### புத்திர விருத்தி.

குளிர்பா லகத்தான மாகப்பு யான் னுறினுங்
குறையாமல் வளர்சந்தி ரன்வந்து புகினு

மொளிர்பா லகத்தான மதனிற்பொன் வெள்ளி
யுற்றுரிமை யுச்சமுறி னுஞ்சுங்க னேந்திற்
றெளிவார் கலைச்சந்தி ரன்கூடி நட்பாய்த்
திகழ்காணி யாயுச்ச மாய்ச்சேர்வ னேனும்
நளிராற் கடற்பூமி யிடையே பிறந்தோ
னவில்பெண்சி ருர்தம்மை நனிநல்கி யிடுமே. கக

புத்திர விருத்தி.

ஆடாதல் தேளாத லேந்தான தான
மாகப் புதன்வெள்ளி யமரேச ராசான்
வாடாம லதிலுற் றிருந்தாலு நோக்கம்
வைத்தாலு மைந்தாதி வலிதுன்றி யெய்தப்
பீடாரு மோரேச னுங்கூடி நிற்கப்
பிறங்கைந்தி லேப்பாபர் பாராமல் விடவும்
வீடாத புவியிற் பிறந்தோ னறந்தோய்
வெகுமைந்த ரைப்பெற்று மிகவாழு வானே. கஎ

மீனம் விருட்சிகம் விற்சிங்க மேடம்
விஞ்சஞ்ச தாயதில் விளங்கார லெய்த
வானந் தொழுந்தேசி கன்பார்வை செயினும்
வருபுத்தி ரத்தான மனையாதி பன்றான்
ஈனந் தராநல் லரைக்கூடி னாலு
மிவர்பார்வை பெற்றாலு மியனல்ல ருக்குத்
தானஞ் சொனடிவாக நற்பார்வை யுறினுந்
தலத்தே பிறந்தோர் தமக்குண்டு மகவே. கஅ

சற்புத்திரர்.

பேசுஞ் சுதத்தான முடையோனவ் விடமே
பெலமாக வுற்றாலு மவனேழி லெய்தத்
தேசொன்ற வருமோரை யிற்பாப ரிருகண்
செய்யாம லில்லாமல் விடினுஞ் செழும்பொன்

எசின்றி யைந்தேழி லெய்திடவெய் யோனும்
இகற்பார்வை யோரைக்கி லாதும் பிறந்தோன்
நேசந் தரும்பால ரைப்பெற்று வாழ்வோன்
நெஞ்சுகளி கூறவரு கொஞ்சுகிளி மொழியே. கக

வைக்குஞ் சுதத்தான வதிபன் பெலத்தே
மருவிச் சுபர்க்ரூடு வைகச் சுபத்தோர்
உய்க்குஞ் செழும் பார்வை வைத்தாலும் விற்றேள்
ஒண்மீன மறிசிங்க மோரைந்த தாகத்
தொக்கிந்த மனையாளர் புருடாங்கி சத்தே
சொல்லா னிராசிதனி லெய்தித் துலங்கப்
புக்கிந்த வுலகிற் பிறந்தோ னளிக்கும்
புகழ்துன்ற வளர்கின்ற பலமைந்தர் தனையே. கஎ

ஓரையி னிறைவ னைந்துக் குரியனோ ருழியுற் றாலும்
நேரதாய்த் தம்மிற் றாமே நிலையுற நோக்கி னாலும்
ஏர்கெழு மிராசி நாத னுடனைந்துக் கிறையுற் றாலும்
பார்வைசெய்திடினுஞ் செல்வப் பாலரைப் பெறுவர்பாவாய்.

மருவுபுத் திரத்தா னத்தின் மன்னவ னோரை மன்னன்
இருவரும் நோக்கத் தோன்று மேந்தற்கு மகவு தோன்றும்
அரியநட் பாட்சி யுச்ச ராசியைங் கிசமா யைந்திற்
குரியர்நின் றாலு நல்ல மைந்தரை யுயிர்ப்பர் மாதோ. ககூ

துர்ப்புத்திரர்.

சத்துரு நீச மான விராசியங் கிசங்க டன்னில்
ஒத்திடுஞ் சுதத்தா னத்துக் குரியவ னுற்று மேவ
வித்தலை தோன்றி னோன்று னீனும்புத் திரர்கள் பொல்லாக்
குத்திர முடையர் மித்ரங் குணமிலார் கொடிமின் னாளே.

வெகு புத்திரிகள்.

கள்ளியாய்க் கோலா யேறப் புத்திரத் தான நண்ண
வொள்ளிய தலைவர் பெண்பா லுற்றிடு மிராசி யங்கிசங்
கொள்ளவே புவியிற் றோன்றுங் குரிசில்பெண் மிகுதியீனும்
வுள்ளிதழ்க் கமலப் பூவை மருட்டிய வதனத் தாளே. உக

வெகுபுத்திரர்கள்.

ஆதவன் வியாழஞ் செவ்வா யைந்தினுக் குடைய ராகிப்
பேதமில் புருட ராசி யங்கிசம் பெற்று ரென்முற்
காதினை யளந்து காமக் கலைக்கரைக் கடந்த கண்ணு
யோதுமாண் புதல்வர் தன்னை யுவப்புட னுயிர்க்கிற் பாரே.

வெய்யரைந் தான தானம் விழித்திடா துறவைந் தாதி
துய்யவத் துச்ச மேவச் சுபர்புரு டாங்கி சத்தே
யெய்தின னிவனை நோக்க வித்தலை யுதித்து ளார்க்கு
மையணி விழியி ளுளே மைந்தர்கண் மிகுதி யாமே உ௱

எட்டிலா றினிலீ ராறி லைந்தினுக் கிறைவன் மேவ
மட்டிலா வலிமை சார்ந்து நல்லவர் நோக்கம் வைத்தான்
முட்டிலாவாழ்க்கை மைந்த ருண்டென மொழிவர்கண்டாய்
பட்டினுற் புனைந்த சோதிப் பையர வல்கு லாளே. உ௲

புத்திரநாசம் வந்தவிபரம்.

ஆடல்சே ரிராகு வைந்தி லணுகவவ் வதிப னேடு
கூடிட நல்லோர் பார்வை யிவன்மிசைக் கூடிடாதேற்
பாடகப் பாதப் பாவாய் பன்னகத் தேவர் முன்னுள்
நாடியே நவின்ற சாப மொழியினுற் புதல்வர் நாசம். உ௫

ஓரையிற் றிரிகோ ணத்தி லுயர்சனிச் சுரனன் றுயின்
ஈரமில் குளிகன் சேரத் தூயவர் பார்வை யின்றேல்
சீர்கெழும் பிதிர்தோ டத்தாற் புத்திர நாசஞ் சேரும்
கார்முகில் வெனுப்ப நீண்டு கறுத்திடு மோதி யாளே. உ௬

வீறிடச் செவ்வா யைந்தின் மேவிட வதுவின் றுயில்
ஆறுடை யானைக் கூடி யைந்திடை யணுக நல்லோர்
பேறுடைப் பார்வை தீரப் பிறந்தவன் றனக்குப் பாவாய்
மாறுடைப் பகைவர் செய்த வஞ்சத்தான் மைந்தர் நாசம்.

வேறு.

ஐந்துக்குடை யோனேந்திரி லமரச்சுபர் பார்வை
சிந்தித்தில ராய்நின்றிடத் தீயோரவை செய்ய
விந்தப்புவி மிசையேவரு மேந்தற்கிலை புதல்வர்
முந்தச்சுர ராஜேரிடு கொடுஞ்சாபத்தின் முடிவால். உஅ

காட்டும்மொரு நாலிற்கொடி யோர்கண்ணிட வைந்தாம்
வீட்டுக்குடை யோன்மந்த னுடன்கூடி விளங்கக்
காட்டும்மிரண் டாறிற்கொடி யோர்வந்து கலந்தா
லீட்டுங்கொடும் பவர்தாய்புரிந் திடலான்மக விலையே. உகூ

ஒன்பானிடந் தீயோர்புக வைந்தாமிட முடையோன்
வன்பாகிய சனியோடுற வாய்க்குந்திரி கோணத்
தின்பாகிய குளிகன்பிறந் திருக்கப்பிறந் தோர்க்கு
முன்பாம்பிதிர் சபத்தாற்சுத ரின்றும்பணி மொழியே. கூ0

ஐந்தாம்பாவம் முற்றிற்று.

---

## ஆறும் பாவம்.

சத்துரு உள்ளவன்.

பத்திலக் கினமதனி லேரேழி லாறுடையான்
பயிலச் செவ்வாய்
சுத்தவிலக் கினமுறினு மாறுடையான் கேந்திரத்தே
துலங்கி யோரைக்
குய்த்தவிழி வைத்திடவா றினிற்பாப ரிருந்திடவு
முதித்து ளோர்க்கே
சத்துருவா னவர்மிகுதி தானுண்டாங் கட்டுண்ட
தனத்தி னாளே.

ஆறும்பாவம்-முற்றிற்று.

---

## ஏழாம் பாவம்.

### விவாகம் இல்லவன்.

உன்னியவே ழினுக்கதிபன் சத்துருநீ சம்பாடா
யுறினு மன்றேன்
மன்னியவா றதிபதியைக் கூடினும்பா வியர்நோக்கம்
வைத்திட் டாலுந்
துன்னியவே ழினிற்பாப ரிருக்கவவர் விழிதொடினுந்
துலங்கு கின்ற
மின்னியநுண் ணிடையாரை மணம்புரிந்து நலம்பருக
விதியில் லானே. க

### சொச்சகம்.

இன்னாத பாவியர்கள் களத்திரத்தி னெய்தியிட
நன்னாத னூறேட்டப் பன்னிரண்டி னண்ணியியற்
றுன்னாத சத்துருநீ சம்பெறவே தோன்றுசுதன்
மின்னாரைக் கைபிடித்து வேட்டல்செய மாட்டானே. உ

### களத்திரரோகம் அல்லது களத்திரமரணம்.

எண்ணியவே ழினுக்கதிபன் கொடியவர்க்கு நடுவிருப்ப
வேறிற் றீயோர்
கண்ணினும்பொல லாவசுரர் குலக்குரவன் பொல்லாதான்
நடுவுற் றூலுங்
கண்ணியவிவ் வுலகினிடை யுதித்தருளு மாடவன்கைப்
பற்றுந் தாரம்
மன்னியநோ யுழக்குமன்றே லாவியுகு மென்னடைக்கோ
ரன்ன மன்னாய். ௩

### களத்திரமரணம்.

பயனேரு மேழதிப னூறெட்டுப் பன்னிரண்டில்
வயமான தற்றிருப்ப மழைக்கோனே மாபாவர்
வியமான வர்ப்பார்க்க வுதித்துளோன் மின்னனையாள்
கயவேரகந் தனையகலப்பக் காலனூர் சார்வாளே. ௪

ஓரைதனிற் பன்னிரண்டி லோர்நான்கி லேழெட்டில்
ஆராலுற வேழதிப னுறெட்டிற் பன்னிரண்டிற்
சேரவுலகத்தினிடைத் தான்பிறந்தோன் றான்மணந்த
தாரநெடும் பிணிபிடித்துச் சமனூரைச் சார்வாளே. ௫

பனிதூற்றக் கலைத்திங்கள் சரராசி பயின்றிருப்பச்
சனியூற்ற முடனெட்டிற் றங்கியிட வேழதனிற்
றுனிவாயத் தீபருறத் தோன்றியவத் தோன்றலுடை
மனைவாழ்க்கைத் துணைவியரோகத்தான் மாள்வாளே. ௬

பாக்கியகளத்திரம்.

பற்றுசுப ரேழுதய வாதிட்டி தான்கேந்திர
முற்றதிரி கோணமதனுடனோ நட்பாட்சியுற
மற்றதின் றேலதிபன் றாபரொடு வைகநல்லோர்
சுற்றியெழப் பார்த்திடினுந் தாரத்தாற் சூழ்திருவே. ௭

ஏழாம்பாவம் முற்றிற்று.

---

## எட்டாம்பாவம்.

வாதரோகம்.

வேந்தனிரு நாலிருப்ப வெய்யவர்கள் விழிவைக்கச்
சாந்தமுறு கலைத்திங்கள் சராராசி தனிலெய்தப்
போந்துலகி லுற்பவித்த புருடனுக்கு வாதநோய்
தோய்ந்துநெடுந் தென்றிசையிற் றொல்பதியை யடைவான். ௧

பிரமேகம் கயரோகம் வாதரோகம்.

மழைக்கோளெட் டினிலிருப்ப மன்னுகொடுந் தீபுனத்துப்
பிழைக்கோளங் கவன்றனைப் பெருநயனஞ் செய்திடனு
மிழைக்கோது நுண்ணிடையா யீண்டுதித்தோன் பிறமேகந்
தழைக்கான கயரோகம் வாதமுறச் சார்வானே. ௨

குறைமதியெட் டுறைப்பாவர் சத்துருநீ சங்கொண்டே
நிறைவிழிவைக் கினுஞ்சாம னிற்புலவ னெட்டதனி
லுறைதரத்தீ யோர்நோக்க முய்த்திடினு முதித்துளோ
னறைதருநீர் சலரோக மடுத்தாவி யுகுவானே. ௩

எட்டாம்பாவம்-முற்றிற்று.

---





## ஒன்பதாம் பாவம்.

பிதுரு மரணம்.

ஒன்பானுக் குடையவன்போய்ப் பாபருட னுறத்தீய
ரொன்பான்மூன் றுறவல் லாவிடினென் றில்லாத
வொன்பான்பத் தினிற்பாப ருறத்தாதை மரிப்பானு
மொன்பானுஞ் செழுவணியி னொளிபழுத்த குழையாளே.

ஐயமிலொன் பானுடையா னுறெட்டுப் பன்னிரண்டி
லெய்துவலி கெடினுமொன்பா னிரவிகுச னிருந்திடினுந்
துய்யவொன்பா னதிபன்சத் துருநீசத் திடைதுலங்கக்
கையுரொன்பா னேக்கிடினும் பிதாமரண மெனக்கரைவார்.

ஒன்பதாம்பாவம்-முற்றிற்று.

---

## பத்தாம் பாவம்.

தொழிலற்றவன்.

பத்தினிற் பாப ரிருந்திடப் பத்தி
னதிபனெட் டாறுபன் னிரண்டில்
மெத்திட னிருப்ப வலதுசத் துருவாய்
நீசமாய் மூடமா யெய்தச்
சித்தநன் கறியாப் பரவிய ரிவனைத்
திகழிரு விழியினல் நோக்கிற்
கைத்தொழில் புரியா துண்டியுண் டிருந்து
காலத்தை வீணிலே கழிப்பான். ௧

இராஜமந்திரி செல்வம் அஷ்டைஸ்வரியம்.

ஏத்துபத் துடையா னுச்சமாய்க் கண்ட
மெய்திடி னிராசமந் திரியாம்
வாய்த்தநட் பாட்சி யாகியே கேந்த்ர
மருவிடில் வளர்பெருந் திருவாம்
நீத்தவிற் றாயர் பத்திடை நிற்கப்
பத்துளான் கேந்திர நிலைக்கக்
காத்திடு திரிகோ ணம்பெறி லஷ்டைஸ்
வரியனு மாமெனக் கணித்தார். ௨

சற்கருமி துர்க்கருமி வெகு பிரயோசனவான்.

நன்மைசேர் பதநில் நல்லவ ரிருக்க
நோக்கிட நற்றொழில் புரியு
மன்னியர் பார்க்கப் பத்துளா னீரா
றெட்டினி லமர்ந்துர்க் கருமி
பன்னிய வாயத் ததிபதி யாமுச்
சம்பெற வோரையிற் புகவு
மின்னனை யாளே நல்லவ ரிருக்கப்
பார்த்திடின் வெகுபலன் மேவும். கூ

பத்தாம்பாவம்-முற்றிற்று.

---

## பதினோராம்பாவம்.

செல்வவான் தனதானியம்.

பூஸ்திதி இவைகள் நாசம் அடைபவன்.

ஆயமே லாட்சி யுச்சமாங் கோட்க
ளமர்தர வதிபதி கேந்த்ரந்
தேய்விலாத் திரிகோ ணம்பெறின் மிக்கச்
செல்வமுண் டாமெனத் தெரிப்பார்
மேயபன் னிரண்டுக் கதிபன்கல் வியத்தின்
விளங்கிரண் டேழிடை மேவ
நேயமாய்ப் பிறந்தோன் றனிய நிதியம்
நீணிலம் பலபொரு ணாசம். க

பதினோராம்பாவம்-முற்றிற்று.

---

## பன்னிரண்டாம்பாவம்.

தனதானியம் பெற்றுவாழ்வன்.

பன்னுபன் னிரண்டுக் குடையவ னெட்டா
றதனிடைப் பயில்வுற வலது
சொன்னவெட் டதிபன் பன்னிரண் டிறினும்
பன்னிரண் டாதிபன் றொடர்பிற்

பின்னமாய் நீசம் பகைபிட மருவ
வாறுளான் பெருகுபன் னிரண்டிற்
றுன்னினுந் தனதா னியம்பல பெற்றுச்
சுகத்துட னிலத்திடை வாழ்வன். ௧

தோஷ நிவர்த்தி.

தூயசந் தான தீபிகை யதனிற்
சொல்லிய தீப்பல னெல்லாம்
ஆயபொன் வெள்ளி வளர்கலைத் திங்க
ளழகுற நோக்கிடிற் றீருங்
காய்சினக் களிற்றின் கோடுமோ னிமிர்ந்து
கர்ப்புரச் செப்பெனப் பணைத்து
மேயதெள் ளமுதக் கலசத்தை வென்று
விளங்கிய கொங்கையி னாளே. ௨

இலக்கினம் அறிய.

ஆதியாங் கிரேத யுகத்தினிற் கெர்ப்பா
தானமே யாதியா கவும்பின்
சோதியாந் திரேதந் தனிற்குறி கண்ட
தாதியா கவுந்துவா பரத்திற்
பேதியாய்ச் சனன தோற்றமே யாதி
யாகவும் பெருங்கலி யுகத்தில்
நீதியா மகவும் பூமியிற் செனித்த
தாதியா கவுங்கொள் நெறியே. ௩

சந்தான சரிதை.

உலகினில் வாழ்வு பூண்டுளோன் சகல
செல்வமு முற்றிருந் தாலும்
இலகிய மகவை யினிதினீன் றிடாதா
ரிருமையின் பயன்பெறு னதனாற்
பலதவஞ் செய்து மகப்பெறல் வேண்டும்
பரவுகன் னியர்தமை வேட்டல்
நிலவுசந் ததியின் பொருட்டலாற் காமப்
பொருட்டல வெனமறை நிகழ்த்தும். ௪

ஆதலா லுலகி லாண்மகப் பெற்று
   மிருமைக்கும் பயனினி தளிக்குங்
காதல்கூர் கின்ற பெண்மக வாகி
   லிம்மையிற் பயனிலை கருதிற்
றீதில்வி வாகஞ் செய்தளித் திடுகின்
   மறுமைக்குத் திகழ்பலன் சேரும்
பேதையர் தம்மைப் பெற்றன மென்னப்
   பேதுறன் மிகப்பெரும் பிழையே. ௬

துக்கமுற் றந்தப் பெண்சிறார் தமக்குஞ்
   சூழுமக் கெர்ப்பார்க டமக்கும்
விக்கினஞ் செய்யி லளப்பிலாக் காலம்
   வெய்யபாழ் நரகிடை வீழ்வர்
தொக்கவித் தகையாற் சோடச மான
   பெண்சிறார் வந்தோன் றுகினும்
மிக்கவு மனத்திற் களிப்புறல் வேண்டு
   மென்னநால் வேதமும் விளம்பும். ௬

இருதுவா வதற்கு முன்னமுங் கெர்ப்ப
   மெய்திய காலத்துஞ் சுதனைக்
கருதியின் றெடுத்து மாதரு தகந்தான்
   கலந்திடா திருக்குமப் போதும்
பெருவய தாகு மாதரு தகம்போய்ப்
   பெட்புறு காலத்து மகிழ்வா
லுருவுடை மாதர் தனையணைந் திடுகி
   லவியுரு வெடுத்தலைந் துழல்வார். எ

கெர்ப்பாதானம்.

பாவையர் பூப்புற் றிரும்புன லாடு
   நாண்முதற் பன்னிரு நாளுந்
தாழ்விலாக் கெர்ப்போற் பத்தியா மதனிற்
   பாத்திரி கனைத்தொட றவிர்த்து

மேவிய விரவி னன்முகூர்த் தத்தின்
வியன்கருப் புகுந்திடு மளவு
நாவலோர் சொன்ன நாடனிற் கூட
னாரர்புரி கடனென நவில்வார். அ

பூத்தநா ளாலிற் புணருதிற் புருடன்
றன்னுடன் மனைவியும் பொற்பும்
வாய்த்த புத்திரரு மரணமாய் நரகத்
தெய்துவ ராண்குறி மனைவி
பார்த்திடிற் புருட னவள்குறி நோக்கிற்
பாரியுண் டிடலவன் பார்க்கில்
நீத்திடும் பகலிற் புணரினு யுளும்போம்
பாலரு நெறியிலா துதிப்பார். கூ

நண்ணு சூதகமரி யெறிபுனற் படிந்தந்
நாண்முதற் பன்னிரு நாளும்
எண்ணிய கருப்ப மெய்திடு மளவும்
பெண்ணினைக் கூடிடா திருப்பின்
நண்ணிய கருப்ப மளித்தவர் புகுது
நாகுறு மொற்றைநா ளிணையிற்
பெண்ணுறு மிரட்டை யானநா ளிணையிற்
பிறங்குறப் பிறக்குமாண் மகவே. ௧௦

சேயிழை நாபிச் சேதனம் பண்ணிச்
செழும்புன லாட்டுதன் முன்னு
மாய்தரும் பிரேதந் தனைக்குளிப் பாட்டி
வைத்தலங் கரிப்பன முன்னும்
ஆயிழை மடவார் பூப்புரி நான்கு
தினமகன் றரும்புன லதனிற்
றோயல்செய் ததிற்பி னுதிரநீர்ப் படினுஞ்
சூதக மில்லையென் றுரைப்பார். ௧௧

கெர்ப்பாதானத்துக்கு விதித்த திதி நாட்கள்.

தையலே முதலாந் திதிதனிற் கூடி
லன்பருஞ் சட்டிவி ரோதம்

பொய்யிலட் டமிநோய் நவமியிற் றுக்கம்
பொருந்துமே காதசி பாவம்
மையறு தூய துவாதசி தன்னின்
மருவிடிற் பூமியின் மருவான்
மெய்யினோர் புகலுஞ் சதுர்த்தசி தன்னின்
மேவிடி னேடென விதிப்பார். கஉ

சருவா மாதப் பிறப்பினின் மகத்தி
னையுஞா யிற்றினிற் சூசி
சார்தரு நாளி லாதிரை யெனுநாட்
கர்ப்பநாண் மூன்றிற்சந் திரன்போ
யோரையா மெட்டிற் புகுதுநாள் வியதி
பாதநாள் விரதநா ளுகந்து
பேதுறப் பிதிருக் கூட்டுநாட் புணரில்
வயதறும் வறுமைநோய் பிடிக்கும். கங

மலடன் சரித்திரம்.

பற்றுசா தகத்தின் படியிலக் கினத்திற்
றன்மனை மலடெனப் படுகின்
மற்றொரு விவாகம் புத்திரோற் பத்திக்
கேதுவாய் வருந்திடல் வழக்காம்
இற்றதாண் மலடனியானென வுணரிற்
றன்குலத் தொருவனை யெய்திக்
கொற்றரு மனைவி யுடன்முயங் குவித்துப்
புதல்வரைத் தொழுதனென் றறியே. கச

அருடருந் தூய நன்மனு நீதி
சோதிடப் புரோகித மழகார்
புருடலட் சணஞ்சீர் வயித்திய முற்றுங்
கற்றிடான் புலவனென் றிடுகின்
மருடரும் பிரமக் கொலைபுரி தோட
மாகும்வெம் பவமுறு மதனாற்
றெருடர முழுது மிதெலாந் தெரியக்
கற்றிடல் புலமையோர் திறனே. கரு

**௲௦ சோதிடச் சில்லரைக்கோர்வை என்னும்**

நூலாசிரியர்பெயர்.

என்னூலாம் வடமொழிச்சந் தானதீ பிகையதனை
கலங்கு லாவு
தென்னூலா யெவர்தாமு மாராய்ந்து கொண்டாடத்
தெரிதல் செய்தான்
புன்னூலாமிடைவாணிமெய்யருள்தானெஞ்சகத்துட்
பூத்து மேவு
முன்னூலான் சந்திரசே கரன்புதல்வ னிராமலிங்க
முனிவன் றனே.

நூற்செய்தகாலம்.

சகவருட மீரெண்ணூற் றெண்ணான்கு மிரண்டுஞ்
சரிந்ததற்பின் பொருந்திடுநந் தனவருட மதனின்
மிகவருடந் திடுமகரத் திங்கடனில் விளங்கி
வியப்புறுமூன் றாந்திகதி வியாழம்பூ சத்திற்
செகமருவு சந்தான தீபிகையைத் தமிழிற்
செய்யுள்நூற் றிருபானைச் சேர்த்துலகில் விளம்பு
மிகபரம்வேண் டினர்நாளும் படித்துணர்வார் கேட்பா
ரெனுமாசை தனைமனங்கொண் டிதனையியற் றினனே.

சந்தான தீபிகை

முற்றிற்று.

---

# அறிவிப்பு.

இந்தச் சந்தான தீபிகையிற் சொல்லாத சிலபலன்களை மதுரையில் திண்டுக்கல் ரோட் 2-ம் நெம்பர் சந்திலிருக்கும் சோதிடம் த. குப்புசாமிநாயுடு அவர்களாற் றெளிவாக வெழுதி அச்சிட்டிருக்கும் சாதக சாரசங்கிரகமென்னும் சோதிட பாக்கிரமத்திற் காண்க.

---

வடிவேலன் றுணை.

# தும்மல் நூல்.

## ஞாயிற்றுக்கிழமை.

### முதற்சாமம்.

கிழக்கு-நன்மை, தென்கிழக்கு-மத்திபம், தெற்கு-உறவின்முறையார் வரவு, தென்மேற்கு-சிநேகிதர்வரவு, மேற்கு-லாபம், வடமேற்கு-சுகபோஜனம், வடக்கு-பொருள் வரவு, வடகிழக்கு-மத்திபம் கன்னியஸ்திரீகள் வரவு.

### இரண்டாஞ்சாமம்.

கிழக்கு-நல்லவார்த்தை, தென்கிழக்கு-மத்திபம், தெற்கு சுபம், தென்மேற்கு-இலச்சை, மேற்கு-நன்மை, வடமேற்கு-பொருளழிவு, வடக்கு-சிநேகிதர்வரவு, வடகிழக்கு-உறவின்முறையார் வரவு.

### மூன்றாஞ்சாமம்

கிழக்கு-மழையுண்டு, தென்கிழக்கு-மத்திபம், தெற்கு உத்தமம், தென்மேற்கு-தீமை, மேற்கு-பொருள்வரவு, வடமேற்கு-மரணம், வடக்கு-சிநேகிதர்வரவு, வடகிழக்கு-பொருளழிவு.

### நாலாஞ்சாமம்.

கிழக்கு-சுபம், தென்கிழக்கு-யாத்திரை, தெற்கு-மத்திபம், தென்மேற்கு-விசனம், மேற்கு-உறவின்முறையார்வரவு, வடமேற்கு-மரணம், வடக்கு-பொருளழிவு, வடகிழக்கு-சிறுநோ.

## திங்கட்கிழமை.

### முதற்சாமம்.

கிழக்கு-சுபம், தென்கிழக்கு-சிறுநோ, தெற்கு-போனது வரும், தென்மேற்கு-விசனம், மேற்கு-சுகம், வடமேற்கு-[illegible]

ணம், வடக்கு-பொருளழிவு, வடகிழக்கு-உறவின்முறையார் வரவு.

இரண்டாஞ்சாமம்.

கிழக்கு-மத்திபம், தென்கிழக்கு-சுகம், தெற்கு-தீமை, தென்மேற்கு-அடுத்தவர்வரவு, மேற்கு-பொருளழிவு, வடமேற்கு-நல்லவார்த்தை, வடக்கு-மரணம், வடகிழக்கு-சினேகிதர்வரவு.

மூன்றாஞ்சாமம்.

கிழக்கு-ஜெயமுண்டு, தென்கிழக்கு-மத்திபம், தெற்கு சுகம், தென்மேற்கு-வரவு, மேற்கு-பொருளழிவு, வடமேற்கு நல்லவார்த்தை, வடக்கு-இலாபம், வடகிழக்கு - அடுத்தவர் வரவு.

நாலாஞ்சாமம்.

கிழக்கு-மரணம், தென்கிழக்கு-அமங்கலம், தெற்கு-ஜெயமுண்டு, தென்மேற்கு-சிறுகு, மேற்கு-சுகம், வடமேற்கு-உத்தமம், வடக்கு-அடுத்தவர்வரவு, வடகிழக்கு-ஜெயமுண்டு.

## செவ்வாய்க்கிழமை.

முதற்சாமம்.

கிழக்கு-நன்மை, தென்கிழக்கு-மத்திபம், தெற்கு-ஸ்திரீகள்வரவு, தென்மேற்கு-தீமை, மேற்கு-சுகம், வடமேற்கு-மரணம், வடக்கு-இலாபம், வடகிழக்கு-பொருளழிவு.

இரண்டாஞ்சாமம்.

கிழக்கு-அடுத்தவர்வரவு, தென்கிழக்கு-பலிதமுண்டு, தெற்கு-மத்திபம், தென்மேற்கு-இரத்தகாயம், மேற்கு-அதிகலாபம், வடமேற்கு-மழையில்லை, வடக்கு-சுகம், வடகிழக்கு கலகம்.

மூன்றாஞ்சாமம்.

கிழக்கு-மரணம், தென்கிழக்கு-உத்தமம், தெற்கு-பெண்பெறுவாள், தென்மேற்கு-சிறுகு, மேற்கு-ஜெயமுண்டு,

வடமேற்கு-பொருளழிவு, வடக்கு-அடுத்தவர்கள்வரவு, வட கிழக்கு-இரத்தக்குறி.

நாலாஞ்சாமம்.

கிழக்கு-சிலவு, தென்கிழக்கு-உத்தமம், தெற்கு-மத்திபம், தென்மேற்கு-பெண்வரவு, மேற்கு பொருட்சேதம், வடமேற்கு-சுபம், வடக்கு-மரணம், வடகிழக்கு-தீமை.

## புதன்கிழமை.

முதற்சாமம்.

கிழக்கு-நல்லவார்த்தை, தென்கிழக்கு-மத்திபம், தெற்கு-சுபம், தென்மேற்கு-சாவு, மேற்கு-சுபம், வடமேற்கு-நோய், வடக்கு-மரணம், வடகிழக்கு-தீமை.

இரண்டாஞ்சாமம்.

கிழக்கு-பொருளழிவு, தென்கிழக்கு-நல்லது, தெற்கு-இரத்தகாயம், தென்மேற்கு-நன்மை, மேற்கு-பயம், வடமேற்கு-உத்தமம், வடக்கு-மழையில்லை, வடகிழக்கு-பொருள்வரவு.

மூன்றாஞ்சாமம்.

கிழக்கு-அடுத்தவர்வரவு, தென்கிழக்கு-மத்திபம், தெற்கு-போனதுவரும், தென்மேற்கு-பொருளழிவு, மேற்கு-சுபம், வடமேற்கு-இரத்தக்குறி, வடக்கு-நன்மை, வடகிழக்கு சிலுகு.

நாலாஞ்சாமம்.

கிழக்கு-மரணம், தென்கிழக்கு-நல்வார்த்தை, தெற்கு கோபம், தென்மேற்கு-சுகம், மேற்கு-மழையுண்டு, வடமேற்கு-சிலுகு, வடக்கு-அடுத்தவர்வரவு, வடகிழக்கு-மத்திபம்.

## வியாழக்கிழமை.

முதற்சாமம்.

கிழக்கு-உத்தமம், தென்கிழக்கு-மத்திபம், தெற்கு சிநேகிதர்வரவு, தென்மேற்கு செலவு, மேற்கு-இலாபம், வடமேற்கு-மரணம், வடக்கு-நல்வார்த்தை, வடகிழக்கு-சாவு.

இரண்டாஞ்சாமம்.

கிழக்கு-தீமை, தென்கிழக்கு-நன்மை, தெற்கு-மரணம், தென்மேற்கு-கன்னியஸ்திரீகள்வரவு, மேற்கு-மத்திபம், வடமேற்கு-அடுத்தவர்வரவு, வடக்கு-சாவு, வடகிழக்கு-நல்ல வார்த்தை.

மூன்றுஞ்சாமம்.

கிழக்கு-இலாபம், தென்கிழக்கு-மரணம், தெற்கு-சுகம், தென்மேற்கு-மத்திபம், மேற்கு அடுத்தவர்வரவு, வடமேற்கு-நாடுவரும், வடக்கு-பொருள்வரவு, வடகிழக்கு-சாவு.

நாலாஞ்சாமம்.

கிழக்கு-மரணம், தென்கிழக்கு-லாபம், தெற்கு-நல்ல வார்த்தை, தென்மேற்கு-மத்திபம், மேற்கு-அடுத்தவர்வரவு, வடமேற்கு-மத்திபம், வடக்கு-கன்னியஸ்திரீகள்வரவு, வடகிழக்கு-பொருள்வரவு.

## வெள்ளிக்கிழமை.

முதற்சாமம்.

கிழக்கு-கன்னியஸ்திரீகள்வரவு, தென்கிழக்கு-நன்மை தெற்கு-அதிகபயம், தென்மேற்கு-அதிகபீதி, மேற்கு-அடுத்தவர்வரவு, வடமேற்கு-ஜெயமுண்டு, வடக்கு-அதிகலாபம், வடகிழக்கு-மத்திபம்.

இரண்டாஞ்சாமம்.

கிழக்கு-மத்திபம், தென்கிழக்கு - உத்தமம், தெற்கு-சிலுக்கு, தென்மேற்கு-நன்மை, மேற்கு-அடுத்தவர்வரவு, வடமேற்கு-சுகம், வடக்கு-மழையுண்டு, வடகிழக்கு-மரணம்.

மூன்றுஞ்சாமம்.

கிழக்கு-நன்மை, தென்கிழக்கு - உத்தமம், தெற்கு-சிலுக்கு, தென்மேற்கு-சாவு, மேற்கு-அதிகபயம், வடமேற்கு-இலாபம், வடக்கு - பொருட்சேதம், வடகிழக்கு - பொருளழிவு.

நாலாஞ்சாமம்.

கிழக்கு-சிலுகு, தென்கிழக்கு-சுகம், தெற்கு-மத்திபம், தென்மேற்கு-சாவு, மேற்கு-அதிகலாபம், வடமேற்கு-மழையுண்டு, வடக்கு-இரத்தநாயம், வடகிழக்கு - உறவின்முறையார்வரவு.

சனிக்கிழமை.

முதற்சாமம்.

கிழக்கு-நல்லவார்த்தை, தென்கிழக்கு-சிலுகு, தெற்கு-அடுத்தவர்வரவு, தென்மேற்கு-மணியம்வரும், மேற்கு-சாவு, வடமேற்கு-நன்மை, வடக்கு-சிநேகிதர்வரவு, வடகிழக்கு-கலியாணம்.

இரண்டாஞ்சாமம்.

கிழக்கு-நல்லவார்த்தை, தென்கிழக்கு-சுகம், தெற்கு-சம்மந்திகள்வரவு, தென்மேற்கு - மரணம், மேற்கு-விசனம், வடமேற்கு-நன்மை, வடக்கு-அடுத்தவர்வரவு, வடகிழக்கு-அதிகலாபம்.

மூன்றாஞ்சாமம்.

கிழக்கு-நன்மை, தென்கிழக்கு-சுகம், தெற்கு-பொருளழிவு, தென்மேற்கு-செலவு, மேற்கு-விசனம், வடமேற்கு-அடுத்தவர்வரவு, வடக்கு-சிநேகிதர்வருவார், வடகிழக்கு-கன்னியஸ்திரீகள்வருதல்.

நாலாஞ்சாமம்.

கிழக்கு-உத்தமம், தென்கிழக்கு-தீமை, தெற்கு-மத்திபம், தென்மேற்கு-அடுத்தவர்வருதல், மேற்கு-அதிகலாபம், வடமேற்கு-சம்பத்து, வடக்கு-புத்திரசந்தானம், வடகிழக்கு-சுகம்.

தும்மநூல்

முற்றிற்று.

௩௩௬ சோதிடச் சில்லரைக்கோர்வை என்னும்

## காகங்கரைதல்.

சாதாரணமாய்ச் சொல்லப்பட்ட அ-திக்குகள் பிரிவினையாயிருந்தபோதிலும் எந்தவாரத்திலேயாவது எந்தத்திக்கிலேயாவது காகங்கரைதலுக்குப் பலன்சொல்லும் விபரம்.

### பகல் அ-முகூர்த்தத்துள்.

| | |
|---|---|
| க-வது முகூர்த்தம் | லாபம். |
| உ-வது முகூர்த்தம் | சேதம். |
| ௩-வது முகூர்த்தம் | வாத்து. |
| ௪-வது முகூர்த்தம் | தனம். |
| ரு-வது முகூர்த்தம் | மழை. |
| சு-வது முகூர்த்தம் | யுத்தம். |
| எ-வது முகூர்த்தம் | மரணம். |
| அ-வது முகூர்த்தம் | அச்சம். |

## கழுதைக்கத்தல்.

கிழக்கு ஆலசியம், தென்கிழக்கு மரணம், தெற்கு தனலாபம், தென்மேற்கு சந்தோஷம், மேற்கு கலகம், வடமேற்கு அபாயம், வடக்கு விருந்து, வடகிழக்கு பொல்லாங்கு.

இதன்றியில் தனக்குமுன் கத்தினும் படுக்கையைவிட்டெழுந்தாலும் நினைத்துப்போகிற காரியஞ்செயமாகும்.

## ஆந்தைக்கத்தல்.

பகலொருதினத்தில் ஆந்தையின் கண்டத்திலிருந்து ஜெனித்த தொனி ஒன்றாகில்-கலகம், உ-ஆகில் தனலாபம், ௩-ஆகில் மன்னர்மடிவு, ௪-ஆகில் லாபம், ரு-ஆகில் பஞ்சம், சு-ஆகில் ஸ்திரீவிஜயம், எ-ஆகில் சேதிவரத்து, அ-ஆகில் அமங்கலம், ௯-ஆகில் சத்துருஜெயம், க0-ஆகில் பாக்கியம், வெகுவாகில் சுகமுண்டாகும்.

உ

வடிவுளவேலோன் றுணை.

# சகாதேவராரூடம்.

## நூற்றெட்டு லக்கத்துள் தொகைகேட்டு பலன் சொல்லுதல்.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பன்னிய முதலெண் வந்தாற் பலித்திடுஞ் சகல யோகம்
உன்னிய கரும மியாவும் உவந்தனு கூல மாகும்
நன்னயம் பெருகு மெந்த நாளுமா னந்த முண்டாம்
சன்னிய ரொருத்தி யாலே கனபொருள் வரவு தானே. க

நயமுண்டு பொருளுங் கொஞ்சம் நட்டமா மதன்ற னிலை
பயமிலை ஆணும் பெண்ணும் பற்பல பலித முண்டாம்
கயமொன்று வெட்டு வாய்பின் கடிமணம் புரிவாய் பூவில்
ஜெயமுண்டு கீர்த்தி யுண்டு திருமக ளருளுண் டாமே. உ

சந்ததம் புகழுங் கீர்த்தி தனமுடன் விவாகஞ் சேரும்
அந்தமார்ந் திலகு நல்ல அகமுமொன் றுண்டாஞ் செந்திற்
கந்தனை வேண்டி யேபாற் காவடி யெடுப்பாய் சீதச்
சுந்தரக் குணத்தி னாளே சுகிர்தமுஞ் சுகமு முண்டே. ங

பந்துக்கள் கலக மத்தாற் பதிதனிற் பொருளுஞ் சேதம்
இந்தநல் லானி மாதத் தேறுவாய் கப்பல் கண்டாய்
வந்ததும் போகுங் கையில் வளர்நிதி செலவு மேலாம்
சிந்தையிற் கடினம் நேரச் செய்குமே நீங்கு தானே. ச

மணமுமே கூடும் செய்யும் வர்த்தகம் பலித்தே யோங்கும்
க்ஷணமுமே லாபங் காணுந் நமையனே டொத்து வாழ்நற்
குணமுமே பெருகும் நின்றன் குலமுமே விருத்தி யாகும்
பணமுமே வரத்து முண்டாம் பத்தனை பயப்ப டாதே. ரு

தனமுடன் புகழுஞ் சேருந் தாமத மாய்ச்சின் னாள்விற்
பனமுடன் பிணியுந் தீரும் பாமர ரேழை கட்கு
அனமுடன் பொருளு மள்ளி யளித்தல குய்வாய் நல்ல
மனமுடன் போற்ற வித்து வானுநீ யாங்கண் டாயே. ௬

துக்கமே யில்லை தூரஞ் சூழ்ந்தநின் பொருளுங் கையிற்
சிக்கென வருமஞ் சாதே சிலவொய் யாரா வுன்றன்
தக்கநற் பொருளுஞ் செல்வந் தநயரும் பெறுவாய் மன்றள்
அக்கரை யிருந்துன் றம்பி யடைகுவன் சரத மாமே. ௭

ரோகமுங் கெடுதி தீமை கிட்டியக் கணமே யோடும்
வாகுநற் றுனி யங்கள் வயல்களில் விளைவு மட்டாம்
விரகமு முடையாய் வீணும் விருத்தியே செய்ய நேரும்
கரகமு மெடுப்பாய் வீர காளியா லயத்திற் றுனே. ௮

உதவியே சேரு முத்தி யோகமு மேறும் பன்னாள்
விதவித மாகச் செம்பொன் மேவிய பணிதி செய்வாய்
சதமல வுலகென் றுள்ளஞ் சார்ந்துபின் நாடுங் கண்டாய்
கதமுடை யோர்கள் நேசங் கைக்கொளா திருப்பாய் மன்னு

பமைதில் நஷ்ட முண்டே பயணமு முடியா திந்தத்
தலமதில் வாசங் கிட்டா சனியுமுன் றுண்டி ருப்பன்
நிலமதில் விளைவு மற்பம் நிகழுவ ததிலும் வேறே
குலமதிற் பகையுங் கொஞ்சம் கூடியே விலகு மாதோ. ௧௦

வினைத்தகா ரியங்கை கூடும் நிதிபல சேரும் நீலக்
கனைத்ததிர் குதிரை யேறக் காட்டிடும் யோகம் நீத
மனைத்துமுன் கைமே லாகும் அன்னிய ருறவு முண்டாம்
மனத்தினிற் களிப்பே யாகும் மைந்தனே க்ஷேமந் தானே.

சென்றவுன் பொருளும் சேரும் தேசங்கள் புகழ வாழ்வாய்
நன்றிது தீதென் றெண்ணும் நடுநிலை யுடையார் வாச
மொன்றபூங்குழலாள்மோக முறவதிசகுணம்வாய்ந்தோன்
மன்றுளே நடிக்குந் தில்லை வரனடி மறந்தி டானே. ௧௨

சத்துரு பயமுண் டாகுந் தரணியிற் பொருளுங் கொஞ்சம்
வைத்திருப் பாய்பின் யோகம் மன்னிடும் வயலை விற்பாய்
நித்தமு மத்த வேணி நிமலனைப் போற்றி வந்தால்
அத்தமும் புகழும் சேரும் அன்பனே அறிந்து பாரே. க௩

குருவதால் நன்மை யுண்டு குவலய வின்பம் யாவும்
தருமிது சரதம் நின்றன் சாமியின் குறையொன் றுண்டு
பருமித முலையா ரின்பம் பரவியே நிதமும் நேரும்
வருமுடன் போகும் சிந்தை மயங்கிடா திருப்பாய் மன்னே.

வாணிபம் விருத்தி நீசெய் வழக்கினில் ஜெயமுண் டாகிக்
காணியும் பெறுவாய் வாசக் கடிமண முடியுங் கஞ்ச
வாணியி னருளுண் டாய்வித் வானெனப் புகழும் பூண்பாய்
வேணதெல் லாங்கை கூடும் மிகநல மேவு வாயே. க௫

தேகத்திற் பிணி யுண்டாகுந் திரஞ்செறி பகையு நேரும்
மேகத்தி னிடியா லுன்றன் மெல்லிய வினத்திற் சாவார்
தாகித்து வந்தோர்க் கீயும் தயைமிகு மனத்தான் மின்னார்
போகத்திற் பிரிய முள்ளான் புரவலர் தீங்குண் டாமே. க௬

இஷ்டமே யுதவி யாகு மேகிய பொருளு மீளும்
நஷ்டமே கிடையா திந்த நானிலம் புகழ வாழ்வாய்
துஷ்டர்க ளுறவு கொஞ்சம் சொல்லினே னதைநீ விட்டால்
கஷ்டமே யகலு முன்றன் காரியங் கைமே லாமே. க௭

தூரமே சென்ற நின்றன் றுணைவனும் வருவா னெந்த
நேரமுங் களிப்பே சேரும் நிதிகொஞ்சம் விரைய மாகும்
மாரனை வியவம் பாலே மடந்தைய ருடன்நீ சோம
வாரநோன் பிருக்க மிக்க மதிப்புமென் மேலு மாமே. க௮

புத்திரப் பேறுங் கிட்டும் புந்தியில் நினைத்த யாவும்
சித்தியாந் தூர தேசம் சென்றவன் மீள்வன் சிந்தை
பத்தியா யிருப்பை யிந்தப் பதியிடம் பரவும் யோகம்
சத்துரு கிடையா தேசோ தரர்களு மிகவுண் டாமே. க௯

பூமியுங் கிடைக்கு மிந்தப் பூதல மன்னர் பேட்டி
யாமிது சாதந் தப்பா தப்பனே யயல்வீ டொன்றைத்
தாமித மன்றி வாங்கித் தக்கவில் கட்ட நேரும்
வாமியை வலத்திற் கொண்ட வரனரு ளீதா மாதோ. உo

உன்பொரு ளொருவர் கையி லுற்றது சின்னாட் பின்னர்
நன்னய முடனே வேண்டி நல்குவ னடைவாய் வாசக்
கன்னிக்கு மணமுங் கூடும் கருதிய யாவும் நன்மை
மன்னனே யறிந்து வாழ்வாய் மகவுமே யினியுண் டாமே. உக

சோதர ரொத்து வாழ்வார் சுகமெய்தும் பவமும் நீங்கும்
ஆதர வாயோர் மன்னன் அளிப்பவன் போனு மில்லம்
போதனை யுடையாய் சிதப் புணரிமேற் பயணம் நேரும்
ஓதினேன் பலனை மைந்தா உற்றுநீ யறிந்து வாழே. உஉ

எடுத்தகா ரியங்கை கூடு மேற்றிடு மலைச்சல் மேலே
தொடுத்தநின் வழக்கு மாகச் சோதரர் கலகம் வந்தே
அடுத்திடு மயலூர் புக்க லாகும்பின் வரவுங் காணும்
தடுத்தவர் வாழார் போக சமயமீ தாகுங் காணே. உங

திரவிய விரயந் தீநோய் சேர்ந்திடு வழக்கு மாகும்
பரவிய நேசர் தாமும் பகைவர்கள் வசமாய்ச் சேர்ந்தே
இரவிபோ லெரிக்கும்பொல்லர்யிடுக்கங்கள் செய்வார்மைந்தா
கரவியல் புடையோர் நேசங் கைக்கொளல் கடினந் தானே.

கன்னியா லொருத்தி யாலே கனநயம் பெருகும் நீயும்
உன்னிய சகல காரி யங்களு முகந்து சேரும்
மன்னவ ராலே கொஞ்சம் வயல்நிதி கிடைக்கும் வெய்ய
பன்னகம் பூண்ட வீசன் பதமல ரிதம தாமே. உரு

வென்றிடும் வழக்குச் செய்ய மேவிய விஷபம் யாவும்
நன்றின தாகத் தாமே நடந்திட நாளுஞ் செல்லும்
குன்றினில் வாசம் வைக்கும் குமரன்றன் குடிநீ யாகும்
மன்றலங் குழலி நல்லாள் வாழ்க்கையே பெருமை யாமே.

தெய்வத்தி னுதவி யுண்டு திருடர்க ளாலே கொஞ்சம்
கைதனி லிருந்த பொன்னும் கடந்துடன் வந்தே சேரும்
வையகம் புகழ வாழ்வாய் மாடெ ளுடுங் கூடும்
ஐயம தில்லை யப்பா அறைந்தன னிருந்த வாறே. ௨௭

நன்மையுண் டெந்த நாளும் நாட்டினிற் சென்றால் மிக்க
இன்பமும்பொருளுந்தானே யெழிலுடன்வந்தேநின்பால்
மன்னிடும் வழக்கு யாவும் மனுநிலை தவறா தோங்கும்
கன்னிய னுவாய் நீயுங் காதலா யறிந்து பாரே. ௨௮

தனமதிற் சேத மாகுந் தையலாள் தனனுற் சண்டை
தினம்வரு முடனே மாயும் சிறப்புமே மங்க லாகும்
மனவருத் தங்கள் மூளும் மனைவியும் பிரிவாள் கொஞ்சம்
கனமுமே குறையுங் கந்தன் கழல்பணி சாந்த மாமே. ௨௯

தொழில்கெடும் நினைத்த சேதி சுருக்கினில் முடியா தப்பா
விழியினில் ரோகம் வந்தே விலகிடு மழகி லாத
பழிகளைப் புரிய வைக்கும் பயனிலை பாரி னுள்ளே
மொழியிரு மாதம் பின்னல் முழுநிதி பெருகுந் தானே. ௩௦

புத்திர விருத்தி யாகும் புரவலர் பேட்டி காட்டும்
நித்தமுங் களிப்புச் சேரும் நின்மல ருறவைக் கூட்டும்
சத்திர மொன்று கட்டிச் சாதமு மிடுவாய் மின்னார்
உத்திரம் போலே செல்வாய் உலகினிற் புகழு முண்டே. ௩௧

பந்துவின் பகையு முண்டு பலர்களும் பழகி வாழ்வை
உந்திடும் கலகம் நேரும் உவகையே யில்லையால் ஜென்மம்
மந்தனு மூன்றே முக்கால் வருடமு மிருப்பன் பின்னல்
வந்திடு நிதிகள் யாவும் வரன்முறை யாகத் தானே. ௩௨

ஒருபெரு விஷயந் தன்னி லுற்றனை யதனி னின்றும்
அருமையா யுலகோ ரென்ன வடைந்தனை ஜெபத்தை நீயும்
குருவிசு வாச முள்ளான் கோதிலாக் குணத்தன் வேள்போ
லுருவதிற் சிறந்தோன் மைந்த ருண்டுநீ பயப்ப டாதே. ௩௩

உன்னெண்ணப் படியே கீர்த்தி யுறுமறு வனுகா சிற்றார்
தன்னிலே வாசஞ் சாரும் சமர்த்தநீ யிகை யுள்ளோன்
உன்னிய தமிழில்வல் லோன் உமைமகன்பெயரே பூண்டோன்
சென்னியில் ரோகஞ் சேர்ந்தே தீர்ந்துநற் சுகமு மாமே. ௩௪

மாதர சொருத்தி யாலே வருத்தமும் நேர்ந்தே தீரும்
தாதவிழ் மாலை யாரித் தலமகன் பகையு முண்டாம்
சோதுடன் லாபங் கிட்டா துணைவர்கள் விலகி வாழ்வர்
ஆதலாற் சாந்தி செய்யி லகன்றுநற் சுகமு மாமே. ௩௫

தானத்தை விட்டோ ரூரிற் சார்ந்திருப் பாயுன் னில்லில்
ஞானவா னொருவன் சேர்வான் நயந்தரும் நதிதீ ரத்தில்
ஆனதோர் வயலுஞ் சேரு மதன்பிற கெல்லாங் கூடும்
பாலன முடையாள் சோகப் பிணியுடன் விலகு மன்றே. ௩௬

சுப்பலிற் சென்றூர் மீள்வர் கடிமனை பொன்னுண் டாகும்
துப்பித ழிணையா ராலே தொடர்ந்தநோ யணுகா தேகும்
எப்பவுங் களிப்பே யுண்டா மிருநில மாந்தர் போற்றிச்
செப்பிட வாழ்வாய்மைந்தர் சிறப்பதாய்ப் பிறப்பர்மாதோ.

சீவன விஷயத் தாலே சிந்தையிற் றுக்கம் நேரும்
ஆவலாய் நீயுட்கொண்ட அரும்பொருளொன் றைத்தோற்றுப்
பாவலர் பகையும் நண்பர் பகையுட னனைத்தும் பூண்பாய்
கோவிள மாத ரோடு குலவிய மாதின் சூதே. ௩௮

நம்பிக்கைகொள்வாய்பின்னால் நாட்டலாஞ்சயத்தையுன் றன்
றம்பியுந் தூர தேசஞ் சார்ந்துடன் பங்கைக் கேட்பான்
கும்பிடுந் தெய்வங் குன்றாக் குடிதனில் வளர்வோ னின்னில்
வம்பியே யாடுங் கண்டு வாழ்ந்திடற் சுகமுண் டாமே. ௩௯

மருவல ராலே தீங்கு வருமொரு மாதத் துள்ளே
குருபகை சேரும் சிந்தை கொண்டிடுந் துக்க மிக்க
அருமைசே ருன்சே யற்கு அடர்பிணி வந்து மாறும்
தருமிப பொருளுங் கண்ணிற் றோன்றும்பின் சுகமு மாமே.

விற்பனர் சினேகத் தாலே மிகுகனம் பொருளு முண்டாம்
நற்குணஞ் சேர்ந்தா லுன்றன் நாயகி குழந்தை யுண்டாம்
மற்புய ஞனேய் நீதான் பருவலர் தனக்கஞ் சாதோன்
பற்பல தொழில்கள் கற்றோன் பயன்றரு மறிந்திடாயே. ௪௧

ஏகுங்கா ரியஞ்சித் திக்கும் எழில்மிகுஞ் சினேகஞ் சேரும்
ஈகுத்தன் றனது தெய்வக் கடமையைச் செலுத்துவாய்பின்
வாகுகன் னிதியும் செல்வ வருமைமக் களுமே சீத
நாகிள மின்னார் போகம் பயமதாய்க் கிடைக்குந் தானே. ௪௨

கள்ளர்கள் பயமு முண்டாங் கடும்பிணி வந்து சேர்ந்து
மெள்ளவே விலகும் மாடு மேஷத்துக் கழிவே யாகும்
பள்ளத்தில் விரைத்த நெல்லும் பயன்றரா துனது ரூபம்
குள்ளமே யாகுங்கண்டாய் குலவும்பின் யோகந்தானே. ௪௩

அனநடையெனுமோர்பெண்ணு லடைந்திடும்லாபம்பின்றன்
மனம்வரும் விஷயம் யாவும் வபமதா மறுவி லாத
தனமதோ ரரச னாலே சார்ந்திடுந் தருக்கி வாழ்வாய்
முனமுன்மூதாதை சொத்தே முடிந்திடுங் கிடைத்திடாதே.

தடையின்றிச்செயலாம்கொஞ்சந் தனச்சிலவாகுங்கண்டாய்
நடையினி லிருக்கச் செய்யும் நாட்டினில் விளைவு மட்டே
படையினிற் சென்றார் மீள்வர் பயணமுங் கிழக்கே யாகும்
தொடையினில் நோயுங் கண்டு சுகப்படும் பயப்ப டாதே.

கேடுகள் நண்ப ராலே கிடைத்திடுங் கிலேசந் தோணும்
ஆடுமா டுடனே விர்த்தி யாகிடு மருமை யார்ந்த
காடுடன் வயலுஞ் சேரும் கருதுமுன் றூய்க்குத் துன்பம்
நீடியே விலகு மெந்த நிடிசமு முழைப்புத் தானே. ௪௬

புந்தியில் நினைத்த சேதி பொருந்தியே பலிக்கு மீசன்
மந்திர பலமு முண்டாம் மனையொன்று வாங்க நேரும்
சிந்துரம் வாயல் கட்டிச் சேமமாய் வாழ்வை கண்டாய்
எந்தநன் குறியி னாலே இயம்பினே னியம்பி னேனே. ௪௭

நாட்டினி லொருவன் சொல்லை நம்பிட வேண்டு முன்றன்
றேட்டிலே மிகுதி யாகா தினமகங் களிப்புச் சேரும்
வீட்டிலே கலக முண்டாய் விலகிடும் தொழிலிங் கொன்றை
நாட்டலாம் பலித முண்டு நயந்தரும் பயப்ப டாதே. ௭௮

தாமத மாய்நீ யுன்னுஞ் சங்கதி முன்னம் சார்ந்த
பாமர ருறவை நீக்கப் பயன்றரும் பண்ணை பாடும்
காமர மொலிக்குஞ் சோலை கைவச மாகு மீசன்
நாமத்தை மறவா தெண்ணில் நன்னிதி பெருகுந் தானே.

சிலதினம் பின்னுற் சேமம் சேர்ந்திடு மரச ஞாலை
பலபொரு ளுடன்மா வில்லம் பல்கிடும் பயமே வேண்டாம்
நலபுகழ் பெருகு மிந்த நானிலந் தன்னி லுன்றன்
குலநலஞ் சேரு மீதை குறிப்பினு லறிந்தி டாயே. ௭௦

இலைப்பயங் கலகத் தாலே இரண்டொரு வருட முன்னுற்
றொலையினிலிருந்தோன்மீள்வன் துரைகளின்நேசமுண்டாம்
மலையினில் வாசங் கிட்டும் மக்களாண் பெறுவா யுன்றன்
றலையில்நோய் கண்டு தீரும் சரதமீ தறிந்தி டாயே. ௭௧

கணக்கமு மாகுங் கொஞ்சந் தொலையினி லிருந்து சேரக்
கணக்கனு மாவா யெந்தக் காரியங் களுஞ்செய் வல்லோன்
இணக்கமாய்ப்பங்கைத் தம்பிக் கீய்ந்திடுங் குணத்தான்மிக்க
வணக்கத்திலுயர்ந்தோன்நின்றன் வருக்கமும்விருத்திபாமே.

எண்ணிய காரி யங்க ளியன்றிடா திருநீர் வைப்பிற்
பண்ணிடுங் கருமம் யாவும் பயன்றரா நின்றன் பந்து
நண்ணியே அவர்க ளொன்றை நவிலுவ ரதைநீ செய்தாற்
கண்ணியம் பொருளு மெந்தக் காரியங் களுமுண் டாமே.

துன்பமு நீங்கி நண்பாற் சுகமதை யடைவாய் தாமே
இன்பமே மேலா யெண்ண வேற்றிடு மிந்த மாதம்
பின்பொரு நல்ல சேதி பெற்றிட லாங்கல் யாணம்
அன்புடன் நடக்கு மென்று அறிவைநீ யவனி மீதே. ௭௪

போகுங்கா ரியங்கை கூடும் போற்றிய கலையில் விர்த்தி
யாகுமின் மனையா ளாலெ யனித்துல குய்வள் நீவி
சாகநாட் பிறந்தோ னுந்தத் தாரணி யாளு மன்னர்
பாகத்தி லொருவ னாகப் பரவுவாய் சரதந் தானே. ருரு

வீணிலே அலைச்சல் காணும் வெகுஜனப் பகையு முண்டாம்
காணியை வழக்கி னாலே கைக்கொள லாகு மொன்றை
வேணியன் கோவி லில்நெய் விளக்குநீ யேற்றி வந்தால்
தோணிடும் ஞான மிக்க சொத்துமே பெருகுந் தானே. ருசு

துயர்வருந் தீரும் நின்றன் றுணைவர்கள் பகையு மாகும்
நயமிலை யிந்த மாதம் நாட்டிய தொழிலும் நஷ்டம்
குயம்பெறு மின்னா ராலே குறுகிடும் வியாதிதீரும்
பயமிலை கண்டா யீதே பயனெனச் சொல்லு வாயே. ருஎ

பெண்ணது கிடைக்கும் நின்பேர்-பிரபல மாகு முன்னம்
எண்ணிய யாவும் கைபோ லெழிலுற வமையு முன்னோர்
பண்ணிய பணிதி யாவும் பாரினி லழிக்க நேரும்
நண்ணலர் கிடையா யோக நாளும தாகுந் தானே. ருஅ

காரியம் ஜெயமே யாகுங் கருதிய படியுண் டாகும்
பாரியும் வருவாள்நல்ல பயனுறுஞ் செலவின் மிக்கோன்
மாரியும் பெய்யும் நின்றன் வயலெலாம் பொலிவுங் காணும்
நீரின்மேலிருந்துன்மச்சான் நிறைபொருளுடன்செல்வானே

எடுத்ததைச் செய்வாய் யோக மேறுந்தா மதமே வுன்னுற்
றெடுத்தநல்வழக்குந் தோல்வி தோன்றிடா ஜெயமேயாகும்
கொடுத்தநின் பணமுங்கையிற் கொஞ்சநாள்கழித்தேசேரும்
விடுத்தகா கிதத்தி னாலே விளங்குநன் னிதியுண் டாமே. சுo

யாத்திரை போகல் யோகம் யானையைக் கனவிற் கண்டால்
கோத்திரம் விளங்கப் பாலன் குவலயம் பிறப்பன் தேவர்
நாத்தழும் புறவே யேற்றும் நாகமா முகவன் பேரே
சாத்துவாய் பொருளுஞ்சேரும் சதிகுணங் களுமுண்டாமே.

சொற்பமாய்ப்பொருளுங்கட்டம் தொடுத்ததுவிளங்காமிக்க
அற்பர்க ளுறவே கிட்டும் அரும்பெறு மகவும் நோயால்
துற்பலமாகு முன்னைத் தூரத்தி லேக வைக்கும்
கற்பனை யெனவெண் ணாதே காதலா வறிந்து வாழே. ௬௨

மன்னவ ராலே யச்சம் வரும்பெருந் துயரம் நாடும்
வன்னியா லுன்ற னில்லம் வாதையாம் வழக்குத் தோற்பாய்
அன்னிய ராலே துன்ப மகன்றிடும் அருமை வாய்ந்த
உன்மனை தகப்பன் வீட்டை யுகந்துமே யடைவாய் தானே.

வாட்டடங் கண்ணார் பெண்ணால் வருந்தன மதிக மாக
நாட்டைவிட் டகன்ற வுன்றன் நம்பியும் வருவான் மிக்க
தேட்டமே சேருங் கொஞ்சஞ் செலவுமே யாகுங் கீர்த்தி
பாட்டுடைத் தலைவ னுயை பாலனீ யறிந்து கொள்ளே. ௬௪

மனத்தினில் வருத்தஞ் சேரும் வளர்நிதி பெருக மாசித்
தினத்திலுன் றெய்வத் திற்கே சீருடன் பூசை வைப்பாய்
வனத்தினில் வாசங் கொஞ்சம் வளர்ந்திடு மறுவி லாத
கனத்துடன் புகழுஞ் சேரும் கந்தன்பே ராமுன் பேரே.

தீமையே பெருகு முன்றன் சிந்தையில் நினைத்த யாவும்
போமையா விளைவு மட்டே பொருந்திய சினேகந் தீங்கே
யாமையா யில்லின் மேற்கே யாகுமே நன்மை நாற்கால்
சாமையா வறிந்து கொள்ளே சாந்திசெய் விலகிப் போமே.

நீதுயர் படுகி ருய்பின் நேர்ந்திடும் சுகமுங் கண்டாய்
மாதுலன் வகையிற்பொன் னும்வருமொருவுறுதிசொன்னேன்
காதலர் பெருவாய் கொஞ்சக் காலத்தில் மணமுங் கூடும்
ஆதலால் முன்னே சாந்த மாற்றிடிற் சுகமு முண்டே. ௬௭

பொருளது கிடைக்கும் நீயும் போகுங்கா ரியங்கை கூடும்
ஒருதிரு வனைய மாதா லுறுவைசன் மார்க்க முன்னே
நரிபரி யாக்கி வந்த நாயக னால யத்தில்
புரிகிய மங்க ளாலே பொருந்துவை யகமு மன்னே. ௬௮

வெளியிற்போகிய்சொத் துன்கைமேவிடும்விறல்சேர்மன்னர்
அளியதால் வயலு மில்லு மடைகுவா யதன்பின் னும்
களியதைப் பெருவாய் மிக்க கனதன சிநேகங் காட்டும்
கிளிமொழி யார்கள் போகங் கிடைத்திடு மறிந்தி டாயே.

மருந்துசாப் பிடில்நோய் தீரும் மருமக னுனது வீட்டில்
வரும்பெருஞ் செல்வங் கூடும் மருவொரு வாரத் துள்ளே
இருமலும் போகுங் கருேசி யிப்பவே யேழை கட்குத்
தருமமும் புரிய வன்ன சத்திரங் கட்டு வாயே. ௭௦

அதிகமா யிருக்குந் துன்ப மகன்றிடுஞ் சுகம்வந் தெய்தும்
பதிகமோர் பத்தைச் சொல்லில் பலகஷ்ட முடனே நீங்கும்
நதிக்கரை வயலுஞ் சேரும் நாயகி நல்லா ளிந்தப்
பதிதனி லிருந்து நீமேற் பாற்செல வடுக்குந் தானே. ௭௧

பூமிநீ கொள்ளில் நன்மை பொருந்திடும் புனித முண்டாம்
வாமியி னருளுங் கிட்டும் மனைசுதர் சுகமாய் வாழ்வர்
காமிநீ யாகு முன்றன் காரியம் கைமேற் சேரும்
சாமியி னருளு முண்டாந் தநயனே பயப்ப டாதே. ௭௨

பந்துவின் விரோத நேரும் பாவலர் பகையு முண்டாம்
சொந்தவூ ரில்லங் கிட்டா தூரத்தி லேக வைக்கும்
சிந்தையில் நினைத்த யாவும் சீரல சின்னாட் பின்னர்
கந்தனை வேண்டி லின்பங் கருதுநன் னிதியு மாமே. ௭௩

கொஞ்சங்கைப்பொருளுஞ் சேதங்கூறலாங்குருவின்பாதந்
தஞ்சமென் றுன்னுஞ் சிந்தை சார்ந்தவன் தமர்கட் குள்ளே
பிஞ்சியே பேசத் துன்பம் மிகுந்திடும் பலித மில்லை
வஞ்சிய ராலே முன்னம் வான்பொரு ளிழந்தாய் தானே.

வெற்றியே யாகும் நீசெய் வியாச்சியந் தனிலுன் சொந்தச்
சுற்றத்தார் புகழ வாழ்வாய் சுதந்தரங் கணக்குக் காகப்
பற்றலர் வருவா ரத்தோன் வழக்கினில் ஜெயமே யாகும்
நற்றவம் புரியும் யோகம் நாடெலா முனக்குத் தானே. ௭[illegible]

துணைவன்றன் பேச்சை மீறிச் சொல்லிடா திருப்பாயானால்
அணைதனிற்படுத்தேயுண்ணுமதிஷ்டமும்அடைவாய்கும்பப்
பணைமுலை மின்னார் போகம் பலித்திடும் பயிலும் வேலை
குணமதாய்க் கையிற் கூடுங் குறியிது கண்டிப் வாயே. எசு

சோதரன் றனைநீ நீக்கிற் சுகந்தரும் சுற்றத் தாரை
ஆதர வோடு காப்பாய் அயலினில் மணமுங் கூடும்
வேதிய னொருவ னாலே விளங்குமிக் குடும்பங் கொஞ்சம்
வாதனை சேரும் நீங்கும் மன்னவன் நேச மாமே. எஎ

கலகமும் வரும்பின் க்ஷேம காலமு மாகு நின்றன்
குலதெய்வத் தாலே நோயின் குறையுண்டு பணியிற்கஷ்டம்
விலகிடுந் தூர தேச விருந்தொன்றைக் காண்பாய் தண்ணூர்
சலமதாற் பீடை கண்ட க்ஷணமுமே பிரியு மாதோ. எஅ

வாந்தியும் பேதி நின்றன் மனைதனிற் காணும் நீங்கும்
காந்திசேர்மணியும்பொன்னுங் கையில்வந்தமர்ந்தேயின்னால்
போந்திடு மிதனை நோக்கிப் புரந்தரன் பரமே சர்க்குச்
சாந்தியுஞ் செய்ய க்ஷேமஞ் சாருமுன் னொருவ னாலே. எசூ

கூடிவா ராதுன் னெண்ணங் குருபகை சிறிது நேரும்
ஆடிப்பா டியும்நின் காலம் அகன்றிடு மயலூர் வாசம்
நாடிடும் நன்மை யில்லை நதிக்கரை நின்னூ ராகுந்
தேடிய பொருளும் நஷ்டம் சிறிதுபின் யோகந் தானே. அ0

சித்தியாம் நினைத்த செய்கை சேதமும் பொருளிலுண்டாம்
புத்தியிற்சிறந்தோய்மேற்குப் புறத்தினிற்செலவேவைக்கும்
கத்தியாற் பீடை யுண்டாம் கடிமனை யொன்றுண் டாகும்
பத்தியிற் சிறந்தோ னல்லன் பாலநீ யுணர்ந்து வாழே. அக

சஞ்சல மகனும் நீசெய் தானியம் விளைவே யாகும்
மிஞ்சிய லாபங் காணும் வியன்றொழி லாலே தன்னைத்
தஞ்சமென் றடைந்தோ ரைத்தற் காத்திடுந் தயவா லீசன்
செஞ்சரண் திக்கி லெல்லாச் செல்வமும் சேருந் தானே.

விருத்தியாம் பயிர்கள் ஞான வித்தக ருறவு முண்டாம்
கருத்தினில் நினைத்த யாவுங் கைதனிற் பலிக்கு முன்னி
லொருத்தியாற் புகழுஞ் செல்வ மோங்கிடு மறிந்திவ் வேலை
திருத்தமாய்ச் செய்யுநெஞ்சான் றீமையே யணுகாமாதே.

ஞாலமேல் யோக நாளாய் நடந்திடு நளின மார்ந்த
சீலமும் பொருளுஞ் சேரும் திருடர்கள் பயமு முண்டாம்
தூலமும் பெருக்கும் நின்றன் சோதரர் வழக்குச் செய்வார்
ஜாலமி தல்ல நீதஞ் சாற்றினே னறிந்து வாழே. அ

உன்றனுற் கேடே யாகு முட்பகை யதிக மேகாண்
நன்றொரு வழக்கைத் தொட்டாய் நயந்தரும் நாட்டின் ஞாக
மன்றலங் குழலி யாலே வருந்திரு மவளோ டேகும்
சென்றநற் பொருளு மீளா சிறுவர்க ளுண்டாந் தானே அ

சேர்ந்திடும் பொருளு முன்றன் சினேகமும் பலனே செய்யும்
ஆர்ந்தமா மனையில் மக்க ளரும்பிணி யாலே நொந்து
தேர்ந்தவ ராவர் தூர தேசத்தி லிருந்துன் மாமன் [ளே.
வார்ந்தவன் பொருளுங் கொண்டு வருவன்நீ யறிந்துகொள்

மங்கள மேயா முன்றன் வளர்மனை யிருக்கப் பின்னே
தங்கையின் பெண்ணை ரெண்டாந் தாரமாக் கொள்வை மிக்க
துங்கநற் பொருள்கள் யாவுஞ் சுகமுடன் பெற்றே வாழ்வாய்
எங்கணு யகன்றன் பார்த்திறைஞ்சுசற் குணவான நீயே அ

கிரகநற் கிரக மாகக் கிடைத்திடும் மடவார் தங்கள்
விரகத்தி னாலே காம வெட்டைபுண் கிரந்தி நாளும்
பரவியே விலகு நீயிப் பதிதனி லிருக்க நேரும்
அரனடி பணிவாய் சாஜ னுமிதை யறிந்து வாழே அஅ

உண்டுசற் கீர்த்தி யிந்த வுலகினிற் பொருளுஞ் சேரும்
கண்டன் மொழியாள் நின்னில் காட்டலா மவளில் பேர்க்கு
துண்டென வீடுங் கிட்டும் துரையின்கீழ் வேலை யாகும்
சண்டையும் நேரும்நீங்கும்சாமிதன் குறையு முண்டே அக

நல்லவர் நேயமாகும் ஞாயமும் புகழும் கூடும்
வல்பிணி தொலைந்து போகும் மக்களுஞ் சுகமுண் டாகும்
சொல்லது பலிக்க லாகும் துற்சன ருறவு மேகும்
அல்லலுந் துன்பம் நீங்கு மலைச்சலுந் தொலையுங் கண்டாய்.

பாக்கிய மிகவுண் டாகும் பத்தியாற் பொருளுஞ் சேரும்
சிக்கது தொலைந்து போகும் சிரமமும் நீங்க லாகும்
யோக்கிய னவான் கொஞ்ச முண்மையாய் லாபங்காணும்
ஏக்கமும் விலகி யோடும் இரண்டுநல் வாரத் துள்ளே. ௬௧

மக்களைப் பெறுவாய் பெற்றால் வருத்தங்கள் நீங்கிப்போகும்
துக்கமே வாரா தென்று சொல்லலாம் உறுதி யோடு
இக்கண மிராஜ பேட்டி யெய்திடும் குடும்ப விர்த்தி
முக்கிய மரச ரானோர் முன்வந்து பேட்டி யாவார். ௬௨

பொருளது வந்து சேரும் போனதோர் பொருளுங் கூடும்
அருளது மிகவுண் டாகும் ஆண்டவ னுதவி யாலே
இருளது விலகி யோடும் இடுக்கமுந் தொலைந்தே யூரி
லொருவனு லனேக லாப முண்மையாய்க்கிடைக்குந்தானே.

கோபமும் போச்சு திப்போ கொடுமையும் விலகி யோடும்
பாபமு முன்னஞ் செய்த பழவினை முழுதும் போச்சு
கூபமுங் குளமும வெட்டிக் குடிகளும் பெரிய தாகிச்
சோபமும் போகிப் பின்பு சுகமுடன் வாழ்கு வாரே. ௬௪

காட்டினில் விதைத்தவித்துக் கைதனிற் பலிக்குங்கண்டாய்
வீட்டினிற் பேசி வைத்த விவாகமா முகூர்த்தந் தானும்
தாட்டிக மாய் நடக்குஞ் சங்கர னருளா லிப்போ
மேட்டிமை யாகத் தானும் விளங்குவா யறிந்து.பாரே. ௬௫

கன்றுகா லிகளும் வாங்கக் கருதிய படியே செய்ய
இன்றுநீ முடிக்க வேதா னென்னிடங் கேட்டாய் முன்னம்
சென்றுநீ பார்த்து வந்த சிலையாம் மாடுதானும்
நன்றல முடியா தென்று நாமிதை யுரைத்தோம் பாரே. ௬௬

கோரட்டு வழக்கு வெல்லுங் கூசாமற் போனார் மீள்வர்
தாரணி தனிலே கீர்த்தி தடையின்றிச் சேரு மின்னம்
நாரண னருளாற் கொஞ்ச நாளையில் விவாகங் கூடும்
தீரமாய் மாத மூன்று சென்றபின் நன்மை யாமே. ௯௭

வஞ்சகங் கிடையா தென்று வழுத்தினேன் நினைத்ததெல்லாம்
அஞ்சுநாள் தனியே யாகும் அருமையா யுனக்கு வாய்த்த
கிஞ்சுக மொழியாளாலே கிடைக்குநற் பொருள்களெல்லாம்
சஞ்சலம் நீங்கிற் றேதான் தமருடன் சேரு வாயே. ௯௮

மன்னவ னாலே கொஞ்சம் வருத்தங்கள் வந்த தெல்லாம்
நன்னய மாகப் போகும் நாளஞ்சுக் குள்ள தாக
அன்னவ னாலே லாப மதிகமாய்க் கிடைக்கு மிப்போ
சொன்னசொற் பிசகா தின்னம் சோதித்துப் பாரு நீயே.

வந்ததோர் மனைவி யாலே வருத்தங்கள் வந்து கொஞ்சஞ்
சிந்தையிற் கவலை யுண்டு தீரமா யிருமூன் றெட்டில்
விந்தையாய்த் திரவி யங்கள் விகசித மாகச் சேரும்
சந்தத மாடு வாங்கித் தாரணி தனில்வாழ் வாயே. ௧௦௦

மித்திர மென்று நீயும் வினவியே கேட்டாய் நாளை
உத்தம னொருவ னாலே உதவிகள் மெத்த வுண்டு
சித்தத்திற் கவலை யிங்கு ள் தீர்வதற் காக வீட்டில்
மெத்தவே தெய்வந் தன்னை வேண்டியே பூசிப் பாயே. ௧௦௧

நல்லதோர் பலனுண் டாகும் நாடிய பொருள்கை கூடும்
வல்லமை யுள்ள பெண்பால் வருகுவாள் மயங்க வேண்டாம்
இல்லதில் விவாகங் கூடும் யெதிரிட்ட பெண்ணை கிட்டும்
சொல்லது பிசகா தென்று சொல்லுவாய் நன்மை யென்றே

போனதோர்பொருளுஞ்சேரும்பொருந்தியவழக்குவெல்லும்
ஆனதோர் வண்டி மாடு அன்புடன் வாங்கு வாய்நீ
கானக மதனிற் போன கன்றது வந்து சேரும்
ஞானவா னொருவனாலே நலம்பெறப் போராய் பாரே. ௧௦௩

வரும்விதி வந்தே தீரும் வழக்கினுற் கெடுதி நேரும்
தருமங்கள் சித்தி யாகுந் தரணியிற் பெரியோ னுவாய்
கருமங்கள் துலைந்து போகுங் கனமுட னுந்தன் வீட்டிற்
றிருமகள் வாச மாகிச் செல்வமா யிருப்பாள் பாரே. ௧0௪

செந்திரு மாது வாழ்வள் செல்வமு மிகவுண் டாகிச்
சந்தத மகிழ்ந்து வாழ்ந்து தரணியிற் கீர்த்தி யுண்டாம்
வந்திடு மிராஜ யோகம் வருகுமே திரவி யங்கள்
சொந்தமாய் வந்து சேரும் சுகமுட னிருப்பாய் பாரே. ௧0௫

எடுத்ததோர் காரி யந்தா னின்னமோ ராண்டுக் குள்ளே
கொடுத்திடும் பலனை யின்னம் கொஞ்சநா ளைக்கு முன்னம்
விடுத்ததோர் நிலந்தை நீயும் வேண்டியே வாங்கப் போராய்
தொடுத்தநல் வழக்கு வெல்லும் சோதித்து மறிந்து பாரே.

பெற்றதோர் பிள்ளை யாலே பெருமைக ளுனக் குண்டாச்சு
உற்றதோர்தெய்வத்தாலே உனைபொருள்கிடைத்துப்போச்சு
நற்றவஞ் செய்வோ னாலே ஞாயமுங் கிடைக்க லாச்சு
கொற்றவ னாலே கீர்த்தி கொடுக்குமுன் னறிந்துபாரே. ௧0௭

மலைபோலே வந்த தீங்கும் வருத்தமும் விலகிப் போகும்
வலைதனிற் பட்ட மான்போல் மயங்கவே வேண்டா மின்னங்
துலைதனிற் போனூர் மீள்வர் துன்பமும் விலகி யோடும்
கலைவல்லோ னுவாய் வந்த கவலையு மொழிந்துபோமே ௧0௮

சகாதேவராரூடம்

முற்றிற்று.



வடிவுளவேளாளன் றுணை.

# கிரகவாரூடம்.

| | | |
|---|---|---|
| புதன் | சுக்கிர | சந்திர |
| வியாழ | சூரியன் | செவ் |
| கேது | சனி | ராகு |

## சூரியன்.

சூரியன் றன்னைத் தொட்டாற் சுகமிலை வியாதி காணும்
வீரிய விருத்தி குன்றும் வீணராற் பொல்லாங் குண்டாம்
காரியக் கேடு தீயாற் கலக்கமாம் பாரி பீடை
ஊரிய முகத்திற் றுவும் மூரைவிட் டோட்டுந் தானே. க

## சந்திரன்.

சந்திரன் றன்னைத் தொட்டாற் சகலகா ரியமும் நன்மை
வந்திடு மிராஜ யோகம் வாய்த்திடு மில்லாள் வஸ்து
பந்துமித் திரா நேகம் பால்தயி ரன்ன முண்டு
சிந்தனை நீங்கிப் பூவிற் சிறப்புடன் வாழு வானே. உ

## செவ்வாய்.

மட்கலன் றன்னைத் தொட்டால் மடிபிடி வழக்குச் சண்டை
தங்கமெய் மேகத் தாலே சார்பிணி யதிக நஷ்டம்
அங்கமு மதனாற் குன்றும் அரசனுக் கிளையு முண்டு
பொங்குபுத் தியுமே தாழ்ந்து புவிதனி லலைகு வானே. ௩

புதன்.

புந்தியைத் தொட்ட தாலே பொன்னில மாத ருண்டு
கந்தனைப் பயின்ற வெண்டோட் கடவுளி னருளி னாலே
சிந்தையில் நினைத்த தெல்லாம் சீக்கிர மனுகூ லங்காண்
மைந்தரைப் பெற்றுப் பூவில் வாழ்வது திண்ணந் தானே. ௬

வியாழன்.

ஆண்டளப் பானைத் தொட்டால் அறிவுநற் கல்வி ஞானம்
தாண்டவ மாடுங் கண்டாய் தானமுந் தவமும் போனோர்
மீண்டவர் வருவா ரிங்கு வேள்விசெய் பெரியோர் சேவை
வேண்டுபாக் கியங்கள் பெற்று மேன்மையாய் வாழு வானே.

சுக்கிரன்.

சுக்கிரன் றன்னைத் தொட்டாற் சுகம்பல பிணியும் நீங்கும்
அக்கரை யாகத் தேடி யாளிங்கு வருவான் பாரு
பக்குவ மான மங்கை பணிபல பொருள்வ ரத்து
விக்கின மில்லா மற்றுன் விவாகமு முடியும் பாரே. ௬

சனி.

சனிபனைத் தொட்ட தாலே தரித்திரம் பிடித்த தின்று
துனிபல வுயிர்ச்சே தங்கள் சூழுநின் றனைக ளுண்டாம்
கனிவிலை யவங்கோ லந்தான் காரியக் கேட லைச்சல்
இனிவிலை வனவா சந்தா னேகுவா னிரந்துண் பானே. ௭

இராகு.

ராகுவைத் தொட்ட தாலே நங்கையாற் கலக முண்டு
வாகுள வங்கி ஷத்தில் வள்ளுமன் னுயிர்க்குச் சேதம்
சாகுமே பாபபு தீண்டிச் சார்விலங் கதனாற் கேடு
பாகுசேர் மொழியி னாளே பாரில்யாத் திரையுண் டாமே. அ

கேது.

கேதுவைத் தொட்ட தாலே கெடுதியாம் வனவா சங்கள்
சூதுபொய் களவு காணும் சூனிய தேக ரோகம்
மாதுதாய் வீடு போவாள் மனவியா கூல முண்டாம்
கோதுட னிரத்தக் காயங் கொண்டவ மான மாமே. ௯

கிரகவாரூடம்

முற்றிற்று.

வடிவுள வேலோன் றுணை.

# இராசி ஆரூடம்.

| | | | |
|---|---|---|---|
| மீனம் | மேடம் | இடபம் | மிதுனம் |
| கும்பம் | இராசி | | கடகம் |
| மகரம் | | | சிங்கம் |
| தனுசு | விருட்சி | துலாம் | கன்னி |

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

### மேடவிராசி.

ஆடொத்த சரவி ராசி யதனில்வந் தொருவன் னின்று
நாடொத்த கருமங் கேட்கில் நவில்தழும் புடைய கையன்
தேடொத்த கருவ லாகுந் திரவியம் வந்து சேரும்
காடொத்த கூந்த லாளே கண்டுகொள் மேடந் தானே. ௧

### இடபவிராசி.

கருதியாங் கருமம் நன்று நிலமகள் கடாக்ஷத் தாலே
கருதியாம் வித்தை லாபஞ் சுகமுமென் மேலு முண்டாம்
நிருதியாங் கருவல் மேனி நீட்சியே நம்பு நீயும்
பருதியாஞ் சிகப்பு மேவும் பகையிலை யிடபந் தானே. ௨

### மிதுனவிராசி.

பொய்யது போந்த வார்த்தை போரது வெல்லும் வீட்டிற்
றையலும் பெறுவாள் பிள்ளை சடுதியிற் போனார் மீள்வர்
செய்யது பயிருஞ் செட்டுஞ் சேருநன் மணமுங் கூடும்
ஐயமின் னிடையி னுளே அறிந்துபார் மிதுனந் தானே. ௩

### கடகவிராசி.

திங்கண்மும் மாரிபெய்யுந் தெருவெலாங் கன்னல் செந்நெல்
அங்கொரு வினையு மில்லை யானதோர் மனையுங் கட்டச்
செங்கையிற் செம்ம லுண்டாஞ் செல்வழி ஜெயமே யாகும்
பொங்கிய பொருளுஞ் சேரும் பூவையே கடகந் தானே. ௪

### சிங்கவிராசி.

காணாத பொருளுங் காணுங் கனமழை பெய்யுஞ் செய்யிற்
கோணாத பயிர்களெல்லாங் கொடுக்குநற் றுணி யங்கள்
ஆணாத பந்து மக்க ளனைவரு முறவே யாவர்
காணாது போனோர் மீள்வர் நங்கையே சிங்கந் தானே. ௫

### கன்னியாவிராசி.

உன்னிய கருமந் தீது ஒண்டொடி பிள்ளைக் கேது
மின்னிய மழைபெய் யாது வேந்தராற் பயமுஞ் சூது
கன்னியர் மணஞ்சே ராது கடுவழி போய்மீ ளாது
நன்னிலப் பயிரோங் காது நலமில்லை கன்னி தானே. ௬

### துலாவிராசி.

குழையொடு பயிரு முண்டு குறித்ததோர் கருமம் நன்று
மழையது மிகவே பெய்யும் வருந்தியே போனார் மீள்வர்
பழையவ ருறவு சாரும் பணிபல முத்துஞ் சேரும்
உழையதில்வருவாள்காண்பாயொண்டொடி துலாத்திற்றானே

விருச்சிகவிராசி.

கிளைவழி கெற்ப மில்லை கேட்பது பெண்ணைப் பற்றி
அளைதயிர் பாலில் லாம லவளையும் வளர்த்தார் தாழ்வர்
இளையவள் சிவலை யந்த வேந்திழை நன்று கண்டாய்
விளைபயிர் பொசிப்பு மில்லை விருச்சிக விராசி தானே. ௮

தனுசுவிராசி.

அகமும்விட் டகல வேண்டாம் ஆனதோர் கரும மாகாச்
சுகமுமிங் கிலது கண்டாய் சூழ்வினை வந்து சேரும்
புகவும்வே றிடமுங்காணாய் பொன்பொருள் கொடுப்போரில்லை
மகவுநன் மனைவிக் காகா மன்னர்கைத் தனுசு தானே. ௯

மகரவிராசி.

கவலையு மதிக முண்டு காரிய மினிமேல் நன்று
அவலையுங் கடலை யள்ளி யளித்திடப் பெறுவாள் பிள்ளை
குவலைய மன்ன ராற்கை கூடுமே நினைத்த தெல்லாம்
சிவலையாள் வருவா ளிப்போ தெரிந்துகொள் மகரந் தானே.

கும்பவிராசி.

பிணியது விட்டுப் போகும் பெருமையாந் தேகந் தன்னில்
அணிவது பொன்னும் முத்தும் ஆடையா பரண மெல்லாம்
துணிவது மனமுந் தோளும் துடியிடை வந்து சேர்வாள்
தணிவது விசேடம் பொய்பாந் தாழ்விலாக் கும்பந் தானே.

மீனவிராசி.

ஆனவர் கரும மாகா தகவில்லை குறைந்து காணும்
கானவர் கலகஞ் செய்வார் கடுவழி தீதுண் டாகும்
தானவர் தேச மேகத் தைபலாள் வரவு மில்லை
போனவர் வருவா ரிப்போ புகலுவாய் மீனந் தானே. ௧௨

இராசி ஆருடம்

முற்றிற்று.

வடிவேலன் றுணை.

சந்தனக்குறடென்னும்

# சகாதேவ சாஸ்திரம்.

## காப்பு-வெண்பா.

பூதேவ ராதிபர்க்குப் பொற்புறச்சித் திப்பிக்கும்
சாதேவ சாஸ்திரத்தைத் தாரணியில்—மாதேவ
னிற்கருமா ணிக்கனவ் வேழேற்றிபத்தோன் செந்திலத
னிற்கருமா ணிக்கனமே.

## நூலாரம்பம்.

சந்தனக் குறட்டினாலே சாதேவ னருளிச் செய்த
பைந்தமி ழிலக்கம் நூறு பத்திரண் டொன்று தன்னை
வந்தனை வழிபா டோடு மாயகோ விந்தா வென்று
சிந்தையில் நினைத்து மூன்று திரமதை யுருட்டிப் பாரே.

## சாஸ்திரப்பொழிப்பு.

உலகத்தி லுள்ளவர்களுக்குச் சோதிடம் நேத்திரம் போன்றதேயாம். அச்சோதிடம், கணிதஸ் கந்தம், சாதகஸ் கந்தம், சங்கிதாஸ் கந்தமென மூவகைப்படும். இவற்றுள் கிரகசாரத்தினாலுஞ் சம்வத்ஸரத்தினாலு முண்டாகிய பலாபல முற்பாதக் தேச சுபாவம் மனோபாவம் முதலியதைசங்கிதாஸ்கந்தமாம்.

சங்கிதாஸ்கந்தங்களிலொன்றாகியஇச்சாத்திரத்தினாலே மனோபீஷ்டங்களை அறிய விரும்புபவர்கள் மனம் வாக்குக் காயங்களினாலே கடவுளைத் தியானித்துத் துதித்து இஷ்ட சித்தியின்பொருட்டு, நன்மையாகிய இலக்கங்கள் வரும்படி சிந்தித்துக்கொண்டு, புஷ்பத்தைப் பாஸ்கையிற் கொடுத்து,

## சக்கரம்.




இச்சக்கரத்திலுள்ள இலக்கங்களை மூன்றுமுறை தொவித்து முறையே அவ்விலக்க வரிசையைப்பார்த்துப் பலன்களை அறிந்துகொள்ளக்கடவார்கள்.

அல்லது ஓரங்குல அகல நீளமுள்ள நாற்சதுரமாகிய சந்தனக்கட்டையில் மேற்சக்கரத்திலுள்ள இலக்கங்களை நான்குபக்கத்திலுமெழுதி மூன்றுமுறை யுருட்டி, முறையே அவ்விலக்கவரிசையைப்பார்த்துப் பலன் கொள்வாருமுளர்.

---

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

க-க-க. உத்தமம்.

உருட்டுசந் தனக்கு றட்டிலொன் றுமொன் றுமொன் றாகுந்தீர்
தெருட்டுதும் பிக்கை யுற்றோன் றிருவருள் வாய்க்கும்ப்பா
மருட்டுதூ ரத்திற் போனோர் வருவர்கா ரியங்கை கூடும்
இருட்டகன் றநேகநன்மை யெய்துமென் றுரைப்பாய்மானே.

இந்நிமித்தம் நன்று. விக்கினேஸ்வர ரநுக்கிரகத்தினால் நீ நினைத்தகாரியஞ் செய்யாகும், பிரயோசனம் வாய்க்கும், சிலனுள்ளவை வந்துசேரும், தூரப்போனவர்வருவார், முன் காரியங்கள் தடையின்றிக் கைகூடும், அநேக நன்மையுண்டு உத்தமம்.

க-க-உ. மத்திமம்.

மன்றுளே ஒன்றோ டொன்று வந்திரண் டுதிக்கு மாகில்
நன்றுநீ வினவிக் கேட்ட காரியம் நன்மை யில்லை
சென்றமுற் பகையும் வெல்வாய். சேதம்பிற் பகையி னாலே
இன்றுதான் நினைத்த தெல்லாம் இடறுமத் திமமு மாமே.

இந்நிமித்தம் சமம். முற்பகைவனை வெல்வாய், பிற்ப கைவனாலுயிர்ச்சேதம், தட்ட செந்துக்களினாற் பயம், நினை த்தவை தாமதமாகும் மத்திமம். உ

க-க-க0. உத்தமம்.

உரைக்குமோன் றொன்று பத்து வந்துதா னுதிக்கு மாகில்
தரைக்குளே பிறவி டத்திற் றானிய வரவு முண்டு
திரைக்குஞ்செம் மனித ராலே நீயெனுங் கருமம் நன்று
விரைக்கரு மனித ராலே விரோதிக ளாதமா வாரே.

இந்நிமித்தம் நன்று. சிவப்பு மனிதராலே நீரெண்ணிய வைகள் பிரயோஜமாம், கரியமனிதராலே பகைவரதமாகுவர் பிறவிடங்களினால் தானிய வரவு, சுபம் உத்தமம். ௩

க-க-க00. அதமம்.

உதித்ததோன் றொன்று நூறு முருட்டவந் துதிக்கு மாகிற்
கதித்தநேதார் களனே முன்பு கரியவன் றொட்ர்ந்த தொக்கும்
மதித்தகா ரியங்கள் நஷ்டம் மனைவிய ராலே துன்பம்
விதித்தபுத் திரர்மே லோர்கள் விரோதமாங் களவு போமே.

இந்நிமித்தம் நன்றன்று. நளச்சக்கிரவர்த்தியினுடைய மனஞ் சனியனால்வேறானதுபோ லிராஜா உன்காரியங்களில் மனம் வேறாகி யநேக நஷ்டங்களைச்செய்வார், பிரபுக்கள் வி ரோதம், மனைவியராலே துக்கம், புத்திரர் பிரிவர் திரவியங் களவுபோம் அதமம்.

க-உ-க. உத்தமம்.

உண்மையா யொன்றி ரண்டு மொன்றுவந் துதிக்கு மாகில்
ஒண்மையா முனைமயி னாலே உத்தியோ கத்தர் நேசம்
வண்மையா ளடிமை பூமி வாகனம் விருத்தியாகும்
பெண்மைய னுறவு கூடும் பெருமையு மிகவுண் டாமே.

இந்நிமித்தம் நன்று. உண்மையாளாகிய சிவகாமியம்மை திரு வருளினாலே உத்தியோகஸ்தர் சிநேகமும் ஆட்சியான பூமி யுடைமை அடிமை குதிரை எருது விருத்தியாகும், நினைத் தவை நிறைவேறும் உத்தமம். ௫

க-உ-உ மத்திமம்.

இசைபெறு மொன்றி ரண்டு இரண்டுவந் ததிக்கு மாகில்
வசைபெறுங்கருமமெல்லாம் வருத்தப்பொல்லாங்குமுண்டா
மசைபெறுந் தூர தேச மதமெனும் போக வேண்டாம்
விசைபெறு முயற்சி செய்தால் வெகுநஷ்ட மாகும் பாரே.

இந்நிமித்தம்நன்றன்று. நீ நினைத்தகாரியங்களிலே முய ற்சிசெய்தால் வெகு நஷ்டமுண்டு, வெகுபேராற் பொல்லாங் குண்டாகும், தூரவழி போகவேண்டாம் மத்திமம். ௬

க-உ-க0. உத்தமம்.

ஓதுமொன் றிரண்டு பத்து முதிக்கநற் கூடல்வாழும்
மாதுமை யருளி னாலே மகபுமுற் பத்தி யாகும்
சாதுயா பாரச் செட்டு க்ஷத்திரிய நன்மை பூவின்
மீதுவே ளாண்மை யுண்டு வெகுதனம் விரும்பிப் பாரே.

இந்நிமித்தம் நன்று. மதுரை மீனாக்ஷியம்மை அநுக்கிர கத்தினால் வேளாண்மைசெய்தாற் பலிக்கும், வியாபாரம்பலி க்கும், க்ஷத்திரியநன்மையும் புத்திசோற்பத்தியும் உண்டாம் உத்தமம். ௭

க-உ-க00. உத்தமம்.

வல்லதொன் றிரண்டு நூறு வந்துமே வுதிக்கு மாகிற்
கெல்லதொன்புதையல்கண்டு கிளப்பியே யெடுத்தாற்போல
நல்லசந் தோஷங் கொள்வாய் மனது தா மதம தாகும்
சொல்லவும் மனது போலச் சுகசிநே கிதருண் டாமே.

இந்நிமித்தம் நன்று. நீரெண்ணியவைகளை முயன்றாற் றிரவியமெடுத்தவர் மனம்போ லதிக சந்தோஷ மடைவீர், உமது காமத்தான் தடை, உம்முடைய மனம்படி சிநேகருங் கியாயிருப்பார் உத்தமம். ௮

க-க0-க. உத்தமம்.

ஊக்கமா மொன்று பத்து மொன்றுவந் துதிக்கு மாகில்
ஆக்கமுண் டாகும் வள்ளி யம்மையி னருளி னாலே
பாக்கிய மனைத்து முண்டாம் பாரிதன் துயரந் தீரும்
போக்கிய பொருளுஞ் சேரும் புத்திரர் தோஷம் போமே.

இந்நிமித்தம் நன்று. வள்ளியம்மை வரப்பிரசாதத்தி னால் உனக்கும் களத்திர புத்திரருக்கும் தோஷங்கள் நீங்கி நன்மையுண்டாகும், நடக்கவேண்டியவைகளும் நடத்தவே ண்டியவைகளு மினித்தடையின்றி நடக்கும், வியாபாரத்தி னால் நன்மையுண்டு உத்தமம். க

க-க0-உ. உத்தமம்.

மனத்துடன் ஒன்று பத்து மிரண்டுவந் துதிக்கு மாகிற்
கனத்துடன் வைத்தி யேசர் கடாக்ஷமுண் டதிக நன்மை
அனத்துட னடியாற் கீர்த்தி அந்தண ராசீர் வாதம்
இனத்துடன் பகைவ ராலும் இரணியம் வரவு மாமே.

இந்நிமித்தம் நன்று. வைத்தியேசர் கிருபையினா லுனக் குப் பிரதான பகைவர் சிநேகராவர், பிராம்மண ராசீர்வாத முண்டு, உறவினராலும் பகைவராலும் பண்மும் பொன்னும் இரத்தினமும் அடியாராற் கீர்த்திப் பிரதாபமும் மனிதரால் அநேக நன்மையுமுண்டு உத்தமம் க0

க-க0-க0. உத்தமம்

பாடிய வொன்று பத்துப் பத்துவந் துதிக்கு மாகில்
நாடிய கருமஞ் சித்தி நன்மணஞ் செட்டு லாபம்
நீடிய சிறைநோய் நீங்கும் நிகழ்பொருள் ஜனத்தின் சேவை
கூடியே தாம்பூ லாதி கொள்ளவுஞ் சாக மாமே.

இந்நிமித்தம் நன்று. நீரெண்ணியவைசித்தியாம், சிறை நீங்கும், தாம்பூலாதி வாசனைதிரவியங்களும் வெகுஜன சே வையும் மீனேன்றைதரியமும் வியாபாரபலிதமும்சுரநீங்குதலும் விவாகமு முண்டாம் உத்தமம். கக

க-௩0-௧00. உத்தமம்.

முந்தொன்று பத்து நூறு மொழிய்வந் துதிக்கு மாகில்
அந்தமெல் லாந்தி ரண்ட வம்மையி னருளி னாலே
சிந்தையில் நினைத்த தெல்லாஞ் சீக்கிரஞ் செயம தாகும்
பந்துவி லொருவர் தூரத் திருந்துமே வருவார் பாரே.

இவ்விலக்கங்கள் நன்று. வடிவழகியம்மை யநுக்கிரகத்தினால் நீ ரெண்ணியவை செயம், தூரத்திலிருந் தொருவர் வருவார் அதனால் அநேக நன்மையுண்டு உத்தமம். ௧௮

க-௧00-க. உத்தமம்.

உன்னிய வொன்று நூறு ஒன்றுவந் துதிக்கு மாகிற்
சென்னியைந் துடைய நாகேந் திரனநுக் கிரகத் தாலே
ஒன்னலர் களையும் வெல்லா யுடற்பிணி யுடனே மாறும்
கன்னியர் விவாக மாகுஞ் சனபொருள் வரவு தாமே.

இந்நிமித்தம் நன்று. நாகேந்திர னருளினாலே சத்துருக்களை வெல்வாய், கிரகங்கள் நன்மையான வீட்டிற்கு வரும்; அதிகலாபமுண்டு, நோய்மாறும், வெள்ளைமனிதரா லநேக திரவியமும் மரியாதையும், வித்தியாசித்தியும் விவாகமுண்டாம் உத்தமம். ௧௯

க-௧00-உ. உத்தமம்.

ஏங்கிய வொன்று நூறு மிரண்டுவந் துதிக்கு மாகில்
ஓங்கிய வானைக் காவ லுறுமகி லாண்ட வல்லி
பாங்கனுக் கிரகத் தாலே பாலரோ ரிஷ்ட சித்தி
போங்குயாத் திரையி னாலும் யெளியாற் பொருளு மாமே.

இந்நிமித்தம் நன்று. அகிலாண்டேஸ்வரி கிருபையினாலே எளியராலும் யாத்திரையாலும் அநேகயமும் புத்திவிருத்தி இஷ்டசித்தியு முண்டாம் உத்தமம். ௨0

க-க00-௪0. உத்தமம்.

பதித்திடு மொன்று நூறு பத்துவந் துதிக்கு மாகில்
மதித்திடுங் கரும மெல்லாம் வைரவர் கிருபை யாலே
உதித்திடு மணியும் பூமி யுற்றொரு பெண்ணால நன்மை
சதித்திடுந் தேவ குற்றங் காணாது விலகிப் போமே.

இந்நிமித்தம் நன்று வைரவசுவாமி கிருபையினாலுனக்குக் சுறுத்த நிறமுள்ள மனிதரால் வெகு பிரயோசனமும் வெண்கல முதலிய வியாபார சயமும் ஒருபெண்ணாலே பூமியும் இரத்தினங்களு முண்டாகும், தேவதை தோஷங்கள் சீக்கிரம் நிவாரண மாகும் உத்தமம். ௪௫

க-௪00-க00. மத்திமம்.

வத்தொன்று நூறு நூறு வந்துதா னுதிக்கு மாகில்
சதமொன்று மில்லை சேதந் தன்றொழி லற்ப மாகும்
பத்தொன்று முருகனை றன்னைப் பணிந்துநீ பூசை செய்தாற்
சுத்தொன்று நினைத்த தெல்லாஞ் சுகந்தரும் பின்பு தானே.

இந்நிமித்தம் நன்றன்று. நீ நினைத்தகாரியஞ் சேதமுண்டு தொழில்களாற் பிரயோசன மில்லை, வியாதியுண்டு, விவாகத் தாமஸம், சுப்பிரமணியர் பூசையினால் பரிகரித்துக் கொள்க மத்திமம். ௪௬

உ-க-க. உத்தமம்.

ஒல்லையா யிரண்டோடொன்று மொன்றுவந் துதிக்கு மாகிற்
றில்லையாம் பதியில் வாழுஞ் சிவனனுக் கிரகத் தாலே
சொல்லையா பயப்ப டாதே சுகந்தனம் புதல்வர் தோற்றம்
புல்லையா நினைத்த தெல்லாம் புந்தியிற் றிடமு மாமே.

இவ்விலக்கங்கள் நல்லன. பயப்படாதேயென்ற சொல்லுனக்குண்டு, புத்திரோற்பத்தி தனம் மனோதிடம் நினைத்தவை சித்தி உத்தமம். ௪௭

உ-க-உ. மத்திமம்.

மருவிரண் டொன் றிரண்டு வந்துதா னுதிக்கு மாகிற்
செருவியன் னியரால் மானக் கேடுநோய் மனைவி நாசம்
பெருவிச னத்தோ டிஷ்டர் பிணக்கமுத் யோகம் நீங்கும்
வருவிசே டத்தைச் சொல்ல வணங்குசெவ் வேளைத்தானே.

இந்நிமித்தமாகாது. உத்தியோகம் நீங்கும், அந்நியசத்தியாராகிலும் பெண்களாலும் மானக்கேடும் வியாதி துக்கங்களும், களத்திரநாசமும், இஷ்ட விரோதமும் உண்டாம் மத்திமம். கஅ

உ-க-௯0. அதமம்.

பணங்கிய விரண்டு மொன்றும் பத்தும்வந் துதிக்கு மாகிற்
பிணங்கிய தொழிற்கும் யாத்ரை பேசியே போகவேண்டாம்
குணங்கிய பகைவரெல்லாங் கூடியே நஷ்டஞ் செய்வார்
இணங்கிய மதியாற் சேர்ந்த னிணையடி போற்று வாயே.

இந்நிமித்தம் நன்றன்று. நீ ரெண்ணியது கூடிவராது, யாத்திரைக்காவது வியாபாரத்துக்காவது போகவேண்டாம், சத்துருக்களனேக நஷ்டங்களைச்செய்ய எண்ணியிருக்கின்றார்கள், புத்தியாய்நடக்க அதமம். கக

உ-க-௧00. உத்தமம்.

நோக்கமா யிரண்டு மொன்று நூறுவந் துதிக்கு மாகில்
ஊக்கமா யுங்கள் தெய்வத் துதவியா பாரம் பூமி
ஆக்கமா மாடை பொன்னு மதிகலா பங்க ளுண்டு
பாக்கியம் பெருகுங் கள்ளர் பயமிலை நாளுந் தானே.

இந்நிமித்தம் நன்று. நீரெண்ணியவைகளுக்குத் தெய்வோபகாரமுண்டு, கள்வர் பயமில்லை, புருஷபுத்திர ஸ்திரீகளினாலே வஸ்திரதிரவிய பூமிபலிப்பும் வியாபார பலிப்புமுண்டாம் உத்தமம். உ0

உ-உ-௫. உத்தமம்.

உறையவே யிரண்டி ரண்டு மொன்றும்வந் துதிக்கு மாகிற்
பறையவே நினைத்த தெல்லாம் பாரதி கிருபை யாலே
நிறையவே பொருளி றத்துட் பொருட்களாஞ் நிதியுஞ்சேரும்
மறையவே கடன் தரத்தா மதப்பட்டோ ரனுப்பு வாரே.

இந்நிமித்தம் நன்று. சரஸ்வதி கிருபையினாலே, நினைத்தவைகள் சீக்கிரமாகும், கடன்தரத் தாமதப்பட்டவர்கொடுத்து அனுப்புவர், பொது நிறச் சாமான்களினால் நயமும் குருபதேசமும் கிரகங்களினால் நயமும் விவாகாரம்பமுமுண்டாம் உத்தமம். உக

உ-உ-உ. மத்திபம்.

இரண்டெ னிரண்டி ரண்டிங் கிசையவர் துதிக்கு மாகில்
முரண்டுடன் நினைத்த தெல்லாம் முடிந்திடா மூல ரோகம்
திரண்டுள வியாபா ரத்திற் சேதமாஞ் சிறுவர் சேர்க்கை
வரண்டிடுஞ் செந்தி நாதன் மலரடி வணங்கு வாயே.

இந்நிமித்தம் மத்திமம். வஸ்திர முத்தியோகம் நினைத்தவை கேடு, சிறுவரால‌லைதல், மூலரோகம், வியாபார பலிதம் செந்திநாதனைச் சிந்திப்பாயாக மத்திமம். உஉ

உ-உ-கO. உத்தமம்.

பண்ணிய விரண் டிரண்டு பத்துவந் துதிக்கு மாகின்
மண்ணையோ ரடி யளந்த மாயவ னருளி னாலே
புண்ணிய தேச யாத்ரை பொருளிரத் தினபி ஷேகம்
நண்ணிய முயற்சி கூடும் நன்மையு மகிழ்ச்சி யுண்டாம்.

இவ்விலக்கங்கள் சிவந்ததிருவடியையுடைய கடவுளது கிருபையினால் நினைத்தவை யாத்திரை யபிஷேகங் குருபதேசம் நன்முயற்சி ரத்தினம்பொன் சுத்தங்களைத்தரும் நன்று.

உ-உ-கOO. உத்தமம்.

உண்டோ ரிரண்டிங் குற்றநூ றுதிக்கு மாகிற்
கொண்டதோர் கருத்துங் காமக் கோட்டத்தி னருளி னாலே
பண்டதோர் வியாதி நீங்கும் பகைவரு முறவ தாவார்
தண்டதோர் காட்சி யெல்லர்க் கருமமும் நன்மை காணே.

இந்நிமித்தம் நன்று. பார்வதிதேவி யருளினாலே பிராணனுக்கு ஹானியில்லை, வியாதி நீங்கும், சத்துருக்க ளிஷ்டராவார்கள் உத்தமம். உ௩

௨-௧0-௯. உத்தமம்.

ஓசொடு யிரண்டு பத்து மொன்றுவந் துதிக்கு மாகில்
ஆசொடு நாகை நாகேஸ் வரியனுக் கிரகத் தாலே
தேசொடு புஷ்ப ரத்னஞ் சேயுமுற் பத்தி யாகும்
காசொடு நீர் நினைத்த காரியங் கைமே லாமே.

இந்நிமித்தம் நன்று. நாகேசுவரி கிருபையால் நீர் நினைத்த பிரகாரங்கூடும், புத்திரோத்ஸவாலங்கார மகிழ்ச்சிமாதுலராலுந் திரவியசத்தின புஷ்பவஸ்திரங்களாலுமிலாபமுண்டாம் உத்தமம். ௨௫

௨-௧0-௨. அதமம்.

ஈடிய விரண்டு பத்து மியலிரண் டுதிக்கு மாகில்
நாடிய கரும மாகா நஷ்டமாம் நாற்காற் சீவன்
கூடிய பயிரும் போகுங் கொடுக்கல்வாங் கலுங் கூடாது
தேடியுன் தெய்வந் தன்னை தெரிசிக்க நன்மை யாமே.

இந்நிமித்தம் நன்றன்று. நீ நினைக்குங்கருமங் கைகூடாது, கொடுக்கல் வாங்கல்களும் நாற்காற் சீவனும் பயிரும் நஷ்டமாகும், அசௌக்கியமுண்டாம் அதமம். ௨௬

௨-௧0-௧0. மத்திபம்.

சொல்லிய விரண்டு பத்து பத்துவந் துதிக்கு மாகில்
மெல்லிய பாஞ்சா லிக்கு மேலுடை யுரியப் பார்த்தே
அல்லிய வுளம்பொ றுத்தே ஐவரு மிருந்தாற் போல
நல்லியல் பாக நீயும் நாடடினி லிருக்க நன்றே.

இந்நிமித்தம் மத்திபம். துரோபதி துகிலை யுரியப்பார்த்து மனப்பொறுமையோ டிருந்தவரைப்போல் களத்திர புத்திர மித்திர விரோதமுண்டாகும், அவைகளை பொறுத்திரு, வியாபாரநஷ்டம் நினைத்தவையாகா மத்திமம். ௨௭

௨-௧0-௧00 மத்திபம்.

நுன்னிய விரண்டு பத்து நூறுவந் துதிக்கு மாகில்
உன்னிருப்பிடத்திற்பொல்லாங் குறும்பொருள்சோரமாகும்
அன்னிய நேசர் சண்டை யாங்கரு மங்க ளாகா
தின்னிலக் குமர வேளி னிணையடி பணிகு வாயே.

இந்நிமித்தம் நன்றன்று. உன்னிருப்பிடத்தினாற் பொல்லாங்கதிகம், திரவிய சோரம், நினைத்தவை கேடுமுண்டாம், நீயெண்ணிய காரியங்களிற்பிரவேசிக்கவேண்டாம், தூரசிநேகத்தினாற் சண்டை, நினைத்தவை சித்தியாகா. ௨அ

௨-௧00-௧. மத்திமம்.

ஓர்ந்திடு மிரண்டு நூறு மொன்றவந் துதிக்கு மாகில்
ஆர்ந்திடுந் துரிய னாலே அடவியை யடைந்தா ரைவர்
நேர்ந்திடுந் துன்பம் பின்பு நீங்கிய வாறு போலத்
தீர்ந்திடுந் தரும னைப்போற் சித்தியாந் திருவுந் தானே.

இந்நிமித்தம் நன்றன்று. நீ நினைத்தகாரியங்கள் சுயோதனனாலே அசௌக்கிய மடைந்து பின்பு சுகமடைந்த தருமராஜனைப்போலச் சித்தியாகும் மத்திமம். ௨௯

௨-௧00-௨. அதமம்.

ஈங்கால மிரண்டு நூறு மிரண்டுவந் துதிக்கு மாகிற்
பாங்காலத் தாலே தெய்வப் பகைவியா பார மாகா
சாங்காலந் தேக நோயாம் தநயருங் குருவி ரோதம்
ஆங்காலங் குலதெய் வத்தை யனுசரித் திடவும் நன்றே.

இந்நிமித்தம் நன்றன்று. நீர் நெடுநா ளெண்ணியவைகளும் கூட்டு வியாபாரமு மாகா, பொருட்சேதமும் தேகநோயும் பசு புத்திர குரு தெய்வபகைகளுமுண்டாகும், குலதெய்வத்தைத் திருப்திபண்ணினாற் சிறிது சுகமுண்டு அதமம்.

௨-௧00-௩. உத்தமம்

பத்தியா மிரண்டு நூறு பத்துவந் துதிக்கு மாகிற்
சித்தியாங் குலதெய் வத்தின் றிருவரு ளுளதால் நன்மை
பித்தனா ரிடத்திற் பாசு பதம்பெற்ற காண்டீபன் போல்
இத்தலத் துமக்கு மின்ப மெய்துமென் றுரைசெய்தோமே.

இந்நிமித்தம் நன்று. உன் குலதெய்வ சகாயத்தினால் நீ ஆலோசிப்பவைகள் சீக்கிரமாகும், பல நன்மைகளும் நடக்

கும், தானியங் கடல்திரவியம் புஷ்பமிவைகளினால் அர்ச்சுனன் பாசுபதம் பெற்றதுபோலநேக திரவியம் வந்துசேரும். உத்தமம். ௩௪

உ-௧௦௦-௧௦௦. உத்தமம்.

நொய்யவேயிரண்டு நூறு நூறுவந் துதிக்கு மாகி
லிய்யவே வீம ராஜ னிடும்பியை யடைந்தாற் போல
உய்யவே திரவி யங்கொனா டோரணங் கின்னி வாகஞ்
செய்யவே வருவாள் கண்டாய் சிநேகித ருறவு மாமே.

இவ்விலக்கங்கள் நல்லன. வீமராஜ னிடும்பியையடைந்ததுபோல் நீர் வழியிற் பணம் ஸ்திரீ நன்மை சிநேகங்களையடைவீர் உத்தமம் ௩௫

௧௦-௧-௧. உத்தமம்.

உன்னிய பத்து மொன்று மொன்றுவந் துதிக்கு மாகில்
நன்னிய கருமங் தையல் நாயகி கிருபை யாலே
கன்னிய ருறவுத் யோகங் கனதனப் பிரபு சேர்க்கை
அன்னிய ருதவி நன்மை பாருமென் றறைகு வாயே.

இந்நிமித்தம் நன்று. தையல்நாயகி கிருபையினாலே பாவமாகிய செய்கைகளைவிட்டு நன்மையாகிய காரியங்களைநடத்துவாய், ஸ்திரீ நன்மையும் உத்தியோக நன்மையும் வழக்கு முதலிய நன்மையும் பிராமணப்பிரபு நன்மையும் உண்டாம்.

௧௦-௧-௨. உத்தமம்.

வையமேற் பத்து மொன்றும் வந்துபின் னிரண்டு திக்கின்
மையமே புருட புத்ர மாதுல வழியி னாலும்
தையலர் நேசத் தாலுந் தனம்வெகு வரவுண் டாகும்
ஐயமே யெண்ண வேண்டா மனுபவ மறிந்து பாரே.

இவ்விலக்கங்கள் நல்லன. நீரெண்ணியவைகளினாற்பல நன்மைகளும், புருஷ புத்திர மாதுலவழிகளினாற் பிரபுநேச சமுத்தனமுங் கிடைக்கும் உத்தமம். ௩௭

௧0-௩-௧0. உத்தமம்.

பற்றிய பத்தோ டொன்று பத்துவந் துதிக்கு மாகில்
வெற்றிவேற் றுங்குஞ் செந்தி வேலவன் கிருபை யாலே
முற்றிய வியாதி நீங்கும் முன்புயாத் திரைபோ னுக்காற்
சுற்றிய தாரந் தானே சுகமுடன் வருவாள் பாரே.

இந்நிமித்தம்நன்று. நீரெண்ணியவைகள் சுப்பிரமணிய சுவாமி கிருபையாலே கைகூடும், யாத்திரைபோனாற் கொடிய வியாதிதீரும், அநேகநன்மையுண்டு, பிரிந்தஸ்திரீ வந்து சேருவாள் உத்தமம். ௩௩

௧0-௧-௧00. உத்தமம்.

பரிந்துபத் தொன்று நூறு பாரில்வந் துதிக்கு மாகில்
அரிந்துல கீன்ற லோக நாயகி யருளி னாலே
வரிந்துடற் பிணியும் நீங்கும் மாற்றல ருறவு மாகும்
தெரிந்துகொள் நினைத்ததெல்லாஞ் சீருடன் முடியும்பாரே.

இவ்விலக்கங்கள் நன்று. லோகநாயகிகடாக்ஷத்தினாலே புத்திரோற்பத்தியும் சுபசோபனமும் உலக கொண்டாட்டமும் நினைத்தவை கூடுதலுமுண்டாம், மனப்பீடை நீங்கும், நெடுநாட்பகைவர் சீக்கிரஞ் சிநேகராவர் உத்தமம். ௩௬

௧0-௨-௩. உத்தமம்.

உற்றபத் திரண்டு மொன்றிங் குதித்திட வுலக மெல்லாம்
பெற்றகா சிவிசா லாக்ஷி யம்மைபே ரருளி னாலே
நற்றவப் பெரியோர் நேசம் நாடுமூலி கையுஞ் சித்தி
பற்றுவல் பிணியும் நீங்கும் பலனுறுங் கண்டு கொள்ளே.

இந்நிமித்தம் நன்று. விசாலாக்ஷியம்மை அநுக்கிரகத்தினாற் பெரியோர் சிநேகமாம், மூலிகை சித்தி, பிணி நீங்கும், வழியிலடித்துப் பறிப்பவனுக்குப் பயந்து பிரயாணத்தைத் தடைபடுத்த வேண்டாம், எண்ணியவைகள் நிறைவேறும் உத்தமம். ௩௭

௧௦-௨-௨. மத்திபம்.

இருமையாம் பத்தி ரண்டு மிரண்டுவந் துதிக்கு மாகிற்
பெருமையாங் குலதெய் வத்தின் பிசகினாற் பகையு முண்டு
வருமையாம் பொல்லாங் கெய்தும் வணங்கிடமிகவும் நன்மை
ஒருமையாம் முயற்சி குன்று முமக்குப்பின் சுகம தாமே.

இந்நிமித்தம்-நன்றன்று.- உமக்கொரு தெய்வப்பகை யுண்டு, நீர் முயற்சிபண்ணும் காரியங்கள் வீணாகும், நீர் அடங்கி நடவாமையினாற் பொல்லாங்கு வருகின்றது மத்திபம்.

௧௦-௨-௧௦. உத்தமம்.

பஞ்சிடப் பத்தி ரண்டு பத்துவந் துதிக்கு மாகில்
அஞ்சலித் தேற்றுந் தெய்வத் தனுக்கிர கத்தி னாலே
வஞ்சிய ருறவு முற்றோர் வழிபட நன்மை செய்வார்
கொஞ்சிய புதல்வ ரோடே கூடியே வாழ்வ வாயே.

இவ்விலக்கங்கள் நல்லன. நீர் தினமுந் தொழுங்கடவுள் கிருபையினா லுறவினரெல்லாரும் நன்மையாகி யநேக நன்மைகளைச் செய்வார்கள், தலைவனை லெண்ணியவெண்ணம் பலிக்கும், நினைத்தவை வெற்றி, அநேக நன்மைபெறுவீர், இல்லறச் சிறப்புண்டாம் உத்தமம் ௩௯

௧௦-௨-௧௦௦. மத்திபம்.

நுன்னியல் பத்தி ரண்டு நூறும்வந் துதிக்கு மாகிற்
சென்னியம் புலியைச் சூடுஞ் சிவனிராத் திரிக்கு மேலே
உன்னிய கரும மெல்லா முனக்குமே ஜெயமுண் டாகும்
நன்னிய சுவாமிக் கர்ச்ச னையுஞ்செய நலம தாமே.

இவை நன்று. நீர் நினைத்தவை சிவராத்திரிக்குச் செயமாகும், வெண்புட்பங்களினாலே சுவாமிக் கர்ச்சனைசெய்க, தானிய வியாபாரத்தாலே தனமுண்டு. ௪௦

௧௦-௧௦-௧. உத்தமம்

பத்தொடு பத்துமொன் றும் பரிவுட னுதிக்கு மாகிற்
சித்தொடு தெய்வ யானை திருவரு ளுனக்குண் டாகும்

இத்தொடுதரும னைப்போற் பொறுமையோ டிருப்பாயாகிற்
சத்தொடு பொருளும் பூமி சகலமும் வரவு தானே.

இந்நிமித்தம் நன்று. தெய்வயானையம்மை திருவருளினாலே தருமராசன் பொறுமையோடிருந்தபடி நீர் பொறுமையாயிருந்தாற் பொருள்வரவுண்டு, விவாக நிச்சயமாகும், பிதிர்வழியாற் பூமி தனமுண்டு உத்தமம். ௬௧

௧0-௧0-௨. அதமம்.

இருந்திடும் பத்துப் பத்து மிரண்டும்வந் துதிக்கு மாகில்
வருந்திடும் பகைவ ரோடு வர்த்தகஞ் செய்ய வேண்டாம்
பொருந்திடும் யாத்தி ரைக்குப் போகவு மாகா தப்பா
திருந்திடும் படிக்கு நீயுஞ் சிவன்றனைப் பூசிப் பாயே.

இந்நிமித்தம் நன்றன்று. நீ ரெண்ணியது கூடிவராது யாத்திரைக்காவது வியாபாரத்துக் காவது போகவேண்டாம் சத்துருக்க ளநேக நஷ்டங்களைச்செய்ய எண்ணியிருக்கின்றார்கள், புத்தியாய் நடக்க அதமம். ௬௨

௧0-௧0-௧0. உத்தமம்.

பத்தியாய்ப் பத்துப் பத்துப் பத்துவந் துதிக்கு மாகிற்
சித்திவி மேச நாதர் திருவரு ளுற்ற தாலே
உத்தியோ கத்தி னாலும் உறவின ராச ராலுஞ்
சத்திய மாதராலுந் தனமுங்கொண் டாட்ட மாமே.

இந்நிமித்தம் நன்று. வீமேச ரநுக்கிரகத்தினாலே உனக்குற்ற துயரம் நீங்கிப் பந்துக்களாலு மிராசர்களாலும் ஸ்திரீகளாலுங் கொண்டாட்ட முண்டாம், மனோதைரியம் வீரியவிருத்தி முயற்சி பிரிந்தவர்வரவு தானியவரவு உண்டாம். ௬௩

௧0-௧0-௧00. உத்தமம்.

நடங்கிடும் பத்துப் பத்து நூறுவந் துதிக்குமாகிற்
றடங்கண ளிசைம டந்தை சதுர்முக னருளி னாலே
சடங்களிற் பிணியுந் தீருஞ் சந்துஷ்டி யுண்டாந் தூரத்
திடங்களி லிருந்தோர் பன்னி யில்லத்தில் வருவார் பாரே.

இந்நிமித்தம் நன்று. சதுர்முக னருளினாற் சோகம் நீங்கும், பிரிந்தமனைவியும் தூரதேசத்தி லிருந்தவரும் வருவார்கள், கள்வரால் திருடப்பட்டவைகள் வலிய வந்துசேரும் எண்ணிய வநேககாரியமுஞ் சித்திக்கும், சந்தோஷமிகும் உத்தமம்.

கO-௪OO-க. உத்தமம்.

உருமையாம் பத்து நூறு மொன்றுவந் துதிக்கு மாகில்
அருமையாம் ஞானி யூர்தி யனுக்கிர கத்தி னாலே
கருமையாம் மனிதரால் வெண் கலவியா பார லாபம்
பெருமையாம் ஒருபெண் ணாலே பிரபல மிகவுண் டாமே.

இந்நிமித்தம் நன்று. வைரவசுவாமி கிருபையினாலுனக்குக் கறுத்த நிறமுள்ள மனிதரால் வெகு பிரயோசனமும், வெண்கல முதலிய வியாபாரநயமும் ஒருபெண்ணாலே பூமியும் இரத்தினங்களு முண்டாகும், தேவதை தோஷங்கள் சீக்கிரம் நிவாரண மாகும் உத்தமம். ௪௰

கO-௪OO-உ உத்தமம்.

வருதியல் பத்து நூறு வந்திரண் டுதிக்கு மாகிற்
கருதிப கருமம் நன்று காயத்ரி கிருபை யாலே
நிருதியிற் பகைவ ருண்டு நீகண்டு பயப்ப டாதே
பொருதியா பார நன்மை பொருள்வர வதிக மாமே.

இந்நிமித்தம் நன்று. காயத்திரி கிருபையினாற் பாற்சோறுண்பாய், உனக்கொரு பகைவன் வருவான், அவனைக் கண்டு பயப்படாதே, வியாபாரநயம், எண்ணியபடி நடக்கும் உத்தமம். ௪௧

கO-௪OO-கO. உத்தமம்.

பத்துடன் நூறு பத்துப் பாரில்வந் துதிக்கு மாகில்
நத்துநற் காசி விஸ்வ நாதரின் னருளி னாலே
சித்தத்தில் நினைத்த தெல்லாஞ் சீக்கிரம் முடிவ தாகும்
புத்தமும் பசுவும் பெண்ணும் அதிஷ்டமும் வருகுந்தானே.

இந்நிமித்தம் நன்று. விசுவநாதரனுக்கிரகத்தினாலே நீர் எண்ணியவைகள் மிகவும் நயம், நீர் நினைத்தவனைக் கண்டு சொன்னாற் காரிய முடிவாகும், பொன்னும் பசுவும் பெண்ணும் அநேகருதவியும் நினைத்தவை சித்தியும் உண்டாம் உத்தமம். ௪௭

௧0-௧00-௧00. உத்தமம்.

பயந்துட னுருட்டுங் காலை பத்துடன் நூறு நூறு
நயந்துவந் துதிக்கு மாகில் நடேசரின் கிருபை யாலே
விபந்துசூ னியமும் நீங்கும் வெங்குலப் பகையுந் தீரும்
அயந்துநீ யிருக்க வேண்டாம் யாவுங்கை கூடுந் தானே.

இந்நிமித்தம் நன்று. நடேசரனுக்கிரகத்தினால் முத்திக்குரிய நன்மைகளைச்செய்வாய், பெரியோ ரனுக்கிரகத்தினாலுங்கள் குலப்பகைதீரும், பிசாசுக்குணஞ் சூனியம் நீங்கும், நீ நினைத்தவைகள் சித்தி உத்தமம். ௪௮

௧00-௧-௧. உத்தமம்.

ஓங்கிய நூறு மொன்று மொன்றுவந் துதிக்கு மாகில்
தாங்கிய குலதெய் வத்தாற் சகலமுஞ் சித்தி யாகும்
வாங்கிய வரத்தாற் பாசு பதம்பெற்ற காண்டீ வன்போற்
பாங்கிய முந்நீர் வஸ்து பலநன்மை களுமுண் டாமே.

இந்நிமித்தம் நன்று. உன் குலதெய்வ சகாயத்தினால் நீ ஆலோசிப்பவைகள் சீக்கிரமாகும், பல நன்மைகளும் நடக்கும், தானியங் கடல் திரவியம் புஷ்ப மிவைகளினால் அர்ச்சுனன் பாசுபதம் பெற்றதுபோ லனேக திரவியம் வந்துசேரும் உத்தமம். ௪௯

௧00-௧-௨. மத்திமம்.

இன்றென்று நூறு மொன்று மிரண்டுவந் துதிக்கு மாகில்
நன்றென்று கருத வேண்டாம் நாரியர் களினாற் பீடை
சென்றென்றுந் தலைவர் பேரிற் சீற்றமாஞ் சிநேக மில்லை
என்றென்று நஷ்டம் பின்னு மிலங்குநற் பலன்க டானே.

இந்நிமித்தம் மத்திமம். தலைவர்பேரில் வெறுப்பும் ஸ்திரீகளினாற் பீடையு மிஷ்டர் நீங்குதலுஞ் சேரணமான தாளியாதிகள் வரவும் முன்னதிக நஷ்டமும் பின்னற்ப நயமுமுண்டாம் மத்திமம். ௫0

க00-க-க0. உத்தமம்.

வருந்திய நூறு மொன்றும் வந்துபத் துதிக்கு மாகில்
திருந்திநீ தினமும் போற்றுந் தெய்வத்தின் கிருபை யாலே
விருந்தின ருறவோ ரெல்லாம் வீட்டிற்கு வரச்சி றப்பாம்
பொருந்திய வெண்ணங் கூடும் புகழுமென் மேலு மாமே.

இவ்விலக்கங்கள் நல்லன. நீர் தினமுந்தொழுங் கடவுள் கிருபையினாலுறவினரெல்லாரும் நன்மையாகி யநேக நன்மைகளைச் செய்வார்கள், தலைவனாலெண்ணியவெண்ணம் பலிக்கும், நினைத்ததை வெற்றி, அநேக நன்மை பெறுவீர், இல்லறச் சிறப்புண்டாம் உத்தமம். ௫க

க0௦-க-க00. மத்திமம்.

நோக்கிய நூறு மொன்றும் நூறும்வந் துதிக்கு மாகில்
சாக்கிடக் கரும மெல்லாந் தாமத மிடையூ றுண்டாம்
போக்கிடப் பெரியோர் கஷ்டம் பூமியு மழிவு சண்டை
தாக்கிடத் தேக வுஷ்ணம் சவுக்கியக் குறைவு மாமே.

இவ்விலக்கம் அதிகநயமன்று. ஸ்திரீவிரகம் உஷ்ணம் பூமியழிவு, சண்டை, எக்காரியங்களுந் தாமதம், பின் பெரியோர்களாற் குறைந்த சவுக்கியம் மத்திமம். ௫உ

க0௦-உ-க. உத்தமம்.

வலந்தனில் நூறி ரண்டு வந்துபின் னொன் று திக்கில்
நிலந்தனில் நினைத்த தெல்லாம் நிறைஞ்சிவப் புடையோராலே
நலந்தரு மிடுக்கந் தீரும் நற்கரு மனிதர் சண்டை
குலந்தனிற் றுன்ய லாபங் குறைவிலே சுபம தாமே.

இந்நிமித்தம் நன்று. சிவப்பு மணிதராலே நீரெண்ணிய வைகள் பிரயோசனமாம், கரியமணிதராலே பகைவரதமாகு வர், பிறவிடங்களினால் தானியுவரவு சுபம் உத்தமம். ௫௩

௧00-௨-௨. உத்தமம்.

இயந்திடும் நூறி ரண்டு மிரண்டுவந் துதிக்கு மாகில்
வியந்திடும் பரங்குன் றத்து வேலவர் கிருபை யாலே
பயந்திடுங் குழந்தை யோடு யாத்திரை போகப் பாவம்
அயந்திடும் பிரிந்த கன்னி யகமதில் வரவுங் காணே.

இந்நிமித்தம் நன்று நீரெண்ணியவைகள் சுப்பிரமணி யசுவாமி கிருபையாலே கைகூடும், யாத்திரைபோனாற் கொ டியவியாதி தீரும், அநேக நன்மையுண்டு, பிரிந்தஸ்திரீவந்து சேருவாள் உத்தமம். ௫௪

௧00-௨-௧0. உத்தமம்.

பாசியாம் நூறி ரண்டு பத்துல குதிக்கு மாகில்
காசியாம் விசுவ நாதர் கடாக்ஷவீட் சண்யத் தாலே
நேசியாம் பெண்ணுங் கோவும் நிதிகளு முதவி யாகும்
வாசியாம் நினைத்த தெல்லாம் வந்துகை கூடுந் தானே.

இந்நிமித்தம் நன்று. சுந்தரேசுவரர் திருவருளினாலே பல காரியங்களும் வெற்றி, நீரெண்ணியவையோ ரற்பனு டைய சிநேகத்தாலே தடையாகி வெற்றியாகும், சுரம் நீங் கும் உத்தமம். ௫௫

௧00-௨-௧00. அதமம்.

நுன்னிய நூறி ரண்டு நூறுவந் துதிக்கு மாகில்
இன்னிலத் துனக்குத் தானே யிருக்கிறு னோர்வி ரோதி
உன்னிநீ யெதிர்க்க வேண்டாம் உன்குல தெய்வந் தன்னைப்
பொன்னியல்போடு போற்றப் பொருள்வரும் பின்புதானே.

இந்நிமித்தம் நன்றன்று. உனக்கொருபகைவன் இருக் கிறான், அவனுடனெதிர்க்காதே, உன்குலதெய்வத்தை நன்

மைப் படுத்திக்கொள், பெண்கலகமுண்டு, எக்காரியங்களுந் தாழ்ச்சியாம் அதமம். ௫௬

க00-க0-க. உத்தமம்.

உய்யவே நூறு பத்து மொன்றுவந் துதிக்கு மாகில்
எய்யவே ணியனைச் சேர்ந்த யீஸ்வரி கிருபை யாலே
அய்யவேந் தருங்கொண்டாட்ட மாம்பொருள்தான்யலாபம்
செய்யவே விவாகம் நன்று தேகநோய் மாறுந் தானே.

இந்நிமித்தம் நன்று: ஈசுவரிதிருவருளினால் விவாகமும் ராஜர்களால் நன்மையும், மேல்வருணத்தவர் கொண்டாட்டமும், புத்திரோற்பத்தியும், இஷ்டசித்தியும், பொருள்வரவும் யாத்திரையினாலே தானியவரவும், நோய்மாறுதலும், மனச்சந்தோஷமும் உண்டாம் உத்தமம். ௫எ

க00-க0-உ. மத்திமம்.

மணித்திட நூறு பத்து வந்துபின் னிரண் டுதிக்கிற்
பணித்திடநினைத்ததெல்லாம் பயனிலகுறைவாய்க்காணும்
குணித்திடப் பெரியோர் நேசங் குன்றிக்கீ ழோர்சி நேகம்
துணித்திடத் தாயா ராலே சுகம்பொருள் வரவுண் டாமே.

இந்நிமித்தஞ் சமம் மாதாவழியினாற் பொருள் வரவு, புத்திருண்டாகி யழிவு, பெரியோர் சிநேகம்நீங்கிக் கீழோர் சிநேகமுண்டாகி நினைத்தவைகள் தாமதப்பட்டுக்குறைவாய் நிறைவேறும் மத்திமம். ௫அ

க00-க0-க0. உத்தமம்.

மாற்றிட நூறு பத்து வந்துபின் பத்து திக்கிற்
போற்றிடத்தருமரைப்போற்பொறுமையோடிருப்பாயானால்
சாற்றிடப் பகையும் நீங்கும் சஞ்சல மகன்று போகும்
ஏற்றிடப் பணமும் வாழ்வு மிருதுசோ பனமு மாமே.

இந்நிமித்தம் நன்று. தருமராஜனைப்போற் பொறுமையாயிருப்பீரானால் நீர் நினைத்தவை கூடி வாழ்வு பணம் விருத்து ருதுசோபனங்க ளுண்டாகும் உத்தமம். ௫௯

௧00-௯0-௧00. உத்தமம்.

மாணவே நூறு பந்து வந்துநூ றுதிக்கு மாகி
வீணவே யுதிக்குஞ் சேயு மீஸ்வரி கிருபை யாலே
காணவே மனச்சந் தோஷங் கனபொருள் வரவு யாத்ரை
தோணவே யிஷ்ட சித்தி சுபதிரு மணமு மாமே.

இந்நிமித்தம் நன்று. ஈஸ்வரிதிருவருளினால் விவாகமும் ராஜர்களால் நன்மையும், மேல்வருணத்தவர் கொண்டாட்டமும், புத்திரோற்பத்தியும், இஷ்டசித்தியும், பொருள்வரவும் யாத்திரையினாலே தானியவரவும், நோய்மாறுதலும், மனச்சந்தோஷமும் உண்டாம் உத்தமம். ௬0

௧00-௧00-௧. அதமம்.

வல்லது நூறு நூறு வந்துபின் னொன்று திக்கில்
கல்லது சொல்ல வாரான் நம்பிமோ சம்போ காதே
அல்லது மவுன மாகி லதிலொரு பொல்லாப் பில்லை
மல்லது புரிய வேண்டாம் வருஞ்சுகம் பின்பு தானே.

இந்நிமித்தந் தீது. நீ நினைத்தவைகளைப் பின்பு நினையாதே, அவ்விடமிருந்து உனக்கொருவன் சங்கதி சொல்ல வருவான், அவனை நம்பாதே, பொல்லாங்கு நீங்குமட்டும் மௌனமாயிரு அதமம். ௬௧

௧00-௧00-௨. உத்தமம்.

மண்டலம் நூறு நூறு வந்திரண் டுதிக்கு மாகிற்
முண்டக மலர்பொற் பாத முனீஸ்வர னருளி னாலே
கண்டது ஜெயம தாகுங் கன தனம் வரவு முண்டாம்
கொண்டது பகைவர் மூவர் கூர்கவ னிக்க வேண்டாம்.

இந்நிமித்தம் முனீசுவர னருளினால் நன்று. நீ எண்ணியப்பிரகாரமனுகூலமாகும், உனக்கு மூவர் பகைவர், அவர்களைக் கவனிக்கவேண்டாம், நினைத்தவை செயமாகும், கனகங்களினால் வரவு உத்தமம். ௬௨

## ௧00-௧00-௧0. உத்தமம்.

நின்றது நூறு நூறு கெற்பத்து முதிக்கு மாகில்
நன்றது வைத்தி யேசர் கிருபையி னுலு னக்கு
இன்றது சுற்றத் தாரம் இரத்தினம் பணமுஞ் சேரும்
அன்றது அடியார் கீர்த்தி யதிகநன் மையுமுண் டாமே.

இந்நிமித்தம் நன்று வைத்தியேசர் கிருபையினுலுனக்குப் பிரதான பகைவர் சிநேகராவர், பிராமண ராசீர்வாதமுண்டு, உறவினராலும் பகைவராலும் பணமும் பொன்னும் இரத்தினமும் அடியாரு கீர்த்திப் பிரதாபமும் மனிதரால் அநேக நன்மையுமுண்டு உத்தமம். ௬௩

## ௧00-௧00-௧00. உத்தமம்.

மதித்திடும் நூறு நூறு வந்துபின் நூறு திக்கில்
உதித்திடும் சிவன் கடாக்ஷ முனக்கனு கூல மாகும்
பதித்திடும் பயிர்வே ளாண்மை பலிக்குமோர் சிநேக னலே
விதித்திடும் பகையை வெல்வாய் வினையகன் றோடுந் தானே.

இந்நிமித்தம் நன்று. நீ நினைத்துப்பார்த்தகாரியஞ்சிவாநுக்கிரகத்தினலே அநுகூலமாகும், வேளாண்மை பலிக்கும் ஒரு சிநேகனற் பகைவனை வெல்லுவாய், நினைத்தவைகள் வெற்றியாகும் உத்தமம். ௬௪

## சகாதேவசாஸ்திரம்

முற்றிற்று.

---

வடிவுளவேலோன் றுணை.

# எண்டிசைக்கோளாரூடம்.

## காப்பு.

அறுசீர் விருத்தம்.

சிந்தனை சொல்வ தற்குத் தெளிவுறுந் திக்கா ரூடம்
வந்திடுங் கிரகந் தன்னால் மதித்தனர் மறைவல் லோர்கள்
தந்தைதாய் குருவாய் வந்தென் சாக்கறுத் தாண்ட சோதி
சுந்தரா னந்த யோகி யடியிணை தொழுதல் செய்வாம்.

சூத்திரம் எண்சீர்விருத்தம்.

காடு வீடெனக் கண்ட வீமேசர்தங்
  கருணை யுச்சங் கடிகை பதினைந்தாம்
நீடு மாட்சிநாள் நட்புறு திங்களாம்
  நீசம் வெம்பகை யாண்டுகொள் நிட்சயம்
ஆடு முன்னிரு கால்மீ னறுதியாய்
  அருக்கன் சேய்குரு மால்புக ராஞ்சனி
கூடு மம்புலி பாம்புறு மேழுரை
  கொண்ட சாமம் வரும்பொருள் கொள்ளுமே

(இதன்பொருள்.) வீமேசர் கிருபாகடாக்ஷத்தினால் ஒருவன்வந்து கேட்குங்காரியம் நன்றோ தீதோவென்று யோசிக்குங்காலையில் எந்தச் சுபக்கிரகமாயிருந்தாலுஞ்சரி, உச்சமாயிருந்தால் கேட்டகாரியம் கரு-நாழிகைக்குள் முடியுமென்றும், ஆட்சியானால் ஒருநாளைக்குள் முற்றுப்பெறுமென்றும் நட்பாயிருக்கில் ஒருமாதத்துக்குள் அனுகூலமாகுமென்றும் பகை நீசமாகப் பொருந்தில் ஒருவருஷஞ்செல்லுமென்றுஞ் சொல்லவும்.

மேற்சொன்ன ஐந்திடங்களிற் பாபக்கிரகங்களாகத் தோன்றில் தீதென்று செப்பவும்.

இதுவுமன்றி, மேடவிராசிமுதல் மீனவிராசிவரை பனிரண்டு இராசியையும் பனிரண்டு திக்காகவைத்துக்கேட்கவந்தவன் மனம்வாக்குக்காயங்களினாலே கடவுளைத்தியானித்துத் துதித்து இஷ்டசித்தியின்பொருட்டு நன்மையாகிய விராசி வரும்படி சிந்தித்துக்கொண்டு, புஷ்பத்தைப் பாலர்கையிற் கொடுத்து,

கிழக்கு.

| | | | |
|---|---|---|---|
| மீனம் ஈசானியம் இராகு | மேஷம் இந்திரன் | ரிஷபம் சூரியன் | மிதுனம் அக்கினி செவ்வாய் |
| கும்பம் சந்திரன் குபேரன் | எண்டிசைக்கோளாரூட விராசிச்சக்கரம் | | கடகம் இயமன் குரு |
| மகரம் | | | சிங்கம் |
| தனுசு வாயு சனி | விருச்சிகம் வருணன் | துலாம் சுக்கிரன் | கன்னி நிருதி புதன் |

வடக்கு. தெற்கு.

மேற்கு.

இவ்விராசிச் சக்கரத்தைத்தொடச்சொல்லி கிரகஉதய கேந்திர திரிகோண சட்டாட்டவிய முதலியஸ்தானத்தைப் பார்த்து முன்சொன்ன நட்பாட்சி யுச்சம் பகைநீச மறிந்து கிரகபலாபலன் சொல்லவும்.

வாரோதயத் திக்காரூடமென்பதினால் ஏழுவாரத்துக்கும் எட்டுத்திக்குகளிலும் கிரகங்களடைக்குங் கிரமம்.

**அதாவது.**—இந்திரனுக்குச் சூரியன், அக்கினிக்குச் செவ்வாய், இயமனுக்கு வியாழன், நிருதிக்குப்புதன், வருணனுக்குச் சுக்கிரன், வாயுவுக்குச் சனி, குபேரனுக்குச் சந்திரன், ஈசானியத்துக்கு இராகு இவர்கள் எட்டுப்பெயர்களும், எட்டுத்திக்கில் ஆட்சியாய்ப் பகலிற் பிரதக்ஷணமாகவும், இராத்திரிக்கு அப்பிரதக்ஷணமாகவும் மூன்றேமுக்கால் நாழிகை ஒரு முகூர்த்தம் பகல் எட்டுச்சாமம் இரவு எட்டுச்சாமம் ஒவ்வொரு கிரகமும் ஒவ்வொரு இராசியைவிட்டுவிலகி மறு இராசியிற் புகுமென்றறியவும்.

யாதாமொருவர் நிமித்தங்கேட்கையில் கிழக்கு முதல் எட்டுத்திசையிலிருந்து இருந்ததிசை பிரதானமாய்ச்சொல்லவும். அதாவது— கிழக்குத்திக்கில் ஏழுவாரத்துக்கும் அந்தந்த வாரத்தில் அந்தக்கிரகம் மூன்றேமுக்கால் நாழிகைமட்டும் உதயமாகிப் பொசிக்கும்பலனறிந்தும், எதிர்க்கிற மேற்குங் கிழக்கும்; வடக்குந் தெற்கும், நிருதிமூலையும் ஈசானியமூலையும், வாயுவுமூலையும் அக்கினிமூலையும் ஆக நாலும் அறிந்தும் நட்பாட்சியுச்சம் பகைநீசமறிந்தும், முன் சொன்ன சூத்திரப்பிரகாரம் இத்தனைநாளிலாகுமென்று நிச்சயித்துச் சொல்லவும்.

ஏழுவாரத்துக்குள் ஞாயிறு-திங்கள்-புதன்-வியாழன்-வெள்ளி இந்த வாரமைந்துக்கும் குரு-சந்திரன்-புதன்-சுக்கிரன் இந்நால்வரும் கிழக்கில் நட்புமற்றுள்ளவை பகை-செவ்வாய்-சனிவாரமிரண்டிற்கும் நட்புபகையென்றறியவும்.

ஞாயிறுமுதல் எந்தவாரத்துக்கும் எந்தக்கிரகம் எந்த ஸ்தானம் உச்சமாகிறதோ? அதற்கு ஆறும்ஸ்தானம் நீசமென்றறியவும்.

**இந்திரனுக்கு.**—வியாழனுச்சம், சந்திரன் - புதன்-சுக்கிரன் நட்பு.

**அக்கினிக்கு.**—இராகு உச்சம், சூரியன்-சந்திரன்-செவ்வாய் புதன்-வியாழன்-சுக்கிரன் நட்பு.

இயமனுக்கு—செவ்வாய் உச்சம். சூரியன்-சந்திரன் - வியாழன்-சுக்கிரன் நட்பு.

நிருதிக்கு.—புதன் உச்சம். சந்திரன் - செவ்வாய்-வியாழன்-சுக்கிரன்-சனி நட்பு.

வருணனுக்கு—சந்திரனுச்சம். செவ்வாய்-புதன்-வியாழன்-சுக்கிரன் -சனி- இராகு நட்பு.

வாயுவுக்கு.—சூரியனுச்சம். சந்திரன்-புதன்-வியாழன்-சுக்கிரன்-சனி-இராகு நட்பு.

குபேரனுக்கு.—சுக்கிரனுச்சம். சூரியன் - சந்திரன்-புதன்-வியாழன் நட்பு.

ஈசானியத்துக்கு.—சனியுச்சம். இராகு-புதன்-நட்பு.

இப்படி ஞாயிறுமுதல் இராகு பரியந்தம் எட்டுக்கோளும் இந்திராதி திக்குகளின்பேரிற் பலனறிந்துசொல்லவும்.

## ஆதித்தனாரூடம்-கிழக்கு.

ஞாயிறில் ஞாயிருகில் நற்பலனிர்ராஜ கோபம், ஆயினும் பயமதில்லை அவனியிற் பிதுரின் சிந்தை, காயினும் சிறந்த பற்பல கனிபல காரங்கொண்டு, வாயிலின் சாமத்தொன்றுள் மனறயவன் வருவான் பாரே.

இராகுவாகில்.—கதிரினி லரவ மாகிற் காரியக் கேடு சாவு, மதிகெடும் நாவுகாயம் வந்துபின் நீங்க லாகும், பதிதனிற் கலகஞ் சண்டை பாம்புகண் காணுந் தீது, விதிவழி முப்பான் நாடி விஷக்குறி கண்டு தேறே.

சந்திரனுகில் —எல்லினி லிந்துவாகி லின்பமா மாதர்சிந்தை, நல்லபோஜனம் விவாகம் நற்பொருட்டானி யங்கள், புல்லுங்கஸ் தூரி வாழை புஷ்பமா பூதி தேங்காய், வல்லனுமயாக்கொண்டு வருகுவர் மூத்தோர்தானே-

**சனியாகில்** —சண்டனிற்சனியுமாகிற் சண்டையாங்கலகவார்த்தை, தண்டந்துன் மரணம்பொய்வஞ் சனைகொலை களவு பாவம், அண்டமேவ கேட்பானென்றே ஆயுளுமுடிவு வார்த்தை, கொண்டவிந் நிமித்தமெல்லாங் கூறுவா யவனிமீதே.

**சுக்கிரனாகில்.**—சுடரினிற் சுங்கனாகிற் சொல்லுவாய் குதிரைக்குட்டி, குடமுளமாது நாற்காற் கொம்புளவெருதோ டாவு, நடமிடு மீசனாலே நற்பொருள் வரவுவுண்டாந், திடமுடன் நினைத்ததெல்லாம் ஜெகமதிலாகுந் தானே

**புதனாகில்.**—பதங்களிற்பச்சையாகிற் பாலர்க்குவித்தையுண்டாம், புதல்வர் தீவாந்திரத்திற் போனவர் சிந்தையாகும், பொதுநிறத் தோனுமிங்கோர்பொட்டியைக் கொண்டுவாரான், அதிலேபெண் பல்லிவந்தாண்பல்லியோ டுறவுமாமே.

**வியாழமாகில்** —அருக்கனி லரசனாகி லற்புதம் பச்சைப்பட்டுத், திருக்கெழுத் தோலைதந்தச்சிமிழுடன்வணிகன் வாரான், தருக்குவிவாகந்தேவ தாபிரதிஷ்டை செய்வன், பெருக்கும்யா பார மெல்லாம் பிரபல மாகும் பாரே.

**செவ்வாயாகில்.**—உதயனி லுதிரனாகில் ஒங்குவாள் வெட்டுக்குத்து, இதயமே நடுங்கத்தண்ட மிராஜனாற் கலக்கமெய்தும், புதியசிந் தனையுமாகா பூமியால் வழக்குநேரும், மதிநதி தலையிற்சூடும் வரன்றனை வணங்குவாயே.

## சந்திரனுருடம்-கிழக்கு.

**திங்களிற்**-திங்களானாற் திருமணக் காட்சியோடு, மங்கையர் வரவுமுண்டாம் வளர்சிவ ஞானமெய்தும், அங்கதிற் சனியுமாகில் ஆமெவரு தானே சேதம், பங்கமே அங்கக்கேடு பரமனைப் பணியப் போமே.

சுக்கிரனாகில்.—மதியினிற் சுங்கனாகில் வஸ்திராபரணம்பூமி, நிதிசவ தானியங்கள் நினைத்தவன் கேட்டானென்க.

புதனாகில்.—அதிற்புத னாகிற்கல்வி யானசம்பந்த வார்த்தை திதிவியாபாரங்கெர்ப்பச் சிந்தைவேளாண்மையாமே.

வியாழமாகில்.—இந்துவிற் குருவுமாகி வியல்மனை நிதிநிட் சேபம், அந்தனர்சிறந்திடுந்தேவாலயத்தால்வரத்து.

செவ்வாயாகில்.—வந்திடுமதனிற் செவ்வாய் வரநெருப்புராயு தத்தால், நொந்திடுங் கடனும் பூமி நோக்கமென் றுரைசெய் வாயே.

சூரியனாகில்.—சோமனிற் பானுவாகிற் சொற்பனம் பேயின் சேஷ்டை, காமனுற்றுசி வீட்டிற் கலகம்வா ரத்துட் சேரும்.

இராகுவாகில்.—தாமதம் பாம்புவாகிற் றடிமாரிக் கீழேவீழ் தல், பூமனும் நினைத்தவெண்ணம் பூமியிற்பொருந் தாதென்ன.

## அங்காரகனாரூடம்-கிழக்கு.

சேயினிற் சேயதாகிற் சேய்பிதா தாய்விரோதம்.

சூரியனாகில்.—ஞாயிறு மதனிற்சேர நாழிகை யொன்றுக் குள்ளே, ஆயினு மரசர் பேட்டி அந்தண ரப்பங் கொண்டு, வாயினுள் வருவா ரத்தை வாங்கினால் விடமதாமே.

இராகுவாகில்.—குருதியி லரவதாகிற் கோபதா பக்கலகம், அருதியாமத்தங் கள்ள ரபகரித் தேகுவார்கள், கரு திமெய் விஷரோகங்கள்.

சந்திரனாகில்.—காணுபிந் ததனிற் றேன்றிற், பொருதுபூஷ ணமு மாடை பொன்னுடன் தான்ய மாமே.

சனியாகில்.—ஆரலிற் காரியாகி லடிமையா ளாடுமாடு, சோர மாம் விரோதி வார்த்தை தோன்றுமே பயித்தியம் பேய்.

சுக்கிரனாகில்.—மாரவோர் பொட்டைக் கண்ணன்வருகிறான் வெள்ளிக் காரால், நீரதிற் கவிழ்ந்த கப்பல் நிலவா மறிந்து கூறே.







௬. அசுவசோதிடச் சில்லரைக்கோர்வை என்னும்

புதனாகில்.—அரத்தனிற் புலவனாகி லருமையாங் கல்விகே ள்வி, வரத்துபந்துக்கள் வார்த்தை மாதிருப் பணி தேர்காணும்

வியாழமாகில்.—சுரர்குரு வதனிற்சாலை தோப்புநந்தன வன ங்கள், திரமுடனெக்யந்தேவ தாபிரதிஷ்டையாமே.

## புதனுருடம்-கிழக்கு.

புந்தியிற் புந்தியாகிற் புகழுறும் ஞானிசிற்பன், செந்தமிழ் ப்பாடும்வித்வான் சித்திரக்காரன் கர்ணம்.

வியாழமாகில்.—அந்தணனாகிற் றீர்த்த யாத்திரை தவம் பொன்னுடை, கொந்திடுங் கிளியைக்கொண்டு கொ ல்லனும் வருகின்றானே

செவ்வாயாகில்.—புலவனி லழலோனாகிற் பொருந்துபட் டாடை மேலோ, ருலவுசொல் ரசவாதங்கா ரூடமந் திரமா சித்தி, குலவுகோ ணன்மாசொன் றுகொண்டு சூத்திரனும் வாரான், இலகிடப் புறத்திற்சூடு கிட க்குதென் றியம்புவாயே.

சூரியனாகில்.—பச்சையிற் பானுவாகிற் பச்சைநீ லப்பட்டா கும், மச்சமோர் நாழிகைக்குள் மழைபிரா மணர்வி ருந்து

இராகுவாகில்.—நிச்சய மிராகுவாகில் நிலையுள மகவுநாசம், இச்சணஞ் செட்டியில்லத் திரவினிற் களவுபோமே.

சந்திரனாகில்—மேதையிற்சீதனாகில் விரைவிலப்பணவரந்து வாதைதே வாங்குமாசவ் வாதுகஸ்தூரி சாவாம்.

சனியாகில்.—வேதைகீழ் மகனுமாகில் வெற்றிலை மருந்தீடா கும், கோதைமந் திரமாந்தாசி கொடுஞ்சுழற் காற்று மாமே.

சுக்கிரனாகில்.—கணக்கனிற் காமனாகிற் கப்பல்தீ வாந்திரத் திற், குணக்குழுத் தைக்குளித்துக் கொண்டுபோல்

மாடுசிந்தை, பிணக்கொரு வழினுற்சண்டை பிடித்த டித்திரத்தந்தோன்ற, இணக்கும்யாத் திரையுமுண் டென் றியம்புவா யவனிமீதே.

## வியாழனாரூடம் - கிழக்கு

பொன்னனிற் பொன்னனாகிற் புத்திர சந்தானங்கள், அன் னதானம்பூதானம் அரியநற் றவசிற் சிந்தை.

செவ்வாயாகில்—பின்னதிற் செவ்வாயாகிற் பெரும்பொரு ளழிவுபூமி, ஒன்னலர் கணவிரோத முண்டுவா ளேந் திவாரார்.

சூரியனாகில்.—காந்திபொன் னதனிற்பானு காணுமுப்பது நாளைக்குள், ஏிந்திடும் வெகுமானங்க ளிரர்ஜராற் பிதுராற்சொல்ல.

இராகுவாகில்.—வேந்தனிற் பாந்தளாகில் விலங்குபந் தன முங் கஷ்டம், மாந்தரில் வழக்குப்பாம்பு வருமொரு சாமத்துள்ளே.

சந்திரனாகில்.—சுரர்குரு வதனிற்சோமன் தோன்றசோபன விவாகம், வரவுநாம் பூலமாடை மாதுர்சம் மந்தவார் த்தை.

சனியாகில்.—உரமுள சனியதாகிலுறும்பரி யெருதிருப்புத், திரங்கொடைத்தவசியுன்னைத் தேடியேவருகுவாரே.

சுக்கிரனாகில்—குருவதிற் பிருகுவாகிற் கூபமுங்குளமுஞ் செல்வம், வருடூாத்தி யோகஞ்சித்தி வாஞ்சையாந்தா சியாலே, பெருநிதி பரிகொடுத்துப் பிணங்கியேவரு வான் பின்பு, உருமைபொன் பூஷணங்க ளரசர்சன் மான மாமே.

புதனாகில்—புங்கவனதனிற் புந்திபொருந்திவை சியர்பரிட் சை, தங்குசோ திடக்கணக்குச் சம்மந்தமான வார் த்தை, சங்கைரூத் திரனும் ஞான சாஸ்திரங்கையிற் றுங்கி, இங்கொரு முகூர்த்தத்துள்ளே எதிர்வரக் காணுவாயே.

## ௧அ அசோதிடச் சில்லரைக்கோர்வை என்னும்

## சுக்கிரனாருடம்-கிழக்கு.

கவியதிற் கவியதானாற் காதலிகெற்பமாகிப்; புவியதிற்பெண் பிறக்கும் புறமுதுகதனில் மச்சம், தவுசதா னியம் பால்மாடு சகலகா ரியங்கைகை கூடும், புவுசுடனேலே கொண்டு பார்த்திட வருகின்றாரே.

புதனாகில்.—காமனிற் சாமனாகிற் கல்விபூ ஷணத்தில் வார்த்தை, க்ஷேமந்தீவாந்திரத்தின் திரவியவஸ்து மாடை, நேமமாங் கலியாணங்கள் நேரிடி மின்னலோடு, சாம நேரத்துக் குள்ளே சரமழை பொழியுந்தானே.

வியாழமாகில்.—பளிங்கதிற் சீவனாகிற் பாற்குடம் பணியா ரங்கள், இளங்கத லித்தேங்காய்கொண் டிங்குனைத் தேடிவாரார், விளங்குவதே வதைமூலத்தால் வேத வேதியர்மே லோர்கள், உளங்களித் திடவேவாழ்வா யுறுதிவா கனமுண் டாமே.

செவ்வாயாகில்—உசனனிற் குசனுமாகி லொருபிராமணசம் மந்தம், துசமெரி தணலிலாடை சூத்திரன் வரவு காண்பாய்.

சூரியனாகில்.—வசதியா முதனிற்பானு வந்திடக் கண்நோய் வார்த்தை, கசிகனி கன்னல் தென்னங் காய் வருஞ் சாமத்துள்ளே.

இராகுவாகில்.—ஆசனன் மாசுணத்தோ டாகிலோர் பெண் மூலத்தாற், காசமும்பிரமியுஷ்ணங் காயமேல்வாதை யுண்டாம்.

சந்திரனாகில்.—தேசுயர் நிலவுமாகிற் றிரள்தனதான்யசிந்தை, மாசலமேறிப்போனோன் வருகிறானென் றுசொல்லே.

சனியாகில்.—சுங்கனிற் பங்குவாகிற் சூத்திரன் வாயுமூலே, தங்குமேவா னேலேகொண்டு க்ஷணத்தினில் வருவான்

பாரு, பங்கமாம் வெட்டுக்காயம் பலகுறிகளவு வார்த்தை, சங்கரன் றனைப் போற்றத் தரணியிற் சுகமதாமே.

## சனியாரூடம்-கிழக்கு.

சனியினிற் சனியதாகிற் சாவுநஞ்சண்ட வார்த்தை, இனியொரு சோரம்போகும் இரட்டையாம்பல்லிவீழும்.

சுக்கிரனாகில்.—கனிவதிற் கவியுமாகிற் கணிகைய ரிணக்கமில்லை, வனிதையர் கப்பல்தோணி வந்துபோமென்று சொல்லே.

புதனாகில்.—மந்தனிற் டந்தியாகில்மாடெனடுகேடுச், செந்துவந் திரும்பாச் சோரஞ் செய்பயிர் விளைவு மாகா.

வியாழமாகில்.—பந்துவின் மணமாம் பிரகஸ்பதிபதிற் புதல்வர் சிந்தை, அர் தணன் நீசன்னையா லடிபட்டு வருவான் பாரே.

செவ்வாயாகில்.—சவுரியிற்பவுமனாகிற் சமுத்திரக்கப்பல்வேகும், தவறிடுங் கன்றுகாலி சாவதுகேட்கில் வாழ்வு.

சூரியனாகில்.—பவுசுநற் பானுவாகிற் பலதொழில் முயற்சிகூடா, புவியர சுறவுண்டாகும் புகழ்குறி சொல்லுவோர்க்கே.

இராகுவாகில்.—காரியிற் கருங்கோளாகிற் கல்விழுங் குறளியாலே, ஏரியுடைந்த பேச்சா யில்லத்தி லரவு காணும், சாரிபாம்பாட்டி யிங்கு சர்ப்பமும் பிடிக்கவாரான், ஆரிலத்தரவுமாடி யகப்படுமென்றுசொல்லே.

சந்திரனாகில்.—மந்தனி லிந்துவாகில் மணமெனக் கேட்டசிந்தை, வந்திடு மப்பெண்தானும் மகிழ்ந்துடனுன்னைச் சார்வாள், கந்துகங் கரிசம்மந்தக் காரியந்தூரவார்த்தை, அந்தணர் வீட்டிற் சண்டை யாமிரு பேருக்கென்றே.

## கூகூ0 சோதிடச்சில்லரைக்கோர்வை என்னும்

## இராகுவாரூடம்-கிழக்கு.

ராகுவில் ராகுவாகில்நங்கையா டனுக்குப்பீடை, வாகுளபந் துவர்க்கம் வாளினால் மரணவார்த்தை, யாகுமேவத ந்தி யோராட் கரவுதான் தீண்டிற்றென்று, சாருமே பகையுந் துக்கஞ் சார்விஷ சிந்தையென்னே.

சந்திரனாகில்.—தமமதிற் சசியுமாகிற் சந்தனம் பூவுஞ்சாரும், அமலைபோசனம் விருந்தாமதிற்கச்ச பதார்த்தமாகா.

சனியுமாகில்.—சமனதிற் சனியுமாகிற் றூனியக்குறைவு சோரம், திமிரினஜாதியாலுந் தீதோலை கொண்டுவாரான்.

சுக்கிரனாகில்.—இந்தரி யதனிற் காம னிருந்திட மணமுங் கூடும், சுந்தரப் பெண்பிறக்குஞ் சுகம்பல தானியங் கள், விந்தை டாம் வெள்ளி முத்து வெண்டுகிற்சில சம்மந்தம், சந்தமார் வீணைமீட்டித் தாசியும் பாடு வாளே.

புதனாகில்.—அகியதிற் சாமனாகில் யாத்திரை யாபாரங்கள், மகிபந்துமித்தி ராள்தீ வாந்திரக் கணக்கதாகும்.

வியாழமாகில்.—சிகிண்டிச னாகிலூரிற் றேவதை திருவிழா வாம், தகைதன தானியம்வா கனமர சரினு லாமே.

செவ்வாயாகில்.—மதிப்பகை யதனிற்சேயும் வரநெருப்பாயு தங்கள், சதிப்பிணியதனைக்கேட்டாற் சாம்பொருட் கேடதாகும்.

சூரியனாகில்—அதிற்சவி தாவு மாகில் அவ்வாண்டு பஞ்சமா கும், கதிருக்குப் பிரீதிபண்ணக் கண்ணின் நோய் தீருந்தானே.

எண்டிசைக்கோளாரூடம்

முற்றிற்று.

---

உ

வடிவேலன் றுணை.

# எழுத்தியல் பாரூடம்.

இச்சக்கரத்தி லேதேனு மோரட்சரத்தை ஒரே முறை தொடச்சொல்லி அவ்வட்சரத்தின் செய்யுளைப் பார்த்துப் பலன்தெரிந்து சொல்லவும். புஷ்பத்தைத்தொட்டால் சமம்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | அ | | | |
| | ஆ | இ | ஈ | உ | ஊ | |
| | எ | ஏ | ஐ | ஒ | ஓ | |
| க | ங | ச | ✣ | ஞ | ட | ண |
| | த | ந | ப | ம | ய | |
| | ர | ல | வ | ழ | ள | |
| | | | ன | | | |

க. அகரத்தின் பலன்.

அல்லியல் முதலெழுத்தாம் அகரத்தைத் தொட்டதாலே
புல்லியல் தான்யம்நஞ்சை புஞ்சையில் விளைவுகாணும்

இல்லியல் கமலைநோக்க மிலகுநற் றிரவியங்கள்
சல்லியமில்லை கண்டாய் சகலமுஞ் சித்தியாமே.

## ௨. ஆகாரத்தின்பலன்.

ஆனவ னிரண்டுக்குற்ற ஆகாரந் தொட்டதாலே
கானவன் மனங்கெட்டாற்போற் கலங்கவோர் நிலைப்படாது
கோனவன்கொடுத்தவேலை குணமிலையலைச்சலாகும் [தானே.
போனவன் மீளான்பெண்ணாற் பொருந்தும்பொல் லாப்புத்

## ௩. இகரத்தின்பலன்.

இசைபெறு மூன்றுக்குற்ற இகரத்தைத் தொட்டதாலே
விசைபெறு முயற்சிலாபம் வெகுபொருள்வரத்துண்டாகும்
வசைபெறு மதனால்வந்த மாதிர வியங்களெல்லாம்
அசைபெறுங் கலகத்தாலே அதிற்சில செலவதாமே.

## ௪. ஈகாரத்தின்பலன்.

ஈகையாம் நான்குக்குற்ற ஈகாரந் தொட்டதாலே
தோகைசோ பனமுங்கூடுந் தொழிலுநல் லுத்தியோகம்
ஓகைநற் றிருவுஞ்சேரும் ஒழுங்குடன் நடநாற்கொம்பு
சூகைமே லேறும்போகி சுகமெனச் சொல்லலாமே.

## ௫. உகாரத்தின் பலன்.

உண்டதா மைந்துக்குற்ற உகரத்தைத் தொட்டதாலே
கொண்டதாம் பயமுங்கஷ்டங் கொடேரசனுஞ் சலம்வழக்கு
கண்டதால் மிகவுங்குற்றங் காரியக் கேடதாகும்
பண்டதால் நினைத்தவேலை பலனுறுந் திங்களுள்ளே.

## ௬. ஊகாரத்தின் பலன்.

ஊக்கமா றெழுத்ததாகும் ஊகாரந் தொட்டதாலே
ஆக்கமா மனமுங்கிட்டா ததுவும்பின் சின்னாட்செல்லும்
நீக்கமா முயற்சிக்கேடு நிலைபெற மாட்டாதென்க
தாக்கமாந் துலைதூரத்துச் சங்கதி தெரியுந்தானே.

எ. எகரத்தின்பலன்.

எண்ணியவ் வேழுக்குற்ற எகரத்தைத் தொட்டதாலே
மண்ணியல் கனவிரோதி வஞ்சக னொருவனுண்டு [வன்
புண்ணிய னெனவெண்ணுதே பொய்பன்பொல்லாங்குசெய்
நண்ணிய வனையென்நாளும் நம்பிமோ சம்போகாதே.

அ. ஏகாரத்தின் பலன்.

ஏங்கியவ் வெட்டுக்குற்ற ஏகாரந் தொட்டதாலே
பாங்கியல் குறித்தவாறு பலனுறும் புகழுமெய்தும்
ஓங்கிய மணமுஞ்சித்தி யுபர்தொழில் முயற்சிலாபம்
தூங்கிய வழக்குவெல்லும் துணைகுல தெய்வமுண்டே.

கூ. ஐகாரத்தின் பலன்.

ஐயமே லொன்பானுற்ற ஐகாரந் தன்னைத்தொட்டால்
வையமே லுனக்குநன்மை வரும்பல சருமம்சித்தி
தையலைக் கொண்டதாலே தன்குலம் விருத்தியாகும்
பையலும் போனுன்மீண்டும் பலனுற வருகின்றானே.

கo. ஒகரத்தின் பலன்.

ஒத்துடன் பத்துக்குற்ற ஒகரத்தைத் தொட்டதாலே
நத்துடன் தீர்த்தயாத்ரை நல்கிடும் பிரயாணந்தான்
சித்துடன் வழித்துணைக்குச் சேர்ந்ததாற் சுகமுமுண்டாம்
பத்துடன் ஒன்றைநீக்கப் பலித்திடும் பயப்படாதே.

கக. ஓகாரத்தின்பலன்.

ஓதிய பதினொன்றாகும் ஓங்காரந் தொட்டதாலே
போதிய கப்பலேறிப் போனவர் மீள்வர்கண்டாய்
காதிய லவர்களாலே கைக்கனு கூலமாகும்
நீதிய தொழில்முயற்சி நினைத்தவை சித்தியாமே.

கஉ. ககரத்தின்பலன்.

கருதுபன் னிரண்டுக்குற்ற ககரமுந் தொட்டதாலே
கிருதுதன் னுடலுக்கேனும் கிலேசமே புதல்வர்க்கேனும்
வருதிவே தனையும்பார்தை வந்துபின் நீங்குமென்று
சுருதியிற் சொன்னவாறு சொல்லிடப் பலனுகாதே.

கங. ஙகரத்தின்பலன்.

ஙப்பெனும் பதிமூன்றுற்ற ஙகரமுந் தொட்டதாலே
கப்பெனுங் கவலைநீங்குங் காரியங் கைமேற்கூடும்
செப்பெனுந் திரவியங்கள் கீர்த்தியும் புகழுமோங்கும்
ஒப்பெனுங் குபேரனைப்போ லுலகினில் வாழுவாயே.

கச. சகரத்தின் பலன்.

சத்துள பதினொன்றுற்ற சகரத்தைத் தொட்டதாலே
பத்துள மாதங்கஷ்டம் பட்டப்பின் சுகமுண்டாகும்
வத்துள பொருளுங்கொஞ்சம் வந்திடும் யோகக்ஷேமம்
சித்துள செந்தூர்க்கந்தன் திருவடி வணங்குவாயே.

கரு. ஞகரத்தின்பலன்.

ஞயமெனு மூவைந்துற்ற ஞகரத்தைத் தொட்டதாலே
வயமெனு மூன்றுதாரம் வாய்க்கினு மெத்தக்கஷ்டம்
பயமெனு முளத்திற்றுக்கம் பற்றிபல் பொருளுஞ்சேதம்
நயமெனு முயற்சிசெய்ய நஷ்டமா மறிந்துபாரே.

கசு. டகரத்தின்பலன்.

டம்பமாய் பதினாறுற்ற டகரத்தைத் தொட்டதாலே
ஜம்பமாய்ப்பொருளைப்போக்கித்தரித்திரப்படுவாய்கண்டாய்
தெம்பதாய் எதைச்செய்தாலும் செலவுமேற் செலவுமாகும்
வம்பதாய்க் கொடியநோயால் வாதமும் வாட்டுந்தானே.

கஎ. ணகரத்தின்பலன்.

வணக்கம்பன் னேழுக்குற்ற வண்ணக ரத்தைத்தொட்டால்
இணக்கமா யுறவோர்சேர்வர் எடுத்தகாரியமுஞ்சித்தி
கணக்குள வழக்குவெல்லும் கடிமணஞ் செய்யச்சொல்லும்
மணக்குமே எங்கும்வாசம் வளர்பயிர் விளைவுமாமே.

கஅ. தகரத்தின்பலன்.

தக்கபன் னெட்டுக்குற்ற தகரத்தைத் தொட்டதாலே
மிக்கவே தனையுந் துன்பம் விளையுமன் னவர்களாலே
இக்கண மகத்திலுற்ற வெண்ணமு மீடேறாது
பொக்கெனக் களவுபோன பொருளது புலப்படாதே.

௧௯. நகரத்தின் பலன்.

நல்லபத் தொன்பானுற்ற நகரத்தைத் தொட்டதாலே
இல்லத்திற் செல்லமேன்மை இலக்குமி கிருபையுண்டாம்
சொல்லநற் குடும்பயோகம் சுற்றமுந் தழைத்துச்சாரும்
எல்லவ னுதயம்போலே யிலங்குமுத் தேசந்தானே.

௨0. பகரத்தின்பலன்.

பயந்துபா ரிருபதுற்ற பகரத்தைத் தொட்டதாலே
வியந்துபா ருனக்குமெய்த்த விரோதமுங் கெடுதிநேரும்
நயந்துபா ரிஷ்டராற்றம் நட்பினு லாலோசிக்க
அயந்துபா ரிவைகளெல்லா மகன்றிடு மறிந்துபாரே.

௨௧. மகரத்தின்பலன்.

மதித்திடு மிருபத்தொன்று மகரம்நீ தொட்டதாலே
பதித்திடும் நேயர்பொல்லாப் பாகியே வேறுபாடாய்
உதித்திடு மதனுற்கஷ்ட மோங்கும்பின் னிருவருக்கும்
விதித்திடும் விசுவாசத்தால் வினைகளு மகன்றுபோமே.

௨௨. யகரத்தின்பலன்.

யவனமே மங்களச்சொல் யகரத்தைத் தொட்டதாலே
புவனமே லதிகநட்பாம் பொருநரா லவமானங்கள்
கவனமே வைக்கவேண்டாங் கண்டுநீ விலகிக்கொள்ளு
தவனமே சிவனைப்போற்றச் சங்கடந் தீருந்தானே.

௨௩. ரகரத்தின்பலன்.

ரயிலெனு மிருபான்மூன்றில் ரகரத்தைத் தொட்டதாலே
குயிலெனு மனையாள்தன்னைக் கொள்ளவே லாபமுண்டு
பயிலெனு மொழியினுலே பலகல கங்கள்காட்டும்
அயிலெனும் வேற்கையோனை யனுதினம் பூசிப்பாயே.

௨௪. லகரத்தின்பலன்.

லகாணிரு பத்துநான்கு லகரம்நீ தொட்டதாலே
மகானருள் பெரியோர்நேசம் வாய்க்குநன் மழையுமுண்டு
விகாதமே செய்துபோனோர் மீண்டுவந் துறவுமாவர்
அகாதமே நீங்குமீச னடிதொழு தேற்றுவாயே.

௨௫. வகரத்தின்பலன்.

வலந்தனி லிருபத்தைந்து வகரத்தைத் தொட்டதாலே
நிலந்தனிற் புகழுமுண்டு நினைத்தவெண் ணங்கைகூடும்
கலந்தனிற் கற்பதித்த கனகவா பரணங்கொண்டு
குலந்தனிற் சிறந்தபெண்ணுங் கூடியே வாழுவாளே.

௨௬. ழகரத்தின்பலன்.

பழகிய விருபத்தாறில் ழகரத்தைத் தொட்டதாலே
அழகிய வஞ்சியைக்கண் டாசைநீ கொண்டாயிங்கு
நழுவிய பொருளுஞ்சேதம் நாரியும் வருவதில்லை
மழுதனைக் கையிலேந்தும் வள்ளலை வணங்குவாயே.

௨௭. ளகரத்தின்பலன்.

வளமிரு பானேழுற்ற ளகரத்தைத் தொட்டதாலே
களமிகத் துன்பமுண்டாங் கலகமோர் தூதன்றன்னால்
தளமிகப் பொருள்கிட்டாது தணிகைவே லவனைப்போற்ற
உளமிகத் திங்களொன்று மொழிந்தபின் சுகமுமாமே.

௨௮. னகரத்தின்பலன்.

நனவிரு பத்தெட்டுற்ற னகரத்தைநீயுந் தொட்டாய்
வனமயி லேறும்வள்ளி நாயக னருளினாலே
கனதனங் குறைவொன்றில்லை கருத்தினுத் தேசமெல்லாம்
இனமுள படிநடக்கு மென்றுநீ யியம்புவாயே.

எழுத்தியல்பாருடம்

முற்றிற்று.

---

இனி இரண்டாம்பாகம் வெளிவரும்.

---

உ

வடிவுளவேலோன் றுணை.

வான்மீகர் அருளிச்செய்த

# ஆரூட சாஸ்திரம்.

## நூல்வரலாறு.

கலி விருத்தம்.

கணங்கள் சூழுங் கயிலையிற் பார்வதி
அணங்கப் போதர னர்பதம் போற்றியே
இணங்கா ரூட மெனக்குரைப் பாயெனச்
சணங்கா திற்சொன சாத்திர மாமிதே.

இதன் பொருள்.

ஸ்ரீமத் அகிலாண்டகோடி பிரமாண்டநாயகனு யாதி மத்தியாந்த ரகிதனு யகோதராக்ஷகனு யனைத்தையுங் குக்ஷிக்குள் வைத்து ரக்ஷித்திடுஞ் சச்சிதானந்த சாக்ஷாத் பரப்பிரம சொரூபமாய் விளங்கும் சிவபெருமான் பதினெண் கணங்களும்சூழக் கயிலையங்கிரியில் இரத்தின சிம்மாதனத்தில் வீற்றிருக்கையில் ஓர்நாள் உமாமகேஸ்வரி வணங்கி சுவாமி! மண்டலத்தில் வாழும் மானிடர்களுக்கு வருஷம் மாசம் தேதி திதி நட்சத்திரம் யோகம் கரணம் முதலிய நாளும் கோளும் கொண்டு அவசியமில்லாமலே நினைத்ததுபோல ஆரூடஞ்சொல்லத்தக்க சாஸ்திரமுண்டோ வென்று பார்வதிகேட்க பரமசிவம் திருவாய்மலர்ந்தருளிய ஆரூடசாஸ்திர மிதுவேயாம் என்றவாறு.

வணங்கிப் போற்றி வழிபடு தேவனை
அணங்கு பார்வதி யம்மையுங் கேட்கவே
மணங்கொண் டீசன் மகிழ்ந்துரை வாய்மொழி
குணங்கள் பொய்பல கூறமெய் யாமிதே.

34

(இ-ள்.) தீர்க்கதெண்டம் சமர்ப்பித்த தேவியை அன் போடழைத்து அருகிலிருத்திச் சிவபெருமான் திருவாய்திற ந்துகேளாய் பூரணகும்பத்தனத்தையுடைய கிளிமொழியே? உலகத்திலுள்ள சகலத்திராளுக்கும் உண்மையான நிமித்தந் தெரிந்துகொள்ளும் பொருட்டு நம்மை அன்போடு ஆராத னைவிதிப்படி அர்ச்சிக்கும் வான்மீகி சொன்னதை யறியாய் போலும் அதையாமெடுத்துக்கூறுவோம் கேட்பாயாக எ-று.

## இராசிநிலைச் சக்கரம்.

| | | | |
|---|---|---|---|
| கெற்பம் மீனம் | துவாரம் மேஷம் | வான்மீகம் ரிஷபம் | கெற்பம் மிதுனம் |
| வான்மீகம் கும்பம் | இந்தராசிநிலைச் சக்கரத்தில்கெற்பம்துவாரம் வான்மீக மென்பதை அறிந்துகொள்ளவும். | | துவாரம் கடகம் |
| துவாரம் மகரம் | | | வான்மீகம் சிங்கம் |
| கெற்பம் தனுசு | வான்மீகம் விருச்சிகம் | துவாரம் துலாம் | கெற்பம் கன்னி |

### இராசி நிலையறிய.

தனுசொடு மீனங் கன்னி சாற்றிய மிதுனங் கெற்பம்
மனுதுலாங் கடகமேடம் மகரமே துவார மாகும்
இனியதேள் கும்பஞ்சிங்க மிடபம்வான் மீகமென்று
கனியதேன் குழலினளே கண்டுகொள் குறிப்பாய்த்தானே.

(இ-ள்.) இனியவிசைபாடி வண்டுகள்மொய்க்கின்றகூந்தலை யுடையபெண்ணே? தனுசுமீனம்கன்னிமிதுனம் இந்த நான்

குங் கெற்பம், துலாம்-கடகம்-மேஷம்-மகரம் இந்தநான்கும் துவாரம், விருச்சிகம்-கும்பம்-ரிஷபம்-சிங்கம் இந்தநான்கும் வான்மீகம், இவ்விராசி நிலைபன்னிரண்டும் மூன்றுவிதமாய்ப் பகுத்திருப்பதால் இதை நன்றாய்க் குறிப்பாய்க்கண்டுகொள் மாதே எ-று. (க)

ஒருகாரியத்தைக்குறித்தறிய.

மனத்தி னுள்ளே மகிழ்ந்தொரு காரியம்
நினைத்த தாகும் நிறைகெற்ப மாகிடின்
சினத்த வாமியம் சேரநோய் செய்திடுங்
கனத்து வாரமுங் கைவரத் தாகுமே.

(இ-ள்.) ஒருவன் ஒருகாரியத்தை உத்தேசித்து மகிழ்ச்சியோடு கேட்பானாகில் அவனை இதிற்கண்ட இராசிச்சக்கரத்தைத் தொடச்சொல்லி செய்யுளிற்கண்ட பலாபலனைச்சொல்லவும். அதாவது, தொட்டது கெற்பமாகில் நினைத்த காரியம் முடியுமென்றும், வான்மீகமாகில் நோய் செய்யுமென்றும், துவாரமாகில் கைவசமாகுமென்றுஞ் சொல்வாயாக.

இன்னகையிலிருப்பதென்றறிய.

கருதி யோர்பொருள் கைதனில் மூடியே
தருதிரு கையிற் றனெது வோவெனில்
மருதி கெற்பந் துவாரம்வ லக்கைதான்
இருதி வான்மீக மெண்ணி யிடக்கையே.

(இ-ள்.) ஒருவன் ஒருபொருளைக் கையில்வைத்து இரண்டுகையையும் மூடிக்கொண்டு இப்போது எந்தக்கையிலிருக்கிறதென்று கேட்பானாகில் கெற்பமும் துவாரமுமானால்வலக்கையென்றும், வான்மீகமானால் இடக்கையென்றுஞ்சொல்லுக எ-று. (௨)

நிறமறிய.

என்னு மென்னிற மேதுரைப் பாயெனில்
மின்னு கெற்பம் வெளுப்பென லாகுமே

மன்னு மஞ்சள்து வாரம்சி வப்பெனுங்
கன்னி வான்மிகங் கார்நிறம் பச்சையே.

(இ-ள்.) நிறம் என்னவென்று கேட்டால் கெற்பமாகில் வெண்மை, துவாரமாகில் மஞ்சள் சிவப்பு, வான்மீகமாகில் கறுப்பு பச்சையென்று விள்ளவும் எ-று. (௪)

உள்நிறமறிய.

கள்ள முள்நிறங் கருதிவி னுவிடில்
பள்ள முள்கெற்பம் பச்சைக றுப்பதாம்
உள்ளுள் வெள்ளை யுகந்தது வாரமாம்
வள்ளல் வாமியம் வருமுள் சிவப்பதே.

(இ-ள்.) உள்நிறம் என்னவென்று கேட்பாராகில் கெற்பமானல் பச்சை கறுப்பு, துவாரமானல் வெள்ளை, வான்மீகமானல் மஞ்சள் சிவப்பென்று சொல்லவும் எ-று. (ரு)

சிறிது பெரிது அறிய.

குறிய தோடு நெடிய குறித்திடிற்
றறுமை தானெனுங் கெர்பமதாகுமே
நெறிகொள் வான்மீகம் நெடிதெனச் செப்பிடு
மறுது வார மளவுதா னுள்ளதே.

(இ-ள்.) ஒருபொருள் சின்னதா அல்லது பெரியதா சமமானதாவென்றுகேட்கில், கெற்பமானல் குறியவஸ்துவென்றும், வான்மீகமானல்நெடியவஸ்துவென்றும், துவாரமானல் சமரசமான பொருளென்றும் சொல்லுக எ-று. (சு)

நினைத்தகாரியம் முடிவறிய.

நினைத்தது முடிக்கவென்று நின்றவர் கேட்பாராகில்
நினைத்தது முடிப்பதில்லை நிறைகெற்ப முதயமுற்றால்
நினைத்தது துவாரமாகில் நிலைசில நாளிற்கூடும்
நினைத்தது வான்மீகந்தான் நிச்சயங் கூடுமென்னே.

(இ-ள்.) நினைத்தகாரியம் முடியுமாவென்று கேட்கில் கெற்பத்தைத்தொட்டால்முடியாதென்றும், துவாரத்தைத்தொ

ட்டால் சிலநாள்சென்றபின் கைகூடுமென்றும், வான்மீகத்தைத்தொட்டால்நிச்சயமாய் முடியுமென்றும்சொல்வாயாக.

ஓரிடத்துக்குப் போகலாமென்றறிய.

ஒன்றுதானுன்னி யோரிடம் போகவே
நின்று கேட்கில் நிலைபெறுங் கெற்பமாம்
அன்று வாரத்தி லாகாதக் காரியம்
சென்று வான்மீகஞ் சித்தியுண் டாகுமே.

(இ-ள்.) ஒருவன் ஓரிடத்துக்குப்போகிறேன் அக்காரியம் முடியுமா முடியாதாவென்று கேட்கில் கெற்பம் நிலைபெறுமென்றும், துவாரம் நிலைபெறாதென்றும், வான்மீகம் சித்திபெறுவாயென்றுஞ் சொல்லுக எ-று. (அ)

நிலுவை வசூலாகுமாவென்றறிய.

தருவ னோபவனம் தாரானோ சாற்றென
வருவ துண்மைது வாரம தாகிடிற்
பெருவன் வான்மீகம் பின்வரு மென்னலாம்
திருவ தைக்கொடார் திண்ணமிக்கெற்பமே.

(இ-ள்.) நிலுவை வசூல்செய்யப் போகலாமா போகக்கூடாதாவென்று கேட்கில் துவாரமாகில் போகலா மென்றும், வான்மீகமாகில் பின்போகலாமென்றும், கெற்பமாகில் நிலுவைவராதென்று நிகழ்த்துவாயாக எ-று. (௯)

வட்டி வரவறிய.

வட்டி தன்னை வருந்திக்கேட் பாரெனில்
கெட்டி யாய்வருங் கெற்பம தாகிடின்
மட்ட தாகும்வான் மீகமு மேயுறப்
பெட்டி வட்டிப் பெருக்குந் துவாரமே.

(இ-ள்.) ஒருவன் தான்கொடுத்த பணத்துக்கு வட்டிவருமோ வராதோவென்று கேட்பானாகில் கெற்பம் வருமென்றும், வான்மீகம் வராதென்றும், துவாரம் வட்டியும்முதலும் சேர்ந்துவருமென்றும் விளம்புக எ-று. (௧0)

கடன் நீங்குமோவென்றறிய.

கடனைப் பற்றிக் கருதிவி னவிடில்
உடனே வான்மீக முண்மையாய்த் தீர்ந்திடும்
தடைது வாரமுந் தான்சில நீங்கிடும்
திடனுங் கெற்பமோ தீருவ தில்லையே.

(இ-ள்.) ஒருவன் தன்கடன் தீருமோ தீராதோ வென்று கேட்கில் வான்மீகமாகில் கடன்தீர்ந்துவிடுமென்றும், துவாரமாகில் அரைகுறையாய்ச் சிலது தீருமென்றும், கெற்பமாகில் இப்போது தீரமாட்டாது இன்னுஞ் சிலநாட்சென்று தீருமென்று சொல்லுவாயாக எ-று. (கக)

கடன் கேட்கவென்றறிய.

ஒருவன் நற்பொரு ளுன்னி யுரையெனத்
தருவ தில்லையாந் தங்குமக் கெற்பமும்
வருவ துண்மை துவாரம்வந் தெய்திடும்
பெருவ தோசின்னாட் பின்னர் வான்மீகமே.

(இ-ள்.) ஒருவனிடம் கடன்கேட்கப் போகலாமாவென்று கேட்பானாகில் கெற்பம் அவன்கொடுக்கமாட்டான் போக வேண்டாமென்றும், துவாரம்கேட்குமுன் கொடுப்பானென்றும், வான்மீகமாகில் சாக்குப்போக்குச் சொல்லுவானென்றும் செப்புவாயாக எ-று. (கஉ)

வியாபாரஞ்செய்வதற்கறிய.

வாணி பத்தை மகிழ்ந்து வினவிடில்
ஊணி வான்மீக மொத்தது ரெட்டியாம்
தூணி யோடு துவாரமும் மத்திபம்
பேணிக் கெற்பம் பெறுவதொன் றில்லையே.

(இ-ள்.) வியாபாரஞ்செய்ய லாபங்கிடைக்குமா வென்று வினவில் வான்மீகமானால் ஒட்டிக்கிரட்டி லாபங்கிடைக்குமென்றும், துவாரமானால் மத்திபமென்றும், கெற்பமானால் ஒன்றுங்கிட்டாதென்றுஞ் சொல்வாயாக எ-று. (கங)

உத்தியோகம் செய்வதற்கறிய.

மணியந் தன்னை மகிழ்ந்து வினவிடில்
அணிய வான்மீக மங்கவர்க் கெய்திடும்
துணியுங் கெற்பமோ தூர வருமெனும்
பணிது வாரம் பலியாது நாளுமே.

(இ-ள்.) மணியம் அல்லது உத்தியோகவேலை கிடைக்குமா கிடைக்காதாவென்று வினவிடில் வான்மீகமானால் அவன் கோரியவேலை கிடைக்குமென்றும், கெற்பமானால் கொஞ்சநாட்சென்று வேலைகிட்டுமென்றும், துவாரமானால் பலிக்கமாட்டாதென்க எ-று. (௧௪)

சேவகஞ்செய்ய.

சேவகஞ் செய்யவென்று சிந்தையி லெண்ணிக்கேட்கிற்
பாவகங் கெற்பமாகிற் பாரினிற் பலிப்பதில்லை
தாவகந் துவாரமானூற் றன்சில நாளேசெல்லும்
மேவகம் வான்மீகந்தான் மேன்மையுண் டாகுந்தானே.

(இ-ள்.) சேவகம் செய்யவேண்டுமென்று கேட்பானாகில் கெற்பமானால் சேவகத்தொழில் கிடைப்பதரிது, துவாரமானால் சிலதுநாட்சென்று கிடைக்கும், வான்மீகமானால் சேவகம்கிடைப்பதோடு மேன்மையும் லாபமும் உண்டாமென்று சொல்லவும் எ-று. (௧௫)

கல்வி வருமாவென்றறிய.

கல்வி தன்னைக் கடுக வினவிடிற்
கல்வி துவாரங் கடுக வருமெனும்
கல்வி கெற்பங் கடுஞ்செவி யேபுகாக்
கல்வி வான்மிகங் கற்றவ மாகுமே.

(இ-ள்.) படிக்கவைத்தால் கல்விவருமாவென்றுகேட்கில் துவாரமானால் சீக்கிரம் கற்றுக்கொள்வானென்றும், கெற்பமானால் கல்வி காதிலே நுழையாது வாசிக்கமாட்டானென்றும், வான்மீகமானால் கற்றும் பிரயோசனமில்லை யென்றுஞ் சொல்லுவாய் எ-று. (௧௬)

பூஷணம்பூண கோடியுடுக்க.

பொற்பணி பூணக்கோடி கொள்ளவே புகல்வாராகில்
நற்பணி வான்மீகத்தில் நன்மையா மாடைபூணச்
சிற்பணி துவாரமாகிற் றெய்வத்தைக் கருதிச்செய்ய
வுற்பணி கெற்பமானு லுறுதியாய்ப் பூணவேண்டாம்.

(இ-ள்.) ஆடையுடுத்தவாவது ஆபரணம் பூணவாவது ஒருவன் கேட்பானாகில் வான்மீகமாகில் பூஷணம் பூணவும் கோடியுடுத்தவும் நன்மையுண்டாம், துவாரமாகில் தெய்வக் குறையுண்டு அத்தெய்வத்துக்குப் பூசைசெய்து பின் அணிந்துக்கொள்ளவும், கெற்பமாகில் இப்போதுவேண்டாம் பாதங்கழித்தபின் பார்த்துக்கொள்ளலாமென்று பகரவும்.

வைப்பு வைக்க

வைப்பது வைக்கவேண்டி வந்தவன் கேட்பானாகில்
அப்பது வாரமாகில் அத்தமும் வைக்க வாழ்வு
செப்பது வான்மீகத்திற் சேர்ந்தபின் னகலாதென்று
ஒப்பது சொல்லக்கெற்ப முதித்திடிற் கருதவேண்டாம்.

(இ-ள்.) தான்சேர்த்த திரவியத்தை வைப்பு வைக்கவேண்டிக் கேட்பானாகில் துவாரமானால் அப்படிச் செய்தால் வாழ்வுண்டாகுமென்றும், வான்மீகமானால் சேர்ந்தபின் தன்னைவிட்டு நீங்காதென்றும், கெற்பமானால் அவ்விதஞ்செய்யக்கூடாதென்றுங் கூறுவாயாக எ-று (கஅ)

விரதமிருக்க.

மதித்திடும் விரதந்தன்னை மகிழ்வுட னிருக்கவெண்ணில்
உதித்திடும் வான்மீகத்தி லுறுதியாய்ப் பலனுண்டாகும்
கதித்திடுங் கெற்பமுற்றாற் காரியம் பின்னலாகும்
விதித்திடுந் துவாரமாகில் விளங்குவதில்லை நோன்பே.

(இ-ள்.) ஒருவன் விரதமிருக்கவேண்டுமென்று கேட்பானாகில்வான்மீகமானால் அவ்விரதத்தால் அதிகப்பலனுண்டாகுமென்றும், கெற்பமானால் பின்னாற் பலன்கிட்டு மென்றும்

துவாரமானால் நோயிருப்பதில் பிரயோசன மில்லையென்றுஞ் சொல்வாயாக எ-று. (கக)

அவிழ்தமுண்ண.

ஆவலா யவிழ்தமுண்ண லாகுமா வென்றுகேட்கிற்
றேவலாம் வான்மீகத்திற் சீக்கிரம் நோயுந்தீரும்
மேவலாந் துவாரமாகில் வேறொரு மருந்தால்நோயை
ஏவலாங் கெற்பமானா லென்னதான் செய்துமென்னே.

(இ-ள்.) தனக்குற்ற வியாதிதீரவேண்டு மென்பதாய் அவிழ்தமுண்ணக் குணமுண்டாவென்று கேட்கில் வான்மீகமானால் அவ்வியாதியை மருந்துகண்டித்துக் குணப்படுத்துமென்றும், துவாரமானால் வேறொருமருந்தாற் குணமுண்டென்றும், கெற்பமானால் இந்த அவுடதத்தாற் பிரயோசனமில்லையென்றும் புகலுவாயாக எ-று (உO)

விஷந்தீண்டில்.

தீண்டிடும் விஷத்தின்வாதை தீருமோவென்று கேட்கில்
வேண்டிடுங் கெற்பமானால் விரைவுடன் நீங்குமென்க
பூண்டிடும் வான்மீகத்திற் பொருந்துநோய்விஷமும்பின்னே
மீண்டிடுந் துவாரமாகின் மீள்வது மில்லைத்தானே.

(இ-ள்.) ஒருவனுக்கு விஷந்தீண்டிற்று அவ்விஷம் நீங்குமாவென்றுகேட்கில் கெற்பமானால் விரைவில் விஷமிறங்கிச் சௌக்கியமா யிருப்பானென்றும், வான்மீகமானால் பின்கொஞ்சநேரமிருந்து விலகுமென்றும், துவாரமானால் அவ்விஷம் மீளமாட்டாதென்றும் சொல்லுக எ-று. (உக)

நோய்தீருமாவென்றறிய.

பிணிதருந் தேகந்தன்னைப் பேணிடக் கேட்பாராகில்
நணிதருங் கெற்பமானால் நன்றுடன் தீருமென்கத்.
துணிதருந் துவாரமாகிற் சுகமில்லை மரணமொக்கும்
அணிதரும் வான்மீகத்தி லந்நாட் செல்லுமென்னே.

(இ-ள்.) பிணிதீருமோவென்று கேட்கில் கெற்பமானல் வியாதி நீங்குமென்றும், துவாரமானல் பிணியதிகரித்துத் தணியாது மரணமொக்குமென்றும், வான்மீகமானல் நோய் முத்தி மேனிமெலிந்து மிகவருந்திப் பின்பு சவுக்கியமாகு மென்றுஞ் சொல்லுக எ-று. (௨௨)

இறந்தது உண்மையாவென்றறிய.

உன்னிச் சென்றங் கொருவ னிறந்திடின்
மன்னுங் கெற்பம் மரித்தது மில்லையென்
றுன்னித் துவார முறத்த மரணமாம்
இன்னும் வான்மீக மிறந்தது திண்ணமே.

(இ-ள்.) ஒருவன் இறந்தது உண்மையாவென்றுவினவில் கெற்பமானல் நீ எண்ணின மனிதனிருக்கிறனென்றும் துவாரமானல் பலத்தமரணமென்றும், வான்மீகமானல் அவன் இறந்தது நிச்சயமென்றுஞ் சொல்லவும் எ-று. (௨௩)

கெடுதிமொழி மெய்பொய்யறிய.

கெடுதி யென்றதைக் கேட்கவந் தோருக்குப்
படுதி யில்லையாம் பார்கெற்ப மாகிடில்
விடுதி காணலாம் வீணது வாரமாம்
கடுதி வான்மீகங் காண்பது மில்லையே.

(இ-ள்.) கெடுதியென்ற மொழியைக்கேட் டொருவன் அது எப்படியாமென்று கேட்கில் கெற்பமென்றால் அப்படி யொன்றுமில்லையென்றும், துவாரமென்றால் வீண்வார்த்தை இப்போது காணலாமென்றும், வான்மீகமென்றால் அது நிசந்தான் காணப்போகிறதில்லையென்றுங் கழறுவாயாக எ-று.

சொன்னதுமெய்பொய்யறிய.

சொன்னதுமெய்யோபொய்யோசொல்லெனக்கேட்பாராகில்
முன்னது சொற்றுவாரம் மொழிந்தது மெய்யாமென்ன
இன்னது வான்மீகத்தி லியம்பின செய்திதானும்
பின்னது நிசமாங்கெற்பம் பேசின தபத்தமாமே

(இ-ள்.) ஒருவன் சொன்னவார்த்தை உண்மையா அல்லது பொய்யாவென்று கேட்பானாகில் துவாரமானால் மெய்யென்றும், வான்மீகமானால் பிறபட்சமாகுமென்றும், கெற்பமானால் அவன்சொன்னது அபுத்தமென்றுஞ் சொல்லுவாயாக எ-று. (உரு)

மண்மனையறிய.

மண்ணை வேண்டியே வந்தோன் வினவிடில்
வண்ண மில்லையாம் மாப்பெரும் வான்மீகம்
திண்ணத் துவாரம் திருமனை வந்திடும்
எண்ணங் கூடா திழிந்திடுங் கெற்பமே.

(இ-ள்.) பூமி அல்லது மனைவாங்கவேண்டுமென்று கேட்பானாகில் வான்மீகமென்றால் தடைபட்டுச் சின்னாட்சென்று பூமிவாங்கலாமென்றும், துவாரமானால் மண்மனைவாங்கவாழ்வுண்டாகுமென்றும், கெற்பமானால் ஷை மனைவாங்க வாய்க்காதென்றும் வழுத்துவாயாக எ-று. ([illegible])

வியாச்சியமறிய.

இன்று தன்வழக் கெட்படி யாமெனில்
நன்று வாரம் நமக்கனு கூலமாம்
சென்று வான்மீகம் செயிப்ப ரெதிரியே
நின்று வியாச்சியம் நிறைகெற்ப மேசமம்.

(இ-ள்.) தனக்குற்ற வியாச்சியம் எப்படி யாகுமென்று கேட்கில் துவாரமாகில் அவ்வழக்கு தனக்கனுகூலமாகுமென்றும், வான்மீகமாகில் எதிரிஜெயிப்பானென்றும், கெற்பமாகில் இருவரும் சமாதானமாகப் போவாரென்றும் புகலுவாயாக எ-று. (உஎ)

கலகமறிய.

நாடுஞ் சண்டை நமக்குமுண் டோவெனில்
கேடு மில்லையே கெற்பம தாயிடிற்
போடு வாரத்திற் போயது மீளுமே
மாடு கேடெனும் வான்மீக மாகிலே.

(இ-ள்.) கலகம் உண்டோ இல்லையோவென்று கேட்பாராகில் கெற்பமானால் கலகமில்லையென்றும், துவாரமானால் கலகம்போய் மீளுமென்றும், வான்மீகமானால் கலகம் உண்டென்றும் சொல்லுவாயாக எ-று. (உஅ)

பயம்நடுக்கமறிய.

பயமொடு கலகந் தன்னைப் பயந்தவர் கேட்பாராகில்
நயமொடு கெற்பந்தன்னில் நடுக்கமும் பயமுமில்லை
ஐயமொடு துவாரமாகிற் சற்றுமே வந்துபோகும்
சுயமொடு வான்மீகந்தான் சூழ்பய மிகவுண்டாமே.

(இ-ள்.) தனக்குப் பயம் நடுக்கம் உண்டாவென்று கேட்பாராகில் கெற்பமானால் நடுக்கமில்லையென்றும், துவாரமானால் சற்று அச்சம்வந்து நீங்குமென்றும், வான்மீகமானால் அதிக நடுக்கமும் பயமும் உண்டாகுமென்றும் சொல்லுக.

சண்டையில் வெற்றியறிய.

வெட்டுஞ் சண்டை விரும்பி யுரைத்திடிற்
கட்டுங் கெற்பங் கடும்படை தோல்வியாம்
தட்டும் வான் மீகந் தன்படை வெல்லுமே
ஒட்டு துவாரமு மொத்துப்போ மிருவரே.

(இ-ள்.) சண்டையில் வெற்றி தோல்வி தெரியவேண்டுமென்றால் கெற்பமாகில் தோல்வியென்றும், வான்மீகமாகில் தன்படை வெற்றியடையுமென்றும், துவாரமாகில் இருவரும் சமாதானமாக ஒத்துப்போவீர்களென்றுஞ் சொல்வாயாக எ-று. (௩O)

போர் புரிய

போரது புரியவென்றே பூமியிலுள்ளோர் கேட்கில்
ஊரது கெற்பமாகி லுற்றபோர் பின்புண்டாகும்
வாரது வாரமானால் வம்புதீர்ந் துறவதாவர்
வேரது வான்மிகந்தான் வெற்றியா மறிந்துபாரே.

(இ-ள்.) பூமிக்கரசன் போர்புரிய வேண்டுமென்று கேட்கில் கெற்பமானால் பின்பு கலகமுண்டாம், துவாரமானால் எதிரியுந்தானும் நேசமாவாரென்றும், வான்மீகமானால்தான் வெற்றியடைவானென்றும் சொல்லுவாயாக எ-று (௯௪)

படை.

படையது சேர்த்துப்போனோர் பலன்றனைக் கேட்பாராகில்
இடையது கெற்பந்தன்னி லிவன்படை சேதமுண்டாம்
தடையது வாரமாகிற் றன்படை ஜெயமதாகும்
உடையது வான்மீகத்தி லோடுவ ரெதிரிதானே.

(இ-ள்.) தன்படை ஜெயிக்குமாவென்று கேட்கில் கெற்பமானால் தன்படைகளிற் சேதமுண்டாகுமென்றும், துவாரமானால் தன்படைஜெயிக்குமென்றும், வான்மீகமானால் தன் படையினால் எதிரிபடை முறிபட்டோடுமென்று சொல்லுக.

சிறை நீங்குமாவென்றறிய.

சிறையை யுன்னியே சிக்கெனக் கேட்டிடில்
சிறையிற் கெற்பஞ் சிறையதாந் திண்ணமே
சிறையிற் றுவாரஞ் சிறைதான் விடும்விடும்
சிறையில் வான்மீகஞ் சீர்பிற கெய்துமே

(இ-ள்.) சிறைச்சாலையி லகப்பட்டிருக்கிறவனுக்கு விடுதலையாகுமாவென்று கேட்டிடில் கெற்பமாகில் சிறையிலேயிருப்பது திண்ணம், துவாரமாகில் விடுதலையாகும், வான்மீகமானால் கொஞ்சவேளையில் விடுதலையாகுமென்று விளம்புவாயாக எ-று. (௯௬)

விதை விதைக்க.

பூமி தன்னிற் பொருந்த விதைத்திடில்
பூமி கெற்பத்திற் பொன்னேந்தி வாழலாம்
பூமி வாசற் பொலிவ்வர சாற்றுமே
பூமி வான்மிகம் பொன்றிடுங் கண்டிடே.

(இ-ள்.) பூமியில் விதைவிதைக்க வேண்டுமென்று வினவில் கெற்பமாகில் விளைவாகி யதனால் அதிக திரவியலாபங்

கிடைக்கும், துவாரமாகில் அரைவாசி விளையும், வான்மீக மாகில் பயிர்கள் சாவியாய்ப்போகுமென் றுரைக்கவும்எ-று.

விளைவுகேட்க.

விளைவு தன்னை விரும்பி யுரைத்திடில்
தளையுங் கெற்பந் தழைத்து விளையுமே
புளையில் வான்மிகம் போத விளைந்திடும்
பளையது வாரமும் பாதியிற் பாதிபோம்.

(இ-ள்.) போட்டிருக்கும் பயிர்கள் விளையுமா விளையாதா வென்றுவினவில் கெற்பமானால் நன்றாய்ச்செழித்து விளையு மென்றும், வான்மீகமானால் திடமாகப் பயிருண்டாகுமென் றும், துவாரமானால் கால்வாசி விளையுமென்றுஞ் சொல்லுக.

அகவிலையறிய.

அன்புபூவி லகவிலை கேட்ப ரேல்
தென்பு நாழி சிறப்பது கெற்பமாம்
முன்பு யர்ந்தது மூளுந்து வாரமும்
இன்பு வான்மிக மின்னங் குறையுமே.

(இ-ள்) யாராமொருவர் அகவிலையைப்பற்றிக் கேட்பா ரேல்கெற்பமுதயமானால் தானியங்கள்விளைவுண்டாகிஅதிக ச்சிறப்புடன் நாழிமலிவாய் விற்கும், துவாரமுதயமானால் முன்புயர்ந்ததுபோ லிருக்கும், வான்மீகமுதயமானால் இப் போதுவிற்கும் விலைக்கும் இன்னுங்குறையும் எ-று. (௧௬)

ஆற்றில்வெள்ளம்வருவதறிய.

ஆற்றுநீர் வரவுதன்னை யங்கவர் கேட்பாராகில்
ஊற்றுநீர் சிலதுண்டாகும் உண்மையாங் கெற்பந்தன்னில்
வேற்றுநீர் குறுகியோடும் விரைவுடன் துவாரமாகிற்
காற்றுநீர் வான்மீகந்தான் கடும்பெருக் காகுமென்னே.

(இ-ள்.) ஆற்றில் வெள்ளம்வருமோ வராதோவென்றுகே ட்பாராகில் கெற்பமானால் ஊற்றுநீர்சிலநேரம் ஓடுமென்றும், துவாரமானால் வேற்றுநீர் கொஞ்சமாகவோடுமென்றும், வா ன்மீகமானால்வெள்ளப்பெருக்காக வோடுமென்றுஞ்செப்புக.

கிணறுவெட்ட.

கிணறு வெட்டக் கிளத்தி யுரைத்திடில்
உணருங் கெற்பத்தி லூற்றநீர் தானில்லை
மிணர்து வாரத்தில் மெத்தவே நீருண்டு
கணறும் வான்மிகங் கல்லுமண் ணாய்வரும்.

(இ-ள்.) கிணறுவெட்ட வேணுமென்று கேட்பாராகில் கெற்பமானால்ஊற்றநீர் அருந்தலாயிருக்குமென்றும், துவாரமானால் மெத்தத் தண்ணீருண்டென்றும், வான்மீகமானால் கல்லும்மண்ணுமாக வருமென்று மொழி எ-று. (௩௮)

கிணற்றில்நீருண்டோவென்றறிய.

கிணற்றி லூற்றுக்கண் கேட்கிலுண்டோ வெனக்
கிணற்றி லூற்றுக்கண் கெற்பமதுண்டு காண்
கிணற்றி லூற்றுக்கண் கெட்டிது வாரமாம்
கிணற்றில் வான்மீகங் கெங்கை சுரக்குமே.

(இ-ள்.) கிணற்றில்ஊற்றுநீருண்டாவென்றுகேட்கில்கெற்பமானால் ஊற்றுநீர் உண்டாகுமென்றும், துவாரமானால் ஊற்றுக்கண்கெட்டியாகுமென்றும், வான்மீகமானால் ஊற்றுக்கண்மடைவிழுந்து கெங்கைசுரக்குமென்றும் சொல்லுக.

இவ்வருஷ மழையறிய.

மழையது வேண்டித்தானே வந்தவன் கேட்பானாகில்
மழையது கெர்பமானால் மண்ணின்மேற் பெய்வதில்லை
மழையது வாரமாகில் வருஷமும் மிகுதியாகும்
மழையது வான்மீகந்தான் மாரியும் பின்னுண்டாமே.

(இ-ள்.) இவ்வருஷம் மழையுண்டாவென்று கேட்கில்கெற்பமானால் தூறவில்லையென்றும், துவாரமானால் சோனைமாரி பெய்யுமென்றும், வான்மீகமானால் பின்மழை வருஷிக்குமென்றும் வழுத்துவாயாக எ-று. (௪௦)

மாதமழைவருங்குறிப்பறிய.

பெய்யும் வாயிற் பெருமழை பெய்திடும்
நையும் வான்மிகம் நற்றுளி யில்லையே
உய்யுங் கெற்ப மொருமழை யுண்டெனும்
அய்யன் மெய்ய னறிய வுரைத்ததே.

(இ-ள்.) இம்மாதம் மழையுண்டா இல்லையாவென்றுகேட்கில் துவாரமானால் பெருமழைபெய்யுமென்றும், வான்மீகமானால் துளிகூட மழைபெய்யாதென்றும், கெற்பமானால் ஒருமழைபெய்யுமென்றும் உரைப்பாயாக எ-று. (சக)

கன்றுகாலிகொள்ள.

கன்றுடன் காலிகொள்ளக் கணக்குடன் கேட்பாராகில்
நன்றுநற் றுவாரமாகில் நாலுகாற் சீவன்கொள்ள
அன்றது கெற்பமானா லாங்கவை வாங்கவேண்டாம்
மன்றுவான் மீகந்தன்னில் வருவது மாதமொன்றே.

(இ-ள்.) ஒருவன் கன்றுகாலி மாடுவாங்கவேண்டுமென்று கேட்பானாகில் துவாரமானால் பசுவுங்கன்றும்வாங்கப் பால்பாக்கியமுண்டாம் மாடுவாங்கினாலும் உத்தமம், கெற்பமானால்நாலுகாற்சீவன் வாங்கினால் நஷ்டமுண்டாம், வான்மீகமானால் ஒருமாதங்கழித்து வாங்க நன்மையுண்டாம் எ-று.

நாற்கால்நடைநட்டம்.

நாடி மாடாடு நட்டம தாகிடில்
ஓடி வந்திடு முற்றதோர் கெற்பந்தான்
தேடிக் காணாது தேருந்து வாரமும்
வாடிப் பின்னால் வருகும்வான் மீகமே.

(இ-ள்.) ஆடுமாடு மற்றநாற்காற் சீவன்களைக் காணோமென்று கேட்பாராகில் கெற்பமாகில் சீக்கிரம் ஓடிவந்திடுமென்றும், துவாரமாகில் அகப்படமாட்டாதென்றும், வான்மீகமாகில் சிலதுநாட்சென்று பின்னால்வந்துசேருமென்றும்செப்புவாயாக எ-று (சரு)

மூவகைப்பொருளறிய.

பறவை வஸ்து பரிவுடன் கெற்பமாம்
துறவு கல்முத லாகுந்துவாரமே
நறவு காய்கனி நல்லகி ழங்குடன்
உறவு முன்னி யுரைப்பர்வான் மீகமே

(இ-ள்) ஒருவன் தான்நினைத்த வஸ்துக்கள் மூன்றுள்ளதைநினைத்தே னென்றால் கெற்பமானால் பறவைவஸ்துவ

லொன்றென்றும், துவாரமானல் கல்முதலிய வஸ்துவென்றும் வான்மீகமானல் காய்கனிகிழங்குமுதலிய வஸ்துவென்றும் வழுத்துவாயாக எ-று. (சச)

வேசியில்புக.

வேசி யில்புக வேண்டி வினவிடிற்
காசிற் சண்டை கலக்கமுண்டாகிவிடும்
நாச வான்மிகம் நற்பொருள் போக்குமாம்
பேச லாகும் பெருகுந்து வாரமே.

(இ-ள்.) வேசிவீட்டுக்குப் போகலாமாவென்று கேட்கில் கெற்பமானல் காசுபணம் செலவாவதோடு கலக்கமும் சண்டையுமுண்டாம், வான்மீகமானல் கையிலுள்ளபொருள் போகும், துவாரமானல் சுகமும் லாபமுண்டாம் எ-று. (சரு)

கப்பல்யாத்திரை.

மரக்க லஞ்செல வந்தவர் கேட்பரேல்
உறக்க மாகுமுயர்கெற்ப முற்றிடில்
நிறக்கச் செல்லும் நிலையாந் துவாரமும்
சிறக்க வான்மிகம் சீர்கெட்டுப் போகுமே.

(இ-ள்.) கப்பல்ஏறி யாத்திரைசெல்லவேண்டுமென்று கேட்டால் கெற்பமானல் மரக்கலமேறிச்செல்லவேண்டாம், துவாரமானல் வங்கமேறிப்போக உத்தமம், வான்மீகமானல் அங்குபோகச் சுகமில்லை எ-று. (சசு)

யாத்திரை.

யாத்திரை போகவென்று அகமதிலெண்ணிக் கேட்கில்
மாத்திரைக் கெற்பமாகின் மாதலம் போகமாட்டான்
மூத்தவான் மீகந்தன்னிற் போவது நிசமதாகும்
ஏத்தநற் றுவாரமானு லிருந்துபின் னேகவேண்டும்.

(இ-ள்) யாத்திரை போகவேண்டுமென்று கேட்பாராகில் கெற்பமானல் ஸ்தலயாத்திரை போகமாட்டாரென்றும், வான்மீகமானல் போவதுநிச்சயமென்றும், துவாரமானல் சிலநாட்சென்றபின் போவானென்றும் புகலுவாயாக எ-று.

வழியிற் பயமறிய.

வழியினிற் பயமோவென்று வந்தவன் கேட்பானாகில்
பழியிலை பயமுமில்லை பாதையிற் றுவாரமானால்
அழிவில்லை ஜெயமும்பின்னு லாகும்வான் மீகந்தன்னில்
சுழிவிலை கெற்பந்தானுஞ் சுகமிலை யிடரதாமே.

(இ-ள்.) வழிப்பயணம்போனால் நடுவிற்பயமுண்டோவென்றுகேட்கில் துவாரமாகில் பாதையிற் பயமில்லையென்றும், வான்மீகமாகில் வழியில் துன்பமில்லை பின்னால் இன்பமுண்டென்றும், கெற்பமானால் வழிமார்க்கத்தில் பயமுந்துன்பமுமுண்டாமென்றுஞ் சொல்லுக எ-று. (சஅ)

ஊர்ப்பயணம்போக.

வழியை யுன்னி வருந்தி வினவிடில்
உழிது வாரந்தா னூருக்குப் போகலாம்
பழியே நோய்சொனும் பாரில்வான் மீகமும்
குழியுங் கெற்பங் கொடித்தடை போகிலே.

(இ-ள்.) ஒருவன் ஊர்ப்பயணம்போக உத்தேசித்துக்கேட்பானாகில் துவாரமானால் பிரயாணம் போகலாமென்றும், வான்மீகமானால் போனவிடத்தில் வியாதியுண்டாகுமென்றும், கெற்பமானால் கொடித்தடையாயிருப்பதால் போகக்கூடாதென்றுஞ் சொல்லுக எ-று. (சகூ)

ஊருக்குப்போனவர்வரவறிய.

போனவர் வரவுகேட்கிற் பொருந்தியங் கிருப்பர்கெற்பம்
ஆனவர் வருவாரிப்போ தானவான் மீகமாகில்
கானமர் துவாரமானாற் கடக்குநாட் செல்லுமென்று
தேனமர் குழலினாளே செப்புநீ யுண்மைதானே.

(இ-ள்.) வண்டுகளுண்ணும் மதுவையுட் கொண்டிருக்கும் மலர்களைக் கூந்தலிற்சூடுங் கோதையே! ஊருக்குப்போனவர் இன்று வருவாராவென்று கேட்கில் கெற்பமாகில் போனவிடத்தில் சுகமாய் இருக்கிறாரென்றும், வான்மீகமாகில் இப்பொழுதே வருவாரென்றும், துவாரமாகில்கொஞ்சநாட் சென்று வருவாரென்றும் சொல்லுக எ-று. (ரு0)

நாயகன்வரவறிய.

கற்புடை மங்கைசென்ற கணவனை நாடிக்கேட்கில்
அற்புடைக் கெற்பமானல் அங்கவ னிருப்பானுண்மை
நிற்புடைத் துவாரமாகில் நிச்சயம் வருவானிப்போ
பொற்புடை வான்மீகத்திற் புகல்வது மாதமொன்றே.

(இ-ள்.) தன்நாயகன் அயலூருக்குப் போனவர் என்று வருவாரென்று கேட்கில் கெற்பமுதயமாகில் போனஇடத்திற்சுகமா யிருக்கிறாரென்றும், துவாரம் உதயமாகில் இப்போது நிச்சயமாய்வருகிறாரென்றும், வான்மீகமுதயமாகில் ஒருமாதஞ்சென்று வருவாரென்றும் வழுத்துவாயாக எ-று.

களவுகாண.

களவுதான் போனதெல்லாங் காணுமோ வென்றுகேட்கில்
வளவுதான் துவாரமாகில் வந்திடும் பொருள்களெல்லாம்
அளவுதான் வான்மீகத்தி லகப்படும் நான்கிலொன்று
உளவுதான் கெற்பமாகி லுருவொன்றுங் காண்பதில்லை.

(இ-ள்.) களவுபோனபொருள் வருமோவென்றுகேட்கில் துவாரமானல் போனபொருள் வந்துசேரும், வான்மீகமானல் நான்கிலொன்று அகப்படும், கெற்பமானல் உருப்படியை ஒருகாலுங் காணப்போகிறதில்லை எ-று. (சுஉ)

கள்ளரைக்காண.

கள்ளர் தம்மையுங் காணவே கேட்பரேல்
மெள்ளக் கெற்பமோ மேதினி காணலாம்
விள்ள வாரத்தின் மேலாக் துவாரமே
உள்ள வான்மிக மொன்றுங்கா ணதெனே.

(இ-ள்.) கள்ளரைக் கண்டுபிடிக்கலாமாவென்று கேட்கில் கெற்பம்காணலாம், துவாரம் ஒருவாரத்திற் கள்ளரைக்காணலாம், வான்மீகம் சோரரைக் காணமாட்டாரென்க எ-று.

நகையெடுத்ததாரென்றறிய.

பொன்னுங் கைக்கொண்டு போனவ ராரெனில்
துன்னுங் கெற்பந் துவாரம தாகிடின்
மன்னும் பொன்னை மறைத்தவ ணைண்பிளை
பின்னும் வான்மிகம் பெண்ணென் றுரைத்திடே.

(இ-ள்.) நகையைப் போக்கடித்தவர் நம்மைநாடிவந்துகே ட்பாராகில்கெற்பம்துவாரம் இதில்லொன்றைத்தொட்டால் நகையை எடுத்தவர் ஆண்பிள்ளையென்றும், வான்மீகத் தைத்தொட்டால் பெண்பிள்ளையென்றுஞ் சொல்லுவாயாக.

எடுத்தவர் உள்ளூரா அயலூராவென்றறிய.

கொண்ட தாரக் குறிப்பறிவோ மெனில்
உண்டு காணய லூரான்வான் மீகமும்
எண்டு வாரம தித்தலத் துள்ளவன்
அண்டு கெற்ப மடுத்தவன் கொண்டதே.

(இ-ள்.) பொருளெடுத்தவர் உள்ளூரா அயலூராவென்று வினவில் வான்மீகமானால் அயலூரான் கொண்டானென் றும், துவாரமானால் உள்ளூரான் கைக்கொண்டானென்றும், கெற்பமானால் தன்னைச்சேர்ந்தவன் கொண்டானென்றும் புகல்வாயாக எ-று. (௫௫)

வந்தவருக்குள் இன்னாரென்றறிய.

இன்னு மின்னா ரெனப்பொருள் சொல்லெனத்
துன்னு கெற்பந் துவாரம தாயிடின்
உன்னு மாணிங் குற்றவன் கொண்டனன்
பின்னு வான்மிகம் பெண்ணென் றுரைத்திடே.

(இ-ள்.) வந்தவருக்குள் யாரெடுத்தாரென்றுகேட்கில்கெ ற்பமுந் துவாரமாகில் ஆண்பிள்ளையெடுத்து வைத்திருக்கி றானென்றும், வான்மீகமாகில் பெண்பிள்ளையெடுத்துவைத் திருக்கிறாளென்றுஞ் சொல்வாயாக எ-று. (௫௬)

அளவுஅறிய.

அளவு தன்னை யறிய வினவிடில்
அளவு நீண்ட வான்மிகம் தாகுங்காண்
அளவு கெற்பங் குறியது வாரமாம்
அளவு மேசம மாமென் றுரைத்திடே.

(இ-ள்.) அளவுசொல்லுமிடத்து நெடியரோ குறியரோ சமமுடையவரோ வென்னில் வான்மீகமானால் நெடியவரெ ன்றும் கெற்பமானால் குறியவரென்றும், துவாரமானால் சம மானவரென்றுஞ் சொல்லுக எ-று. (௫௭)

திக்குகளறிய.

எந்தத் திக்கி லிருப்பானெனக் கேட்கில்
முந்தக் கெற்பம் மொழிகிழக் காமெனச்
சிந்து வாரமுந் தெற்குமேற் காகிடும்
வந்த வான்மிகம் வடக்கென் றியம்பிடே.

(இ-ள்.) எந்தத்திக்கிலிருப்பானென்று கேட்பாராகில்கெற்பமாகில கிழக்குத்திக்கென்றும், துவாரமாகில் தெற்குத்திக்குஅல்லது மேற்குத்திக்கென்றும், வான்மீகமாகில்வடக்குத்திக்கென்றும் வழுத்துவாயாக எ-று. (ருஅ)

கலியாணஞ்செய்ய.

மணமது செய்யவேண்டி வந்தவர் கேட்பாராகில்
குணமது கெற்பந்தன்னிற் கொள்வது நல்லதாகும்
பணமது வாரமாகிற் பலிப்பதா லதிகதுக்கம்
கணமது வான்மீகந்தாற் கஷ்டமென் றுரைத்திடாயே.

(இ-ள்.) கலியாணஞ் செய்யலாமாவென்று வந்தவர் கேட்பாராகில்கெற்பமானால் உடனேகலியாணஞ்செய்யலாம், அதனால் குணமும்மணமுமுண்டாம், துவாரமானால் கலியாணஞ்செய்யில் துக்கமுண்டாம், வான்மீகமானால் இப்போதுநடக்கமாட்டாது, கஷ்டமென்று கழறுவாயாக எ-று. (ருகூ)

பொருத்தம்பார்க்க.

கொண்டது மாபொருத்தங் குணமுடனறிய வேண்டிற்
கண்டது கெற்பமானாற் கடம்புலிபசுப்போ லென்பர்
பெண்டது கொழுநர்தம்மிற் பேதமாந் துவாரமாகிற்
பண்டது வான்மீகத்திற் பாரில்நற் பொருத்தமாமே.

(இ-ள்) பெண்ணும் பிள்ளைக்கும் பொருத்தமுண்டாவென்று கேட்கில் கெற்பமானால் பொருத்தமில்லையென்றும்,வான்மீகமானால் புருஷன்பெண்சாதி யிருவருக்கும் சரியான பொருத்தமுண்டென்றும் சொல்லுவாயாக எ-று. (சுo)

பெண்ணின்குணமறிய.

நற்கு ணக்குறி யாமோ நவிலெனச்
சொற்ப னத்திலு மில்லது வாரமும்

பற்பல வெனப் பார்கெற்ப் மாங்குணம்
நற்கு ணமிலை தோன்றும் வான்மீகமே.

(இ-ள்.) பெண்ணின்குணமெப்படி யிருக்குமென்றுகேட்கில் துவாரமாகில் நற்குணம் சொற்பனத்திலு மில்லையென்றும்கெற்பமாகில் பற்பலகுணமுள்ளவளென்றும், வான்மீகமாகில் சற்றேனுந் துற்குணமில்லை சாந்தகுண முள்ளவளென்றுஞ் சொல்லுக எ-று. (கூக)

பெண்ணின் சோரமறிய.

பெண்ணின் சோரப் பெருமை வினவிடில்
மண்ணிற் சோரன் வருவது கெற்பமாம்
நண்ணிக் கொண்டே நடப்பது வாரமும்
எண்ணில் வான்மீக மில்லையென் றோதிடே.

(இ-ள்.) ஒருபெண் சோரம்போகிறாளாவென்றுகேட்கில் கெற்பமானால் அப்பெண் சோரம்போகிறாளென்றும், துவாரமானால் சோரநாயகனைச்சேர விருப்பமாய்நடப்பளென்றும், வான்மீகமானால் அப்படியொன்றுமில்லை கற்புடையவளென்றுங் கழறுவாயாக எ-று. (கூஉ)

பெண் கேட்கப்போக.

மங்கை தன்னை மணஞ்செயப் பேசிடிற்
பொங்கும் வான்மிகம் போகவுங் கிட்டுமே
தங்குது வாரமோ தையல்சே ராளேனும்
வெங்கு கெற்பம் விசனமுண் டாக்குமே.

(இ-ள்.) ஒருபெண்ணை நினைத்துக்கொண்டு அப்பெண் இந்த மணமகனுக்குக் கிடைக்குமாவென்றுகேட்பாராகில்வான்மீகமானால் போனவுடன் பெண்கிடைக்குமென்றும், துவாரமானால் அந்தப்பெண் சேராளென்றும், கெற்பமானால் சண்டைசச்சரவினால் மனதுக்கு விசனமுண்டாகு மென்றுஞ் சொல் எ-று. (கூங)

ஒளித்ததைப்போ லுரைத்தல்.

ஒளித் ததைப்போ லொருவ னுரைத்திடில்
வளித் தெடுத்தது வாரத்திற் கைபுகும்
களித்த வான்மிகங் காணவொண் ணாதேனும்
விளித்த கெற்பம் விளங்கும்பின் றேடுமே.

(இ-ள்.) ஒருவன் ஒளித்ததைப்போற்கேட்பானாகில் துவாரமாகில் கைபுகுமென்றும், வான்மீகமாகில் காணமுடியாதென்றும், கெற்பமாகில் அதுபின்னால் விளங்குமென்றும் சொல்வாயாக எ-று. (௯௪)

குழந்தை உண்டோ இல்லையோவென்றறிய.

மக்கட் பேறு வருந்தி வினவிடின்
மக்கள் வான்மிகம் மாது மலடியாம்
மக்கள் துவாரம் பெறுவர் மரித்திடும்
மக்கள் செற்பம் மதிக்கப் பெறுவரே.

(இ-ள்.) இந்தப்பெண்ணுக்குப்பிள்ளைகளுண்டாவென்று கேட்பாராகில் வான்மீகமானால் பிள்ளைப்பெறு மலடியென்றும், துவாரமானால் குழந்தைபிறந்து இறந்துவிடுமென்றும், கெற்பமானால் யாவருமதிக்கத்தக்க குழந்தையைப்பெறுவாளென்று விள்ளவும் எ-று. (௯௫)

குழந்தை ஆண்பெண்ணென்றறிய.

உற்ற கெற்ப முதிக்கிற்சே யாணெனும்
மற்ற வான்மிக மென்பது மங்கையே
பற்ற துவாரம் பலித்துக் கெடுதியாம்
கற்றுச் சொன்ன கருத்தென் றறியுமே.

(இ-ள்.) குழந்தை ஆண்பெண்ணென்றறியவேண்டுமென்று கேட்பாராகில் கெற்பமாகில் ஆண்குழந்தை பிறக்குமென்றும் வான்மீகமாகில் பெண்குழந்தை பிறக்குமென்றும், துவாரமாகில் கருப்பங்கலங்கிச் சிதைந்துபோமென்று மொழியவும் எ-று. (௯௬)

குழந்தை சிவப்புகறுப்பென்றறிய.

பிள்ளைக் கெற்பம் பிறந்து கறுக்குமே
ஒள்ளை வான்மிக முள்ளஞ்சி வக்குமே
பொள்ளைத் துவாரம் பொருந்தி வெளுக்குமே
கள்ளரிக் குழலே யிதைக் கண்டுகொள்.

(இ-ள்.) பிறக்கிறகுழந்தை அல்லது பிறந்திருக்கிறகுழந்தை சிவப்பா கறுப்பாவென்றுகேட்கில் கெற்பமானால் கறுப்புநிறமுள்ள குழந்தையென்றும், வான்மீகமானால் சிவப்புநிறமுள்ளகுழந்தையென்றும், துவாரமானால் வெள்ளைநிற

முள்ள குழந்தையென்றும், மதுவுண் டிசைபாடும் வண்டு கள் மொய்க்கின்ற கூந்தலையுடைய மாதே யிதைக்கண்டுசொல்வாயாக எ-று. (சுஎ)

வீடுகட்ட

இல்லங் கட்ட விசைந்து வினவிடில்
இல்லங் கெற்ப மியல்போ டிருக்கலாம்
இல்லத் தேகி லிறப்பர்து வாரமே
இல்லம் வான்மிக மிருவர்நோய் பூசலே.

(இ-ள்.) வீடுகட்ட உத்தேசித்து வினவிடில் கெற்பமானால் மங்களகரமாய் மனைகோலலாமென்றும், துவாரமானால் வீடுகட்டப்போகில் மரணமென்றும், வான்மீகமானால் புருஷன் பெண்சாதி யிருவருக்கும் சண்டைசச்சரவு வியாதியுண்டாம் எ-று (சுஅ)

குடிப்புக

வீடு கட்டிக் குடிபுகக் கேட்பரேல்
நாடு கெற்பம் நலத்தோ டிருக்கலாம்
வாடுஞ் சிந்தை வருத்தந்து வாரமிப்
பாடு வான்மிகம் பண்ணையுண் டாக்குமே.

(இ-ள்.) வீடுகட்டிக் குடிப்புகவாவது அல்லதுவேறே வீட்டுக்குப்போகவாவது கேட்பரேல் கெற்பமாகில் நன்மை போகலாமென்றும், துவாரமாகில் போனால் மனவியாகூலமுண்டாகுமென்றும், வான்மீகமாகில் வியாதிவரும் போகவேண்டாமென்றுஞ் சொல்லுவாயாக எ-று. (சுசு)

அவையடக்கம்.

ஐயன் மெய்ய னறிய வுரைத்தது
கையு மெய்யுமாய்க் காணலாம் பூரணம்
வைய கத்தோரும் வாழ்வான் மீகியு
முய்யும் பாட லெழுபதும் முற்றுமே.

(இ-ள்.) வையகத்திலுள்ள மாந்தர்கள் யாவருங் உய்யும் பொருட்டு வான்மீகி முன்னர் திருவாய்மலர்ந்தருளியதை பரமசிவன் பார்வதிக்குபதேசித்த இந்த வான்மீகர் ஆரூடசாஸ்திரம் எழுபதுபாடலும் சம்பூர்ணம் எ-று. (எ0)

## வான்மீகர் ஆரூடசாஸ்திரம்

முற்றிற்று.

---



